# மின்தமிழ் மேடை




## "தொடர்ந்திடும் வளர்ந்திடும் தமிழ் மரபு அறக்கட்டளையின் தமிழ்ப்பணிகள்"

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*
*வெளியிடும் காலாண்டு மின்னிதழ்*
*மின்தமிழ்மேடை - காட்சி: 13*
*ஏப்ரல் — 2018*



# மின்தமிழ் மேடை

**காட்சி: 13**

---

**ஏப்ரல் - 2018**

**“தொடர்ந்திடும் வளர்ந்திடும் தமிழ் மரபு அறக்கட்டளையின் தமிழ்ப்பணிகள்”**




முன்னட்டைப் படம்: தமிழக அரசின் உலகத்தமிழ்ச்சங்கத்தின் 2016ம் ஆண்டிற்கான மொழியியல் விருது பெறும் தமிழ் மரபு அறக்கட்டளைத் தலைவர் முனைவர் சுபாஷிணி





**தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு**

**http://www.tamilheritage.org/**

**இதழ் தொகுப்பு: தேமொழி**

# தலையங்கம்: தொடர்ந்திடும் வளர்ந்திடும் தமிழ் மரபு அறக்கட்டளையின் தமிழ்ப்பணிகள்



வணக்கம்.

சித்திரையை வரவேற்கும் இதழாக இந்தக் காலாண்டிதழ் மலர்கின்றது.

தமிழர்களின் வேர் நிலமான தமிழகத்தில் தொடரும் பல சமூக இன்னல்களை அறிகின்றோம். ஒன்றை அடுத்து மற்றொன்றாகச் சவால்விடும் இப்பிரச்சனைகளை எதிர்த்துப் பொதுமக்களும் அமைப்புக்களும் செய்யும் போராட்டங்களும் அவற்றில் எழும் எதிர் குரல்களும் தொடர்கின்றன.

இந்தியாவின் ஏனைய பிற பகுதிகளில் பெண் குழந்தைகள் பாலியல் வன்கொடுமைக்கு உள்ளாக்கப்பட்டுக் கொல்லப்படும் கொடூரம் நிகழ்கின்றது. மதம், சாதி, இன வேறுபாட்டின் வக்கிரத் தன்மையின் வெளிப்பாடாக இத்தகைய கொடூரச் செயல்கள் எளிய மக்களைத் தாக்கிச் சீரழிக்கின்றன. உலகளாவிய அளவில் வாழும் நம் தமிழ் உறவுகளுக்கு இது ஆழமான மன வலியையே ஏற்படுத்துகின்றது. அன்பு, அறம், நேர்மை, உண்மை, நீதி ... இவை இழந்த சமூகமாக மாறிவிட்டோமா? வேர் அழுகிய மரமாக மாறிவிட்டதா நம் தாய்நிலம்? இந்தக் கேள்விகளுக்கிடையே தொடர்கின்றது நம் தமிழ் மரபு அறக்கட்டளையின் வரலாற்று மற்றும் தமிழ் மொழி தொடர்பான செயல்பாடுகள்.

2018ம் ஆண்டின் தொடக்கத்தை வரவேற்கும் வகையில் தொடர்ச்சியாக மலேசியாவிலும், தமிழகத்திலும், ஒடிசாவிலும் பல செயல்பாடுகள் நிகழ்ந்தன. அவை குறிப்பாக:

தமிழகக் கல்லூரிகளில் தமிழ் மரபு அறக்கட்டளையின் வரலாற்றுப் பாதுகாப்பு தொடர்பான சொற்பொழிவு, சந்திப்பு நிகழ்வுகள், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் நிகழ்த்தப்பட்ட களப்பணி ஆய்வுகள், மாநாடுகள் கருத்தரங்கங்கள், குமாரபாளையத்தில் நிகழ்ந்த முதலாம் உலக மரபு மாநாடு;

ஒடிசாவில், கலிங்கம், சமணம், பௌத்தம், சைவம் ஆகிய மதங்கள் பற்றியும், தொல் பழங்குடி இன மக்கள் பற்றியதுமான ஆய்வுகள்; புவனேஷ்வர் தமிழ்ச்சங்கத்தில் ஒன்று கூடும் நிகழ்ச்சி; சிந்து சமவெளி நாகரிகம் தொடர்பான தகவல் சேகரிப்புக்கள்;

மலேசியாவின் செர்டாங் வட்ட தமிழ் இலக்கிய நிகழ்வு, கிள்ளான் நகரத் தமிழ் இலக்கிய நிகழ்வு, உலகத்தமிழ் பண்பாட்டு இயக்க ஆய்வுச் சொற்பொழிவு நிகழ்வு.

குறிப்பிடத்தக்க வகையில் இவ்வாண்டு தொடக்கம் சீரிய முயற்சிகள் சில முன்னெடுக்கப்பட்டன. திருச்சியில் தமிழ் மரபு அறக்கட்டளையின் கிளை உருவாக்கப்பட்டது. தமிழகத்தின் பிஷப் ஹீபர் கல்லூரி (திருச்சி), செந்தமிழ் கல்லூரி (மதுரை), அய்யநாடார் கல்லூரி (சிவகாசி) ஆகிய மூன்று கல்வி-ஆய்வு அமைப்புக்கள் தமிழ் மரபு அறக்கட்டளையுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்தன. தமிழ் வரலாற்று ஆய்வுப் பணிகள் செம்மையாக நடைபெறும் நோக்கத்தை முன் வைத்து இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.


தமிழ் மரபு அறக்கட்டளை
TAMIL HERITAGE FOUNDATION

தமிழர், தமிழகம், தமிழ் மொழி, மற்றும் வரலாறு தொடர்பான முயற்சிகள் சீரிய வகையில் முன்னெடுக்கப்பட வேண்டிய சூழல் இருக்கின்றது. இதனைக் கருத்தில் கொண்டு தமிழக அரசிற்குத் தமிழ் மரபு அறக்கட்டளை உடனடியாக செய்யப்பட வேண்டியனவாக நாம் கருதும் பரிந்துரைகளை முன்வைத்திருந்தோம். இந்தப் பரிந்துரைகள் அடங்கிய கோப்பினை தமிழகத்தின் தமிழ் வளர்ச்சித்துறை மற்றும் தொல்லியல்

அமைச்சரை நேரில் சந்தித்து வழங்கி அவற்றை உடனடியாகச் செயல்படுத்த வேண்டிய அவசியத்தை முன்வைத்து அத்தேவைகளைத் தெளிவுபடுத்தி, கலந்துரையாடி, அவற்றைச் செயல்படுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டோம்.

இந்த ஆண்டு உலகெலாம் பரந்து வாழும் தமிழ் மகளிருக்கான மேம்பாட்டினை மையமாக வைத்துத் தொடங்கப்பட்ட ஐயை அமைப்பு என்றதொரு அமைப்பின் முதலாம் உலக மகளிர் மாநாடு மலேசியத்தலைநகர் கோலாலம்பூரில் நிகழ்ந்தது. அந்த நிகழ்வின் செயல்பாடுகளை வாழ்த்தியதோடு இம்மாநாட்டின் சில செயல்பாடுகளைத் தமிழ் மரபு அறக்கட்டளை உடன் இருந்து செயல்படுத்தியது என்பதில் பெருமை கொள்கின்றோம்.

நம் ஆய்வுத் தளம் பெரிது. நம் நடவடிக்கைகள் மிக விரிவாக வளர்ந்து வருகின்றன. உலக நாடுகளில் எங்கெங்கு தமிழ் மக்கள் வாழ்கின்றனரோ அங்கெல்லாம் தமிழர் வரலாற்றுத் தடங்கள் உள்ளன. காலப்போக்கில் அவை சுவடுகள் இழந்து மறைந்து விடும் அபாயம் உள்ளதை நாம் பார்க்கத் தவறிவிடக்கூடாது. இதனைக் கருத்தில் கொண்டு தமிழர் வாழும் நிலங்களிலெல்லாம் தமிழ் மரபு அறக்கட்டளையின் கிளைகளை அமைக்கும் முயற்சியை நாம் சீரிய வகையில் இவ்வாண்டு தொடக்கம் செயல்படுத்த உள்ளோம்.

தமிழர் வரலாறு குறுகிய நிலப்பரப்பில், குறுகிய ஆய்வுப் புலத்தில் மட்டும் நிகழ்வதால் பயனேதுமில்லை. உலகெங்கும் பரவிக் கிடக்கும் தமிழர் தொன்மையை அவற்றின் சுவடுகள் மறையும் முன்னே தொழில்நுட்பத்தின் உதவி கொண்டு பதிந்து பாதுகாப்போம். தமிழர் பண்பாட்டின் பெருமையைத் தரமான, திடமான ஆய்வுகளின் வழி உலகறியச் செய்வோம்.

அன்புடன்
முனைவர்.க.சுபாஷிணி

# இந்த இதழில் ...

## மின்தமிழ் மேடை - காட்சி: 13; ஏப்ரல் - 2018

### "தொடர்ந்திடும் வளர்ந்திடும் தமிழ் மரபு அறக்கட்டளையின் தமிழ்ப்பணிகள்"

(மின்தமிழில் ஜனவரி 16, 2018 - ஏப்ரல் 15, 2018 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)

## உள்ளடக்கம்

# 1. தமிழக அரசிற்குத் தமிழ் மரபு அறக்கட்டளை முன்வைத்த பரிந்துரைகள்

*– முனைவர்.க.சுபாஷிணி*

இன்றைய காலகட்டத்தில் தமிழர், தமிழகம், தமிழ் மொழி, மற்றும் வரலாறு தொடர்பான முயற்சிகள் சீரிய வகையில் முன்னெடுக்கப்பட வேண்டிய சூழல் இருக்கின்றது. இதனைக் கருத்தில் கொண்டு தமிழக அரசிற்குத் தமிழ் மரபு அறக்கட்டளை உடனடியாக செய்யப்பட வேண்டியனவாக நாம் கருதும் பரிந்துரைகளை முன்வைத்திருந்தோம். இந்தப் பரிந்துரைகள் அடங்கிய கோப்பினை மார்ச் 2, 2018 அன்று தமிழகத்தின் தமிழ் வளர்ச்சி மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் மாண்புமிகு மா.ஃபா பாண்டியராஜன் அவர்களை நேரில் சந்தித்து வழங்கி அவற்றை உடனடியாகச் செயல்படுத்த வேண்டிய அவசியத்தை முன்வைத்து அத்தேவைகளைத் தெளிவுபடுத்தி, கலந்துரையாடி, அவற்றைச் செயல்படுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டோம்.

**உலகத் தமிழ் மரபு மாநாட்டில் தமிழக அரசிடம் தமிழ் மரபு அறக்கட்டளை வழங்கிய கோரிக்கைகள்!!**

அன்புடைய மாண்புமிகு முதலமைச்சர் அவர்களுக்கு,
வணக்கம்.

உலகத் தமிழ் மரபு மாநாட்டின் மூலமாகத் தமிழக அரசுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளையின் சார்பாகவும், தமிழகத்தின் வரலாற்றின் மீது அக்கறை கொண்டோரின் சார்பாகவும் பின்வரும் கோரிக்கைகளை மாண்புமிகு தமிழக முதல்வருக்கும், மாண்புமிகு துறைசார் அமைச்சர்களுக்கும் முன்வைப்பதில் பெருமை கொள்கிறோம்.

1. தமிழகத்தின் வரலாற்றுப் பெருமை என்பது உலகளாவிய அளவில் அங்கீகரிக்கப்பட்டுள்ள நிலையில் பன்னாட்டு அமைப்புகளும், ஆராய்ச்சி

நிறுவனங்களும் தமிழக வரலாற்றை ஆய்வு செய்வதற்கான ஊக்கம் பெற்றுள்ளன. உலகின் பலநாடுகளில் உள்ள பல்கலைக் கழகங்களில் தமிழ் ஆய்வு இருக்கைகள் உருவாக்கப்பட்டு வருவது இதற்கு மிக முதன்மையான சான்றாகும். இம்முயற்சி தொடரப்பட வேண்டும் என்பதோடு தமிழின் தொன்மையையும் பெருமையையும் சொல்லும் நூல்கள் பலவேறு உலக மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட நடவடிக்கைகள் செயல்படுத்தப்பட வேண்டும்.

2. தமிழகத்தின் வரலாற்றுத் தொடர்பான சான்றுகளான கல்வெட்டுப் படிகள், சிலைகள், காசுகள், ஓலைச்சுவடிகள், நூல்கள், வெளியீடுகள் மற்றும் அரசு சார்ந்த ஆவணங்கள் ஆகியன இன்றும் உலகில் பல நாடுகளில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அவை இன்னும் முறையாக நமது ஆய்வுக்குப் பயன்படுத்தப்படவில்லை. மேலும், அவற்றைப் பெறுவதற்கான முறையான அரசு வழிகாட்டல்களும், உதவிகளும் உருவாக்கப்படவில்லை என்பதை மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் கவனத்திற்கு முன்வைக்கிறோம். தங்களது மேலான ஆட்சியில் இதற்கான தீர்வு கிடைக்கும் என நம்புகிறோம். எனவே இப்பிரச்சினைக்குத் தீர்வு காண வேண்டுமாயின் தமிழகத்தின் பல்கலைக் கழகங்களோடு உலகின் பலநாடுகளில் உள்ள அருங்காட்சியகங்கள், ஆவணக் காப்பகங்கள் மற்றும் பல்கலைக்கழகங்களோடு உடன்பாடுகள் மேற்கொள்ளப்பட வேண்டும். அதன் மூலம் முன் குறிப்பிட்ட தமிழகத்தின் வரலாற்றுத் தரவுகளை நாம் எளிதாகப் பெற முடியும்.

3. தமிழகத்தின் தமிழ் மற்றும் வரலாற்றுத் துறை புலப்படிப்புகள் இன்னும் சர்வதேசத் தரத்திற்கு உயர்த்தப்பட வேண்டிய தேவை இருக்கிறது. பல நாடுகளில் அத்துறை முழுமையான அறிவியல் துறையாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது. எனவே அத்துறைகள் மேம்படுத்தப்பட வேண்டுமாயின், வரலாற்றுத் துறை, தமிழ்த்துறை, மொழியியல் துறை, மானுடவியல் துறை, நாட்டுப்புறவியல் ஆகியனவற்றிற்கு

ஒருங்கிணைந்த இயைபை உருவாக்க வேண்டும். இதன் மூலம் பிற பல்கலைக் கழகப் படிப்புகளுடன் நாம் சர்வதேசத் தரத்தினை எட்ட முடியும் என்பதை மாண்புமிகு தமிழக முதல்வர் மற்றும் துறைசார் அமைச்சர் பெருமக்களின் மேலான கவனத்திற்கு கொண்டு வருகிறோம்.

4. கல்லூரிகளில் உள்ள மேற்கண்ட துறைகளின் மாணவ மாணவியரிடையே செய்முறைப் பயிற்சியில் உள்ளூர் அருங்காட்சியக பராமரிப்பு என்பது சேர்க்கப்பட வேண்டும். அப்படிச் சேர்க்கப்படுமாயின் தமிழகத்தின் வட்டாரங்கள் அளவில் அருங்காட்சியகங்களை உருவாக்க முடியும். தமிழகத்தின் எல்லாக் கலை, வாழ்வியல் மற்றும் வரலாற்றுச் சின்னங்களை அடுத்த தலைமுறைகளுக்கும் உலகத்திற்கும் கொண்டு சேர்க்க முடியும். இந்த வட்டார அருங்காட்சியகங்களைக் கல்லூரிகளிலோ அல்லது அரசு மற்றும் தனியார் பள்ளிகளிலோ ஒரு சிறிய இடத்தில் அமைப்பதின் மூலம் உருவாக்கலாம் என்பதை மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்குக் கோரிக்கையாக முன்வைக்கிறோம். கடந்த ஈராண்டுகளில் தமிழ் மரபு அறக்கட்டளை வழியாக சில கல்லூரிகளிலும் தனியார் பள்ளிகளிலும் இந்த அருங்காட்சியகத் திட்டத்தைத் தன்னார்வமாகச் செயல்படுத்தி வருகிறோம் என்பதை இங்கே பதிவு செய்வதில் மகிழ்கிறோம்.

5. மாறிவரும் மின்னணு ஊடக உலகில் நமது வரலாற்றுச் சான்றுகளை பாதுகாப்பது எளிதாகி வருகிறது. இத்தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி ஒருமுறை மின்னாக்கம் செய்து பதிவேற்றிவிட்டால் அது உலகம் முழுமைக்கும் நம்மால் கொண்டு சேர்க்க முடியும். அந்த வகையில் ஓலைச் சுவடிகள், அரிய நூல்கள் மற்றும் வரலாற்று ஆவணங்களை மின்னாக்கம் செய்வதற்கான பயிற்சிகள் மாணாக்கர்களுக்கு அளிக்கப்பட வேண்டும். தமிழகத்தில் உள்ள சைவ, வைணவ சமண மடங்களிலும் மற்றும் ஏனைய சமய அமைப்புக்களிலும் பல நூறு ஆண்டுகளாகப் பாதுகாத்து வரப்படும் ஓலைச்சுவடிகளையும் கையெழுத்து ஆவணங்களையும் மின்னாக்கம் செய்யும் முயற்சிகள் தொடங்கப்பட

வேண்டும். இவை அனைத்தும் தமிழக அரசின் சார்பில் Centralized Tamil Heritage Virtual Platform உருவாக்கப்பட்டு அதன் வழி அவை பொது மக்கள் பார்வைக்குக் கிடைக்கும் வகை செய்யப்பட வேண்டும் என்பதை மாண்பமை முதல்வர் அவர்களிடம் வேண்டுகோளாக முன்வைக்கிறோம்.

6. இந்தியாவில் கிடைத்திருக்கும் கல்வெட்டுகளில் எழுபது சதவிகிதத்திற்கும் மேலானவை தமிழகம் தொடர்பானவை என்பதை ஆய்வுகள் உறுதி செய்துள்ளன. ஆயினும் பிற மாநிலங்களில் உள்ள கல்வெட்டுகள் நமது ஆய்வாளர்களுக்கு இன்னும் முழுமையாகக் கிடைக்கவில்லை. உதாரணத்திற்கு மைசூர் தேசிய தொல்லியல் காப்பகத்தில் உள்ள தமிழகம் தொடர்பான கல்வெட்டுக்கள் இன்னும் நமக்குக் கிடைக்கவில்லை. அங்கு படியெடுக்கப்பட்டவை அழியும் நிலையில் உள்ளன, அவை மின்னாக்கம் செய்யப்பட்டால் நமது அறிஞர்கள் படிப்பதற்கு வாய்ப்பு கிடைக்கும். எனவே மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் அதற்கு ஆவண செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

7. தமிழகத்தில் பாதுகாப்பற்று இருக்கும் வரலாற்று ஆதாரங்களையும், சின்னங்களையும் பாதுகாக்க மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்துவதுடன், மணாக்கர்களை அதில் ஈடுபடுத்த வேண்டியதும் அவசியமாகின்றது.

8. உலகின் பலநாடுகளில் தற்போது கவனத்தை ஈர்க்கக்கூடிய சுற்றுலா கோட்பாடு, அதாவது Heritage Tour அல்லது Cultural Tour என்பதாகும். ஒருங்கிணைக்கப்பட்ட அருங்காட்சியகங்கள், சுற்றுலாத்தலங்கள் மட்டுமின்றி மக்கள் பண்பாட்டை நேரடியாக அறியும் பொருட்டு அவ்வகை சுற்றுலாக்கள் உருவாக்கப்படுகின்றன. இதற்குக் குறிப்பாக ஐரோப்பா மற்றும் தெற்காசிய நாடுகளில் பெரும் எதிர்பார்ப்பு

இருக்கிறது. எனவே Heritage Tour என்பதில் நாம் கவனம் செலுத்துவதற்கு நமது பணிகள் உதவியாக இருக்கும்.

9. வட்டார அருங்காட்சியகங்களில் கிராம கைவினைப் பொருட்கள் மட்டுமின்றி, மக்கள் பண்பாட்டு நடவடிக்கைகளான பாடல்கள், நடனங்கள், கதைகள் மற்றும் நிகழ்த்துக் கலைகளில் விழியப் பதிவுகளின் (வீடியோ) படிகள் வைக்கப்பட வேண்டும். அதற்குத் தமிழ் மரபு அறக்கட்டளை இதுவரை வெளியிட்டுள்ள மற்றும் வெளியிட உள்ள விழியப்பதிவுகளைத் தமிழக அரசு பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதைத் தெரிவிப்பதில் மகிழ்கின்றோம்.

10. கல்வெட்டு, ஓலைச்சுவடி வாசிப்பு என்பது தற்போது கல்லூரிகளின் தமிழ்த்துறைகளில் ஒரு பாடமாக இல்லாத நிலை இருக்கின்றது. இந்த நிலை நீடித்தால் இன்னும் சில ஆண்டுகளில் கல்வெட்டுக்களையும் ஓலைச்சுவடிகளையும் வாசிக்கும் திறன் படைத்தோர் இல்லாத நிலை உருவாகும் அபாயகரமான சூழல் ஏற்பட வாய்ப்புண்டு என்பதால் கல்லூரிகளில் துணைப்பாடமாக அல்லது பட்டயப் பாடமாகத் தொல்லியல் பாடத்தை அறிமுகம் செய்யும் முயற்சியைத் தமிழக அரசு முன்னெடுக்க வேண்டும். இதற்கான பாடத்திட்டத்தைத் தயாரிக்கும் முயற்சியில் தமிழ் மரபு அறக்கட்டளை ஈடுபட்டுள்ளது என்பதையும், அவற்றைத் தமிழக அரசுடன் இணைந்து செயலாற்ற விருப்பம் கொண்டுள்ளோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இவண்,

முனைவர்.க.சுபாஷிணி

நிறுவனர் - தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை

## 2. உலக ஐயை ஒன்றுகூடல்

*– முனைவர்.க.சுபாஷிணி*

*பெண்களுக்கென ஒரு மாநாடு . . .*
*அது பெண்களைச் சிறப்பித்த ஒரு மாநாடு . . .*
*ஆளுமை நிறைந்த பெண்களுக்கு விருது வழங்கிச் சிறப்பித்த ஒரு மாநாடு . .*
*ஆய்வுலகில் ஈடுபட்டிருக்கும் பெண்களை மேலும் ஊக்குவித்த ஒரு மாநாடு .*
*ஆம். முதலாம் உலக ஐயை மாநாடு கடந்த 17.03.2018 அன்று மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நடைபெற்றது.*

தமிழகம், இலங்கை, மலேசியா, ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, துபாய், வட அமெரிக்கா ஆகிய நாடுகளிலிருந்து பெண் ஆளுமைகள் இந்த ஆய்வுக்கருத்தரங்கில் வந்து கலந்து கொண்டனர். இணையத்தின் வழியே நல்ல செயல்பாடுகளை முன்னெடுக்கலாம்; திறமையாக நிகழ்வுகளை ஏற்பாடு செய்து அதனை வெற்றிகரமானதாகச் செயல்படுத்திக் காட்டலாம் என்பதற்கு உதாரணமாக இந்த மாநாடு நடைபெற்றது.

ஈராண்டுகளுக்கு முன்னர் கடல் ஆய்வாளர் ஒரிசா பாலு அவர்களால் துவக்கப்பட்டு, இணையவழி ஒருங்கிணைக்கப்பட்டுச் செயல்படும் குழு "ஐயை வாட்சப் குழுமம்". ஆய்வுத் தளத்தில் இயங்கும் பெண்களை ஒருங்கிணைத்து பெண்களின் அளப்பறியச் சக்தி, ஆக்ககரமான செயல்பாடுகளையும் தரமான ஆய்வுகளையும் முன்னெடுக்க ஒரு அமைப்பு தேவை எனச் சிந்தித்து இக்குழுமத்தைத் தொடக்கியதால் இன்று உலகின் 145 நாடுகளிலிருந்து உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழுமமாக இக்குழு செயல்பட்டு வருகின்றது. இக்குழுமத்தின் முதல் ஆய்வு மாநாட்டில் பெண் ஆய்வாளர்களே முற்றும் முழுதுமாக வழங்கிய 23 கட்டுரைகளைக் கொண்ட ஒரு தொகுப்பு நூல் "தீ இனிது" என்ற பெயருடன் ஆய்வுக்கருத்தரங்கம் நடைபெற்ற நாளில் வெளியிடப்பட்டது.

இந்த ஆய்வுக்கருத்தரங்கத்தை இந்தியத் தூதரகத்தின் கலை கலாச்சாரப் பிரிவுத் தலைவர் திரு.அய்யனார் அவர்கள் தொடக்கி வைத்தார். தமிழ் மரபு அறக்கட்டளையின் தலைவர் முனைவர் க. சுபாஷிணி வழிநடத்த, பேராசிரியர்.நா.கண்ணன் திறனாய்வு செய்ய, பேராசிரியர் அரங்க மல்லிகா முறைப்படுத்த, திரு.ஒரிசா பாலு நெறிப்படுத்த இந்த ஆய்வுக் கருத்தரங்கம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

பெண்கள் தொடர்பான, பெண்கள் சந்திக்கும் பிரச்சனைகள், பெண் ஆளுமைகள் பற்றின, பெண் சாதனைகளை விளக்கும், வரலாற்று, சமூகவியல், மானுடவியல், ஊடகவியல் எனப் பன்முகத்தன்மையில் அமைந்த கட்டுரைகளை ஆய்வாளர்கள் முன் வைத்தனர். அவற்றில் சில கட்டுரைகளைப் பற்றிய சிறிய குறிப்புக்களோடு அவை சொல்லும் செய்திகளைக் காண்போமே!

முனைவர் அரங்க மல்லிகா "ஔவையும் பௌத்த மீளாய்வும்" என்ற தலைப்பில் ஒரு ஆய்வுக் கட்டுரையை இந்த ஆய்வு மாநாட்டிற்காக வழங்கியிருந்தார். தமிழகத்தின் எத்திராஜ் மகளிர் கல்லூரியின் தமிழ்த்துறையில் இணைப்பேராசிரியராகவும், அக்கல்லூரி மகளிர் மையத்தின் இயக்குநராகவும் பொறுப்பில் இருப்பவர் இவர்.

தனது கட்டுரையில் இவர், மக்கள் இயற்கையோடும் சமூகத்தோடும் இணைந்து வாழ்வதற்குரிய அறநெறிகளை வெவ்வேறு காலகட்டங்களில் வாழ்ந்த உலகச் சிந்தனையாளர்களான சாக்ரட்டீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில், காண்ட், ஹெகல் முதலிய அறச்சிந்தனையாளர்களோடு வள்ளுவர் சிந்திக்கத்தக்கவர் என்று குறிப்பிட்டு அவர்களுடே பெண்பாற் புலவரான ஔவையாரும் இணைத்துக் கொள்ளப்பட வேண்டியவர் எனக் குறிப்பிடுகின்றார்.

**நல்லாரைக் காண்பதும் நன்றே நலமிக்க**
**நல்லார்சொற் கேட்பதும் நன்றே நல்லார்**
**குணங்கள் உரைப்பதுவும் நன்றே, அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் நன்றே (மூதுரை-8)**

பௌத்தத்தின் ஐவகை சீலங்களைக் கடைப்பிடித்து வாழும் நெறியை ஔவையின் இந்த மேற்குறிப்பிட்ட செய்யுள் நன்கு வெளிப்படுத்துகின்றது. தமிழ்ச்சூழலில் புத்தர் கற்பித்த பௌத்த அறக்கருத்துக்கள் ஔவையின் எழுத்துக்களிலும் பின்பற்றப்பட்டிருப்பதையும் இந்த ஆய்வுக் கட்டுரை முன் வைக்கின்றது. எவ்வுயிர்க்கும் துன்பம் தராத நினைவுகளும் சொற்களும், செயல்களும் பஞ்ச சீலங்களாகிய பொய்யாமை, களவாமை, கள்ளுண்ணாமை, காமம் கொள்ளாமை, கொலை செய்யாமை என்ற ஐந்தையும் மனதில் கொண்டு அறத்துடன் வாழ வழி வகுத்த பௌத்தக் கருத்துக்களை ஔவையார் தன் ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், மூதுரை எனப் பிரித்து விளக்குவதை இவ்வாய்வுக் கட்டுரை தெளிவு படுத்துகின்றது. ஔவை தமிழ் இலக்கிய சங்கப்பாடல்களில் 59 பாடல்களைப் புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்களில் வழங்கியுள்ளார். அவற்றில் 33 புறப்பாடல்களும் 26 அகப்பாடல்களும் அடங்கும்.

எது அறம்? எது அறமல்ல? எது நல்லது? எது கெட்டது? என்ற வாதமும் நவீனத்திறனாய்வுக்கு அடிப்படை தத்துவங்களாகக் காணப்படுகின்றன. இக்கட்டுரையில் ஆசிரியர், அயோத்திதாசர் ஔவையை அம்பிகாதேவி எனக் குறிப்பிடுவதை விளக்கி அதற்கான சான்றுகளை முன் வைக்கின்றார். ஔவையின் இலக்கியக் கருத்தியலை அறம் சார்ந்த சிந்தனைகளோடு விளிம்பு நிலையில் வாழும் மக்களுக்கான விடுதலை வரலாற்றின் மறு உருவாக்கக் கருத்தியலை அயோத்திதாசர் சிந்தனை வழியாக இந்திய வரலாற்றை மாற்ற, இந்தியத் தொன்மைகளில் ஒன்றான பௌத்தத்தை ஔவையார் தமிழகமெங்கும் எடுத்துச் சென்று அறப்புரட்சியை விதைத்திருக்கின்றார். என தன் கருத்தை இவ்வாய்வுக் கட்டுரையின் வழி பதிந்திருக்கின்றார் முனைவர் அரங்க மல்லிகா.

கோயம்புத்தூரைச் சேர்ந்த ஸ்ரீசக்தி பொறியியல் மற்றும் தொழில்நுட்பக் கல்லூரியில் கணிப்பொறி அறிவியல் துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றும் சிந்தியா லிங்கசாமி, “பழந்தமிழ்ப் பெண்களின் அரசியல் மற்றும் நிர்வாகத்திறன்” என்ற தலைப்பில் தமிழ் மண்ணிற்கும் கொரியாவிற்கும் உள்ள தொடர்பினையும் அத்தொடர்பு உருவாகக் காரணமாயிருந்த ஒரு பெண்மணியைப் பற்றியும் தனது ஆய்வுக் கட்டுரையில் எழுதியிருக்கின்றார்.

கடல் பயணம் மேற்கொண்டு ஒரு அரசியாக, நாட்டின் தலைவியாக நிர்வாகம் செய்த ஆய்வேளிர் நாட்டு தமிழ்ப்பெண் செம்பவளத்தின் நிர்வாகத் திறனை ஆராயும் வகையில் இக்கட்டுரை அமைந்திருக்கின்றது.

பழந்தமிழ்ப் பெண்களின் வீரத்தை மீட்டெடுத்து, அவர்களின் ஆளுமைத் திறன், விவேகம், துணிச்சல், வீரம், போன்ற குணங்களை இக்கால பெண்கள் கற்றுக் கொண்டு துணிச்சலுடன் செயலாற்ற வேண்டியதை இக்கட்டுரையின் வழி கட்டுரையாசிரியர் முன் வைக்கின்றார்.

தஞ்சையில் உள்ள தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறையின் முனைவர்பட்ட ஆய்வாளர் வே.ரேகா, தொட்டி நாயக்கர் வாழ்க்கை முறை என்ற கட்டுரையை வழங்கினார். தனது கட்டுரையில் இவர் தொட்டி நாயக்கர்கள் எனப்படும் சேலம் அருகே சிற்றூரில் வாழும் ஒரு சமூகத்தில், பெண்களின் நிலையைப் பற்றி விவரித்து இவ்வாய்வுக் கட்டுரையை சமர்ப்பித்தார்.

இச்சமூக மகளிர் இன்றும் ரவிக்கை அணிவதில்லை. பெண்கள் ரவிக்கை அணிவது ஒரு தெய்வக்குற்றம் என்ற மூட நம்பிக்கையைப் பின்பற்றுபவர்களாக இவர்கள் இன்றும் இருப்பதை நேரடி களப்பணி வழியாக இவர் பதிவு செய்துள்ளார். தமிழகத்தில் உள்ள ஏனைய சமூகத்தவர்களிடையே உள்ளது போலவே பெண்களுக்கான சில உரிமைகள் தடை செய்யப்பட்டிருப்பதை இவரது ஆய்வுக் கட்டுரை வெளிச்சப்படுத்துவதாக உள்ளது. அவற்றுள் சில.

- பெண்கள் சைக்கிளில் செல்லும் வழக்கம் இல்லை.
- பெண் பூப்பெய்தியதும் அவளுக்கென்று தனி வீடு வைத்து அங்கு அவள் தனிமைப்படுத்தப்படுகின்றாள். மாதவிடாய் முடிந்த பின்னரே வீட்டிற்குள் வர அப்பெண் அனுமதிக்கப்படுகின்றாள்.
- பூப்பெய்திய பெண் ரவிக்கை அணியத்தடை உள்ளது. இது தெய்வக் குற்றமாகின்றது.
- பெண் தலையைப் பின்னி சடை போட்டுக் கொள்ளக்கூடாது. கொண்டை தான் போட்டுக் கொள்ள வேண்டும்.

- பிற ஆடவர்கள் வீட்டிற்கு வந்தால் பெண்கள் அப்போது வீட்டினுள் நுழையக் கூடாது. அவர்கள் சென்ற பின்னரே வீட்டிற்குள் வர வேண்டும்.
- பெண்கள் ரவிக்கை போடாமல் இருப்பதால் பல பொது இடங்களுக்குச் செல்லத் தயங்குகின்றனர். சேலையை சுற்றிக் கொண்டு கூனிக் குறுகி அமர்ந்திருக்கின்றனர்.

இச்சமூகத்தில் உள்ள இவ்வகை மூட நம்பிக்கைகளினால் பெண்கள் கல்வி அறிவு இன்றியும் வெளி உலக அனுபவம் இன்றியும் முன்னேற்றம் காண முடியாது தவிப்பதை கட்டுரையாசிரியர் தனது ஆய்வுக் கட்டுரையில் விளக்கியிருக்கின்றார்.

தமிழகத்தின் பாத்திமா கல்லூரி முனைவர் பட்ட ஆய்வாளரான சே.சலோமி இராஜரீகம் "ஜானகி ஆதிநாகப்பனின் ஆளுமைத்திறன்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வழங்கியிருந்தார். பத்மஸ்ரீ ஜானகி அவர்கள் 1925ம் ஆண்டு பெப்ரவரி மாதம் 25ஆம் தேதி கோலாலம்பூரில் பிறந்தவர். இந்திய சுதந்திர விடுதலைக்கான போராட்டம் தலைதூக்கியிருந்த போது நேதாஜி சுபாஷ் சந்திரபோசின் படையில் தன்னை இணைத்துக் கொண்டு அப்படையின் துணைத்தளபதியாகப் பொறுப்பேற்றுக் களமிறங்கி போராடிய பெண்மணியாவார். பர்மா இந்தியா எல்லையில் நிகழ்ந்த போரில் இவர் களத்தில் இருந்து செயலாற்றினார்.

இந்தியாவிற்கு வெளியே பத்மபூஷன் விருதுபெற்ற முதல் பெண்மணி இவர் என்ற சிறப்பும் இவருக்குண்டு. 1946ம் ஆண்டு மலேசிய இந்தியர் காங்கிரசை அதன் முதல் தலைவர் ஜான் திவி அவர்கள் தொடங்கிய போது அவருடன் இணைந்து செயலாற்றினார். மலேசிய நாடாளுமன்றத்தின் மேலவை உறுப்பினராகி மலேசிய இந்தியர் காங்கிரசின் மகளிர் பகுதி சார்பில் மேலவை உறுப்பினராகவும் இவர் சேவையாற்றினார் என்பதை ஆய்வாளர் தமது கட்டுரையில் குறிப்பிடுகின்றார். தமது கணவர் டான்ஸ்ரீ ஆதிநாகப்பனுடன் இணைந்து தமது இறுதி மூச்சு உள்ளவரை இவர் பொதுத்தொண்டாற்றினார்.

தன் இளம் வயதில் தேசிய இராணுவத்தில் சேர்ந்து ஜான்சிராணி படையில் துணைத் தளபதியாக பதவி உயர்வு பெற்றவர்; மன உறுதியும் மன வலிமையும் நாட்டுப்பற்றும் கொண்ட பெண்மணியாக உதாரண மகளிராகத் திகழ்ந்தார் என்பதைக் கட்டுரை ஆசிரியர் தமது கட்டுரையில் சிறப்பாக வழங்கியுள்ளார்.



ஐயை சிவசித்ரா, "சின்னப்பிள்ளை - தமிழக கிராமப்புறப் பெண்களின் தன்னெழுச்சி வரலாறு" என்ற தலைப்பில் ஒரு கட்டுரையை வழங்கியிருந்தார். எழுதவும் வாசிக்கவும் தெரியாத ஒரு கிராமத்துப் பெண்பிள்ளை தான் சின்னப்பிள்ளை. இவர் தன் முயற்சியால் நட்ட விதை இன்று ஆலமரமாகச் செழித்து வளர்ந்து பல கிராம மகளிருக்கு உதவும் கரமாக விரிந்திருக்கின்றது. "தன்" என்ற ஒரு அறக்கட்டளையை நிறுவி ஆறு லட்சம் உறுப்பினர்களுடன் இன்று இந்த அமைப்பு செயல்பட்டு வருகின்றது. இந்தியாவின் 12 மாநிலங்களில் தற்சமயம் இந்த அமைப்பு கிளைவிட்டுப் பரவி விரிந்திருக்கின்றது. இந்தக் களஞ்சியத்தின் இன்றைய சேமிப்பு 281 கோடி இந்திய ரூபாய் என்பதைக் கட்டுரை விவரிக்கின்றது.

சின்னப்பிள்ளை கள்ளந்திரி என்ற கிராமத்தில் பிறந்தவர். 18 வயதில் திருமணம். புல்லுச்சேரி கிராமத்திற்கு வருகின்றார். சில பண்ணையார்களுக்குச் சொந்தமாக இருக்கும் விளைநிலங்களில் வேலை செய்து கூலித் தொழிலாளியாக அவர் வாழ்க்கை தொடர்கின்றது. 1990 வாக்கில் இத்தகைய கூலித்தொழிலாளிகளின் மேற்பார்வையாளராக இருந்த போதிலும் தன் சக தொழிலாளர்களுக்கு வேண்டிய உரிமைகளைப் பெற்றுத்தர வேண்டும் என்ற முனைப்புடன் செயல்படத்தொடங்கினார். அந்தச் சூழலில் அந்தக் கிராமத்திற்கு திரு.வசிமலை அவர்கள் வருகின்றார்கள். இவர் கிராமப்புற மேம்பாட்டிற்காகப் பணிபுரிந்து கொண்டிருப்பவர். அவரது வழிகாட்டுதலுடன் சின்னப்பிள்ளை சேமிப்புத் திட்டத்தை தொடங்குகின்றார்.

முதலில் 20 பெண்கள், மாதம் 20 ரூ முதலீட்டில் ஆரம்பித்த இந்த முயற்சி படிப்படியாக கிராமம் கிராமமாக விரிவடைந்தது. இந்த முயற்சி வெற்றியடைய முக்கியக் காரணமாக இருந்தது சின்னப்பிள்ளையின் நேர்மை, உதவும் மனம், எதிர்காலத்தைப் பற்றிய தூரநோக்குச் சிந்தனை மற்றும் இதில் உறுப்பினர்களாக தம்மை இணைத்துக் கொண்ட பெண்களின் கடும் உழைப்பும் நம்பிக்கையும் தான். இப்படி படிப்படியாக வளர்ந்து இன்று பல கிராமப்புற பெண்களின் வாழ்க்கைத் தேவைகளுக்கு நிழல் தரும் குடையாக இருக்கின்றது இந்த "தன்" அமைப்பு. சின்னப்பிள்ளையின் சேவையைப் பாராட்டி இந்தியப் பிரதமர் மத்திய அரசின் விருதான "ஸ்த்ரீசக்திபுஷ்கர்" விருதினை 1999ம் ஆண்டு வழங்கினார் என்பது பெருமையளிக்கும் செய்தி அல்லவா.



அடுத்து நாம் காணவிருப்பது கடந்த ஆண்டு மதத்தீவிரவாதிகளால் படுகொலை செய்யப்பட்ட கௌரி லங்கேஷ் பற்றிய ஒரு கட்டுரை. தமிழகத்தின் எத்திராஜ் மகளிர் கல்லூரியில் உதவிப்பேராசிரியராகப் பணியாற்றும் ஐயை முனைவர். கு.உமாதேவி "கௌரி லங்கேஷின் தாய்மொழி தார்மீகம்" என்ற கட்டுரையின் வழி இந்த ஆளுமையின் தன் தாய்மொழி சார்ந்த செயல் பாடுகளை விவரிக்கின்றார்.

கௌரி கர்நாடகா மாநிலத்தில் 1962ம் ஆண்டு பிறந்தவர். 1985ம் ஆண்டு முதல் 1990 வரை தி டைம்ஸ் ஆஃப் இந்தியா இதழில் பணியாற்றியவர். நவீன கன்னட எழுத்தாளர்களின் முன்னோடிகளில் ஒருவரும் லங்கேஷ் என்ற பத்திரிக்கையைத் தொடக்கியவருமான ப்ரகதி ரங்காவின் மகள். ஆங்கிலக் கல்வியை கற்றவர். தன் தந்தையின் மரணத்திற்குப் பிறகு லங்கேஷ் பத்திரிக்கையை நடத்தும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். ஆங்கில வழிக்கல்வி கற்றவருக்குக் கன்னட மொழி பத்திரிக்கையை நடத்துவது, அதிலும் கொள்கை மாறாத வகையில் திறம்பட நடத்துவது என்ற சவால் இருந்தது. விமர்சனங்கள் எழுந்தன. ஆகினும் தன் தாய்மொழி மீது

கொண்ட தீவிர ஈடுபாட்டினாலும், சமூக அநீதிகளை எதிர்த்து குரல் கொடுக்க வேண்டும் என்ற கடப்பாட்டுடனும் தனது பணியைத் தீவிரமாக முன்னெடுத்தார் கௌரி லங்கேஷ். கன்னட மொழியைக் கற்கத் தொடங்கிய இவர், தன் பத்திரிக்கை வாயிலாக 850 க்கும் மேற்பட்ட திரை-புத்தக விமர்சனங்கள், சுயவரலாறு கட்டுரைகள், விளையாட்டுத் தொடர்பான கட்டுரைகள் என எழுதியிருக்கின்றார். தாய்மொழிப் பற்று, தாய்மொழி அடையாளம், தாய்மொழி பேணுதல் என்ற வகையில் தனது கருத்துக்களை முன் வைத்து மிகத் தீவிரமாக செயலாற்றியவர் இவர்.

இந்தியா எப்படி இருக்க வேண்டும் என்பதன் பிரதிநிதியாக கௌரி மதச்சார்பற்றவராக, ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டவராக தன் செயல்பாடுகளைத் தொடர்ந்தார்.

தாய்மொழியில் கற்கும் போது ஏற்படும் புரிதல் ஆழமானது. ஒன்றுக்கும் மேற்பட்ட மொழிகளைக் கற்கும் திறன் ஒவ்வொருவருக்கும் இருக்கின்றது. தாய்மொழியை மறந்தவர்களாக இருப்பது பெருமையல்ல. எனக்குத் தமிழ் தெரியாது என ஆங்கிலத்தில் சொல்லிச்சிரிக்கும் பலரை நாம் இன்று காண்கின்றோம். அது தாழ்வு மனப்பான்மையுடன் கூடிய ஒரு வித உளவியல் பிரச்சனையே. எந்த வயதிலும் ஒரு மொழியைக் கற்க விரும்புவோர் முயற்சி செய்தால் நிச்சயம் கற்றுக் கொள்ள முடியும். அதிலும் ஒருவர் தனது தாய்மொழியை இளம் வயதில் கற்க வாய்ப்பு கிடைக்கவில்லையென்றால் மனம் தளராது முயற்சித்தால் நிச்சயம் மொழித் திறனைப் பெறலாம். தன் தாய்மொழியில் சீரிய பங்காற்றலாம் என்பதற்குக் கௌரி லங்கேஷ் ஒரு உதாரணமாகத் திகழ்கின்றார் என்பதை இக்கட்டுரையின் வழி ஆசிரியர் முன்வைக்கின்றார்.

அடுத்த கட்டுரை மௌனமாகப் பெண்கள் அனுபவித்து வரும் பாகுபாடு, அதனால் ஏற்படும் சமூக வலிகள் பற்றி பேசுகின்றது. ஐயை கி.உமாமகேஸ்வரி “மௌனப் பெருங்கடல்” என்ற தலைப்பில் சமூகப்பார்வையை ஆழமாகத் தன் கட்டுரையில் முன்வைக்கின்றார். பெண் சமத்துவம், பாரதி கண்ட புதுமைப்பெண் என்றெல்லாம் நாம் பேசிக்கொண்டிருக்கும் இக்காலகட்டத்தில் நம் தமிழ்ச்சமூகத்தில்

பெண்களைத் தொடர்ந்து வரும் சில கொடுமைகளின் சுவடுகளை ஒதுக்கித் தெள்ளிவிட்டுச் செல்ல முடியாதல்லவா?

இந்தக் காலகட்டத்திலும் விதவைகள் என அடையாளப்படுத்தப்பட்டு அவமானங்களையும் இன்னல்களையும் அனுபவிக்கும் பெண்கள் நம்மில் இருக்கவே செய்கின்றனர். அப்படி விதவை என அடையாளமிட்டு அழைக்கப்படுவோர் அனுபவிக்கும் வலிகள் பன்முகத்தன்மை கொண்டவை. தனிமை தரும் வேதனை, பொருளாதாரச் சார்பு நிலை, உலகம் என்ன சொல்லுமோ என எதிலும் பயம், பதற்றம், பாலியல் ரீதியான பிரச்சனைகள், பழமைவாத சமூகம் தரும் தாக்கம், குடும்ப சுமை என இவற்றை அடுக்கிக் கொண்டே போகலாம். சமூகத்தில் மனைவியை இறந்த கணவனை சடங்கு ரீதியாக நம் சமூகம் ஒதுக்குவதில்லை. ஆனால் கணவனை இழந்து விட்டாலோ விதவை என்ற ஒரு பட்டம் தானே கிடைத்து விடுகின்றது. இந்தக் காலத்திலும் கூட மங்கல காரியங்களிலிருந்து விலக்கப்பட்டவளாக அத்தகைய பெண்கள் வாழ்கின்றார்கள். ஆதலால், நம் சமூகத்தில் “விதவை” என்ற சொல்லாடலே  புழக்கத்திலிருந்து நீக்கப்பட வேண்டும் என்ற கருத்தை முன் வைக்கின்றார் கட்டுரை ஆசிரியர்.

இப்படி பல்வேறு கோணங்களில் பெண்களின் சமகால சமூக, பொருளாதார சிந்தனைகளை ஆய்வுத் தகவல்களை முன் வைக்கும் வகையில் உலக ஐயை மாநாட்டில் கட்டுரைகள் படைக்கப்பட்டன. பெண் என்பவளது உலகம் ஆண் வரையறுக்கும் அல்லது சமூகம் கட்டமைக்கும் எல்லைகளுக்குள் முடங்கி விடுவதல்ல; மாறாகப் பெண் தன் ஆற்றலை வெளிப்படுத்தி திறமையுடன் செயல்பட்டால் உலகை ஆளலாம் என்ற ஊக்க மந்திரத்தை வழங்கிய நிகழ்வாக இந்த உலக ஐயை மாநாடு நடைபெற்று முடிந்தது. ஒரு பெண்ணுக்கு பலம் அவள் பெரும் கல்வியும் அவள் மன உறுதியும் தான். தெளிந்த சிந்தனையும், சீரான கருத்துக்களும், தன்னைப்பற்றிய சரியான புரிதலும் கொண்ட பெண்கள் சாதனைகளைச் செய்தோராகப் பரிமளிக்கின்றனர்.

பெண்கள் என்றால் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள். பெண்களைப் பற்றிப் பேசினால் அது அவர்களது பலகீனத்தை முன்வைத்து எழுப்பப்படும்

நிகழ்வுகளுக்கு எழும்பும் எதிர்வினைகளும் செயல்பாடுகளும் எனக் காண்பது ஒரு வித கண்ணோட்டம். இது இன்றைய அளவில் இன்னமும் தொடர்கின்ற ஒரு தேவை என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் இக்காலத் தமிழ்ப்பெண்கள் பல்வேறு துறைகளில் தங்கள் திறமைகளை வளர்த்துக் கொண்டவர்களாக இருக்கின்றனர். வீடு என்ற நான்கு சுவர்களுக்குள் முடங்கிவிடுபவர்களாக இவர்கள் தம்மை அடையாளப்படுத்திக் கொள்பவர்களல்ல. தன்னையும் வளர்த்துக் கொண்டு, தன் குடும்பத்தையும் அரவணைத்துக் கொண்டு, தன் குடும்ப பொருளாதாரத் தேவைகளையும் முன்னெடுத்துச் செயல்படுத்தும் செயல்திறன் மிக்கோராக இக்காலப் பெண்கள் வளர்ச்சி கண்டிருக்கின்றனர்.



கோலாலம்பூரில் நடைபெற்ற முதலாம் உலக ஐயை மாநாட்டில் ஆய்வுக் கட்டுரைகள் வழங்க வந்த பெண்டிர் பலர் சமூகப் பார்வையைக் கொண்ட ஆளுமைகளாகத் தம்மை வளர்த்துக் கொண்டிருப்பவர்கள். அவர்கள் படைத்த கட்டுரைகள் பெண் இனத்தின் பல்வேறு கோணங்களை ஆய்வுப்பூர்வமாக அலசுவதாக அமைந்திருந்தது.

அயலகத்திலிருந்து வந்து கலந்து கொண்டு பங்களித்த ஆய்வாளர்களுடன் மலேசியாவின் கல்விக்கழகங்கள் சிலவற்றிலிருந்தும் ஆசிரியர்களும் ஆய்வு மாணவர்களும் திரளாகப் பங்கு கொண்டு பயன்பெற்றனர். பல நாடுகளைச் சார்ந்த மகளிர் இதுவரை வாட்சப் குழுமம் வாயிலாக மட்டுமே சந்தித்தவர்கள் நேரிலே சந்தித்து ஒருவருக்கொருவர் நட்பு பாராட்டி மகிழ்ந்தனர்.

பெண்கள் எனப் பேசத்தொடங்கினால் பிரச்சனைகள் தானே முன் நிற்கின்றன என்ற கருத்திற்கு மாற்றாக இருந்தது இந்த ஆய்வுக் கருத்தரங்க

நிகழ்வு. ஆக்கப்பூர்வமான சிந்தனைகள் ஒலித்தன. ஆக்கப்பூர்வமான நட்புச் சூழல் விதைக்கப்பட்டது இந்த நிகழ்வில். இது வளர்ந்து ஆலமரமாகி விழுதுகள் விட்டு வளரும்.

இந்த அமைப்பின் அடுத்த மாநாடு ஐரோப்பாவில் நடைபெறும் என்ற நற்செய்தியும் இந்த மாநாட்டில் வழங்கப்பட்டது. இந்த அமைப்பில் இணைந்து மேலும் தம் திறனை மேம்படுத்திக் கொள்ள விரும்பும் மகளிர், ஐயை மலர்விழி பாஸ்கரன் அவர்களை +60166236471 என்ற வாட்சப் எண் வழி தொடர்பு கொண்டு தம்மை இணைத்துக் கொள்ளலாம்.

**மகளிர் மேன்மை காக்கும் இந்த ஐயை குழுமத்திற்கு என் நல்வாழ்த்துகள்!**

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

# 3. யாழ்ப்பாணத்தில் உலகத் தமிழ் பண்பாட்டுப் பெருவிழா

*—முனைவர். சுபாஷிணி*

இலங்கையின் யாழ்ப்பாணத்தில் நடைபெறும் உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் கலை பண்பாட்டுப் பெருவிழாவிற்கு எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் துணைச்செயலாளர் என்ற வகையிலும், உலகத் தமிழ் மரபு அறக்கட்டளையின் தலைவர் என்கின்ற வகையிலும், மாநாட்டில் கலந்து கொள்ளும் அறிஞர் பெருமக்களுக்கும், பேராளர்களுக்கும், உலகத் தமிழ்ச் சொந்தங்களுக்கும் என்னுடைய அன்பினையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கின்ற இத்தருணத்தில் இப்பெருவிழாவிற்கான எனது செய்தியாக பின்வரும் கருத்துக்களை முன்வைக்கிறேன்.




வங்கக்கடல் பரப்பின் ஒரு முனையில் வாழும் தமிழர்கள் உலக சமுதாயங்களோடு போட்டியிட்டும், இயைந்தும் உலகளாவிய தமது பெருவாழ்வை கட்டமைத்துக் கொள்ளவேண்டிய காலத்தில் நாம் இன்று இருக்கின்றோம். தமிழகம், இலங்கை ஆகிய இரு பகுதிகளின் ஊடாக மட்டுமே உலகத்துக்கான தமிழர் பார்வை கட்டமைக்கப்படும் நிலை இனி

வரும் காலத்தில் நீடிப்பதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவு. உலகின் பல பாகங்களில் தமிழர்கள் குடியேறி புதுவிதமான உலகைப் படைப்பதில் முன்னணியில் நிற்கிறார்கள். அப்படிப் பார்க்கின்ற போது தமிழகம், இலங்கை , மலேசியா, சிங்கை, கனடா, வட அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஐரோப்பிய நாடுகள், தென்னாப்பிரிக்கா, மொரிஷியஸ், ரீயூனியன் தீவுகள், ஆகிய நாடுகளிலுள்ள தமிழர்களிடையே ஒருங்கிணைப்பு உருவாகி உலகத்தமிழர் பண்பாடு கட்டமைக்கப்படும் என உறுதியாக நம்புகிறேன்.

மேலும், தமிழகம் மற்றும் இலங்கையிலிருந்து உலகிற்குக் காட்டப்படும் பண்பாட்டு அடையாளங்கள் இன்னும் சீர்தூக்கிப்பார்க்கவேண்டிய அவசியம் இருக்கின்றது. சாதி, மற்றும் அது உருவாக்கிய ஏற்றத்தாழ்வுகளை உலகிற்கான பண்பாடாக இனிமேலும் தமிழர்களால் முன்வைக்க முடியாது. அதை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தமிழர்கள் முன்னெடுத்துச் செல்வார்களேயானால் உலக அரங்கில் தமிழினம் தனிமைப்படுவதற்கான வாய்ப்பு அதிகம் இருக்கின்றது. மாறாக, நமது ஆதித்தமிழர் மரபில் இருந்த சமத்துவ பண்பாட்டுக் கூறுகளையே உலகிற்கான நமது அடையாளமாக நாம் முன்வைக்க வேண்டும். தமிழ் மரபினைத் தொடர்ந்து ஆய்வுக்குட்படுத்திவரும் எம் போன்ற ஆய்வாளர்கள் உலகின் பல பகுதிகளுக்கும் பயணம் செய்து தமிழ் பண்பாட்டின் அடையாளங்களின் மூல வடிவங்களைக் கண்டறியும் முயற்சியில், புதிய வெளிச்சங்கள் இப்போது கிடைத்திருக்கின்றன.

கிழக்காசிய நாடுகளின் பண்பாடுகளைக் கட்டமைத்ததில் பண்டைய கால தமிழர்கள் மிகப் பெரும் பங்காற்றியிருக்கின்றார்கள் என்கின்ற ஆச்சரியப்படத்தக்க உண்மைகளை இந்த உலகம் உணர்ந்து கொள்ளும் நாள் வெகு தூரம் இல்லை. கிழக்காசிய நாடுகளில் தமிழர்கள் கூலிகளாகவும் கொத்தடிமைகளாகவும் தாம் போய் சேர்ந்தார்கள் என்கின்ற அண்மைய வரலாறு ஒரு சிறு அளவிலான உண்மை மட்டுமே. ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழர்கள் உருவாக்கிய கிழக்காசிய பாதைகளின் வழியேதான் நாம் இன்னமும் பயணித்துக் கொண்டிருக்கின்றோம். இது சீனர்கள் உருவாக்கிய பட்டுசாலைகளை விட மிக நீண்டதும் மிகப்பழையதுமானதுமாகும். இந்தத் தமிழச் சாலைகள் கிழக்காசியா

மட்டுமன்றி மேற்கு நோக்கி ஐரோப்பிய, ஆப்பிரிக்க எல்லைகள் வரை போயிருக்கின்றன என்கின்ற வரலாற்று உண்மையை உங்களிடம் இந்த வாழ்த்துச் செய்தி வழியாகப் பகிர்வதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

வருங்காலத்தில் நமது தற்காலத்து மத அடையாளப் பார்வைகளை விலக்கி ஒரு மதச்சார்பற்ற, சாதிசார்பற்ற பண்பாட்டினை முன்னிறுத்தும் வரலாற்றுப் பார்வையைத் தமிழர்கள் முன்னெடுப்பார்களேயானால் உலக பண்பாட்டைக் கட்டமைப்பதில் நாம் முன்னோடிகளாக இருக்க முடியும் என்ற உண்மையை உரத்துச் சொல்ல முடியும். எனவே முன் நிபந்தனைகளின்றியும் முன்சாய்வு இன்றியும் நாம் கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் முன்னெடுப்போம் என்ற அறைகூவலோடு இந்தப் பெருவிழாவிற்கு எனது வாழ்த்துக்களையும் அன்பையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்
முனைவர்.க.சுபாஷிணி
துணைச்செயலாளர்; உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கம்
தலைவர்; தமிழ் மரபு அறக்கட்டளை

## 4. கல்வெட்டில் அரசியல்

*—தேமொழி*

தமிழக வரலாற்றை ஆய்வு செய்தவரும், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத் தலைவராகவும் இருந்த மறைந்த ஜப்பானியத் தமிழறிஞர் நொபோரு கரஷிமா தமிழ்ச் சமூகத்தின் வாழ்வுமுறையை அறிந்துகொள்ளும் செய்திச் சுரங்கமாகவே தமிழகம் தந்த கல்வெட்டுச் செய்திகளைக் கருதினார். சமூகம் எப்படி இயங்கியது, எப்படி மாறியது என்பது தெரியாமல் ஒரு நாட்டின் அரசியல் வரலாற்றையும் ஆட்சி வரலாற்றையும் புரிந்துகொள்ள முடியாது என்னும் கொள்கையுடன் கல்வெட்டுச் செய்திகளை ஆய்வுக்குப் பயன்படுத்தி இடைக்காலச் சோழ சமூகத்தைப் பற்றிய ஆய்வுகள் செய்தவர் நொபோரு கரஷிமா. அவர் தமிழ் ஆய்வில் இக்கால அரசியல் தாக்கம் செலுத்துவதை விரும்பாதவராகவும் இருந்தார். கடந்த எட்டு ஆண்டுகளுக்கு முன்னர் இந்து நாளிதழுக்கு அளித்த செவ்வி ஒன்றில் 'கல்வெட்டியல் குறித்த அறிவை வளர்த்துக் கொள்ளவிட்டால், இந்த நாட்டின் பண்டைய அல்லது இடைக்கால வரலாற்றை ஆய்வு செய்ய முடியாது' என்று கவலையுடன் எச்சரித்தார்.

தமிழகத்துடன், தமிழக பல்கலைக்கழக ஆய்வுகளுடனும் 1960கள் முதற்கொண்டு அவர் தொடர்பு கொண்டிருந்த கடந்த ஐம்பது ஆண்டுகளில், பல்கலைக்கழக கல்வெட்டியல், தொல்லியல் மற்றும் வரலாற்று ஆய்வுகள் மிகவும் மோசமான நிலைக்குச் சென்றுள்ளதாக அவர் கருதினார். அத்துடன் மத்திய அரசின் தொல்லியல் துறையான ஆர்க்கியாலஜிக்கல் சர்வே ஆஃப் இண்டியா (ASI) நிறுவனத்தின் தலைவர் தொல்லியல் ஆய்வுப் பின்புலம் கொண்ட வல்லுநர் என்று இருந்த நிலைமை மாறியதும், அக்கறையற்ற நிலையில், இடையில் பல ஆண்டுகள் தொல்லியல் பின்புலம் இல்லாத ஐ.ஏ.எஸ். பட்டம் பெற்ற இந்திய ஆட்சிப் பணியாளர்கள் வழிநடத்தலில் துறையை ஒப்படைத்த நிலையும் பின்னடைவுக்குக் காரணம் என்பது அவரது கருத்து.

அவ்வாறே, தமிழகத்தில் உள்ள தொல்லியல் துறையின் கிளையலுவலக நிலையும் உள்ளது. தொல்லியல் துறைசாரா இந்திய ஆட்சிப் பணியாளர்கள் மேலாண்மையின் கீழ் கவனிப்பாரன்றி, தேவைக்கு ஏற்றவாறு புதிய தொல்லியல் துறை ஆய்வாளர்களையும் பணிக்கு அமர்த்தாத செயல்களே பின்னடைவுக்குக் காரணம். ஊட்டியில் 1962 இந்தியத் தொல்லியல் துறையின் தலைமை அலுவலகம் இருந்த காலத்தில் நான் கண்ட சிறப்பான நிலை இன்று இல்லை. சிறந்த முறையில் இத்துறைகளை மாற்றி அமைக்காவிட்டால் தொல்லியல் கல்வெட்டியல் ஆகியவற்றின் வாயிலாக பண்டைய இடைக்கால இந்திய வரலாற்றை அறிய முடியாத நிலை ஏற்படும் என்றக் கவலையையும் அவர் வெளிப்படுத்தினார்.

தமிழ்பல்கலைக் கழகம் சமீபத்தில் மைசூர் ஆர்க்கியாலஜிக்கல் சர்வே ஆ்ஃப் இண்டியாவுடன் இணைந்து சில எண்ணிம வடிவமாக்கும் பணியில் ஈடுபட்டதும், காலியிடங்களில் புதிய பணியாளர்கள் சிலரை நியமித்தும் நிலைமை மாறும் என்று கொஞ்சம் நம்பிக்கை கொள்ள வைக்கிறது என்றும் கூறினார். அத்துடன், நிலைமையில் முன்னேற்றம் ஏற்படாவிட்டால், இந்தியா தனது வரலாற்றுக் கருவூலங்களை இழக்கும் என்று அச்சப்படுகிறேன். அந்த நிலைக்குச் சென்றுவிட்டால் வரலாற்றுச் சான்றுகள் உதவியின்றி எண்ணங்கள், கருத்துக்கள் கோட்பாடுகளின் அடிப்படையில் இந்திய வரலாற்றைக் கட்டமைக்க நேரும். இது மிகவும் கவலை கொள்ள வேண்டிய ஒரு நிலை என்றும் கூறினார்.

தமிழ்க் கல்வெட்டுகளின் மதிப்பைத் தமிழர்களைவிட, இந்தியர்களைவிட வெளிநாட்டவர்களே உணர்ந்து அக்கறையுடன் பாதுகாக்கும் எண்ணம் கொண்டிருப்பது தெரிகிறது. முதன்முதலில் தொல்லியல் துறை இந்தியாவில் துவங்கப்பட்டதும் ஆங்கிலேயர் இந்தியாவை ஆண்ட பொழுதுதான், 1860-ம் ஆண்டு 'ஆர்க்கியாலஜிக்கல் சர்வே ஆ்ஃப் இண்டியா' என்ற இந்திய தொல்பொருள் ஆய்வகத் துறையை அலெக்சாண்டர் கன்னிங்ஹாம் உருவாக்கினார். பிறகு ஆர்க்கியாலஜிக்கல் சர்வே ஆ்ஃப் இண்டியாவின் கல்வெட்டியல் பிரிவு 1886 இல் துவங்கப்பட்டு 150 ஆண்டுகள் கடந்துவிட்டன, சுமார் 73,000 கல்வெட்டுச் செய்திகள் படிக்கப்பட்டு இந்திய வரலாறு அறியப்பட்டுள்ளது. ஆர்க்கியாலஜிக்கல் சர்வே ஆ்ஃப்

இண்டியாவின் தென்னிந்தியப் பிரிவு திராவிடமொழி கல்வெட்டுகள் மற்றும் சமஸ்கிரத கல்வெட்டுகளுக்கான பொறுப்பையும்; நாக்பூரில் இருக்கும் வடஇந்தியப் பிரிவு பாரசீக அரேபிய கல்வெட்டுகளிலும் கவனம் செலுத்தி வருகின்றன. முதலில் பெங்களூரில் துவக்கப்பட்ட கல்வெட்டியல் அலுவலகம் ஊட்டிக்கு மாற்றப்பட்டு 1903 ஆண்டில் இருந்து 1966 ஆண்டுவரை 63 ஆண்டுகள் ஊட்டியில் இயங்கியது. பிறகு அங்குப் பணிபுரிந்த கர்நாடகாவைச் சேர்ந்த தலைமை அதிகாரி எடுத்த முடிவின் காரணமாக தலைமையகம் மைசூருக்கு மாற்றப்பட்டுவிட்டதாகத் தெரிகிறது. பின்னர் லக்னோவிலும் சென்னையிலும் கல்வெட்டியல் துறையின் கிளை அலுவலகங்களும் துவக்கப்பட்டன.

நொபோரு கரஷிமாவின் நேர்காணலுக்கு இரண்டு ஆண்டுகள் கழித்து, இந்து நாளிதழில் வெளியான கல்வெட்டியல் துறையின் மேலாளர் டி ஆர். ரவிசங்கர் அவர்களின் நேர்காணலில் அவரும் நம்பிக்கையூட்டும் விதமான செய்திகளை முன்வைக்கவில்லை. இன்றைய சமூகத்தில் அதிக ஊதியம் தரும் பணிகளை விரும்பிச் செல்லும் இக்காலத் தலைமுறையினர் தொல்லியல், வரலாறு, கல்வெட்டியல் கல்வியில் ஆர்வமற்றவராக இருப்பது கல்வெட்டியலின் எதிர்காலத்தைக் கேள்விக்குறியாக்கி உள்ளதாகக் கூறியுள்ளார். மேலும் அரசு தக்க நடவடிக்கை எடுத்துப் பாதுகாக்காவிட்டால் இப்பொழுது உள்ள பெரும்பாலான கல்வெட்டுகள் அழிக்கப்பட்டுவிடும் ஆபத்தும் உள்ளதாகவும் கூறியுள்ளார். தொல்லியல் தடயங்களின் அருமை அறியாது வணிக நோக்கில் மக்கள் அவற்றைச் சீரழிக்கும் நடைமுறை அதிகரிக்கிறது என்றும், இருப்பவை அழியுமுன்னர் இவற்றைப் பதிவு செய்து ஆவணப்படுத்த வேண்டியத் தேவையுள்ளதாகக் குறிப்பிட்டார். வரலாற்று மரபு வளங்களைப் பற்றிய விழிப்புணர்வை மக்களுக்கு ஏற்படுத்தவும், பரவலாகப் பள்ளி கல்லூரி மாணவர் வரை கல்வெட்டியல் கல்வியைக் கொண்டு செல்லவும் நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்பதும் அவர் கோணமாக இருந்தது. ஊதியம் அதிகம் கிடைக்கக்கூடிய தொழில்நுட்பக் கல்விக்கே மாணவர்கள் முன்னுரிமை அளிக்கும் பொழுது கல்வெட்டியல் கல்வி புறக்கணிக்கப்பட்டுவிடுகிறது என்பதும் அவர் கருத்து.

இவ்வாறு தொல்லியல் துறையில் தகுதியுள்ளோர்களை பணிக்கு அமர்த்தாமல் பல காலியிடங்கள் உள்ளன, தக்கோர் தலைமையில் துறை வழிநடத்தப் படவில்லை என்று அயல்நாட்டுத் தமிழறிஞர் ஒருபுறமும்; பணிக்குத் தகுந்த கல்வெட்டியல் திறமையாளர்கள் கிடைக்கவில்லை, மக்கள் வணிக நோக்கில் தொல்லியல் சான்றுகளை அழிக்கிறார்கள் என்று தொல்லியல் துறை கல்வெட்டியல் தலைமை அதிகாரி காரணங்களை அடுக்கும் செய்திகள் வெளியாவது வரலாற்று ஆர்வலர்களுக்கு கவலையளித்து வருவது ஒரு கோணம் மட்டுமே.

இவ்வகையில் தொல்லியல் ஆய்வு காணும் முடக்கம் தரும் கவலையையும் மிஞ்சிவிடுவது, அழிந்து வரும் கல்வெட்டு படிகளின் நிலை பற்றியும், மொழி அரசியல் காரணமாக கல்வெட்டுப் படிகளின் மறைவது குறித்து தமிழக பத்திரிகைகள் பன்னிரு ஆண்டுகளாகச் செய்திகள் வெளியிட்டுக் கொண்டிருக்கும் அதிர்ச்சி தரும் மற்றொரு கோணம்.

"கடந்த நூறாண்டுகளாகக் கண்டு பிடிக்கப்பட்டு வரும் கல்வெட்டுக்கள், படித்துப் பார்க்கப்பட்டு, அவற்றில் உள்ள விஷயங்கள் நூல்களாக வெளியிடப்படவில்லை. படி எடுக்கப்பட்ட காகிதங்களும் சரியான பராமரிப்பின்றி அழிந்து கொண்டிருக்கின்றன" என்று வரலாற்றாய்வாளர்களின் குமுறல்களை ஜூனியர் விகடன் இதழின் 2006 ஆண்டு வெளியான கட்டுரை ஒன்று குறிப்பிடுகிறது. அலிகார் முஸ்லிம் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் துறைப்பேராசிரியர் டாக்டர் எஸ்.சாந்தினி பீ அவர்கள் அவர்கள் சேகரிக்கப்பட்டுள்ள கல்வெட்டுப் படிகளில் பெரும்பான்மையும் தமிழ்க்கல்வெட்டுச் செய்திகளே என்பதால் இதில் தமிழர்கள் அதிக அக்கறை கொள்ளவேண்டியத் தேவையிருக்கிறது. கண்டுபிடிக்கப்பட்டுப் படியெடுக்கப்பட கல்வெட்டுகள் மைசூர் தலைமையகத்தில் கடந்த நூறு ஆண்டுகளாகத் தக்க முறையில் பராமரிக்கப் படாமல் இருக்கின்றன என்று கவலை தெரிவித்தார்.

கல்வெட்டுகளின் பராமரிப்பு செலவு அதிகரிப்பதாலும், கல்வெட்டுகளில் 60% தமிழ் என்பதால் மாற்றான் தாய் மனப்பான்மையோடுதான் இந்திய தொல்பொருள் ஆய்வகம் நடந்து கொள்கிறது. தமிழின் 60,000 க்கும் மேற்பட்ட கல்வெட்டுகளில் 10,000 கல்வெட்டுகள் மட்டுமே 22 தொகுதிகளாக

வெளியாகியுள்ளன. இவ்வாறு தொகுதிகளாக வெளியானவை யாவும் ஆங்கிலேயர் ஆட்சியில் (1907 வரை) கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள். தற்கால மொழி அரசியல், நதிநீர் அரசியலில் தாக்கங்களில் வரலாற்று ஆய்வாளர்களுக்கு மைசூர் அலுவலகத்தில் ஆய்வுக்கு ஒத்துழைப்பு கிடைக்கப்படுவதில்லை, இந்த நிலை மாற்றப்பட நடவடிக்கை தேவை என்கிறார் டாக்டர் எஸ்.சாந்தினி பீ.

நூலாகத் தொகுத்து அச்சிட அனுப்பப்படுவதும் கவனிப்பாரற்று அங்கேயே தேங்கிவிடுகிறது, பிழை சீர் பார்க்கவும் ஆளில்லை. துவக்கப்பட்ட சென்னை கிளை அலுவலகத்திலும் படிகளைப் படிக்கவும் ஆள் பற்றாக்குறை. இருப்பவர்களுக்கும் பணியில் 20 ஆண்டுகளுக்கு மேலாகப் பதவி உயர்வும் கொடுக்கப்படாத நிலை. கல்வெட்டியல் ஆய்வகத் துறையையே தொல்லியல் துறையில் இருந்து தனியாகப் பிரித்து விடும் திட்டத்தில் கல்வெட்டியல் துறையில் காலியான இடங்கள் நிரப்பப்படவில்லை, இவை அனைத்திற்கும் காரணம் தமிழ்க் கல்வெட்டுகள் அதிகம் என்பதும், தென்னிந்திய வரலாற்றுக்கு முக்கியத்துவம் கிடைக்கக்கூடாது என்ற குறுகிய எண்ணமும்தான் காரணம் என்று பெயர் குறிப்பிட விரும்பாத தொல்லியல் துறையைச் சார்ந்த தென்னிந்திய உயர் அதிகாரி ஒருவர் ஜூனியர் விகடனில் குறிப்பிட்டுள்ளார்.

இச்செய்தி வெளியானவுடன் ஆட்சியில் இருந்த தமிழக முதல்வர் கருணாநிதி ஊட்டியில் இருந்து மைசூருக்கு மாற்றப்பட்டுவிட்ட தென்னிந்திய கல்வெட்டியல் தலைமையகத்தை மீண்டும் தமிழகத்திற்கே மாற்றவும், சென்னையில் உள்ள கிளை அலுவலகத்தை ஆய்வு நிறுவனம் என்ற நிலைக்கு உயர்த்தவும் மத்தியில் இருந்த காங்கிரஸ் அரசுக்குக் கடிதம் எழுதினர். அன்றைய மத்திய அரசின் காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தியும், துறையின் மத்திய அமைச்சராக இருந்த அம்பிகா சோனியும் மைசூர் தலைமை அலுவலகத்திற்குத் தமிழகம் கோரிய மாற்றம் குறித்து பரிந்துரை அனுப்பியுள்ளார்கள். இதை மைசூர் தலைமை அலுவலகம் தட்டிக் கழித்துவிட்டார்கள். ஊட்டியின் தலைமை அலுவலகத்தில் கடைசி யாகப் பணியாற்றிய கர்நாடகாவைச் சேர்ந்த அதன் உயர் அதிகாரி, தம்முடைய வசதிக்காக அலுவலகத்தை ஊட்டியிலிருந்து மைசூருக்குக் கொண்டு சென்று

விட முடிந்தது. ஆனால், மாநில மத்திய அரசுகளால் செய்ய இயலவில்லை என்பதை எந்த வகையில் சேர்ப்பது என்பதும் வியப்பாக இருக்கிறது.

மைசூர் அலுவலகத்தில் இருக்கும் கல்வெட்டுப்படிகளை தொகுக்க விரும்பிய தமிழக அரசு அதற்காக சில லட்சங்கள் நிதியை தமிழ்நாட்டின் தொல்லியல் ஆய்வகத்திற்கு (Tamilnadu State Dept of Archaeology -TNSDA) ஒதுக்கி மைசூர் அலுவலகத்திற்கு உதவ உத்திரவிட்டது. இந்த முயற்சியின் விளைவால் ஓராண்டு கல்வெட்டுகள் தொகுக்கப்பட்டன, ஆனால் இவ்வாறு தொகுத்துக் கொடுத்ததை அச்சில் கொண்டுவர ஆர்க்கியாலஜிக்கல் சர்வே ஆ◌ஃப் இண்டியாவிற்கு ஐந்தாண்டுகள் தேவைப்பட்டிருக்கிறது.

அடுத்த கட்டமாக ஏற்கனவே படி எடுக்கப்பட்ட சுமார் 50,000 தமிழ் கல்வெட்டுகளை எண்ணிம வடிவில் மாற்ற (Digitalistion) தமிழக அரசு எடுத்த முயற்சியைத் தட்டிக் கழிக்க முடியாமல், தமிழகத்தின் தஞ்சைப் பல்கலைக்கழகத்துடன் இணைந்து மைசூர் கல்வெட்டியல் தலைமையகம் புரிந்துணர்வு ஒப்பந்தம் போட்டுக் கொண்டது. இதற்காக ஒதுக்கப்பட்ட ஓராண்டு காலத்தில் கிழிந்துபோன படிகளையே எட்டு மாதத்திற்கு மைசூர் தலைமையகம் ஒட்டி ஒட்டி சீர் செய்து கொண்டிருந்தது. அதனால், தமிழக அரசு ஒதுக்கிய 25 லட்சத்தில் ரூபாய் 22 லட்சங்களைப் பயன்படுத்த முடியாமல் தமிழ் பல்கலைக்கழகம் அரசுக்கே திருப்பி அளித்தது என்று டாக்டர்.எஸ்.சாந்தினி பீ குறிப்பிட்டுளார். ஆனால் புரிந்துணர்வு ஒப்பந்தத்தைத் தஞ்சை தமிழ் பல்கலைக்கழகம் முறையாக பயன்படுத்திக் கொள்ளவில்லை, விரைவில் செயல்படாத நிலைக்கு ஆள் பற்றாக்குறையே காரணம் என்று மைசூர் தலைமையகத்தின் அதிகாரிகள் தஞ்சை தமிழ் பல்கலைக்கழகம் மீது குற்றம் சாட்டுகிறார்கள். அத்துடன் திறமையானவர்கள் இல்லாமல் போனதால் பணியில் ஓய்வு பெற்றவர்களைக் கொண்டு மிக மெதுவாகப் பணி தொடர்வதால் பல காலம் ஆவதாகவும், இந்தநிலைக்கு மத்திய அரசே பொறுப்பு எனவும் மத்திய அரசையும் குற்றம் சாட்டியுள்ளார்கள். இப்பொழுது எண்ணிமப் படுத்தும் பணி தனியாரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

மைசூர் தலைமையகத்தில் மட்டுமல்ல, கிளை அலுவலகமான சென்னை தொல்லியல் ஆய்வகத்திலும் பத்தாண்டுகளுக்கும் மேலாகப் பல கல்வெட்டியலாளர்கள் பணியிடங்கள் நிரப்பப்படவில்லை. ஒவ்வொரு ஆண்டும் ASI மற்றும் TNSDA சார்பில் ஒரு வருட பி.ஜி டிப்ளமா பயிற்சி பெற்று தயாராகும் கல்வெட்டியல் மாணவர்களுக்கு உரியக் காலத்தில் கல்வெட்டியலாளர் பணி கிடைக்காத பொழுது அவர்களும் வேறுபணிகளுக்குச் செல்ல வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

மார்ச், 2008 ல் மைசூர் தலைமை அலுவலகம் வேறொரு புதிய கட்டிடத்திற்கு இடமாற்றம் செய்யப்பட்ட போது அங்குப் படி எடுக்கப்பட்டு வைத்திருந்த பல நூறு தமிழ் கல்வெட்டுகள் பதிப்பிக்கப்படாமலே அழிந்து போய் விட்டதாகக் கூறப்பட்டது. கர்நாடகா அலுவலகத்தில் இவ்வாறு அழிந்து போகும் தமிழ்க் கல்வெட்டுகளுக்கு மொழி அரசியல்தான் அடிப்படைக் காரணம் என்பதைச் சராசரி மக்கள் கூறுவதில்லை, கல்வெட்டு ஆய்வாளர் நெல்லை நெடுமாறன், டாக்டர்.எஸ்.சாந்தினி பீ போன்ற அத்துறையின் வல்லுநர்கள்தான் வருத்தத்துடன் கூறுகிறார்கள். காழ்ப்புணர்வால் தமிழ்க் கல்வெட்டுகள் பராமரிப்பின்றி ஆவணப்படுத்தப்படாமல் போவது கேரளாவிலும் நிகழ்கிறது. அங்குக் கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டுகளைக் கேரள அரசும் பதிப்பிப்பதில்லை தொல்லியல் துறைவசமும் ஒப்படைப்பதில்லை என்று கல்வெட்டு ஆய்வாளர் நெல்லை நெடுமாறன் சுட்டிக் காட்டியுள்ளார்.

இதுநாள்வரை சேகரித்துவைக்கப்பட்ட 75 ஆயிரத்துக்கும் மேலான தமிழ்க் கல்வெட்டுகளின் படிவங்களையும் , பாதுகாக்கவும் பராமரிக்கவும் தமிழ் தெரிந்த தொல்லியல் அறிஞர்களைப் பணியில் அமர்த்தாத நிலையில், அவை தமிழ்ப்பண்பாட்டின் மீது வெறுப்பும் மொழிவெறியும் கொண்ட தொல்லியல் துறை அலுவலர்களால் அழிக்கப்படுவதாகவும், ஆய்வாளர்கள் ஆய்வுக்காக படிகளைக் கேட்கும்பொழுது அனுமதி மறுக்கப்படுவதுடன் பல காணாமல் போய்விட்டதாகக் கூறப்படுவதாகவும் மீண்டும் செய்திகள் தொடர்ந்து சமீபகாலம் வரை வெளியாகி வருகின்றன. இருப்பவை அழியும் முன்னர் அவற்றை அச்சில் கொண்டுவரவும் எண்ணிம வடிவிலும்

பாதுகாக்கும் அவசியத்தை ஆய்வாளர்கள் அரசிடம் முன்வைத்தும் வருகிறார்கள்.

தமிழ் மொழிக் கல்வெட்டுகளைத் தவிர பிறமொழி கல்வெட்டுகள் அச்சிலேறும் பணி விரைவாக நடப்பதாகவும் அப்பணி வரும் பத்தாண்டுகளில் முடிந்துவிடலாம் என்று கணிக்கப்படுகிறது. இதன் மூலம் தமிழ்க்கல்வெட்டுகள் திட்டமிட்டுப் புறக்கணிக்கப்படுவதாகத்தான் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது.

**கட்டுரைக்குத் துணைநின்றவை:**


1) Archaeological Survey of India, Government of India - Epigraphy Branch; http://asi.nic.in/asi_epigraphical_sans_epibranch.asp

2) ஜப்பானியத் தமிழறிஞர் நொபோரு கரஷிமா காலமானார், டாக்டர் இ. அண்ணாமலை, 26 நவம்பர் 2015, பிபிசி செய்தி நிறுவனம்; http://www.bbc.com/tamil/global/2015/11/151126_noburuobit

3) 'காவிரியும் போச்சு... கல்வெட்டும் போச்சு?', 18/06/2006, ஜூனியர் விகடன்; https://www.vikatan.com/new/article.php?module=magazine&aid=78555

4) தமிழ் கல்வெட்டுகளை அழிக்கும் கர்நாடகா... கண்டு கொள்ளாத தமிழகம்! ஆர். ஷஃபி முன்னா, விகடன், 02/05/2013; https://www.vikatan.com/news/coverstory/14440.html

5) மைசூரில் அழிக்கப்படும் தமிழ் கல்வெட்டுகள் வரலாற்று ஆய்வாளர்கள் அதிர்ச்சி, பிப் 04, 2018, தினமலர்; http://www.dinamalar.com/news_detail.asp?id=1951851

6) 'Unless knowledge of epigraphy develops, no ancient or medieval history of this country can be studied', Parvathi Menon, December 02, 2010, The Hindu; http://www.thehindu.com/opinion/interview/lsquoUnless-knowledge-of-epigraphy-develops-no-ancient-or-medieval-history-of-this-country-can-be-studied/article15576712.ece

7)'Epigraphy staring at an uncertain future', R. Krishna Kumar, February 13, 2012, The Hindu; http://www.thehindu.com/todays-paper/tp-national/tp-karnataka/epigraphy-staring-at-an-uncertain-future/article2887483.ece

---

தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

# 5. திருவாடானைக் கோயில் கல்வெட்டுகள்

*—முனைவர் கி. காளைராசன்*

பாண்டிய நாட்டில் பாடல்பெற்ற தலங்கள் பதினான்கு. அதில் திருவாடானைத் திருத்தலமும் ஒன்று (புவியிடக் குறிப்பு: 9.783656, 78.919450).

திருவாடானையில் சுவாமியின் பெயர் ஆதிரெத்னேசுவரர். ஞானசம்பந்தரின் பதிகமும், அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழும், திரு உ. வே. சா. அவர்களின் திருத் தலங்கள் வரலாறும், சேக்கிழார் பெரியபுராணமும், திருவாரூர் சாமிநாத தேசிகர் இயற்றிய திருவாடானைப் புராணமும் இக்கோயில் உறையும் இறையின் சிறப்பைக் கூறுகின்றன.



1) திருவாடானை சுவாமி சந்நிதிக்கு அருகே மண்டபத்தின் தரையில் உள்ள கல்வெட்டு



முதல் கல்வெட்டின் பாடம்:

1 .....த்தான் எழுத்து

2 ...எழுத்து படைமுகமழ(கி)ய..

3 தேவன் பொன்னாண்டான் தற்குறியு

4 த்தான் எழுத்து வத்தராய கங்கன் எழுத்து

5 (யான் போ..)ழகியாள் தற்குறி

6 ருமாள் எழுத்து இன்னாட்டுக்கு

7 சொல்ல இப் ப்ரமாணம் எழுதி

8 ட்டுக் கணக்கு கூத்தாடுவான் வி

9 ன் சேனாவரையன் எழுத்து

குறிப்பு: இது கல்வெட்டின் இறுதிப்பகுதி. சாட்சிக் கையொப்பம் இட்டவர்களின் விவரம். தேவன் பொன்னாண்டான், வத்தராய கங்கன், (அ)ழகியாள், (பெ)ருமாள், சேனாவரையன் போன்றோர் கையொப்பம் இட்டுள்ளார்கள். இவர்களில், படிப்பறிவு பெறாதவர்கள் இருவர்; இவர்கள் இருவரும் கையொப்பம் இடாமல் தம்முடைய அடையாளத்துக்கென்று தம் குறிகளை (கீறல்களை?) இட்டுள்ளார்கள. இதை "தற்குறி" என்று மூல ஓலைகளிலும், கல்வெட்டுகளிலும் குறிப்பர். இதன் அடிப்படையிலேயே, இந்த மரபு தொடர்ந்து, இன்றும் எழுத்தறிவில்லாதவர்களைத் "தற்குறி" என்று வழங்கும் வழக்கு நிலைபெற்றுவிட்டது. தற்குறிப் பெண்மணி ஒருத்தி சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. கோவில் நிர்வாகத்தில் ஏதோவொரு பணியில் ஈடுபட்டவளாக இருக்கலாம். பிரமாண ஓலை எழுதியவன், நாட்டுக்கணக்கு (கணக்கன்) கூத்தாடுவான் என்பவன் ஆவான். ஒவ்வொரு ஊருக்கும் ஊர்க்கணக்கு இருப்பர்; ஒவ்வொரு நாட்டுப்பிரிவுக்கும் ஒரு நாட்டுக்கணக்கு இருப்பர். நாட்டுக் கணக்கு இந்த ஆவணத்தை எழுதியதாலும், சாட்சிக் கையெழுத்து பலர் இட்டதாலும், இக்கல்வெட்டு குறிப்பிடும் நிவந்தம் பெரிய அதிகாரி ஒருவராலோ, அல்லது அரசனின் நேரடி ஆணை மூலமாகவோ அளிக்கப்பட்டிருக்கவேண்டும் எனலாம்.



**2) அம்மன் சந்நிதியில் உள்ள பிள்ளையாருக்கு அருகே மண்டபத்தின் தரையில் உள்ள கல்வெட்டு**



**இரண்டாவது கல்வெட்டின் பாடம்:**

**1 …………(நாட்டு கீழ்)..**

**2 …. …களப்பாளராயன் எழுத்தெ…**

**3 ……….ழகிய பெருமாளான (வீர)**

**4 .. (திரு) வாடானைத் தா….கண்….**

**5 ….. முத…. யார்….சிஷ்யப்ர….**

**6 ……….ல் விலைகொண்ட ….**

**7 ………………**

**8 …………………**

குறிப்பு: திருவாடானை ஊர்ப்பெயர் காணப்படுகிறது. களப்பாளராயன் என்பவன் பெயரும் உள்ளது. செய்தியைச் சரியாக அறிய இயலவில்லை.

துண்டான கல்வெட்டுகள் தரையில் பதிக்கப் பெற்றிருப்பதால், இதுபோன்ற கல்வெட்டுகள் நிறையவே இருந்திருக்கலாம் என்றும், அவையனைத்தையும் புதுப்பித்தே இத்திருக்கோயில் புனர்நிர்மாணம் செய்யப் பெற்றுள்ளது என்றும் உணர்ந்து கொள்ள முடிகிறது.


**நன்றி:**

கல்வெட்டுகளைப் படித்து உதவியவர்

— து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.

தொடர்பு: doraisundaram18@gmail.com **அலைபேசி** : 9444939156.


---


தொடர்பு: முனைவர் கி. காளைராசன்

kalairajan26@gmail.com

http://kalairajan26.blogspot.in/

# 6. வருவாரா நம் இராஜராஜர்

*—மாரிராஜன்*



தஞ்சைப் பெரியகோவில், இராஜராஜர் மற்றும் அவரது தேவி உலகமாதேவியாரின் திருவுருவச்சிலைகள் களவாடப்பட்டது. மீண்டும் இது பரபரப்பான தலைப்புச் செய்தியாய் ஆகிவிட்டது.

என்ன சிலைகள் அவை? யார் எடுத்தது? என்ன ஆதாரம்? எப்பொழுது திருடு போனது? இப்பொழுது எங்கே உள்ளது? அதை மீட்க இயலுமா? அவசிய சில விபரங்களை எளிமையாகப் பார்ப்போம்.

தஞ்சை இராஜராஜேஸ்வரம். பெருவுடையாருக்குப் பல நிவந்தங்களும் வந்து குவிகின்றன. அரசர், அரண்மனைப் பெண்டிர், படைத்தலைவர்கள், அமைச்சர்கள், குடிமக்கள் என்று பலரிடம் இருந்து நிவந்தங்கள் வந்து நிரம்பின. செப்பு படிமங்களும், பிரதிமமும் நிறைந்தன. அவ்வாறு கொடுத்தவர்களில் இவரும் ஒருவர். "பொய்கை நாட்டுக் கிழவன் ஆதித்த சூரியனான தென்னவன் மூவேந்த வேளான்," இவரும் தன் பங்குக்குச் செப்புப் படிமங்களைத் தானமாக அளித்தார்.

சுந்தரர், பரவை நங்கையார், சம்பந்தர் என்று நாயன்மார்களின் படிமங்களை எடுத்தார். இருந்தும் அவருக்கு ஒரு குறை. எத்தனையோ அடியார்களின் படிமங்களை எடுத்தும், நிறைவில்லை அவருக்கு. கதைகளில் கேட்டறிந்த அடியார்களுக்குப் படிமம் எடுத்தாகி விட்டது. ஆனால், கதைகளிலும், காப்பியங்களிலும் கண்டும் கேட்டுமிராத, பல உன்னத சாதனைகளுக்குச் சொந்தக்காரராய் ஒருவர் உள்ளாரே. பாரததேசமே கொண்டாடும் தென்கயிலாயமாய் தட்சிணமேருவை இவ்வுலகிற்கு அளித்த அடியார். மக்களுக்கான மன்னனாய் வாழும் பெரும் அடியார் அல்லவா இவர்? இவருக்குப் படிமம் எடுக்காமல் இருப்பதா? எடுத்தே விட்டார். மாமன்னர் இராஜராஜ சோழனுக்கும், பட்டத்தரசி லோகமாதேவிக்கும் செப்பு படிமம் எடுத்தே விட்டார்.

TEXT.

*First section.*

[1.] [illegible]
[2.] [illegible]
[3.] [illegible]
[4.] [illegible]
[5.] [illegible]
[6.] [illegible]
[7.] [illegible]
[8.] [illegible]
[9.] [illegible]
[10.] [illegible]

தஞ்சைப் பெரியகோவில் கல்வெட்டு. ( SSi vol. 2 No. 38.) தனது தலைவனை பெரியபெருமாள் எனக்குறிப்பிட்டு, இராஜராஜனுக்கும் லோகமாதேவிக்கும் எடுத்த படிமங்களை பற்றி விரிவாகச் சொல்கின்றன. படிமங்களின் நீளம் அகலம் உயரம், குறிப்பிட்டு அவற்றுக்கு வழங்கப்பட்ட பொன் முதலான ஆபரணங்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளது. எத்தனையோ கனவுகளுடன், ஆசை ஆசையாய், பொய்கைநாடு என்னும் சிறு கிராமத்தைச் சேர்ந்த தென்னவன் என்பவர் தன் மன்னனுக்காக எடுத்த இராஜராஜர் மற்றும் லோகமாதேவியின் திருமேனிகள்... இப்போது நம்மிடம் இல்லை. எங்கே இருக்கின்றன இந்த இரண்டு சிலைகளும்?

தஞ்சை மராட்டிய அரசி காமாட்சிபாய் சாகேப் காலம் வரை, கி.பி. 1875 வரை இந்த இரண்டு சிலைகளும் தஞ்சையிலே இருந்துள்ளது. இவ்வம்மையாரின் இறப்புக்குப் பிறகு மராட்டிய அரச குடும்பத்தாரிடையே உரிமை பிரச்சனைகள் தோன்றின. வழக்கு, விசாரணை என்று உச்சக்கட்ட குழப்பம் நிலவியது. அச்சமயத்தில் இச்சிலைகள் களவாடப்பட்டிருக்க வேண்டும். அவற்றுக்குப் பதிலாகப் போலியாக இரு சிலை செய்து, அவற்றின் பீடத்தில், "பெரியகோவில் ராசா ராசேந்திர சோளராசா " என்று பிற்கால எழுத்தமைப்பில் எழுதி பெரியகோவிலில் வைத்துள்ளார்கள்.

தென்னவன் மூவேந்த வேளான் எடுத்த அந்த திருவுருவச் சிலைகள் எங்கே? எந்தத் தகவலும் இல்லை. வருடங்கள் கடந்தது. குஜராத், அகமதாபாத்தில் சாராபாய் என்னும் செல்வாக்கு மிகுந்த ஒரு வம்சம் உள்ளது. அவர்களுக்குச் சொந்தமாய் கௌதம் சாராபாய் என்னும் பெயரில் ஒரு அருங்காட்சியகம் ( காலிகோ மியூசியம்) உள்ளது.

அங்குதான் இச்சிலைகள் இருப்பதாகவும், அவற்றின் அளவு மற்றும் வடிவம் அப்படியே தஞ்சை பெரியகோவிலின் கல்வெட்டுடன் பொருந்துவதாகவும், இதுதான் இராஜராஜர் மற்றும் உலகமாதேவி படிமம் என்று அனைத்து வரலாற்று ஆய்வாளர்களும் சான்றுகளுடன் உறுதிப்படுத்தினர். பரபரப்பு தொற்றியது.

இந்திராகாந்தி ஒரு முறை தஞ்சை வந்தபோது அவரது கவனத்திற்கு இவ்விடயம் கொண்டு செல்லப்பட்டது. அப்போதைய முதல்வர் எம். ஜி. ஆர். இச்சிலைகளை மீட்க முயற்சிகள் மேற்கொண்டார், பலனில்லை.

தமிழக முதல்வராகக் கலைஞர் இருந்தபோது, அப்போதைய குஜராத் முதல்வர் நரேந்திர மோடியின் கவனத்திற்கு இவ்விடயத்தைக் கொண்டு சென்றார். பேச்சுவார்த்தையில் முன்னேற்றம் கண்டது. இராஜராஜர் தன் மனைவியுடன் தஞ்சை திரும்புவார் என்று அனைவரும் காத்திருந்தனர். அப்போதைய கல்வி அமைச்சர் தங்கம் தென்னரசு, செயலர் இறையன்பு, குடவாயில் பாலசுப்ரமணியன், தொல்லியல் இயக்குநர் இரா.நாகசாமி ஆகியோர் குழுவாக குஜராத் சென்று முதல்வர் நரேந்திர மோடியைச் சந்தித்தனர். எல்லாம் சரியாக நடந்தும் பயன் இல்லாமலே போனது.

தொல்லியல் துறை இயக்குநர் திரு. நாகசாமி அவர்கள் இச்சிலைகள் தஞ்சை பெரியகோவிலுக்குச் சொந்தமானது அல்ல என்று கூறிவிட்டாராம். ஆகவே, குஜராத் அருங்காட்சியகம் அச்சிலைகளைத் தர மறுத்துவிட்டதாம். இப்படி ஒரு தகவல் பரவியது. கலைஞர் எடுத்த அனைத்து முயற்சிகளும் பலனற்றதாய் ஆயின.

இப்போது மீண்டும் சிலை மீட்பு நிகழ்வுகளை ஐயா பொன். மாணிக்கவேல் அவர்கள் முன்னெடுக்கிறார். ஒட்டுமொத்த தமிழகமும் அவருக்குத் துணை நிற்கவேண்டும். இராஜராஜரையும், பட்டத்தரசி உலகமாதேவியையும் வரவேற்கக் காத்திருப்போம்.

---

தொடர்பு: மாரிராஜன் (marirajan93@gmail.com)

## 7. கோயிலின் விமானங்கள்

*—நூ.த.லோ.சு.*



கோயிலின் சுற்று தளம் செவ்வக வடிவுடையதாகவும், தூங்கானை மாட விமானம் கொண்டதாகவும், படத்தில் காண்பது போல சில கோயில்கள் அமைந்திருப்பதுண்டு. இதன் காரணம், கோயிலின் பழங்காலத்திய கருவறை விமானம் கருங்கல்லால் ஆகாமல் சிதிலமடைந்ததால் பின்னாளில் அந்நாளைய (current) புதுமை, பெருமை தாங்கும் வகையில் ஆனதான தூங்கானை மாடமாக விமானம் மட்டும் அமைக்கும் ஒரு முயல்வு இதுவாகலாம், இது ஓர் சிறப்பு தனி நிலை எனல் வேண்டும். அதான்று, இது இருநிலை மாடக்கோயில் உச்சியில் இருக்கும் இரண்டாம் தளம்தான் தூங்கானை மாட விமானமாகும் என்பதையும் கவனிக்க வேண்டும். பல தூங்கானை மாடங்கள் போல் அல்லாது அடிமட்டத்திலிருந்தே தூங்கானை வடிவாகக் கட்டுமானம் அமையாமல் உள்ளது.

இன்று சாதாரண நிலையில் உள்ள ஊர்களில் அரச, ஆல மரத்தடியில் பிள்ளையார், அம்மன் சிலைகளை மேடைமீது அமைத்து வழிபடுவதும், இதுவே ஊர்மன்றம் எனவும் ஊர்ப்பொதுக்காரியங்கள் பேசுமிடம் ஊர்த்தலைவர் சந்திக்குமிடம் எனவும் உள்ளமை நன்றே அறிவோம். இவ்வகை வழிபாட்டு இடம் நாகரீகம் மேற்படும்போது அதன் கூரைகள் ஓலைகளாகவும், பின் செங்கல்லாலும், பின் பொலிவுமிக்க கவின்பெரு கருங்கற்களால் சிற்பங்களுடன் கூடியதாகவும், கற்றளி எனவும் பரிணமித்தது என்பது இயல்பான வரலாற்றுப்பாதை ஆகும். ஆனால், பல்லவர்கள் அமைத்த குடைவரைக்கோயில்கள் இவ்வகைத்தது ஆகாமல் முற்றும் வழிபாட்டுத்தலமாக மட்டும் எழுந்தவை ஆகும்.

**விமானம்** எனும் சொல் வானம்/கூரை - தலைக்கு மேலுள்ள அமைப்பு தொடர்புடையது. **விதானம்** எனவும் வழங்கும். **விண்ணகர்** எனப்படுவதும் உண்டு. **பந்தர்(ல்), காவணம்** எனும் சொற்களும் அப்பொருள் தாங்கும். ஆனால் இவை தற்காலிகமானவை. சிலநேரங்களில் கொடி, பதாகை போன்று நகரக்கூடியவையாகவும் இருக்கும். குடைபோன்ற அமைப்புடன் இன்றும் கோயில் இறைவன் வீதி உலா ஊர்தி/வாகனங்களில் 'சவுடல்' விமானம் உண்டு.

திருவானைக்கா கோயிலின் வரலாற்றில் சிலந்தியும் யானையும் போட்டிபோடும் விதானம் மற்றும் அதன் பராமரிப்பு குறித்துப் பேசுவதை நினைவு கொள்க.

**மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து**
**நீல *விதானத்து* நித்திலப் பூம் பந்தர்க்கீழ்**
**வானூர் மதியம் சகடுஅணைய வானத்து** 50

- சிலப்பதிகாரம் 1 புகார்க் காண்டம் ;
பதிகம் 1 மங்கல வாழ்த்துப் பாடல்

**திருக்கோயி லில்லாத திருவி லூருந்**
**திருவெண்ணீ றணியாத திருவி லூரும்**
**பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்**
**பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்**
**விருப்போடு வெண்சங்க மூதா வூரும்**
***விதானமும்* வெண்கொடியு மில்லா வூரும்**
**அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்**
**அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே 6.95.5**

- அப்பரடிகள்; திருத்தாண்டகம்

விதானம் அமைந்த கோயில்கள் இல்லாமல் இருக்கும் ஊர் ஊரல்ல என்பது, நாகரீகம் முதிராது வாழும் குடிகள், அதாவது காட்டுவாசிகளாக வாழும் இடம் (அடவி காடு) என்பதாகும்

வேறு;

ASPIDAL, என்பது தூங்கானை மாட அமைப்பின் ஆங்கிலச்சொல், வடமொழியில் गजपृष्ठाकार எனக்கட்டுகின்றது (https://shabdkosh.raftaar.in/).



வாதபிக்கோயில் ஒருவகையில் இத்தகையதே. இங்கு அடித்தளம் தூங்கானை மாடம் மேலே சதுர அமைப்பு.

இப்படி இருந்தால்தான் இது, அல்லது சிறிதே மாறினாலும் அதுவாகாது எனும் கொள்கையைக் கடைபிடிப்பது மிகுந்த இடரைத்தரும் எனலாம். கோஷ்டம் என்றால் நான்குபுற சுவரினில் சன்னல் போல் வைக்கும் அமைப்பு. கோஷ்டத்தில்தான் தென்முகன் பிரம்மா/லிங்கோத்பவர், துர்க்கை, கணபதி எனும் உருவங்களை வைப்பர். ஆனால், புதுமையாகத் தனித்துவம் தாங்கி குடந்தை நாகேசுரர் கோயில் கோஷ்டங்களில் சோழமன்னன், அவர்தம் குடும்பம்/பரம்பரை பெண்கள் உட்படத் தந்தை மகன் உருவங்கள் உள்ளன. அதனால் அது ஒரு படைவீடாகுமோ என்று ஐயம் உள்ளது. ஆனால், கல்வெட்டுகள் அப்படிக் காட்டவில்லை.

கீழே உள்ளவை - சில்பசாத்திரம் தொடர்புடைய சொற்கள் :-




மேலுள்ள படத்தில் தரும் விளக்கங்கள் ஒரு தனி மனிதர் இரண்டையும் ஒப்புக்காட்ட வந்த நிலை மட்டுமே ஆகும். முதலில்

உள்ளது கட்டிடம் பின்தான் அதனை ஒப்பு காட்ட வந்தநிலையில் ஓர் விளக்கம். எனவே, விளக்கம் என்பது இங்கே பின் வந்தது. விளக்கத்திலிருந்து கட்டிடம் அமைக்கப்படவில்லை.




**'வி'மானம் வானம் பறத்தல் தொடர்புடையது இதனில் உள்ள 'வி' என்பது வடமொழி முன்னொட்டு(prefix) விதானம், விநாயகன், விபுலம், விக்கிரமன், விபூதி' விமலன், விநாசம் போன்றவை சில. வடமொழியில் சிலபோது 'வகரம்' 'பகராக' மாறும். வங்காள குடாக்கடல் Bay of "Bengal" எழுத்தின் வடிமமும் காண்க, மிகச்சிறிதே மாற்றப்பட்டுள்ளது. 'व' 'ब' வயிற்றின் நடுவண் ஓர் கிடைக்கோடுமட்டும்.**

அதான்று, ஓர் பலபொருள் அங்காடியில் ஒரே கூரையின் கீழ் கிட்டுவதால் அதற்கு (காமதேனு, சிந்தாமணி போல்) 'விதான்' எனவும் பெயரிட்டுள்ளனர்.

படங்கள்: நன்றி இணையப் பக்கங்கள்

---

தொடர்பு: நூ.த.லோ.சு. (மயிலை நூ.த.லோக சுந்தரம்) (selvindls61@gmail.com)

## 8. யாளி

*—இராம.கி.*

"யாளி மிருகம், தமிழரின் கற்பனைவளமா இல்லை தெலுங்கு மன்னர்களுடையதா? தமிழருடையதாய் இருப்பின் இலக்கியத்தில் யாளிபற்றி குறிப்புள்ளதா?" என்றதொரு கேள்வி சொல்லாய்வுக்குழுவில் கேட்கப்படுவது. இக்கேள்வி ஆழமானது. இதற்கு நீளமாகத்தான் விடையளிக்கமுடியும்.

யாளி, முதற்சொல்லல்ல. ஆளியே முதல். ஆளல்/ஆள்தல் என்பது அதிகாரங் குறிக்கும் வினை. ஆட்சி, ஆட்டம், ஆடலென 100க்கும் மேற்பட்ட சொற்களை ஆல்>ஆள் என்றவேர் உருவாக்கும். நிலத்தை, வித்தையை ஆள்பவன் ஆளன்/ஆளி. பரி 8-64 இல் முருகனையே கூட ஆளியென்பார். இன்னொரு வகையில் ஆளி என்பது தோழி, மனைவியைக் குறிக்கும். நிலத்தலைவன் ஆளியானது போல் காடாளுஞ் சிங்கமும் ஆளியானது. ஆழ்ந்து பார்க்கின், விலங்குலகில் அரசனுக்கு இணைச்சொல் ஆளியே. யானையளவிற்குப் பெருவிலங்கையும் அடித்துண்ணும் வலிகொண்ட சிங்கம் காட்டை ஆள்வதாய் இந்தியப்புரிதலில் ஒரு தொன்மமுண்டு.

இன்று கூர்ச்சரம் போன்ற இடங்களில் மட்டும் சிங்கம் வதிந்தாலும், சங்ககாலத்தில் நம்மூரிலுமுண்டு. (அரி, ஆளி, பூட்கை, வயமா, மடங்கல் என்று பல பெயர்களில் சிங்கம் சங்கநூல்களிற் பேசப்படும்). சிங்கம் என்றசொல் சங்கநூல்களில் இல்லைதான். ஆனால் சங்கநூலிற் பழகாது மக்களிடை காலங்காலமாய்ப் புழங்கிவந்த தமிழ்ச்சொற்கள் மிகப்பல. சங்கநூற்களை நான் அகரமுதலிகள்போல் என்றுங் கருதியதில்லை. அக்காலத் தமிழின் ஒருபகுதியை மட்டுமே அவை பதிவுசெய்தன. அவ்வளவு தான். புலி மட்டுமே தமிழர் விலங்கு, சிங்கம் நமக்கு அயலென அறியாமையிற் கதைகட்டுவதையும் நான் ஏற்பதில்லை. 2000 ஆண்டுகளுக்கு முந்தைய விலங்குப் பரம்பலை, இன்றுபோற் கருதுவது சரியல்ல. சிங்கங் குறித்து ஒருசேரப் புழங்கிய யாளி, ஆளியின் சங்கச் சொல்லாட்சிகளை

இங்கு கீழே விவரிக்கிறேன். முதலில் நாம் காணப்போவது பெரும்பாணாற்றுப்படை 258-260 வரிகளில் வரும் யாளி.

[ஓர் இடைவிலகல். . . 'முக'வெனும் தமிழ்ச்சொல்லிடை வழக்கம்போல் ரகரம்நுழைத்து ம்ருகவெனும் சங்கதச்சொல் கிளைக்கும். முக>ம்ருக>மிருக. அதை மீளக் கடன்வாங்கி மிருகமெனத் தமிழிற்பயிலாது, முக>மக>மா என்ற தமிழ்ச்சொல்லையே பயிலலாம். காண்க முகன்>மகன்>மான்; முகள்>மகள்>மாள். ஆளிக்கு இன்னும்வேறு பொருட்பாடுகளுண்டு. குறிப்பிட்டுச் சொல்லத்தக்கது linseed ஐக் குறிக்கும் ஆளிவிதை. ஆளிநெய் நம்மூரில் இல்லாவிடினும், குளிர்நாடுகளில் அது பெரிது. ஆளிநாரிற் செய்த ஆளித்துகிலும் (linen), எகிப்தியன், சுமேரியன், பாபிலோனியன், கிரேக்கம் போன்ற விடங்களில் பெரிது. நம்மூர் பருத்திக்கு மாற்றாய் பட்டோடு ஆளியும் பழந்தமிழகத்தில் இறக்குமதியானது.]

பாட்டிற்கு வருவோம்.

**அணங்குடை யாளி தாக்கலின் பலஉடன்**
**கணம்சால் வேழம் கதவுற்றா அங்கு**
**எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை**

இப்பாடல் வரிகள் "யானைக்கூட்டத்தில் இருந்தவொரு யானைமேல் மீவிலங்கு மூர்க்கமாய்த் தாவிப்பாயுஞ் சிங்கங் ("அணங்குடை யாளி") கண்டு அச்சுற்று விரைந்தோடும் யானைகள் போல் கரும்புச் சாறுபிழி எந்திரங்கள் விரைந்தசைந்து என்றுங் குறையாத ஓசையை எழுப்புகின்றனவாம். யாளிகள் தாக்க முடிவுசெய்தால், அணங்கு தம்மேல் ஏறியதுபோல் எழுச்சியுற்று இரைகளின்மேற் பாயுமென்பது இங்கு சொல்லப்படும் செய்தி. அதென்ன, "அணங்குடை யாளி" ? அணங்குக் கருத்தீட்டைப் புரிந்துகொள்வதில் பல தமிழறிஞர் தடுமாறியுள்ளார். பெண்முலைக் காம்பில் அணங்கு இறங்குகிறதென்று கூடத் தவறாகப் பொருள்சொல்வார். நானறிந்தவரை, அணங்கைச் சரியாக, விரிவாக விளக்கியவர் முனைவர் வி.எஸ்.ராஜம் மட்டுமே.

நம் வாயுள் மேலிருப்பது அண்ணம். நமக்கு மேல்/முன் இருப்பவன் அண்ணன். அண்ணுதல்/அணங்குதலுக்கு மேலேறுதலென்று பொருள். ஆழ்ந்துபார்த்தால் "அங்கு" எனும் ஈற்றில்முடியும் தமிழ்ச்சொற்கள் கணக்கற்றவை. "சுரம்" பற்றிச் சொல்லாத பாலைப்பாட்டுக்களே இல்லை (153 குறிப்புகள் சங்கநூல்களில் உண்டு, சங்கப்பாட்டுகளில் 50% க்கும் மேலானவை பாலைப்பாட்டுக்களே.) சுரங்கம் தமிழ்ச்சொல்லென நொதுமலாருக்கு உறுதியாகச் சொல்லலாம். அணங்கும் அதுபோன்ற ஈறு கொண்டதே. அணங்கு பற்றிய 150 குறிப்புகளாவது சங்கநூல்களிற் காணலாம்.

சிலகுறிப்பிட்ட நேரங்களில் மனம்பேதலித்து, தன்னையே (கும்பிடும் சாமி, அல்லது ஏற்கனவே இறந்த யாரோவொரு முன்னவரென) வேற்றாளாய்க்கருதி பேசவும் செயற்படவும் ஒருவர் தொடங்கினால், "என்னவாச்சு இவருக்கு? சாமிகீமி வந்துருச்சா?" என்கிறோமில்லையா? இக்கால உளவியலில் இதை மீமாந்த நிலையென்றும், schizopherenic state களில் ஒன்றென்றும் சொல்வார். நம் ஆன்மாவிற்கு மேல் இன்னோர் ஆன்மா ஏறியதாய் உணரப்படும் இந்நிலையை நாட்டுப்புறங்களில் (குறிப்பாகச் சிவகங்கைச்சீமையில்) "சாமி வந்தது" என்பார். தென்பாண்டி நாட்டில் இது வழமை. முருகனுக்குக் காவடி எடுத்துப்போகிறாரே? செடிலில் தொங்குகிறாரே? ஐயனார்கோயில், அம்மன்கோயில் விழாக்களில், பூக்குழி நெருப்பின்மேல் நடக்கிறாரே அதெல்லாம் இந்தச் சாமிவந்த நிலையில் நடப்பது தான். (இவற்றை அறிவியல் பார்வையில் காண்பதும், படியாதார் பார்வையில் காண்பதும் அவரவர் உகப்பு.)

திருவிழாக்களிலும், முன்னோர்க்குப் படைக்கையிலுங் கூடச், "சாமி வருவது" நடக்கும். இன்னார்க்கு மட்டுமே சாமி வரும் என்றில்லை. நிகழ்விற் கூடிய இருபாலரில் யாரோ ஒருவர் நிகழ்ச்சியோடு ஒன்றி, மீமாந்த உள உந்தலில், மறைந்த முன்னோர் பேசுவது போலோ, தொழப்படும் சாமியே வந்தது போலோ செயற்படத் தொடங்குவதைப் பலமுறை கண்டிருப்போம். அப்போது "சாமி வந்திருச்சு;" என்றுசொல்லி பொதுமக்கள் நாடு, குமுகம், குடும்பமென எதிர்காலம் பற்றிக் குறிகேட்பார். குறிநடக்குமா, நடவாதா என்பது வேறுகதை. இன்றைக்குநாம் "சாமி" என்பதையே சங்ககாலத்தில் "அணங்கு இறங்கியதாய்ச்" சொன்னார். அணங்கு என்றசொல் தான் வழக்கில்

மறைந்தது. 2000 ஆண்டுப் பழக்கம் இன்றும் நம் வாழ்வில் நீடிக்கிறது. அணங்கென்பது மாந்தர்மேல் மட்டுமின்றி, விலங்குகள்மேலும் ஏறலாமென்பது சங்ககால நம்பிக்கை. அப்படித்தான், “அணங்குடை யாளி” என்ற சொல்லாட்சி பிறந்தது.



இன்றுவரை நம்மூர்க் கோயில்களிலுள்ள யாளிச்சிற்பங்கள் பாய்ந்துதாக்கும் பொதிரையே (posture) பெரிதுங் காட்டும். அணங்கை உணர்த்த, யாளிச் சிலைகளின் வாயிலிருந்து முறுக்கிய தண்டொன்று வெளிவருவதாய்க் காட்டுவர். அதைப்பலரும் யானைத்துதிக்கையோடு ஒப்பிடுவர். உருவகம் புரியாச் சிற்பிகள் அதைத் துதிக்கையாக மாற்றியதுமுண்டு. (ஆனால் உண்மை மாறாது. பழஞ்சிற்பங்களிலும் வெவ்வேறு சிற்பப்பள்ளிகளுண்டு. ஒருபள்ளியின் விதப்பை முழுச் சிற்பக்கலைக்கும் பொதுமையாக்க முடியாது. தமிழர்மனத்தை ஆட்கொண்ட உறுப்பு துதிக்கையாகும். பிள்ளையார்மேல் நாம்கொள்ளும் ஈர்ப்பும் துதிக்கையாற்றான் வந்தது.) ”வாயில் வெளிவருந் தண்டு” என்பது ஒருவித

மீமாந்த உள்ளமையை (surrealistic) சிற்ப வழி உணர்த்தும் உத்தி. தண்டு என்பது யாளியோடு சேர்ந்த உள்ளமை (realstic) உறுப்பில்லை. தண்டை/துதிக்கையை ஒதுக்கின், யாளி, கற்பனையுருவுமல்ல. அடிப்படையில் அதுவொரு பாயுஞ்சிங்கம்.

இதுபோன்ற கலையுத்திகள் இன்றுங்கூட மீமாந்த உள்ளமைகொண்ட வண்ணப்படங்களிலும் சிற்பங்களிலும் (surrealistic paintings/scluptures) வெளிப்படும். முகனப் (நவீன/modern) படங்களில் உணர்வு வெளிப்படுத்த படத்தில்வரும் உருக்களைச் சிதைப்பதும், இல்லாத அலங்காரங்களை ஏற்றுவதுமுண்டு. காட்டாக விகடன் நிறுவனம் வெளியிடும் ”தடம்” இதழில் கதைப்பட மாந்தரின் கழுத்து பெரிதும் நீட்டிக் காட்டப்படும். அதன்வழி பேசும்மாந்தரை ஓவியர் உணர்த்துகிறாராம். நாளைக்கு இந்தப் படங்கள் 100 ஆண்டுகள் கழித்துக்கிடைத்தால், தமிழர் நீண்டகழுத்துக் கொண்டிருந்தார் என்று சொல்லி விடுவோமா? என்ன மடத்தனம்? கொஞ்சம் பகுத்தறிவோடு நாம் புரிந்துகொள்ள வேண்டாமா? உள்ளமையை அப்படியே அச்செடுக்கும் கலைக்கு மாறாய், உணர்வுகளை வெளிக் கொணரும் உத்திகள் எல்லாக்காலமும் இருந்துள்ளன. நம்மூர்க்கோயில் யாளிச்சிற்பங்களின் வாய்களிலும் இதுவுண்டு. யாளியின் கொடுரத்தை வெளிப்படுத்தத் தண்டு அடையாளமானது. சீனத்து நீர்ப்பாம்பின் வழி 'திராகன்' எனும் விலங்கை உருவகிக்கையில் இதேபோல் வாயில் நெருப்பு வெளிவருவதாய்ப் படங்களிலும் சிற்பங்களிலுங் காட்டுவர். அந்நெருப்பும், யாளித்தண்டும் மூர்க்க உணர்வை வெளிப்படுத்துகின்றன. உணர்வு வெளிப்பாட்டையும், உள்ளமை உறுப்பையும் நாம் குழப்பிக்கொள்ளக் கூடாது. Art appeciation என்பது ஒரு திறமை. அடுத்து பொருநராற்றுப்படை 139-142 வரிகளைப் பார்ப்போம்.

**ஆளி நன்மான் அணங்குடைக் குருளை**
**மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி**
**முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரென**
**தலைகோள் வேட்டம் களிறு அட்டாஅங்கு**

சில்= நுண்ணிய துண்டு. இது இழை, மயிராகவும் இருக்கலாம். சிலிர்த்தல் = துளிர்த்தல். மயிர் துளிர்ப்பதும் சிலிர்த்தலே. உடம்பு சிலிர்த்தல்

= மயிர்க்கூச்செறிதல். சில்>சில்கு>சிலுக்கு= துளையிற் புகுதல், மாட்டிக் கொள்ளுதல். சிலுக்கு>சிக்கு = எளிதில் சீவமுடியா, தாறுமாறாய் மாட்டிய கேசம். இதற்கு குடுமியும். உச்சிப்பொருளும் சொல்வர். சிக்கு>சிக்கை>சிகை. சிக்கு>சிங்கு>சிங்கம் = சிகையுள்ள ஆண்விலங்கு. இதுவே சிங்கம்>சிம்ஹ என வடக்கே சொல்லப்பெறும். சிகையால் மதர்ப்புத் தோற்றங் கிடைப்பதாய் இந்தியத் துணைக்கண்டத்தில் பலருங் கருதுவர். சிங்கமே இன்று பொதுப்பெயர்.

சங்ககாலத்தில் அரி/ஆளி. நன்= நளினம். நங்கை= பெண். நன்மான்= பெண்விலங்கு. ஆளி நன்மான்= பெண்சிங்கம். ”ஆளி நன்மான் அணங்குடைக் குருளை” = தாயின் அருகுள்ள சிங்கக்குட்டி. குருளை (girl என்ற இந்தையிரோப்பியன் சொல் இதற்கிணை)= குட்டி (விதப்பாகப் பெண்குட்டி). இங்கு புனிற்றிளங் கரிகாலனுக்கு உவமை சொல்வதால் குருளை சிறுவனைக் குறிக்கிறது.

”பால்குடிமாறா மாத்திரத்து அணங்குடைக் குருளை, தன் பெருமைமிக்க தோளில் மிகுவலிசெருக்கித் தன் முதல்வேட்டையிற் களிற்றையடித்தது போன்ற” காட்சி இங்கே விவரிக்கப்படுகிறது. இச்சிங்கம் போல் இளமைமாறாக் கரிகாலன் களிறுபோன்ற தம்முறவுப் பகைவர்மேற் பாய்ந்தானாம். இங்கும் ஆளி என்பது உள்ளமை விலங்கே. கற்பனையல்ல. அடுத்தது ஆரியவரசன் பிரமதத்தனுக்குச் (இவன் மகத அரசனென்றே நான் எண்ணுகிறேன். வேறிடத்தில் பேசவேண்டும்) சொன்ன குறிஞ்சிப்பாட்டு 252-253 ஆம் வரிகள்.

**அளைச்செறி உழுவையும் ஆளியும் உளியமும்**
**புழற்கோட்டு ஆமான் புகல்வியும் களிறும்**

இதில் கொலைவெறி மிகுந்த புலியும், ஆளியும், உளியமும் (கரடியும்), துளைக்கொம்பு கொண்ட காட்டுமாடுகளின் ஆணும், ஆண்யானையும் பேசப்படுகின்றன. இயல்விலங்குகளோடு ஓர் கற்பனை விலங்கு சேர்த்துப் பேசப்படுமா? கபிலர் போன்ற பெரும்புலவர் அத்தகைய தவற்றைச்

செய்வாரோ? எனவே ஆளி என்றசொல் இந்தியாவில் தசையும், எலும்புமான உள்ளமை விலங்கே. இனி நற்றிணை 205, 1-5 வரிகளைப் பார்ப்போம்.

**அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து**
**ஆளி நன்மான், வேட்டுஎழு கோள்உகிர்ப்**
**பூம்பொறி உழுவை தொலைச்சிய, வைந்நுதி**
**ஏந்துவெண் கோட்டு, வயக்களிறு இழுக்கும்**
**துன் அருங் கானம் என்னாய்,**

"அருவி ஓசையெழும் பெருங்குன்றின் அடுக்கத்தில் வேட்டையில் போட்டிக்குவந்த கொள்நகம்கொண்ட, உடம்பெலாம் பூப்போல் புள்ளிகொண்ட சிறுத்தையை அங்கிருந்து தொலைத்த ஆளிநன்மான்.

தானடித்துக்கொன்ற, கூர்த்தந்தங்களுடைய வலியயானையை இழுத்துப்போகும் அருமையான காடு" என்பது இதன்பொருள். பூம்பொறி உழுவை, இங்கு சிறுத்தையைக் குறிக்கும். யானைவேட்டையில் சிறுத்தைக்கும் ஆளிக்கும் இங்கே போட்டி நடந்திருக்கிறது. சிறுத்தையை விரட்டி, யானையைக் கொன்று, உணவாயிழுத்துப் போனது கற்பனையா? உண்மை விவரிப்பா? இன்னுமா இதில் ஐயம்? ஆளி என்பது ஆழ்ந்து ஓர்ந்துபார்த்தால் சிங்கமே. (அந்த மரத்தில் பேயிருக்கிறது, இந்த மரத்தில் பூதமிருக்கிறது என்போருக்கே கற்பனை விலங்குகள் உதிக்கும். அடுத்தது அகம் 78, 1-6 வரிகள். . .

**நனந்தலை கானத்து ஆளி அஞ்சி**
**இனம் தலைத்தரூஉம் எறுழ்கிளர் முன்பின்**
**வரி ஞிமிறு ஆர்க்கும், வாய்புகு, கடாத்து**
**பொறிநுதற் பொலிந்த வயக்களிற்று ஒருத்தல்**
**இரும்பிணர்த் தடக்கையில் ஏமுறத் தழுவ**
**கடுஞ்சூல் மடப்பிடி நடுங்கும் சாரல்**

"நிறைசூலியான பெண்யானை அகன்றகாட்டில் ஆளியையஞ்சி, தன்கூட்டத்தை நாடிவந்து தழுவ, வண்டுகள்சுற்றி ஓசையெழுப்ப,

மதநீர்சொட்ட, புள்ளிமிகுநெற்றி பொலிந்திருக்க, வலிமிகுத்ததால் முன்னும்பின்னும் அசைந்தபடியிருக்கும் வயக்களிற்று ஒருத்தல் தன் கருங்கோங்கிலவு மரம்போன்ற துதிக்கையால் ஏமமுறும்படி அணைக்கும், சாரல்" என்பது இதன்பொருள். ஒருத்தல் = கூட்டத்தில் தனித்துச் செம்மாந்துதெரியும் விலங்கு. இங்கு ஆண்யானை. ஏமம்= safety. ஆளிகண்டு அஞ்சிய நிறைசூலியானையை ஏமத்திற்காக வயக்களிற்று ஒருத்தல் தழுவுகிறது. அதன்பின்னும் பெண்யானை நடுங்குகிறது. இதுவும் ஓர் இயற்கைவிவரிப்பே. இதில் கற்பனையாளி எங்குவந்தது? யானையைச் சிங்கமடிப்பதும், கொல்வதுமே குறிப்பால் உணர்த்தப்படுகிறது. அடுத்தது அகம் 252, 1-4 வரிகள்.

**இடம்படுபு அறியா வலம்படு வேட்டத்து**
**வாள்வரி நடுங்கப் புகல்வந்து, ஆளி**
**உயர்நுதல் யானைப் புகர்முகத்து ஒற்றி**
**வெண்கோடு புய்க்கும்**

புலிபற்றிய ஓர் அவதானம் தமிழகத்திலுண்டு. புலி எப்போதும் தனக்கு வலப்பக்கத்து இரையையே பாய்ந்தடிக்குமாம். இடப்பக்க இரையை அடிக்காதாம். அப்படி அடிக்கவேண்டுமெனில் சுற்றிவந்தே செய்யுமாம். அச்செய்தியே இங்குமேலே சொல்லப்படுகிறது. (இதைப்போய் துணுச்சாரை (dinasaur), அது இது என்று சிலர் சொல்வது அறிவியலில் ஆழாத பேச்சு. துணுச்சாரைகளின் காலத்தில் மாந்தருங் கிடையாது, தமிழுங் கிடையாது. அவற்றின் மிச்சசொச்சம் தான் இன்றுள்ள பறவைகள். உடலியல் தெரிந்தோர் இதற்கு விளக்கந்தரலாம். தமிழார்வலர் சற்று நிதானத்தோடு, விளக்கங்களைக் கூறுமாறு வேண்டிக்கொள்கிறேன்.) படுத்தல்= அடித்தல் "இடம்படுப்பை அறியாத, வலம்படு வேட்டையை விரும்பும், வரிப்புலி நடுங்கும்படி உள்வந்து, உயர்நெற்றி கொண்ட யானையின் புள்ளிமுகத்தில் ஆளியடித்து வெண்தந்தத்தைப் பிய்க்குமாம்:" இந்த வரிகளில் வருவதும் ஓர் இயல்விவரிப்பே. ஆளி என்பது ஒரு கற்பனை விலங்கல்ல. கற்பனை சிலரின் மனத்திலுள்ளது. பொதுவாகச் சங்கநூல்களில் மீமாந்த/மீவிலங்குக் கற்பனை

என்பது மிகக்குறைவு. (பிற்காலக் கற்பனைகளை முற்காலத்திற் செலுத்துவது சரியல்ல.) அடுத்தது அகம் 381- 1-4

**ஆளி நல்மான் அணங்குடை ஒருத்தல்**
**மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப.**
**ஏந்தல் வெண்கோடு வாங்கி, குருகு அருந்தும்**
**அஞ்சுவரத் தகுந ஆங்கண்,**

"தனித்துச் செம்மாந்துவரும் அணங்குடைய பெண்சிங்கம், குட்டியானையைக் கொன்று அதன் முளைத்தந்தம் விலக்கி, சதையுண்ணுவது கண்டு, நெடுந்தளர்ச்சியோடிருக்கும் வலியபெண்யானை புலம்பி நிற்பதைக்கண்டு யாருக்கும் அச்சம்வரும்படி அவ்விடம் இருந்ததாம்." ஒரு தாயின் குட்டியை இன்னொரு தனிப்பெண் சாப்பிடுகிறாள். இது கொடிய இயற்கை. ஆனால் கற்பனையல்ல. யாளியைக் கற்பனை விலங்கென்போர், எவ்வளவு பெரிய கொடுமையையும் ஒருமாதிரி sanitize செய்துவிடுகிறார். தாமரையிலைத் தண்ணீராய் எவ்வுணர்வும் நம்மைப் பாதிக்காது நாமும் படித்து நகர்கிறோம். சிங்கமென ஆளியை நகமுஞ் சதையுமாய் உணர்ந்தாற்றான் நமக்கது உறுத்துகிறது. அடுத்தது புறம் 207, 6-9 வரிகள்.

**மீளி முன்பின் ஆளி போல**
**உள்ளம் உள்ளவிந்து அடங்காது வெள்ளென**
**நோவாதோன் வயின் திரங்கி**
**வாயா வன்கனிக்கு உலமரு வோரே**

"தானேகனியாத காயின்பொருட்டு, உள்ளவிந்து அடங்காது, நம்மேல் வெளிப்பட இரங்காதவனிடம் நின்றுதிரங்கி, வலியவிலங்கின் முன்பின் அசையும் ஆளிபோல், உலமருகலாமோ?" என்பது இதன் பொருள். "கனியாத விலங்கின் தசைவேண்டிச் சிங்கம்தான் சுற்றிச்சுற்றிவரும். தானே கனியாதவனிடம் நாம் வேண்டிநிற்கலாமோ?". என்பது இங்கே புலவரின் குறிப்பு. இதைப் படித்தபிறகுமா ஆளி ஒரு கற்பனை விலங்கென்போம்?

இதேபோல் சிலப்பதிகாரம் காட்சிக்காதையில் “ஆளியின் அணங்கும், அரியின் குருளையும்” என 48 ஆம் வரியில் வருவதும் சிங்கமே. ஆளியின் அணங்கென்பது பெண்சிங்கக் குட்டி, அரியின் குருளை என்பது ஆண்சிங்கக் குட்டி சில உரையாசிரியர் நினைப்பதுபோல் இங்குவரும் ஆளி கற்பனை விலங்கல்ல. அப்படிச் சிலர் கருதுவது இடைக்காலத்து வந்த சங்கத ஊடாட்டத்தாலாகும். தமிழில் இருப்பதையெல்லாம் சங்கதவழி வந்ததாய்ச் சொல்லும் போக்கு.

அடுத்து வேட்டுவவரியில் வெட்சிப்புறநடைப்பாட்டின் ”கொள்ளுங் கொடியெடுத்துக் கொற்றவையுங் கொடுமரமுன் செல்லும்போலும்” என்ற 4 ஆம் வரிக்கு “ஆளிக்கொடி உயர்த்துங் கொற்றவை” என அடியார்க்கு நல்லார் பொருள்சொல்வார். கொற்றவைக்குச் சிங்கக்கொடியையே நம்மூரில் கற்பிப்பார். சிங்கந்தான் அவளுக்கான வையம். (= wagon, வாகனம்; அகராதிகளில், சிலம்பில் பயனுற்ற இந்த ’வையம்’ எனும் நற்றமிழ்ச்சொல்லை அருள்கூர்ந்து பயனுறுத்துங்கள். மீண்டும் மீண்டும் ’வாகனம்’ வேண்டுமா)? (ஆளிபோக ஆளரி என்றசொல் ஆண்சிங்கத்தையும், கூடவே நரசிம்மனையும் குறிக்க நாலாயிரப் பனுவலில் பயன்படும். ’கோளரி’ என்பது சிங்கத்தைக் குறிப்பதாய்ச் சொல்வர்.)

சங்க இலக்கியங்கள் போக திருக்கோவையார், இறையனார் அகப்பொருளுரை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், நக்கீரதேவரின் பதினோறாந் திருமுறை, பெரியபுராணம், திருக்குற்றாலத் தலபுராணம் எனப் பல்வேறு நூல்களிலிருந்தும் சான்றுகாட்டலாம். நான் புரிந்துகொண்டவரை இவை எல்லாவற்றிலும் சிங்கப்பொருளேயுண்டு. உரைகாரர்சொல்வதால் மட்டுமே அவற்றைக் கற்பனை விலங்குகளாய்ச் சொல்லமுடியாது. மூலங்களைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லை. பாடல்களுக்குப் பொருள் சொல்வதில் உரைகாரர் பங்கு பெரிதெனினும், அவர் சொல்வதை அப்படியே ஏற்கத் தேவையில்லை. மூலத்தின் ஒத்திசைவு பார்த்து ஏற்கலாம். இக்கால அறிவியல், நுட்பியல் செய்திகளோடு கொஞ்சமாவது பொருத்திப் பார்க்கலாம். ஒவ்வொரு காலகட்டத்திற்குமாய் ஒரு புனைவு இருக்காதா, என்ன?

படித்துப் பார்த்தால், சங்ககாலப் புனைவென்பது குறைந்த அளவோடிருக்கும். இடைக்கால, இக்காலப் புனைவுகளோ தறிகெட்டுப் பறக்கும். (நாகரிகம் வளர, வளரக் கற்பனை கூடுவது எங்கும் இயல்பு.) வேண்டுமானால், சென்னையை அடுத்த சோழிங்கநல்லூருக்கு வாருங்கள். அங்குள்ள பெருத்தங்கா (ப்ரத்யங்க்ரா-கொற்றவை. சங்கத ரகர, யகர, வகர நுழைவுகளால் நாம் தடுமாற, நம்சொற்களே நமக்குப் புரியாதபடி மாயங் காட்டும். இங்கே திருமாலின் தங்கையே கோயில் மூலத்தி) கோயிலில் நாம் நினைத்துப்பார்க்காத அளவிற்குப் புதுப்புனைவுத் திருமேனிகளைச் செய்துவைத்திருப்பார். குறி சொல்வதும் அங்கு நடைபெறும். நாளெலாம் கவலும் இற்றைமாந்தர் "எத்தைத் தின்றால் பித்தந் தெளியும்?" என்றலைவதால், கூட்டமங்கு நிரம்பிவழியும். "அந்த யாகம், இந்த யாகம்"என விதவிதமாய் நடைபெறும். இதையெலாம், 1000/2000 ஆண்டுகளுக்கு முந்தையக் கதைகளென்று சொல்லிவிட முடியுமா? புதுப்புதுப் புனைவுகள். வெளிப்பாடுகள்.

இன்றுதானே வியந்தகைப் (fantasy) படங்கள் நம்மூரில் பெருத்துப்போயின? மக்களை வியக்கவைக்க தோட்டாத்தரணிகள், சாபுசிரில்கள், எந்திரன்கள், பாகுபலிகள், ஆன்மேற்றங்கள் (animation), வரைகலை (graphics) முயற்சிகள், நகர்வுக்கட்டுகை (Motion capture). என்னதான் இல்லை இந்தக்காலத்தில்? விதம்விதமான நுட்பமுயற்சிகள் எழயெழ, வியந்தைக்கதைகள் நம்மிடை கூடத்தானே செய்யும்? ஆரி பார்ட்டார் போன்ற புதினங்கள் ஆங்கிலத்தில் மட்டுமின்றி எல்லாமொழிகளிலும் கூடிவருகின்றனவே? புதினங்களைச் செய்வதிலும் மாகை உள்ளமை (magical realism) என்ற புதுமுயற்சி கூடுகிறதே? புதினங்களின் போக்கிலும் கற்பனை கூடுகிறதே?. 8000-22000-100000 என்று சொலவம் பெருகிய மாபாரதம் 1500 ஆண்டுகளில் பெருவளர்ச்சி கண்டதல்லவா?. இன்றோ "வெண்முரசு" என்றபெயரில் செயமோகன் 16 நூல்களை எழுதுகிறார். முடிக்கும்போது எத்தனை நூல்கள் எழுதுவாரோ? மொத்தத்தில் மாபாரதப் புனைவு அனுமார் வால்போல் வளர்ந்துகொண்டே போகிறது.

ஆளிப் புனைவும் அப்படித்தான். சிங்கம்> (சிங்கம்+யானை) > (சிங்கம்+யானை+நாகம்) > (சிங்கம்+யானை+நாகம்+அரசாளி) என்று

விரிந்துகொண்டே போகிறது. கற்பனைக்கு அளவென்ன? இவற்றையும் யாரோவொருவன் கதையெழுதுவான், படமெழுதுவான்; சிலைவடிப்பான். அவற்றைப்பற்றி நம் கொள்ளு/எள்ளுப் பேரன்/பேத்திகளும் பேசிக்கொண்டிருப்பார்.

நான் சொல்லவந்தது மிக எளிது. யாளியின் தொடக்கம் இயற்கை சார்ந்தது. பின் கூடியது கற்பனை வளம். இதில் தமிழரசர்/தெலுங்கரசர் என்பதெல்லாம் முகன்மையில்லை. சங்கத ஊடாட்டம் கூடியதும், புராணப்புளுகு கூடியதுந்தான் காரணம்.

அரசாளி (=வல்லூறு) பேரரசுக் காலத்தில் அரசக்குறியீடாய் மாறியது. (இற்றை அமெரிக்க அரசின் குறியீடும் அதுவே.) ஆலுங் காரணத்தால் அது எழவில்லை. (ஆலல்= சுற்றல்; ஆலா= சுற்றிச் சுற்றிவரும் கடற்பறவை) நானறிந்தவரை, ஆளிக்கு பறவைப் பொருள் எந்த நூலிலும் சொல்லப்படவில்லை. முதன்முதல் அதைப் பார்த்தது இன்றுவந்த செயமோகனின் ”ஆனைக்கல் துளிச்சொட்டு சாஸ்தா” என்ற பதிவே (http://www.jeyamohan.in/106894#.WojLwzbrbIU). இதிலொரு சாமியார் அகளி எனும் பறவைபற்றிக் குறிப்பிடுவார். அகளி, ஆளியென்று திரியலாம். உகள்>உவள்>உவளை என்பது தமிழில் எழக்கூடிய சொல்லே. (உவளல்= உயரல் என்பது அகரமுதலியிலுண்டு. ”உவளை” இல்லை. ’உவணம்’ உண்டு.) உவள்>உவண்>உவணம்= கழுகு, கருடன். உயரப் பறக்கும் வல்லூறு. உவளை இந்தையிரோப்பியன் eagleக்கு இணையாகலாம். ஆனால் தோற்றந் தெரியவில்லை என்றே இந்தையிரோப்பியன் சொற்பிறப்பு அகரமுதலிகள் சொல்லும். பெரிய கருநிறப் பறவை என்றே அதற்குப் பொருள்சொல்வார். தமிழில் கருளன்>கருடன், கள்>கழு>கழுகு, கழு>கழுளன் ஆகிய சொற்களெல்லாம் பொருள்வழி, கருநிறப்பறவையையே குறிக்கும்.

ஆளற்பொருளின் நீட்சி. ஆளிகளுக்கு அரச ஒப்பீட்டில் எழுந்தது. காடுலவும் விலங்குகளுக்குச் சிங்கம் ஆளியானதுபோல், பறவைகளையுஞ் சேர்த்த மொத்த விலங்குகளுக்கு அரசாளியானது போலும். இக்கற்பனை, யாளியோடு சேர்வது இயல்பு தான். பல அரசுகளின் இலச்சினையாக அரசாளி இருந்தது. அண்டபேரண்டம் என்பதெல்லாம் இதற்கும் அதிகமான கற்பனை

வளர்ச்சி. (அரசாளியின் தொடக்கம் ஆளி என்பதே. கற்பனை கூடாதென நான் எப்போதுஞ் சொல்லவில்லை. எது அடிப்படை, எது மேலொட்டு, எது கற்பனை எனப்புரிந்துகொள்ளுங்கள் என்றே வேண்டுகிறேன். .

முடிக்குமுன் ஆளி என்றசொல் யாளியானது பற்றிச் சொல்லவேண்டும். ஒருசிலர்க்கு இதைச் சங்கதமென்று சொல்லாவிடின் தலைவெடித்துவிடும் போற் தோன்றுகிறது, இல்லாவிடில் இவரின் "ஜன்மம் சாம்பல்யம் அடையாது" போலும். இவர்போன்றவர் மோனியர் வில்லியம்சு அகரமுதலியைப் பார்த்து நிலையைப் புரிந்துகொள்ளவும் மாட்டார். நான்பார்த்த வரை, சங்கதத்தில் "யாளி, யாடி, யாதி" என்ற எச்சொல்லுக்கும் இப்பொருள் கிடையாது. "வ்யாடி" என்றே முதற்சொல் காட்டுவார். (அதற்குச் சிங்கமென்ற பொருளும் வராது. "கொடூரவிலங்கு" மட்டுமே வரும்.) 'வியாலி/வ்யாளி' என்ற வடிவைத் திரிசொல்லாகவே சங்கதங் காட்டும். வ்யாடி என்பதை வி+அட் என 2 சொற்களிலிருந்து எழுந்ததாய்க் காட்டுவார்.

**व्याड**

**(H1) व्याड [p= 1036,3] [L=209669] mfn. (said to be fr. 3. वि+- √अड् ; cf. व्याल) malicious , mischievous L. (with loc. , g. शौण्डा*दि)**

**(H1B) व्याड [L=209670] m. a beast of prey MBh. R. Ma1rkP.**

**(H1B) व्याड [L=209671] m. a snake L.**

**(H1B) व्याड [L=209672] m. " a rogue " or " a jackal " (= वञ्चक) L.**

**(H1B) व्याड [L=209673] m. N. of इन्द्र L.**

வி என்பதற்கு "பலதிசைகளில் பரந்த" என்று பொருள்சொல்வர். இச்சொல் தமிழிலும் உண்டு. விய்தல்= விரிதல். விய்வம்>வியுவம்>விசுவம் என்றால் விரிந்த பேரண்டமென்று பொருள். இதுவும் சங்கதம் போகும். விசுவநாதனென்று சிவனுக்குப் பெயர்சொல்கிறோமே? விய்யில் தொடங்கும் தமிழ்ச்சொற்கள் 40/50 ஆவது உண்டு. "அட்" என்பதற்குச் சரியான பொருளை சங்கதத் தாதுபாடத்தில் நான் காண முடியவில்லை. endeavour என்ற

பொருளை அட் என்ற சொல்லின் பொருளாய்ப் பார்த்தேன். இவையிரண்டுஞ் சேர்ந்து எப்படி வியாடியாய் மாறியதென்று புரியவில்லை. யகர உடம்படுமெய் தமிழிலுண்டு. சங்கதத்திலுண்டோ? கேள்விப்பட்டதில்லை. இங்கே கூட்டுச்சொல்லில் யகர உடம்படுமெய் வந்துள்ளதே? சங்கதச் சொல்லாயின், அது இயலுமா? யாராவது சொல்லுங்கள்.

வியாடியிலிருந்து வியாளி வந்ததென்பது தலைகீழாகத் தேடுவதையொக்கும். தமிழுக்கும் பாகதத்திற்கும் தெலுங்கே இடைமொழி என்பார் பாவாணர். 'சோழ' என்ற தமிழ்ச்சொல் தெலுங்கில் 'சோட' ஆகும். சற்று கலிங்கம்போனால் 'சோர'வாகும். வடக்கே சோட/சோர எனவிரண்டும் புழங்கும். இதுபோல் ள/ட/ர திரிவு பலசொற்களில் உண்டு. வியாளியிலிருந்து வியாடி ஏற்படுவதே இயல்பான திரிவு. தெலுங்கையும் ஒடியத்தையும் உணராதோரே தலைகீழாய்ச் சொல்வர். வியாளியைத் திரிசொல்லாய் மோனியர்வில்லிமசு ஏற்றுக்கொண்டதே நமக்கு அதன் ஊற்றைக் காட்டுகிறது. வியாளியை விய்+ஆளி என்று பிரித்தால் வினைத்தொகை அதனுள் புகுந்து விளையாடுவது புரியும். விய்ந்த ஆளி, விய்கிற ஆளி, விய்யும் ஆளி. இக்காலத் தமிழில் விய்தலைக் காட்டிலும் வியல்தலே விழைவோம். வியல்ந்த ஆளி, வியல்கிற ஆளி, வியலும் ஆளி. ஆளிமான் காடுமுழுதும் நகர்ந்துகொண்டேயிருக்கும். தனக்கு உணவு கிடைக்கும் பெரும்பரப்பில் பரந்துகொண்டே இருக்கும். வியாளி நல்ல தமிழ்ச்சொல். சரி, யாளி என்பது எப்படி? யாக்கல்/ஆக்கல், யாக்கை/ஆக்கை, யாடு/ஆடு, யாண்டு/ஆண்டு, யாமை/ஆமை, யாய்/ஆய், யார்/ஆர், யாறு/ஆறு, யானை/ஆனை என்ற இணைகள் எப்படியானதோ, அதே படிதான் தமிழில் இது காலகாலமாய் இருக்கும் பழக்கம். இதை விய்யாளி என்றாலும் வியாளி என்றாலுஞ் சரிதான், வடக்கே இச்சொல் தான் போயிருக்கிறது.

அப்புறம் "சிங்கம் சங்ககாலத்தில் தமிழகத்திலில்லை", என்றுசிலர் சொல்வது கூடைச்சோற்றுள் பூசனி மறைப்பது போலாகும். சிங்கமென்பது ஆளி மட்டுமல்லாது அரி, அறுகு, பூட்கை, வயமா, மடங்கல் என்று பல்வேறு பெயர்களில் சங்கநூல்களில் ஆளப்பெற்றுள்ளது. பூசனியை மறைப்பவர் எந்த விலங்கியல் சான்றை இங்கு காட்டியுள்ளார்? சும்மா, போனபோக்கில் இப்படிச்சொன்னால் எப்படி? நான் சங்க நூல்களை நம்புகிறேன். அதிலுள்ள

செய்திகள் அக்காலப் பட்டகைகள் (facts), புரிதல் (understanding) என்றே நம்புகிறேன். பட்டகைகளை ஒதுக்கித் தான் புகலும் தேற்றே (theory) சரியெனும் கற்பனைவாதி நானல்ல. யாளி பற்றிய என் தொடர் முடிந்தது. பொறுமையுடன் படித்த எல்லா நண்பருக்கும் என்நன்றி.

படம் உதவி: http://www.wikiwand.com/en/Western_Chalukya_architecture

---

தொடர்பு: இராம.கி. (poo@giasmd01.vsnl.net.in)

http://valavu.blogspot.com

.

# 9. திருவாலங்காடு இரத்தினசபை

*—சேசாத்திரி சிறீதரன்*

வேலூர் மாவட்டமும் திருவள்ளூர் மாவட்டமும் இணைகின்ற பகுதியில் இரயிலடியில் இருந்து 5 கிலோமீட்டர் தொலைவில் அமைந்திருப்பது தான் திருவாலங்காடு என்னும் சைவத் திருத்தலம். ஐந்து சபைகளுள் ஒன்றான இரத்தின சபை இதுவே. இருபுறம் காவல் கொண்ட இரத்தின சபை வாயில்.



இது ஒரு பாடல்பெற்றத் தலம். இக்கோயில் மிகப் பழமையானது என்றாலும் கூட கடந்த நூற்றாண்டில் சைவத் திருப்பணி என்ற பெயரில் நகரத்தார் கற்சுவர்களை தேய்த்து மெருகேற்றி (polish) அதன் பழமையை மறைத்து உள்ளார்கள் என்பது எவராலும் உணரமுடியும். இந்த நிகழ்வில்

எத்தனைக் கல்வெட்டுகள் தேய்த்து அழிக்கப்பட்டன என்று தெரியவில்லை. மயிலாடுதுறை மயூரநாதர் கோயிலில் இப்படித் தான் தேய்த்து அழித்துள்ளனர், திருநின்றவூர் இருதயாலீசுவரர் கோயிலிலும் இப்படி மெருகேற்றும் ஒரு பகுதியாக கல்வெட்டுகளைத் தேய்த்துக்கரைத்து அழித்துவிட்டனர். இரத்தினசபை வாயிலைத் தேய்க்காமல் விட்டுவிட்டதால் அங்குக் கல்வெட்டுகள் பார்வைக்குத் தெரிகின்றன. அதே நேரம் அந்த இரத்தினசபை சுவருக்கு நேர் எதிர்ப்புறத்தே அமைந்த வடக்கு சுவரிலும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. மற்றபடி கோயில் வாயிலின் உட்பகுதியில் இருபுறத்திலும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

கோபுர வாயிலில் மக்களை வரவேற்கும் ஆரணங்குகள்





கோயில்தூண்களில் குறிப்பிட்டுச் சொல்லும்படி புடைப்புச் சிற்பங்கள் ஏதும் இல்லை. இலை, மரம், பூ ,தெய்வவடிவுகள் தாம் உள்ளன. இக்கோயிலிலும் விசயநகர ஆட்சியில் குதிரை மண்டபம் கட்டப்பட்டுள்ளது. அதில் ஒரேயொரு சிற்பம் மட்டும் புராண நிகழ்வை குறிக்கிறது. அரக்கர்

மதிமயங்கி அமிர்தம் உண்பதை மறந்து மோகினிக்காக  ஏங்கித்தவிக்க திருமால் மோகினியாக உருவெடுத்து தேவர்களை மட்டும் அமிர்தத்தை உண்ண  அனுமதித்தபோது அவர்களுக்கு மட்டும் ஏன் மதி கிறுகிறுக்கவில்லை? அவர்கள் உணர்வு அற்றவர்களா? என்ற கேள்வி என்னில் பலகாலம் ஒலித்தபடியே உள்ளது. சிலை வடித்த சிற்பியே கிறுகிறுத்து போய்தான் சிற்பம் வடித்துள்ளான் என்றால் நேரில் மோகினியைக் கண்ட அரக்கர்கள் மட்டும் அமைதியாகவா இருக்கமுடியம்? நீங்களும் அந்த மோகினியைக் காணுங்களேன் ஒருகணம். அடுத்து மோகினி சிற்பம் உள்ள குதிரை மண்டபம்.





இரயிலடி 5 கிலோமீட்டர் தொலைவில் இருப்பதால், அதிலும் அடிக்கடி super fast local விடுவதால் சாதாரண கட்டணத்தில் இங்கு வரமுடிகிறது. காலை 5.30 மணிக்கு சென்ட்ரலில் தொடங்கி 6.45மணிக்கே இரயில் திருவாலங்காடு வந்துவிடுவதால் மக்கள் அதிக எண்ணிக்கையில் இக்கோயிலுக்குச் சென்னையில் இருந்து வருகிறார்கள். வேலூரில் இருந்தும் வருகிறார்கள்.

https://www.google.co.in/maps/place/Kosasthalaiyar+River/@13.2995634,80.1086905,11z/data=!3m1!4b1!4m5!3m4!1s0x3a527956dec6497b:0xb572296a37c13b17!8m2!3d13.2996017!4d80.2487789

சிவன்கோயில்கள் தோற்றத்திலும், அளவிலும் மாலியக்கோவில்களை விடவும் கம்பீரமாகவுள்ளன. அதிக கல்வெட்டுகளையும் பெற்றுள்ளன.



பொதுவாக பண்டு அரசர்கள், வேந்தர்கள் கோயில்களை ஆறுபாயும் இடங்களில் தான் ஊரமைத்து கோயில் கட்டினார்கள். அந்தவகையில் பார்த்தல் இக்கோவில் உள்ள ஊரில் ஏதேனும் ஒரு ஆறு பாயவேண்டும் ஆனால் என்னவோ கொசத்தலையாறு தான் சில கிலோ மீட்டர் தள்ளிக் கிழக்கில் பூண்டி அணை நோக்கி ஓடுகிறது. பண்டு கொசத்தலை இவ்வூர்

அருகே ஓடியிருக்க வேண்டும் என்று மட்டும் ஊகிக்க முடிகிறது. ஏனென்றால் எளிய மக்களிடம் காசு புழக்கம் இல்லாத பண்டைக் காலத்தில் கோவிலின் தடையற்ற இயக்கத்திற்கும், கோயில் பணியாளர்க்கும் கூலியாக விளைநிலங்களை ஒதுக்கி அதில் பயிர் செய்து பிழைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். அவற்றுக்கு நீர்ப்பாசனம் தேவை என்பதால் தான் ஆற்றின் அருகே ஊர் அமைப்பும் , கோவில் கட்டுமானமும் மேற்கொள்ளக் காரணம். கொசத்தலை ஆறு பாயுமிடங்களில் 12க்கு மேற்பட்ட சிவன் கோயில்கள் அமைந்துள்ளன என்கின்றனர். இன்று திருவாலங்காட்டில் கோவிலுக்கு அருகில் அரசு கரும்பாலை அமைந்து உள்ளது. இருப்பினும் இவ்வூரின் முதன்மைத் தொழில் வேளாண்மைதான். சென்னைக் கோயம்பேடு, வில்லிவாக்கம் சந்தைகளுக்கு இங்கிருந்து தான் அதிக காய்கறிகள் அன்றாடம் செல்கின்றன. நிலக்கொடைகள் குறித்த கோயில் கல்வெட்டுகளும் இங்குள்ளன.

கல்வெட்டு படம் -1



**கல்வெட்டுப் பாடம்: கல்வெட்டு படம் -1**

**1 (மண்ட)லத்து மணவிற்கோட்டத்து மேன்மலைப் பழைய..**

**2 (ச)ண்டேசுரப் பெருவிலை ஆகத் திருநாமத்துக்காணி**

**3 ...கோலாலளந்து கண்ட குழி இருநூற்றுக்கும்**

**4 ர சோழர(ச)...க்கு விற்றுக்குடுத்துக் கைக்கொ(ண்ட)**

**விளக்கம்:**

திருவாலங்காடு, மணவில் கோட்டம், மேல்மலைப் பழையனூர் நாட்டுப்பிரிவில் இருந்த குறிப்பு இக்கல்வெட்டின் முதல் வரியில் காணப்படுகிறது. கோயிலுக்கு நிலங்களைக் கொடையாக அளிக்கும்போது (சில கல்வெட்டுக் குறிப்புகளில் உள்ளவாறு) இறைவன் பெயரில் உரிமை பதிவு செய்யப்படும். இவ்வகை நிலங்கள், திருநாமக்காணி என்று வழங்கும். அதாவது, இறைவன் நாமம்; காணி=உரிமை.

இவ்வாறு, திருநாமத்துக்காணியாக இருந்த கோயில் நிலம் ஒன்று,ஏலத்தில் விற்பனை செய்யப்படுகிறது. இந்த ஏல விற்பனை, சண்டேசுரப்பெருவிலை என்று வழங்கப்படும். ஏலத்தின் மூலம் கிடைக்கப்பெறும் உயர்வான ஒரு விலைப்பணம் கோயிலுக்கு அமுதுபடி, திருப்பணி, திருவிழா ஆகிய செலவினங்களுக்குப் பயன்படும். கல்வெட்டு, இவ்வாறான ஒரு நிலத்தைப்பற்றிக் குறிப்பிடுகிறது. நிலத்தின் அளவு, இருநூறு குழி. நிலம், இருநூறு குழி என்று ஒரு அளவீட்டுக் கோல் மூலம் அளக்கப்படுகிறது. இவ்வகையான அளவீட்டுக் கோல்கள், 12 அடிக்கோல், 16 அடிக்கோல், 18 அடிக்கோல் எனப்பலவகை இருந்தன. இக்கோல்களுக்குப்பெயர்கள் சூட்டப்பட்டன என்றும் அறிகிறோம். சில கோயில்களில், கல்வெட்டுகளுக்கிடையில், கோலின் உருவம் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

கல்வெட்டு படம் - 2



**கல்வெட்டுப் பாடம்: கல்வெட்டு படம் - 2**

**யுடைய (முழான்)....ராயன்**

**..........ட்டை (ஸ்ரீ) ..க்கோ ...... காச்யபன்**

**.....திருவாலங்காடு..........(சாவா) மூவாப்**

கல்வெட்டு படம் - 3



**கல்வெட்டுப் பாடம்: கல்வெட்டு படம் - 3**

**...ராயன் வடுகநாதன் ....நத**

**காச்யபன் திருச்சிற்றம்பல பட்ட(னும்)**

**சாவா மூவாப்பெரும் பசு (4?) இ**

கல்வெட்டு படம் - 4



**கல்வெட்டுப் பாடம்: கல்வெட்டு படம் - 4**

**வரங்கில் அண்டமுற் ந...**

**பட்டனும் ஆத்ரேயன்  ச**

கல்வெட்டு படம் - 5



**கல்வெட்டுப் பாடம்: கல்வெட்டு படம் - 5**

**......கோட்டத்து ...**

**ண்டமுற்  ந... மாந்த..**

**ஆத்ரேயன் சந்த்ரசேகர (பட்டனும்)**

கல்வெட்டு படம் - 6



**கல்வெட்டுப் பாடம்: கல்வெட்டு படம் - 6**

**...பழையனூர் நாட்டு...**

**ளிய  நாயநார் திருமு(ன்)**

**(ப௦ட்டனும் காச்யபன் கா..**

**திருமுன்பு வைத்த சந்(தியா தீபம்)**

**கா...பட்டனும்**

**விளக்கம்:**

திருவாலங்காடு கல்வெட்டுகளைப்  படித்ததில் கிடைத்தவை.
கோயிலில் நந்தா தீபம் எரிக்கப் பசுக்கொடை  அளித்தது பற்றிய கல்வெட்டு.
கோயிலில் எழுந்தருளிய நாயநார் (இறைவர்) திருமுன்பு (கருவறையில்)
நந்தா விளக்கு எரிப்பதற்காக (நான்கு?) பசுக்கள் கொடையளிக்கப்படுகிறது.
இப்பசுக்கள் சாவா மூவாப்பெரும்பசுக்கள் என்று குறிக்கப்படுகின்றன.
கல்வெட்டுகளில் கொடையாகக் குறிக்கப்பெறும் ஆடு, பசு
ஆகியவற்றைச்"சாவா மூவா"" என்னும் அடைமொழி கொண்டு குறிப்பது
வழக்கம்.  இந்தக் கால்நடைகள்  இடையர்களிடம் ஒப்படைக்கப்பட்டு
வளர்வதால் இறப்புகள் நேர்ந்தபின்னும் புதிய கால்நடைகளின் பிறப்பால்,
அவற்றின் எண்ணிக்கை குறையாதிருக்கும் என்பதால், "சாவா மூவா"
என்னும் குறிப்பு கொடையாளி,  உயர் அதிகாரிகளில் ஒருவனாக
இருக்கவேண்டும். அவனுடைய முழுப்பெயர் கல்வெட்டில் புலப்படவில்லை
எனினும், "யுடைய முழான்.... ராயன் வடுகநாதன்     என்னும் துண்டுச்
சொற்கள் கொடையாளி ஒரு பெரிய அதிகாரி என்று உணர்த்துகின்றன.

கொடைப்பொருட்கள், கோயிலின் பூசை உரிமை பெற்ற சிவப்பிராமணர்
பொறுப்பில் கொடுக்கப்படுகின்றன. அச் சிவப்பிராமணர்கள், காச்யப
கோத்திரத்துத் திருச்சிற்றம்பல பட்டன், ஆத்ரேய கோத்திரத்து சந்திரசேகர
பட்டன்  முதலியோர் ஆவர்.  இன்னொருவர் பெயர் தெளிவாகத்
தெரியவில்லை. ஆனால், அவனும் காச்யபன் கோத்திரத்தான்
எனத்தெரிகிறது. திருவாலங்காட்டின் இருப்பிடம் பழையனூர் நாட்டுப்பிரிவு

எனத்தெரிகிறது. இப்பழையனூர் நாட்டுப்பிரிவு, மேல்மலைப் பழையனூர் எனவும், மணவில் கோட்டத்தைச்சேர்ந்தது எனவும் குறிப்பிடப்படுகிறது.

**நன்றி:**

திரு. துரை சுந்தரம், கோவை. கல்வெட்டை வாசித்துப் பொருள் கூறியவர்.

**பின் குறிப்பு:**

மணவில் இன்று மணவூர் என்ற பெயரில் வழங்குகிறது

[https://en.wikipedia.org/wiki/Manavur]

இங்குள்ள கோவிலிலும் கல்வெட்டுகள் நிரம்ப உண்டு என்று தெரிகிறது

[https://soki.in/manavoor-tiruvelangadu-thiruvallur]

அன்று மணவூரில் திருஆலங்காடு இருந்தது. இன்று திருவாலங்காட்டில் மணவூர் அடங்கிவிட்டது.

---

தொடர்பு: சேசாத்திரி சிறீதரன் (sseshadri69@gmail.com)

# 10. குன்னத்தூர் அஸ்தகிரீசுவரர் குடைவரை கோயில்

*—முனைவர்.க.சுபாஷிணி*



மதுரை மாநகரில் உள்ள குடைவரை கோயில்களில் ஒன்று அஸ்தகிரீஸ்வரர் குடைவரை கோயில். இது பாண்டியர்களால் ஏறக்குறைய கி.பி. 8ம் நூற்றாண்டில் கட்டடப்பட்டதாக அறியப்படுகின்றது.

மதுரையிலிருந்து சிவகங்கைக்குச் செல்லும் பாதையில் வரிச்சியூர் அருகே குன்னத்தூர் எனும் சிற்றூர் உள்ளது. முற்காலப் பாண்டியர் காலத்தில், அதாவது கி.பி 8-10ம் நூற்றாண்டு வாக்கில் இந்த ஊர் குன்றத்தூர்க் குளக்கீழ் என்ற நாட்டின் பிரிவுக்குட்பட்ட பிரம்மதேய கிராமமாக விளங்கியது. இன்று குன்னத்தூர் மலை என இப்பகுதி அழைக்கப்படுகின்றது..

இந்த குன்னத்தூர் மலையில் கிழக்கில் ஒரு குடைவரை சிவாலயமும் மேற்கே ஒரு குடைவரை சிவாலயமும் என இரண்டு குடைவரைக் கோயில்கள் உள்ளன. கிழக்கில் உள்ள குடிவரைக் கோயிலில் உள்ள சிவலிங்க வடிவிலான இறைவனுக்கு உதயகிரீசுவரர் எனப் பெயர். குன்றின்

கிழக்குப் பகுதியில் சூரியன் உதிப்பதால் சூரியனை நோக்கி கிழக்குப்பகுதி நோக்கிய வண்ணம் அமைக்கப்பட்டிருக்கும் இக்கோயில் உதயகிரீசுவரர் குடைவரைக் கோயில் என்றழைக்கப்படுகின்றது.

குன்னத்தூர் மலையின் மேற்குப் பகுதியில் சூரியன் மறையும் திக்கை நோக்கியவண்ணம் அமைக்கப்பட்டிருக்கும் சிவாலயத்திற்கு அஸ்தகிரீசுவரர் கோயில் எனப் பெயரிடப்பட்டிருக்கின்றது. கோயிலில் உள்ள சிவலிங்க வடிவ இறைவன் அஸ்தகிரீசுவரர் என அழைக்கப்படுகின்றார். இந்த இரண்டு குடைவரைக் கோயில்களும் முற்காலப் பாண்டியர்களின் அட்சியின் போது பாண்டியர்களால் அமைக்கப்பட்டவை.

அஸ்தகிரீசுவரர் கோயிலின் அமைப்பு ஆரம்பக்கால கோயில் அமைப்பின் முயற்சிகளை வெளிப்படுத்தும் தன்மையுடன் அமைந்திருக்கின்றன. இக்கோயிலினுள் ஒரு சிவலிங்க வடிவம் மட்டுமே உள்ளது. துவாரபாலகர்கள் சிற்பம் இக்கோயிலில் இடம்பெற வில்லை. பரிவார தெய்வங்களின் சிற்பங்களும் இக்கோயிலில் செதுக்கப்படவில்லை. இக்கோவிலில் கல்வெட்டுக்கள் ஏதும் பொறிக்கப்படவில்லை. சிவலிங்க வடிவ இறைவனை நோக்கிய வகையில் வெளியே நந்தி சிற்பம் ஒன்று வைக்கப்பட்டுள்ளது. இது கி.பி.13 -14 வாக்கிலான சிற்பமாகும்.

இக்கோயிலின் முகப்புப் பகுதியில் ஒரு கட்டுமானக் கோயிலின் மாதிரி வடிவம் பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ளது. இதனைக் காணும் போது ஒரு கோயில் அமைக்கும் பயிற்சி மேற்கொள்ளப்பட்டு பின்னர் பாறையைக் குடைந்து இக்குடைவரைக் கோயில் கட்டப்பட்டிருக்கலாம் என்று எண்ணத்தோன்றும் வகையில் இந்த அமைப்பு உள்ளது.

அஸ்தகிரீசுவரர் என்ற பெயர் கொண்டுள்ள இக்குடைவரை கோயிலின் தமிழ்ப்பெயர் பற்றிய தகவல்கள் ஆராயப்பட வேண்டியவை.

இக்கோயில் தமிழக தொல்லியல் துறையினால் பாதுகாக்கப்படும் ஒரு புராதனச் சின்னமாக உள்ளது.

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

# 11. உனகோடி கைலாசகர் சைவத்தலத்தின் பண்டைய பெருஞ்சிற்பங்கள்

*—நூ.த.லோ.சு.*

கிழக்கு இந்தியாவின் ஓர் மாநிலமான 'திரிபுரா' வில், 11 நூற்றாண்டு ' பால* மன்னர் பரம்பரையின் பண்டைய பெருஞ்சிற்ப இறை உருவங்களை "உனகோடி" மாவட்டத்து கைலாசகர் சைவத்தலத்தில் காணலாம். மாமல்லபுரம் அருச்சுனன் தபசு எனும் பெரும்பாறைமுகப்பு பொளிப்பு (bas-relief) களுக்கு இணையான பெரிய அளவினதாகவும் வனப்புடனும் காணப்படுகின்றன.

உனகோடி என்றால் கோடிக்கு ஒன்று குறைவு என்பது பொருள். பார்வதி ஓரிரவில் கோடி சிலைகளைப் படைக்குமாறு 'குல்லு கம்ஹார்' என்ற சிற்பிக்கு ஆணையிடுகிறார். ஆனால் எவ்வளவு முயன்றும் சிற்பியால் அக்கட்டளையை நிறைவேற்றமுடியாமல் கோடிக்கு ஒரு சிற்பம் குறைவாகவே உருவாக்கப்பட்டதால் இச்சிற்பத் தொகுதி உனகோடி என்று (வங்காள மொழியில்) அழைக்கப்படுகிறது என்பது தலவரலாறு.



பாறையில் செதுக்கப்பட்ட புடைப்பு சிற்பங்களும், கல் சிற்பங்களும் மிகப் பெரியன. சுமார் 30 அடியைவிட உயரமான, நெற்றிக்கண் உடைய சிவனின் தலையின் மீது உள்ள சடைமுடி மட்டுமே பத்தடி உயரம் கொண்டது. தலையின் இரு பக்கங்களிலும் தேவியர் சிலைகள் உள்ளன. சிங்கத்தின் மேல் அமர்ந்த துர்க்கை அவர்களில் ஒருவர்.

தாழும் அருவிகளின் கீழேதான் சடைமுடியுடன் கூடிய சிவனை, சீரிய கலை உணர்வுடன் பொளித்திருக்க வேண்டும். ஆனால், இந்நாளில் அருவி சிறிதே விலகி பக்கத்தில் ஓடுகின்றது.

எதிரில் அரைப்பகுதி தரையில் புதைந்துள்ள நந்தி சிலையும் உள்ளது. விநாயகர், மாறன்கணை, கங்கை தாங்கிய சடைமுடி, திரிபுரம் எய்த சிவன், காளி எனவும் இவை யாவும் புராணங்களை விளக்குபவை. ஆதலால், இச் சிலைகளின் தொகுப்பு அப்பகுதியில் சைவ-காளி வழிபாடு இருந்தமையைக் காட்டுகிறது.














இந்த மிக அரிய தொல்லியல் கல் சிற்ப வளாகம் இந்தியத்தொல்லியல் துறையினால் பராமரிக்கப்பட்டாலும் விளம்பரப்படுத்தப்படாமல் உள்ளது. இந்திய பெருநாட்டில் போக்குவரத்து மிக மிகக் குன்றிய ஒதுக்குப்புறமாக அமைந்துள்ளதும் ஓர் இடர்பாடு தான். மேலும், UNESCO பட்டியலின் கீழ் தொல்லியல் வளாகத்தைக் கொணர்ந்தாலும் சுற்றுலாத்துறை வளரலாம்.

**குறிப்பு:**

*பால (= பால்) எனும் சொல்லிற்கு காப்பாற்றுபவன்/இறைவன், அதாவது ஓர் மன்னன் தலைவனின் கடமை/தொழில் தனது நாட்டுக் குடிகளை ஓம்புதல் ஆகும் (காட்டாக: கோ'பால்' = கறவை மாடுகளை ஓம்புகின்றவன், தன'பால்' = செல்வத்தினை காப்பாற்றுகின்றவன், தரம் 'பால்' = அறத்தைப் பேணுபவன் , மகி 'பால்' ' = பெண்களைப் போற்றுபவன் என அறியப்படும்). இன்றும் பால் எனும் குடும்பப் பெயர்/பட்டப்பெயர் கொண்டோர் வங்காளத்திலும் அக்கம்பக்கத்து நாடுகளிலும் வாழ்கின்றனர்.

**படங்கள்**: நன்றி இணையப் பக்கங்கள்

---

தொடர்பு: நூ.த.லோ.சு. / மயிலை நூ.த.லோக சுந்தரம்(selvindls61@gmail.com)

## 12. இராமேசம்

*—இராம.கி.*

திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் 13 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் (~ கி.பி.1230) செல்லிநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பியால் இயற்றப்பட்டது. பிறவாயாக்கைப் பெரியோனின் 64 திருவிளையாடல்களை விவரிக்கும் நூல்களில் இதுவே தமிழில் முதலெழுந்ததாய்த் தெரிகிறது. நம்பியார் புராணத்தை ஏட்டுச்சுவடியிலிருந்து அச்சுநூலாக முதன்முதல் 1906 இல் வெளியிட்டவர் உ.வே.சா. ஆவார். அதன் மறுபதிப்பு உ.வே.சா. நூலகத்தால் 1972 இல் மீண்டும் வெளியிடப்பெற்றது. இதற்குமுன் முழுதாகவன்றி அங்குமிங்கும் உதிரி உதிரியாய்ச் சில செய்திகளைத், தேவாரம், கல்லாடம், திருவாசகம் போன்றவற்றில் அறியலாம். இதற்கப்புறம் எழுந்த பல நூல்களில் கி.பி. 1660 இல் எழுந்த பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற்புராணமும் குறிப்பிட்டுச் சொல்லவேண்டியதாகும்..

அது என்னவோ தெரியவில்லை. பின்னவர் நூலையே பலரும் இக்காலத்திற் பேசுகிறார். ஆனால் உள்ளீடு பார்த்தால், அக்காலச் செய்திகளை (குறிப்பாகப் பாண்டியன் கடுங்கோன், அவனுக்கும் முந்தைய களப்பாளர் காலச் செய்திகளை) அறிய பரஞ்சோதியார் நூலை விட நம்பியார் புராணமே பயனுள்ளது. (இதன் pdf படியை முனைவர் ழான்லுக் செவ்வியார் எனக்கு அனுப்பிவைத்தார். மாணிக்கவாசகர் காலம் பற்றிய என்னாய்விற்கு இந்நூலே பெரிதும் உதவியது.) தமிழறிஞரில் மிகப் பலர் நம்பியார் புராணத்தின் பயன்பாட்டை உணர மறுக்கிறார். என்னைக்கேட்டால் திருவாலவாயுடையார் புராணத்தை  மீளாய்வது பயன்தரும். உருப்படியாக ஆய்வுசெய்யத் தான் நம்மூரில் ஆளில்லை. தமிழாய்வு பெரிதும் தளர்ந்துள்ளது. நானிங்கே சொல்லவருவது வேறு.

உ.வே.சா. வெளியீட்டின் முகவுரையில் பாண்டி நாட்டுத் தேவாரத்தலங்களாய் 14 தலங்களைக் குறிப்பிடும் வெண்பாவொன்று வரும்..

**கூடல் புனவாயில் குற்றால மாப்பனூ**
**ரேடகநெல் வேலி யிராமேச - மாடானை**
**தென்பரங்குன் றஞ்சுழிய றென்திருப்புத் தூர்கானை**
**வன்கொடுங்குன் றம்பூ வணம்**

இங்கு காட்டப்படும் “இராமேசத்தின் பழைய பெயரென்ன?” என்று எழும் கேள்விக்கு . . . இதன் விடையோடு தொடர்புடைய மற்ற செய்திகள் பலருக்கும் பயன்படுமென்று எண்ணி இங்கே பதிகிறேன். முதலில் ஈசம் என்ற சொல்லின் பொருளறியவேண்டும். (சிவன்கோயில்கள் பலவும் ஈசமென்றே சொல்லப்படும்.) ஈசமென்பது திசைதொடர்பான சொல். திசைகள்பற்றிய என் பழந்தொடரின் 3 ஆம் பகுதியில் (http://valavu.blogspot.in/2008/04/3.html) ஈந்து>ஐந்து>ஐந்திரம், கிழக்குத்திசை குறிக்குமென நிறுவினேன்.

ஈந்து>ஈத்தின் தொடர்பாய் 'ஈசம்' எழுந்து, வடகிழக்கைக் குறிக்கும். ஈசன்/சிவன் வடகிழக்குத் திசைக்கு உரியவனென்றே மனையடிநூலில் சொல்லப்படும். இந்தியப் பெருநிலத்தின் வடகிழக்கிற்றான் குயிலாலுவ>கயிலாலுவ மலையுள்ளது. சிவன் அம்மலையில் உள்ளதாகவே தமிழரிற் பலரும் தொன்மஞ் சொல்வர். கயிலாயமன்றி ஈசன் திருவுரு அமைந்த இடங்களும்/கோயில்களும் கூட ஈசமென்றே அழைக்கப்பட்டன. ஈசத்தைச் சங்கதம் வகரஞ் சேர்த்து ஈஸ்வமாக்கும். இதேபோல் ஈசனை தமிழ்முறைப்படி மதிப்புக்கூட்டி ஈசராக்கி சங்கத முறைப்படி ஈஸ்வராக்குவர். ஈஸ்வரிலிருந்து தமிழ்முறைப்படி ஈஸ்வரம்>ஈச்சுரம் ஆகும். இப்படித் தமிழும் சங்கதமும் மாறிமாறி ஊடாடியே சிவன் கோயில்களுக்கான பெயரெழுந்தது. சங்கதம் பழகவேண்டாமெனில் ஈசமே நமக்குப் போதும்.

சிவனுக்கெனச் சொல்லப்படும் 12 சோதிலிங்கங்களில் இராமேசத்தைத் தமிழ்நாட்டிலும், சோமேசத்தைக் கூர்ச்சரத்திலும், நாகேசம், குசுமேசம் போன்றவற்றை மராட்டத்திலும், விசுவேசத்தை உத்திரப் பிரதேசத்திலும் பொருத்துவர். இவையத்தனையும் ஈசமென்று முடியுந் தலங்கள். அகரமும் ஈகாரமுஞ் சேர்ந்து வடமொழிப் புணர்ச்சியில் ஏகாரமாகும். இதுபோக,

வித்தநாதம் (வைத்யநாதம்), வீமநாதம் (பீமநாதம்), திரியம்பகமென்ற 3 தலங்கள் மராட்டத்திலும், திருப்பருப்பதம் (சிரீசைலம்) ஆந்திரத்திலும், ஓங்காரம், உஞ்சை (உச்செயினி) மத்தியப் பிரதேசத்திலும், கேதாரம் உத்திரப்பிரதேசத்திலும் காட்டப்படும். இராமேசத்தில் 2 இலிங்கங்கள் உண்டு, முதல் இலிங்கம் மணலால் ஆனது. இரண்டாவது கல்லால் ஆனது. முதலாவதைச் சீதை பிடித்துவைத்தாள் என்றும், இரண்டாவதை அனுமன் வடக்கிருந்து கொண்டுவந்தானென்றுஞ் சொல்லப்படும். (தொன்மக்கதைகள் உண்மையா, இல்லையா என்ற சிக்கலுக்குள் நான் போகவில்லை. நம்புபவனுக்கு அவை உண்மை.)




இராமேசக் கோயில் தேவாரகாலத்தில் மிகச்சிறிதே. இன்றுள்ள மண்டபங்கள், சுற்றாலைகள் எல்லாம் அன்றில்லை. மிஞ்சிமிஞ்சிப் போனால் கருவறையைச் சுற்றி ஒரு சுற்றாலை இருக்கும். 12 ஆம் நூற்றாண்டில், பாண்டியரின் தாயாதிச் சண்டையில் ஊடுவந்த ஒரு சிங்கள மாமன், மன்னன் பராக்கிரம பாகுவே பழங்கோயிலை இடித்து இன்றுள்ள கோயிலின் அடிப்படை அடவை உருவாக்கினான் என்பர். (நாம் விரும்பினாலும், விரும்பாவிடினும், தமிழர்-சிங்களர் ஊடாட்டம் நம் வரலாற்றில்

நெடுகவேயுண்டு. இதைத் தவிர்க்கமுடியாது. அவனுக்கு நாம் பெண் கொடுத்தோம், அவன் வீட்டில் பெண் எடுத்தோம். அது தொடர்கதை.)

கோயில் இறைவர்பெயர் இராமநாதர் (மணல் இலிங்கத்திற்கு அது பெயர்.). அவருக்கு முன்னிருக்கும் கல் இலிங்கத்திற்கு இராமலிங்கமென்று பெயர். (எத்தனை பேருக்குத் தெரியுமென்று தெரியவில்லை. இராமசாமியெனில் அது பெருமாளைக் குறிக்கும். இராமநாதனெனில் சிவனைக் குறிக்கும். இவன் "ரம்மிய"மானவனா? அன்றி இராமனுக்கு நாதனா? என்பது பார்வையைப் பொறுத்தது. இறைவி பெயர் மலைவளர் காதலி,(பருப்பத/பர்வத வர்த்தினி என்பது சங்கதவாக்கம்.). கோயிலுக்குள் உள்ள பல்வேறு நீர்நிலைகள் உப்புநீர் மேல் கூடியுள்ள நன்னீரால் ஏற்படுவது. இன்று நம்மூர் ஐயர்கள் இங்கு கிடையாது. பண்டாக்கள் என்னும் மராட்டியக் குருக்களேயுண்டு. இது வரலாற்றிலேற்பட்ட விசயநகர, மராட்டிய, நாயக்கர் தாக்கம் என்றெண்ணுகிறேன். இன்றுள்ள மண்டபங்கள் எல்லாம் இவர்களால், பின்வந்த சேதுபதிகளால், எழுந்தது. மூன்றாம் சுற்றாலை மிகப் பெரிது. கோயிலிற் கூட்டம் சொல்லிமாளாது. ஒரே இரைச்சல். அங்குமிங்கும் ஓட்டம். எங்கும் பார்த்தால் நீர்ச்சகதி.



காசிக்கும், குமரிக்கும் (அப்படித்தான் சோழர்காலக் கல்வெட்டெல்லாம் சொல்கிறது) சொல்லப்பட்ட இடையுறவு எப்படியோ காசிக்கும், இராமேசத்திற்குமாய் மாறி விட்டது. எப்பொழுது மாறியதென்பது சுவையான ஆய்வு. ஒருவேளை பாண்டியராட்சி முடிந்தபின் ஏற்பட்டதோ, என்னவோ? கோயிலுக்குள் இந்தியே இங்கு அன்றாட மொழியாய்த் தெரிகிறது. விரைவு வண்டிகளில் நம்மூர்க்காரரை விட வடவர் கூட்டமே மிகுந்துள்ளது. கோயிலின் கிழக்குவாசலுக்குமுன் நீராடுங்கடலில் குப்பைகளும், மாசுகளும் நிரவிக் கிடக்கின்றன. இதை யாராவது சரிசெய்தால் என்ன என்று தோன்றுகிறது. "ஸ்வட்ச் பாரத்" எங்கு போயிற்றென்று தெரியவில்லை. இன்னுங்கூட மரங்களைநட்டுத் தீவைச் சற்று சரி செய்யலாம். வறட்சி கூடிவருகிறது. தண்ணீர்த் தட்டுப்பாடு பெரிதாகவேயுள்ளது. கோயிலில் தெரிசனத்தை முடித்தபின், அப்துல்கலாம் நினைவகத்தில் கூட்டம் கூடுகிறது. தீவின் பொருளியல் வளர்ச்சியில் அதுவொரு மாற்றம்.

தேவாரகாலத்தில் இராமேசம் ஒரு தீவில்லை. (ஏனென்று கீழே சொல்கிறேன்.) இராமநாதபுரத்திலிருந்து கடலுக்குள் நீண்டுசெல்லும் துருத்தியாகவே அதுவன்று இருந்திருக்கலாம். துருத்தியின் முடிவில் வில்வடிவில் பாதி முழுகியும் முழுகாதும் நிலமிருந்து அப்பக்கம் மன்னாரை இணைத்தது. அதையே சேது என்றார். மன்னாருக்கு அடுத்தது திருக்கேதீச்சுரம். வில்வடிவின் தொடக்கமான விற்கோடியை தனுஷ்கோடியென சங்கதத்தில் பெயர்த்துச் சொல்வார். (விற்கோடியைத் தொல்முதுகோடி என்று சிலர் சொல்லமுற்படுவது புரட்டு. அகநானூறு சொல்வது இந்த இடமில்லை. அது திருமறைக்காட்டிற்கு அருகிலுள்ள கோடிக்கரை. அதைப்பற்றி வேறு இடங்களில் நான் நெடுகப் பேசியுள்ளேன். மீண்டும் இங்கு பேசிப் பொரித்தெடுக்க வேண்டாமென விடுக்கிறேன்.)

இன்று இராமேச்சுரத்திலிருந்து விற்கோடி வரை தமிழக அரசினர் உருப்படியான சாலை ஒன்றைப் போட்டுள்ளார். ஒருமாதம் முன் இராமேசம் போனபோது இதைப் பார்த்தேன். வியந்துபோனேன். இப்பொழுது இராமேசம் வருவோர், தானியை எடுத்துக்கொண்டு விற்கோடி வரை போய்வருகிறார். அடுத்தமுறை நீங்களும் போய்வாருங்கள். பார்த்து வியக்கவேண்டிய ஓரிடம். துருத்திக்குள் நடந்து சென்று இந்தியமுனை தொடும்போது, அங்கிருந்து வில்

வளர்வதை நன்றாகவே உணரமுடியும் , நாசா வெளியிட்ட படத்திலும் இதைப்பார்க்கலாம். இது மாந்தன் செய்த சேது என்பதை மட்டும் நான் ஏற்கேன். வானம் தெளிவாகி, பார்வை கூர்மையாகி, கையில் தோற்றப்பெருக்கி இருக்குமானால், அந்தப்பக்கக் கோடியில் நிலத்தைப் பார்க்கலாம்.




சம்பந்தர் காலத்தில், இன்றிருப்பதைவிட 2,3 மீட்டர்கள் கடலாழம் குறைந்திருக்கும். துருத்தி இன்னும் சில கிலோமீட்டர் நீண்டிருக்கும். வெகு எளிதில் சம்பந்தர் கேதீச்சுரம் பார்க்கும் தொலைவிற்குப் போயிருப்பார். இந்தப்பக்கத்திலிருந்து அவர் திருக்கேதீச்சுர விமானத்தைக் கூடப் பார்த்திருக்கலாம். யார்கண்டார்? (இராமேசம் அன்று தீவில்லை என்று ஏன் சொன்னேன்? தீவாயிருந்தால், படகு வைத்தல்லவா இராமேசம் போயிருக்கமுடியும்? பின் அதேபடகில் திருக்கேதீசம் போக என்ன சிக்கல்? ஆனால் அவர் போகவில்லையே? இங்கிருந்தே கேதீசத்திற்கும் திருகோணமலைக்கும் பதிகம் பாடிவிட்டாரே? இத்தனைக்கும் அருகில் பாண்டிய அரசி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் கூட

இருந்தாரே? அப்படியென்றால் என்ன பொருள்? கேதீசத்தை விற்கோடியிலிருந்து பார்க்கமுடிந்தது. இடையில் கடல். பிள்ளையை வைத்துக்கொண்டு இக்கு (risk) எடுக்க அரசியும், அமைச்சரும் விரும்பவில்லை. அதேபொழுது இராமநாதபுரத்திலிருந்து நடந்தே, அல்லது ஊர்திவழி நகர்ந்தே, இராமேசம் வரமுடிந்தது என்று தானே பொருள்?

மயிலை சீனி வேங்கடசாமியும், 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை, குறிப்பிட்ட விழாநாட்களில் இராமேசத்து இராமலிங்க ஊருலவரைத் தூக்கிக்கொண்டு இராமநாதபுரம் இராமலிங்க விலாசம் வரை வந்து, அங்கு ஒருநாள் வைத்திருந்து கோயிலுக்கு மீண்டும் எடுத்துச்செல்வரென்று தெளிவாக ஆதாரத்துடன் பதிவுசெய்வார். ஆகப் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை இராமேசம் தீவல்ல. வெறும் துருத்தி. பார்த்தீர்களா? இவ்வளவு சொன்னேன். இராமேசத்தின் மறுபெயர் சொல்ல விட்டேனே? ஒருகாலத்தில் எங்கள் அரசர்களின் குடும்பப் பெயர் சேதுபதி. அவர்கள் சேதுக்கு "பதி". சேது என்பது முன்னால் சொன்னேனே அந்த விற்கோடிக்கு அப்புறம் உள்ள இயற்கை இணை. சேதுள்ள ஊர் சேதூர். அந்த ஊருக்குப் போகும் 2 விரைவுவண்டிகளின் ஒன்றின் பெயர் இராமேசுரம் விரைவி, இன்னொன்று சேது விரைவி. சேதுதான் அந்தவூரின் மாற்றுப்பெயர். இராமநாதபுரச் சீமையில் யாரைக் கேட்டாலும் இம்மாற்றுப்பெயரைச் சொல்வர்.

"சேதுவை மேடுறுத்தி வீதிசெய்வோம்" என்றான் பாரதி.
"சேடனென்னப் பொலிந்தது சேதுவே" கம்பரா. சேதுப. 66
"சேதுவின் இராமநாதனை நிறுவிய காதையை" என்பது சேதுபு.அவை.1
"சேதுகாவலன் திருவணை காவலன்" கல்லாடம்.
"சேதுபுராணம்" என்பது 16 ஆம் நூற்றாண்டில் நிரம்பவழகிய தேசிகரால் பாடப்பெற்ற இராமேசுரப்புராணம்.

---

தொடர்பு: இராம.கி. (poo@giasmd01.vsnl.net.in)

http://valavu.blogspot.com

## 13. காளமேகப்புலவரும் பாண்டியநாட்டுச் சிவத்தலங்களும்

*—தேமொழி*

இரட்டுற மொழிதல் என்றாலே காளமேகப்புலவர் பாடல்கள் என்று தமிழிலக்கியத்தில் முத்திரை பதித்தவர் கவி காளமேகம். பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் கவி காளமேகம் எனப் பல வரலாற்றுக் குறிப்புகள் மூலம் அறிய முடிகின்றது [1]. காளமேகப்புலவர் எழுதிய பாண்டிய நாட்டில் உள்ள சிவத்தலங்கள் குறித்த பாடலொன்று உண்டு. இப்பாடல் காளமேகப் புலவர்-தனிப்பாடல்கள் நூலில் கொடுக்கப்படுகிறது [2]. தமிழிலக்கிய மின்தொகுப்புத் திட்டம் வழங்கும் கவி காளமேகம் பாடல்கள் வரிசையில் 117 ஆவது பாடலாகவும் இடம்பெறுகின்றது [3].

***கூடல், புனவாயில், குற்றாலம், ஆப்பனூர்***
***ஏடகம்நெல் வேலி, இராமேசம், - ஆடானை***
***தென்பரங்குன்றம், சுழியல், தென்திருப்புத் தூர், காசி***
***வன்கொடுங்குன் றம்,பூ வணம்.***

(பாடல் - 117: சிவத்தலங்கள் / பாண்டிய நாட்டில் உள்ளவை)

1. கூடல் - மதுரை
2. புனவாயில் - திருப்புனவாயில்
3. குற்றாலம் - திருக்குற்றாலம்
4. ஆப்பனூர் - திருவாப்பனூர்
5. ஏடகம் - திருவேடகம்
6. நெல்வேலி - திருநெல்வேலி
7. இராமேசம் - திருஇராமேச்சுரம்
8. ஆடானை - திருஆடானை
9. தென்பரங்குன்றம் - திருப்பரங்குன்றம்
10. சுழியல் - திருச்சுழியல்

11. திருப்புத்தூர் - திருப்புத்தூர்
12. காசி - தென்காசி
13. வன்கொடுங்குன்றம் - திருக்கொடுங்குன்றம்
14. பூவணம் - திருப்பூவணம்;

என்னும் இவை யாவும் பாண்டிநாட்டுத் தலங்கள் ஆகும், என்பது பாண்டிநாட்டுச் சிவத்தலங்கள் குறித்து இப்பாடல் கொடுக்கும் குறிப்பு.

பாண்டிநாட்டுச் சிவத்தலங்கள் குறித்த இந்த வெண்பா, 1906-ஆம் ஆண்டில் உவேசா பதிப்பித்த 'திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்' என்ற "பழைய திருவிளையாடல்" புராணத்தில் இடம் பெறுகின்றது.

***கூடல் புனவாயில் குற்றால மாப்பனூ***
***ரேடகநெல் வேலி யிராமேச - மாடானை***
***தென்பரங்குன் றஞ்சுழிய றென்றிருப்புத் தூர்கானை***
***வன்கொடுங்குன் றம்பூ வணம்***

ஆனால், இது காளமேகப்புலவரின் பாடல் என்ற குறிப்பு உவேசா வின் நூலில் கொடுக்கப்பெறவில்லை என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

காளமேகம் இயற்றியதாகப் பல தனிப்பாடல்கள் கிடைக்கப் பெறுகின்றன என்று காளமேகப்புலவர் குறித்த ஆய்வாளர்கள் குறிப்பிடுவதுண்டு [4]. இவ்விரு பாடல்களுக்கும் உள்ள வேறுபாடு; 12 ஆவதாகக் குறிக்கப்படும் சிவத்தலம் **காசி** என்பது **கானை** என உவேசா வின் நூலில் கொடுக்கப்பட்டுள்ள வேறுபாடு.

பாண்டித் தலம் 14-ம் கூறும் வெண்பாவில் "காளையார்கோயில்" உள்ள கானப்பேர் என்ற ஊர் "கானை" எனக் குறிப்பிடப்படுகிறது. இன்றைய காளையார்கோயில் "கானப்பேர்" என்றும் "கானையம்பதி" என்றும் அழைக்கப்பட்டது. "கானப்பேர் எயிற் கடந்த உக்கிரப் பெருவழுதி" என்ற சங்க கால வரலாற்றுக் குறிப்பும் உண்டு. பன்னிரண்டாம் நூற்றாண்டு எழுதப்பட்ட பழைய திருவிளையாடற்புராணத்தில், கானப்பேர் "கானையம்பதி" என்றும் குறிப்பிடப்படும் (திருவாலவா. 27, 31). ஆகவே, கானை என்பது கானப்பேர் என்பதன் மரூஉப் பெயராகும்.

தேவார மூவர் முதலிகளான திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர் என்போரால் பாடப்பெற்ற 14 பாண்டிநாட்டுத் தேவாரத்தலங்கள் என அறியப்பெறும் ஊர்கள் முறையே: 1. மதுரை; 2. திருப்புனவாயில்; 3. குற்றாலம்; 4. திருவாப்பனூர்; 5. திரு ஏடகம்; 6. திருநெல்வேலி; 7. திருவிராமேச்சுரம் ; 8. திருவாடானை; 9. திருப்பரங்குன்றம் ; 10. திருச்சுழியல்; 11. திருப்புத்தூர், 12. காளையார் கோயில்; 13. திருக்கொடுங்குன்றம் (பிரான்மலை); 14. திருப்பூவணம். இந்தப் பதினான்கு திருத்தலங்களும் **"பாண்டி பதினான்கு"** எனவும் சிறப்பித்துக் கூறப்படுகின்றன.

**இதே ஊர்களே குமரகுருபரரின் மீனாட்சியம்மை குறம் என்ற பாடலிலும்;**

*கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று*
*குற்றாலம் ஆப்பனூர் பூவணநெல் வேலி*
*ஏடகமா டானைதிருக் கானப்பேர் சுழியல்*
*இராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்கள்*
*நாடியெங்க ளங்கயற்கண் ணாண்டதமிழ்ப் பாண்டி*
*நன்னாடும் பிறநாடும் என்னாடதாகக்*
*காடுமலையுந் திரிந்து குறி சொல்லிக் காலங்*
*கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவாரம்மே*
- குமரகுருபரசுவாமிகள்

**திருப்பூவணப் புராணத்திலும்;**

*தென்மதுரை பரங்குன்றந்திருவிராமேச்சுரமாடானைபுத்தூர்*
*பன்னுதமிழேடகநெல்வேலி பகர்குற்றாலமாப்பனூர்பார்*
*மன்னுபுனற்சுழியல்புனவாயில் கொடுங்குன்றமெழின் மருவுகானை*
*பொன்மதில் சூழ் பூவணமும் பொருந்துகின்ற புகழ்ப் பொதியப்*
*பொருப்பனாடு (117)*

**காளையார்கோயில் புராணத்திலும்;**

*ஆலவாய் கானப்பேரூராடானைபுனவாயில்குற்*
*றாலமேடகம்பரங்குன்றாப்பனூர்சுழியலபுத்தூர்*
*மாலிராமேச்சுரம்பூவணங்கொடுங்குன்றுவேய்நெல்*
*வேலியாந்தலமுறுப்பாமேயதுபாண்டிநாடு. (8)*

**திருப்பூவணநாதருலாவிலும்;**

*“திருக் கங்கை வார் சடையார் தென்பாண்டி நாட்டில்*
*இருக்குந் தலங்கள் பாடு என்னப் - பெருக்கம்*

*திகழ் பூவுலகில் சிவலோகம் என்னப்*
*பகர்கூட ஆலவாய் பாடி – மிக மால்*

*பிறிக்கும் அடியார் பிறவிக் கருவேர்*
*பறிக்கும் புனவாயில் பாடிக் - குறிக்குமால்*

*சங்கந் திகிரி தன் நந்தும் மழு மான் எடுக்கு*
*நங்கள் குற்றால நகர்பாடித் - தங்கு ஒருபால்*

*பெண்மைத் திருக்கோலப் பெம்மான் இனிது உறையும்*
*உண்மைத் திருவாப்பனூர் பாடித் - திண்மை அற*

*வாட்டும் பிறவி வழி மறித்து ஞானவழி*
*காட்டுந் திருவேடகம் பாடி - நாட்டின்*

*விரவு திருவெண்ணீற்றின் மெய்யன்பர் கூட்டம்*
*பரவு திருநெல்வேலி பாடிப் - பரவுமுனை*

*சேர் திருவி ராகவன் முன் சேனையுடன் கண்டுதொழச்*
*சார் திருவி ராமேச்சரம் பாடி - ஏர் தரு பொற்*

*கொம்பரன் நாடானை ஒரு கூறு இலங்குங் கோலத்து*
*நம்பரன் ஆடானை நகர்பாடி - வம்பர்*

*புரம் குன்ற வான் நகைசெய் பொன் மலை விற்செல்வன்*
*பரங்குன்றம் மாநகரம் பாடி - உரங் கொள்*

*விடைக்கும் சரம் உகைப்பார் வீற்றிருக்கக் காணி*
*படைக்குந் திருச்சுழியல் பாடிக் - கிடைக்கும் அகத்து*

*ஆசை உடைச் சிற்சபையில் ஐயன் திருச்சிலம்பின்*
*ஓசை உடைத் திருப்புத்தூர் பாடித் - தேசுநலந்*

*தாங்கு திருத்தேர் வீதிச் சைவ ஆகமம் வேதம்*
*ஓங்கு திருக் கானப்பேர் ஊர் பாடி - வாங்குந்*

*தனிக் கொடுங்குன்றம் அதன் தன்னை எரித்தார்*
*பனிக் கொடுங்குன்ற நகர் பாடித் - தொனிக்கு மறைப்*

*பாவணம் பாடும் பரமன் திருக்கோயிற்*
*பூவணம் பாடும் பொழுதிலே - நாவணங்கு*

*நாதன் புதல்வர் நவினான் மறைபாடக்*
*கீத இசை கின்னரர் பாடக் - கோதிலாச்"*

காட்டப்படுகின்றன. மேற்கூறியவாறு தேவாரப்பாடல்கள், மீனாட்சியம்மை குறம், திருப்பூவணப் புராணம், காளையார்கோயில் புராணம் மற்றும் திருப்பூவணநாதருலா ஆகியனவற்றில் காளையார்கோயில் தலம் பாண்டி பதினான்கு தலங்களில் ஒன்றாகக் கொடுக்கப்படுகிறது. இவை எவற்றிலுமே தென்காசி இடம் பெறவில்லை என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். தேவாரப்பாடல்களில் "தென்காசி திருத்தலத்திற்குப் பாடல்கள் ஏதும் கிடைக்கப்பெறவில்லை".

கானை என்பது காசி என மாற்றி எழுதப்பட்டுள்ளது. இது பிற்காலத்தில் ஏடு எழுதியவரின் குற்றமாகலாம். இதற்குக் கானை என்பதன் பொருள் குறித்த அறியாமையும் ஒரு காரணமாக இருக்கலாம். பிழை திருத்துவதாக நினைத்து காசி என (தென்காசியைக் குறிப்பதாக பிழையான

புரிதல் நிலையில்) ஏடு எழுதியவர் மாற்றியிருக்க வேண்டும் எனக் கருதலாம். இது பிற்காலப் பாடல் என்பதும் தெரிகிறது. பாண்டியர்கள் மதுரையை இழந்தபின் தென்காசியில் வாழ்ந்த பிற்காலத்தில் எழுதப்பட்ட, 15 ஆம் நூற்றாண்டு காலத்தையொட்டிய பாடல் எனவும் கருத வழியுண்டு. எண்ணிக்கை மாறாமல் பிற்கால இடத்தின் பெயர் நுழைக்கப்பட்டுள்ளது பாடலின் காலம் பற்றிய குறிப்பையும் கொடுக்கிறது. கானை என்பது காசி என மாற்றப்பட்டதால் பாடலில் தளைதட்டுவதும் பிழையை உறுதி செய்கிறது. அத்துடன், பாடலை எழுதிய புலவர் கவி காளமேகம்தானா அல்லது அவர் பெயரின் கீழ் வகைப்படுத்தப்பட்ட தனிப்பாடலா இது என்பதுவும் ஆய்விற்குரியது

**பாண்டிநாட்டுச் சிவத்தலங்கள் கூகுள் வரைபடத்தில்:**

https://drive.google.com/open?id=1aa-Y5xmjsH6bgR8-hdb4kNjV7cpsirf0&usp=sharing




பாண்டியநாட்டுச் சிவத்தலங்கள்

https://drive.google.com/open?id=1aa-Y5xmjsH6bgR8-hdb4kNjV7cpsirf0&usp=sharing

**படம்:** https://lh3.googleusercontent.com/-XCaYzfKBEVg/WotWJ4CXzcI/AAAAAAAAH2s/BqoW08euzXk5yvhgzJf9Z9nhVVJvSBSKACLcBGAs/s1600/padal%2Bpetra%2Bthalam.jpg

**கட்டுரையில் இடம்பெற்ற பாண்டிநாட்டுச் சிவத்தலங்களின் புவியிடக் குறிப்புக்கள்:**

1. மதுரை (9.9195, 78.11934)
2. திருப்புனவாயில் (9.89416, 79.06361)
3. குற்றாலம் (8.9342, 77.2778)
4. திருவாப்பனூர் (9.92607, 78.12152)
5. திருவேடகம் (9.99539, 77.98885)
6. திருநெல்வேலி (8.71391, 77.75665)
7. இராமேச்சுரம் (9.28762, 79.31292)
8. திருஆடானை (9.78336, 78.91827)
9. திருப்பரங்குன்றம் (9.88144, 78.07297)
10. திருச்சுழி (9.53456, 78.1999)
11. திருப்புத்தூர் (10.10847, 78.5973)
12. காளையார்கோயில் (9.84568, 78.63136)
13. திருக்கொடுங்குன்றம் (10.23611, 78.43886)
14. திருப்பூவணம் (9.82596, 78.25758)

-----

மற்றும் ...

தென்காசி (8.95902, 77.31293)

**குறிப்பு:**

இக்கட்டுரை எழுத தகவல் தந்து உதவிய முனைவர் காளைராசன், முனைவர் நா. கணேசன், திரு. மயிலை நூதலோசு, திரு. இராம.கி. ஆகியோருக்கு நன்றி.

**துணைநூற் பட்டியல்:**

[1] பாவலர் சரித்திர தீபகம், அ. சதாசிவம்பிள்ளை. பகுதி 2. கொழும்புத் தமிழ்ச்சங்க வெளியீடு (பக்கம் - 97), 1979.

[2] காளமேகப் புலவர்-தனிப்பாடல்கள், புலியூர்க் கேசிகன், முதற் பதிப்பு : டிசம்பர் 2010, பக்கம்: 108

[3] கவி காளமேகம் பாடல்கள், தமிழிலக்கிய மின்தொகுப்புத் திட்டம் - http://www.projectmadurai.org/pm_etexts/utf8/pmuni0220.html

[4] திருமலைராயனும் காளமேகப்புலவரும், தேமொழி, பிப்ரவரி 17, 2018, சிறகு http://siragu.com/திருமலைராயனும்-காளமேகப்/

[5] இராமேசம், இராம.கி. - https://mymintamil.blogspot.com/2018/02/Ramesam-by-Ramaki.html

---

தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

# 14. பாண்டியர் ஆட்சியில் கொங்குநாடு

*—து.சுந்தரம்*

**முன்னுரை:**

கோவை வாணவராயர் அறக்கட்டளை சார்பாக மாதந்தோறும் நடைபெறும் சொற்பொழிவுகளின் வரிசையில் நவம்பர்,2017 மாதத்துக்கான சொற்பொழிவைத் தொல்லியல் அறிஞர் திரு சொ.சாந்தலிங்கம் அவர்கள் நிகழ்த்தினார். அது பற்றிய ஒரு பதிவு இங்கே.

**பாண்டியர் வரலாறு:**

பாண்டியர் வரலாற்றைச் சரியாகக் கணிக்க இயலாதவாறு குழப்பமே காணப்படுகிறது. பாண்டியர் பற்றிய வரலாற்றை ஓரளவு 10-ஆம் நூற்றாண்டு வரையிலும் நிரல் படுத்தலாம். ஆனால், பிற்காலப் பாண்டியர் வரலாற்றைத் தெளிவுற நிரல் படுத்துவது கடினம். காரணம், பாண்டிய அரசர்கள் நாற்பத்தைந்து பேர். அவர்களின் பெயர்களோ ஆறு பெயர்களுக்குள் அடக்கம். வல்லப பாண்டியன், விக்கிரம பாண்டியன், வீர பாண்டியன், பராக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியன், சுந்தர பாண்டியன் என்னும் இந்தப் பொதுப்பெயர்களிலேயே மேற்சொன்ன நாற்பத்தைந்து பாண்டியர்களும் குறிப்பிடப்படுகிறார்கள். இந்த அரசர்களுக்குள் இருக்கும் உறவு, ஆட்சியில் இருப்பவர் யார் என்பன பற்றித் தெரிந்துகொள்வது கடினம். கல்வெட்டுகளில் உள்ள குறிப்புகளிலிருந்து -குறிப்பாகக் கோள் நிலைக் குறிப்புகளின் துணையோடு - கல்வெட்டு அறிஞரும் பொறியாளருமான திரு. குடந்தை சேதுராமன் அவர்கள் பாண்டியரை ஓரளவு வரிசைப்படுத்தியுள்ளார்.

**பாண்டியநாட்டுப் பழமை:**

பாண்டிய நாடே பழம்பதி என்னும் தொடர் பாண்டிய நாட்டுப்பழமையைச் சொல்லும். வரலாற்றுக்காலத்துக்கு முன்னரே பாண்டியர் வாழ்ந்திருப்பினும், அவர்களைப் பற்றிய குறிப்புகள் அசோகனின் பாறைக்கல்வெட்டிலிருந்துதான் தொடங்குகின்றன. கி.மு. 300க்கு முன்னரே

மதுரையில் பாண்டியர் ஆட்சி இருந்துள்ளது. கி.மு. 300 தொடங்கி, கி.பி. 1700 வரை தொடர்ந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் ஆட்சியில் இருந்த மரபு பாண்டியர் மரபு.

**கொங்குநாட்டின் வணிக வளம்:**

கொங்குநாட்டின் வணிக வளமே, பெரிய அரசர்கள் கொங்கு நாட்டைக் கைப்பற்றக் காரணம் ஆகும். உரோமானிய வணிகர்கள் கொங்கு வழியே தமிழகத்தில் வணிகம் மேற்கொண்ட வரலாறு அனைவரும் அறிந்ததொன்று. கொங்கு நாட்டில், கத்தாங்கண்ணி, கரூர், கலயமுத்தூர் ஆகிய இடங்களில் கொல்லிப்புறை, மாக்கோதை, கொல்லிரும்பொறை ஆகிய பெயர்களமைந்த உரோமானிய நாணயங்கள் கிடைத்துள்ளன. கி.மு. ஆறாம் நூற்றாண்டிலேயே தமிழர்கள் எழுத்தறிவு பெற்றிருந்தார்கள் என்பதைக் கொடுமணலில் கிடைக்கப்பெற்ற பானை ஓட்டு எழுத்துகளிலிருந்து அறிகிறோம்.

**கொங்கு நாடும் பாண்டியரும்:**

நாடு பிடிக்கும் பேராசை எல்லா அரச மரபினர்க்கும் இருந்த ஒரு பொது இயல்பு. சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு ஆகிய தனி நாட்டரசர்கள் போல் கொங்குநாட்டுக்குரிய தனி அரசர்கள் இருந்ததில்லை. மூவேந்தர்களுமே, பல்வேறு காலகட்டங்களில் கொங்குநாட்டை அடிப்படுத்த முயன்றார்கள். பின்னாளில், போசளர்களும் முயன்றுள்ளனர். கொங்கு நாட்டை ஆட்சி செய்த கொங்குப்பாண்டியர் பற்றிய குறிப்பு பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் முதன்முதலாகக் காணப்படுகிறது. பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் பாண்டியர் தொண்டைமான் பற்றிய குறிப்புள்ளது. பொற்பனைக்கோட்டை என்னும் ஊரின் நடுகல் கல்வெட்டும், பிராமிக்கல்வெட்டும் கொங்கர் பற்றிக் கூறுகின்றன. மேற்படி நடுகல் கல்வெட்டுக் குறிப்பே தமிழகத்தில் பாண்டியர் பற்றிய முதற்குறிப்பு எனலாம்.

சங்ககாலப் பாண்டியர்கள் கொங்குப்பகுதியில் ஆதிக்கம் செலுத்தியது பற்றியோ அல்லது கொங்கு நாட்டுடன் சங்ககாலப் பாண்டியர் கொண்டிருந்த தொடர்பு பற்றியோ சான்றுகள் எவையுமில்லை. 7-ஆம் நூற்றாண்டு முதல் 9-

ஆம் நூற்றாண்டு வரையிலான பக்தி மறுமலர்ச்சிக் கால இலக்கியங்களில் பாண்டியர் குறிப்புகள் உள்ளன. கூன்பாண்டியனின் மகன் கோச்சடையன். அவனது ஆட்சிக்காலத்தில் (கி.பி. 700-738) கொங்குப்பகுதியைக் கைப்பற்றியிருக்கவேண்டும். வேள்விக்குடிச் செப்பேட்டில் இவன் "கொங்கர் கோமான் கோச்சடையன்" என்று குறிப்பிடப்பெறுகிறான். இவனுடைய மகன் இராசசிம்மன் மழகொங்கத்தை அடிப்படுத்தினான் என்னும் குறிப்புள்ளது. மழகொங்கம் என்பது கொல்லிப்பகுதியின் கொல்லி மழவர் தொடர்பானது. கொல்லிப்பகுதி சேர மரபின் அதியமான் ஆண்ட பகுதி. பல்லவர்களும், சேரர்களும் அதியரோடு சேர்ந்து பாண்டியனை (இராசசிம்மனை) எதிர்த்துப் போரிட்டனர். அவர்களை வென்று பாண்டியன் மழகொங்கை ஆட்சி செய்தான். மழகொங்கில் பாண்டியர் ஆட்சி கி.பி. 730 முதல் கி.பி. 768 வரை நிலவியது. அதன்பின்னர் தொடர்ந்து பாண்டியர் ஆட்சி நடைபெற்றதற்குச் சான்றுகள் இல்லை.

ஜடில பராந்தகன் என்னும் பராந்தக நெடுஞ்சடையன் கி.பி. 768 முதல் கி.பி. 815 வரை ஆட்சி செய்த பாண்டிய அரசன். இவனுக்குத் தளபதியாகவும் அமைச்சனாகவும் திகழ்ந்தவன் மாறன் காரி என்பவன். இந்த மாறன் காரி, கங்கரை வென்று கங்க இளவரசி பூசுந்தரியைப் பராந்தக நெடுஞ்சடையனுக்கு மணமுடித்தான். பராந்தக நெடுஞ்சடையன், காஞ்சிவாய்ப் பேரூரில் குன்றமன்னதோர் கோயிலை (விண்ணகரத்தை) எழுப்பினான் என்பது வரலாற்றுக் குறிப்பு. கி.பி. 1190 வரை பாண்டிய நாடு சோழரின் ஆட்சியின் கீழ் இருந்தது. இக் காலகட்டத்தில், பாண்டியருக்கும் கொங்குக்கும் தொடர்பில்லை. 1190 முதல் 1216 வரை முதலாம் சடையவர்மனின் ஆட்சி பாண்டியநாட்டில் அமைந்தது. 1216 முதல் 1238 வரை ஆட்சி செய்த முதலாம் மாறவர்ம சுந்தர பாண்டியன் கொங்குப்பகுதியில் ஆதிக்கம் செலுத்தியிருக்கலாம். இவன் "அடல் மன்னன்" என்று குறிப்பிடப்பெறுகிறான். இவன், கொங்குப்பகுதியில் தென்கொங்கு, வடகொங்கு ஆகிய இரு பகுதிகளின் அரசர்கள் தமக்குள் போரிட்டுக்கொண்டிருந்தபோது இருவரையும் பாண்டிநாட்டுக்கழைத்துப் பேசி அவர்களுக்குள் இணக்கத்தை ஏற்படுத்தி இருவரையும் தனித்தனியே ஆட்சி செய்ய வைத்தான்.

முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1253-1283) என்பவன், தெலுங்குச் சோழரையும், கொங்கையும் ஈழத்தையும் வென்றதாகக் குறிப்புள்ளது. அவனைத் தொடர்ந்து இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் கொங்கில் ஆட்சி செய்தான். இவன் இராசகேசரி என்னும் பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டவன். தொடர்ந்து கி.பி. 1283 முதல் கி.பி. 1296 வரை விக்கிரம பாண்டியன் கொங்குப்பகுதியில் ஆட்சி செய்தான். இராசிபுரத்துக் கல்வெட்டொன்று இந்த விக்கிரம பாண்டியனைக் குறிப்பிடுகிறது.

**கொங்கில் பாண்டியர் பணிகள்:**

கல்வெட்டுகளில் பல்வேறு செய்திகளில் பாண்டிய நாட்டவர் கொங்குப்பகுதியில் செய்த பணிகள் பற்றிக் கூறுகின்றன. ஆனைமலை ஆனைக்கீசுவரர் கோயிலில் உள்ள சுந்தரபாண்டியன் கல்வெட்டு, பாண்டிமண்டலத்தின் இருஞ்சோணாடு (இருஞ் சோழ நாடு) என்னும் நாட்டுப்பிரிவைச் சேர்ந்த மண்ணையார் கோட்டையில் இருக்கும் சேனாபதி சுந்தரப் பெருமாள் வாழ்வித்தாரான பல்லவராயர் என்பவர் ஆனைக்கீசுவரர் கோயிலில் பெற்ற நாச்சியார் என்னும் அம்மன் கோயிலை அமைத்தார் என்று கூறுகின்றது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் இருஞ்சோழ நாடு என்னும் பாண்டியப்பகுதி தற்போதுள்ள சாத்தூர்ப் பகுதியாகும். அடுத்து, அவிநாசிக் கோயிலில் உள்ள சுந்தரபாண்டியன் கல்வெட்டு, பாண்டிமண்டலத்துத் திருக்கானப்பேற்றைச் சேர்ந்த அதளையூர் நாடாள்வான் என்பவன் சந்தியா தீபம் திருவிளக்கொன்று எரிப்பிக்கக் காசுக்கொடை அளித்துள்ளான் என்று கூறுகின்றது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் திருக்கானப்பேறு என்னும் பாண்டியப்பகுதி தற்போதுள்ள காளையார் கோயில் பகுதியாகும். பேரூர்க் கோயிலில் உள்ள வீரபாண்டியன் கல்வெட்டு, பாண்டிமண்டலத்து இரணிய முட்ட நாட்டுச் சிறுபாலை என்னும் ஊரைச் சேர்ந்த பெரியான் சொக்கன் என்பவன் சந்திரசேகரர் செப்புத்திருமேனியை எழுந்தருளுவித்து, இந்தத் திருமேனிக்கு அமுதுபடி செய்ய, ஸ்ரீயக்கி பழஞ்சலாகை ஆனை அச்சு என்னும் காசு எட்டினைக் கொடையாக அளித்துள்ளான் என்று கூறுகின்றது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் இரணியமுட்டநாடு என்னும் பாண்டியப்பகுதி தற்போதுள்ள அழகர்கோயில் பகுதியாகும். இடிகரை வில்லீசுவரர் கோயிலில் உள்ள சுந்தரபாண்டியன் கல்வெட்டு,

பாண்டிமண்டலத்து மிழலைக்கூற்றத்தில் ஓர் ஊரைச் சேர்ந்த பெருமாள் என்பவர் அமுதுபடிக்காகப் பதினைந்து காசுகள் கொடையளித்துள்ளார் என்று கூறுகின்றது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் மிழலைக்கூற்றம் என்னும் பாண்டியப்பகுதி தற்போதுள்ள அறந்தாங்கிப் பகுதியாகும்.

**பாண்டி நாட்டில் கல்வி:**

மேற்படிக் கல்வெட்டுச் செய்திகளில் குறிப்பிடப்பெறுகின்ற கொடையாளர்கள் அனைவரும் பாண்டிய நாட்டில் பெரிய பதவிகளில் அதிகாரிகளாகப் பணியில் இருந்தவர்களாக இருக்கவேண்டும். பாண்டிய நாட்டில் குறிப்பிட்ட சில ஊர்களில் கல்வி மேம்பட்ட நிலையில் அமைந்திருக்கவேண்டும் என்பது புலப்படுகிறது. இந்த ஊர்களில் கல்வி கற்று அரசியல் நிருவாகப் பயிற்சி பெற்றவர்கள் பாண்டிய அரசில் அதிகாரிகளாக இருந்துள்ளனர் என்று அறியப்படுகிறது. பாண்டி நாட்டுக் கல்வெட்டுகளில் காணப்படும் முத்தூற்றுக் கூற்றம், மிழலைக் கூற்றம், கரவந்தபுரம், திருத்தங்கல், அண்டநாடு ஆகிய பகுதிகள் இவ்வகை ஊர்களே. (கட்டுரை ஆசிரியர் குறிப்பு: ஆய் அரசன் கருநந்தடக்கன் ஆட்சியில், பார்த்திவசேகரபுரம் என்னும் ஊரில் காந்தளூர்ச் சாலையை ஒத்த ஒரு கல்விச்சாலை இருந்தது என்று செப்பேட்டுச் செய்தி ஒன்று கூறுவது இங்கு கருதத்தக்கது. இவ்வகைச் சாலைகளில் பயின்றவர்கள் மூவேந்த வேளான் போன்ற பெரும் பட்டப்பெயர்களோடு அரசுப்பதவியில் இருந்தார்கள் என்பது கல்வெட்டுகள் சொல்லும் செய்தியாகும்).

**இடைக்காலச் சமூக நிலை:**

இடைக்காலத்தில் சில சமுதாய மக்களுக்குச் சில உரிமைக் குறைபாடுகள் நிலவின. 7-ஆம் நூற்றாண்டில் பல்லவர் கலத்தில் தொடங்கிப் பிராமணர்க்கு இருந்த உரிமைகள் மற்ற சமுதாயத்தினர்க்கு இருந்ததில்லை. உரிமைக் குறையால் ஏற்பட்ட உயர்வு-தாழ்வு வேறுபாடுகள் காரணமாகக் கி.பி. 1300-க்குப் பிறகு பல்வேறு சமூகக் குழுக்கள் எழுந்தன. சித்திரமேழியார், முத்தரையர், கம்மாளர் ஆகிய குழுவினர் தனித்து இயங்கித் தம் உரிமைக் குறைகளைக் களையும் முயற்சியில் ஈடுபட்டனர். மாயூரம் அருகில்

ஆலங்குடியில் கம்மாளர்கள் மாநாடு நடத்தியுள்ளனர். கொங்கு நாட்டு உடுமலைப்பகுதியில் உள்ள கடத்தூர்க் கோயில் கல்வெட்டில் பாண்டியர் ஆட்சியில் கம்மாளர்களின் முறையீட்டில், அரசன் அவர்களுக்குச் சில உரிமைகளை வழங்கியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. தங்கள் குடும்பத்தில் நிகழும் நன்மை தீமைகளின்போது இரட்டைச் சங்கு ஊதுதல், பேரிகை உள்ளிட்ட இசைக் கருவிகளைக் கொட்டுதல், வீடுகளுக்குச் சாந்திட்டுக்கொள்ளுதல், காலில் செருப்பணிதல் ஆகியவை அந்த உரிமைகள். (ஒரு குறிப்பிட்ட அளவு பொன்னை அரசனின் சரக்கில் - கருவூலத்தில் - செலுத்திய பின்னரே அரசன் இந்த உரிமைகளை வழங்கினான் என்பர் தொல்லியல் அறிஞர் திரு. பூங்குன்றன் அவர்கள்). மக்களிடையே அடிமை முறை இருந்தது. கோயிலுக்கு அடிமையராக விளங்கிய தேவரடியார்கள் ஒரு குறிப்பிட்ட குலத்தவர் மட்டுமே அல்லர். கம்மாளர்களிலிருந்தும் தேவரடியார் வந்திருக்கிறார்கள்.

**கொங்கு நாட்டில் பாண்டியர் தடயங்கள்:**

கொங்கு நாட்டில் பாண்டியர் காலக் கோயில்கள் கூத்தம்பூண்டி, கொளிஞ்சிவாடி, விஜயமங்கலம் (நாகேசுவரர் கோயில்) சேவூர் (சுந்தர பாண்டிய விண்ணகரம்), பேரூர் (பெருமாள் கோயில்) ஆகியன. பாண்டியர் கோயில் கலைப்பாணியில் குறிப்பிடத்தக்கக் கூறாக விளங்குவது அக்கோயில்களில் உள்ள தேவ கோட்டங்கள். அவற்றில் கோட்டச் சிற்பங்கள் இரா. பாண்டியர் கலைப்பாணிச் சிற்பங்களில் ஒற்றைக் கழுத்தணி மட்டுமே காணப்படும். கொங்கு நாட்டில் உள்ள கொடுமுடி, “பாண்டிக் கொடுமுடி” என்றே வழங்குகிறது. இங்குள்ள கோயிலில், திரிபுராந்தகர் செப்புத்திருமேனியும், சதுர தாண்டவ நடராசர் செப்புத்திருமேனியும் பாண்டியர் காலச் செப்புத்திருமேனிகளாகும். காலிங்கராயன் கால்வாய் பாண்டியரின் தடயங்களில் ஒன்று. அண்மையில், கோவை வேடபட்டிக் குளத்தில், நின்ற நிலை இரட்டை மீன்களும் செண்டும் உள்ள பாண்டியர் சின்னம் கொண்ட மதகுக் கற்றூண்கள் கண்டறியப்பட்டன.

கொளிஞ்சிவாடிக்கோயில் - பாண்டியர் காலம்



கூத்தம்பூண்டிக் கோயில் - பாண்டியர் காலம்










திரிபுராந்தகர் - செப்புத்திருமேனி - கொடுமுடி

**பாண்டியர் ஆட்சியின் இறுதி:**

தமிழகத்தில் நெடியதொரு காலம் தம் மரபைக் காட்டிய ஓர் அரசு எனில் அது பாண்டிய அரசமரபேயாகும். 13-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி அல்லது இறுதிப்பகுதியே பாண்டியர் ஆட்சியின் முடிவு.

---

தொடர்பு: து.சுந்தரம்

doraisundaram18@gmail.com

கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.

**அலைபேசி** : 9444939156.

## 15. பாலமலை

*—து.சுந்தரம்*

**முன்னுரை:**

நண்பர் துரை.பாஸ்கரன், அவ்வப்போது கள ஆய்வு மேற்கொள்ளச் சில இடங்களைப் பரிந்துரை செய்வது வழக்கம். அவ்வாறான இடங்களுள் ஒன்றுதான் பாலமலை. 16-01-2018 அன்று பாலமலைக்குப் பயணப்பட்டோம். அது பற்றிய ஒரு பதிவு இங்கே.

**பாலமலை-இருப்பிடம்:**

கோவை-மேட்டுப்பாளையம் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள ஊர் பெரியநாயக்கன்பாளையம். பெரியநாயக்கன்பாளையம் என்றதுமே நம் நினைவுக்கு வருகின்றவர் தி.சு. அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்களே. வழக்கறிஞர், விடுதலைப்போராட்ட வீரர், காந்தியவாதி, கல்வியாளர், அரசியல்வாதி எனப் பன்முகம் கொண்ட, கொங்குநாடு பெருமைகொள்ளும் பெரியார்களுள் ஒருவர். அவர் நிறுவிய இராமகிருஷ்ண வித்தியாலயத்துக்கு அருகிலிருந்து பிரியும் ஒரு கிளைச்சாலை வழியே கோவனூர் என்னும் ஊரை அடைந்தால் அங்கிருந்து செல்லும் மலைப்பாதை பாலமலைக்குச் செல்கிறது.

நண்பரும் நானும் பேருந்து ஒன்றில் பயணப்பட்டுப் பெரியநாயக்கன் பாளையத்திலிருந்து கோவனூர் சென்றோம். கோவனூர் என்னும் ஊர் பழம் வரலாற்றுடன் தொடர்புடையது. இருளர் என்னும் பழங்குடிகளின் தலைவன் கோவன். இவன் பெயரால் கோவன்புத்தூர் என்னும் கோவை உருவானதாகக் கருதப்படுகிறது. அதே பெயருடைய ஒரு தலைவன் பெயரில் இந்த கோவனூர் வழங்கியிருக்கலாம். ஏனெனில், கோவனூரை அடுத்துள்ள குறிஞ்சி நில மலைப்பகுதிகள் பழங்குடிகள் வாழ்ந்த பகுதிகளாகும்.

கோவனூரிலிருந்து பாலமலை செல்ல வாடகை ஜீப்புகள் நிறைய உண்டு. ஒரு பத்துபேர் கட்டணத்தைப் பகிர்ந்துகொண்டு பயணம்

செய்யும்படியான ஏற்பாடு. கோவனூரிலிருந்து பாலமலை நோக்கிப் போகும் மலைப்பாதை. மலைப்பாதைக்கே உரிய வளைவுகள். பாதையின் இரு மருங்கிலும் மலைச் சரிவுகள். அண்மைக்கால மழைபொழிவின் காரணமாக மலைச்சரிவு மரங்கள் அடர்ந்து பசுமையாகக் காணப்பட்டது. ஓரிரண்டு இடங்களில் மரங்களற்ற பாறைப்பகுதி தொலைவில் வெண்மையாகக் காணப்பட்டது. விழியக்காட்சி எடுக்காதது குறையாகப் பட்டது. ஜீப்புக்குள்ளிருந்து ஒளிப்படம் எடுப்பதற்குக்கூட ஓர் இசைவு கிட்டவில்லை. நேரே கோயிலை அடைந்தபின்னரே ஒளிப்படக் கருவியை வெளியே எடுத்தோம்.

**பாலமலை அரங்கநாதர் கோயில்:**

மலைமேல் ஒரு பெரிய சமதளப்பகுதியில், நான்கு புறமும் மதில் சூழ்ந்து, மூன்று நிலை கொண்ட கோபுரத்துடன் கோயில் காட்சியளித்தது. கோயிலின் முன்புறம் கொங்குப்பகுதிக்கே உரிய கருட கம்பம் என்னும் விளக்குத்தூணுடன் விளங்கும் சிறு மண்டபம். கோயில் மிகப் பழமையானதாகக் கருதப்பட்டாலும், கோயில் கட்டுமானம் அதன் பழமையை ஒரு முந்நூறு ஆண்டுகள் பின்னோக்கிக் காட்டுகிறது எனலாம். கோயிலினுள் கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய பகுதிகளில் கல்வெட்டுகள் எவையும் இல்லை. கொங்குப்பகுதியில், பல இடங்களில், கால்நடை மேய்ப்பின் பின்னணியில் மேய்ச்சலுக்குச் சென்ற ஆநிரைகள் எங்கோ ஓரிடத்தில் தாமாகவே பாலைச் சுரந்து திரும்பியபின் பட்டியில் பால் கறக்க இயலாத நிலையைக் கண்ணுறுவதும், பின்னர், காரணத்தை ஆய்கையில் அந்த ஆநிரைகள் தான்தோன்றி இறையுருவங்களுக்குப் பாலைச் சொரிவதை அறிந்து அவ்விடங்களில் இறைவழிபாடு தொடங்குவதும் ஆன செவிவழிக் கதைகள் நிறைய வழங்குகின்றன. ஒன்றுபோல, எல்லாக்கோயில்களுக்கும் இவ்வகைப் புனைவுப் பழங்கதைகள் (தலபுராணங்கள்) வழக்கில் இருப்பது எண்ணத்தக்கது. இதன் பின்னணியில், கால்நடை வளர்ப்பும், பழங்குடிகளும் இருப்பது, பழங்குடிகளின் இறைவழிபாட்டுத் தலங்களின் தொன்மையை எடுத்துக்காட்டும். பாலமலைக் கோயிலின் தலபுராணத்திலும் மேற்சொன்ன கதை, ஆதிவாசி என்னும் பழங்குடியினர் தொடர்புடன் குறிக்கப்படுகிறது. கருடகம்பத்தில் எழுத்துப் பொறிப்பு:



கருடகம்பத்தூணில்- ஆண்,- பெண்- சிற்பங்கள்

கருடகம்பம் கல்கட்டுமானம் கொண்டது. சிறிய மேடை மண்டபத்தின் நடுவில் கல்லாலான விளக்குத்தூண். நான்கு மண்டபத் தூண்கள். அவற்றில் இரு தூண்களில் ஆண் சிற்பம் ஒன்றும், பெண் சிற்பம் ஒன்றும் காணப்பட்டன. அவை, இந்த கருடகம்ப மண்டபத்தை நிறுவியவர்களாக இருக்கவேண்டும். கருட கம்பக் கட்டுமானத்தில் இவ்வாறு சிற்பங்களை வடிப்பது பெரும்பாலான வழக்கம். இந்தப் புடைப்புச் சிற்பங்களின் வடிவமைப்பு, இந்தக் கட்டுமானம் நாயக்கர் காலத்துக்கும் சற்றே பிற்பட்டது என்பதைக் காட்டியது. விளக்குத் தூணின் அடிப்பகுதிச் சதுரங்களில் சங்கு, சக்கரம் ஆகியன புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. சங்குருவம் செதுக்கப்பட்ட சதுரப்பகுதியில் இரண்டு வரிகளில் எழுத்துகள் காணப்பட்டன. முதல் வரி படிக்கக் கூடியதாக இருந்தது. இரண்டாவது வரியில் எழுத்துகள் புலப்படவில்லை. எழுத்தமைதி பிற்காலத்துக்குரியது. கல்வெட்டின் பாடம் கீழ் வருமாறு:

கருடகம்பத்தில் எழுத்துப் பொறிப்பு

1 **சருவசித்து வரு. சித்தி**

2 **(ரை மீ)**

சருவசித்து என்பது தமிழ் ஆண்டுகளின் சுழற்சி ஆண்டுகள் அறுபதில் ஒன்றான "சர்வஜித்து" என்பதன் திரிபு. "சர்வஜித்து" ஆண்டு, 1887 அல்லது 1947 ஆகிய ஆங்கில ஆண்டுகளோடு பொருந்தும். கருட கம்பத்தின் கட்டுமானப் பழமை, கல்வெட்டின் எழுத்தமைதி ஆகியவற்றைக் கொண்டு இதன் காலம் 1887 எனலாம்.



**கொங்கும் பழங்குடி மரபும்:**

குறிஞ்சி நிலப்பகுதியைச் சூழ்ந்த காடும் காடு சார்ந்த முல்லைநிலப்பகுதிகள் நிறைந்தது கொங்கு நாடு. சங்க காலம் தொட்டுப் பல்வேறு குடிகளின் வாழிடப்பகுதியாகக் கொங்குநாடு திகழ்ந்துள்ளது. வேட்டைத் தொழிலையும், கால்நடை வளர்ப்பையுமே முதன்மையாகக் கொண்ட கொங்கு மக்கள், மழை நீரைச் சார்ந்து புன்செய்ப் பயிர்களை விளைவித்தும் வாழ்ந்துள்ளனர். தொல்குடிகள் குழுக்களாகவும், பின்னர் குடிகள் வளர்ச்சியுற்ற நிலையில் வேளிர் தோற்றமுமே இங்கு நிகழ்ந்த அரசியல். அடுத்துள்ள மன்னன், (முடியுடை) வேந்தன் ஆகிய நிலைகள் கொங்குப்பகுதியில் சங்க காலந்தொட்டு அமையவில்லை. இடைக்காலத்தில் சோழரின் ஆளுகையில் கொங்கு நாடு வந்தபின்னரே, சோழரின் கிளை அரசர்களான கொங்குச் சோழரின் ஆட்சி இங்கு நிலைபெற்றது. அவர் காலத்தில்தான், நன்செய்ப் பயிர் வேளாண்மை இடம்பெற்றுப் பழங்குடிகள் வேளாண் சமூகத்துடன் இணைக்கப்பெற்றனர். அதுவரை வழக்கிலிருந்த, பழங்குடிகளின் பழந்தெய்வ நாட்டார் வழிபாடு சோழர்காலப் பெருந்தெய்வ வழிபாட்டுடன் இணைக்கப்பெற்றது. இதன் அடிப்படையிலேயே, பாலமலைப் பழங்குடிகள் வழிபட்டு வந்த சிறு தெய்வ வழிபாட்டிடம், பின்னாளில்

பெருந்தெய்வ வழிபாட்டுக் கோயிலாக உருபெற்றிருக்கக் கூடும் என்று கருத இடமுண்டு. எனவேதான், பாலமலை அரங்கநாதர் கோயிலின் தோற்றம் குறித்த வரலாற்றில் பாலமலைப் பழங்குடிகளையும் இணைத்துக் கூறுகிறார்கள். அவர்கள் (பழங்குடிகள்), அரங்கநாதரின் பாதுகாவலர்கள் என்று கருதப்படுகின்றனர். கோயில் திருவிழாவின்போது அவர்களுக்குத் தனிக் கட்டளைகள் இருப்பதும் மேற்சொன்ன காரணத்தினால்தான். பழங்குடிகளைத் தற்போது ஆதிவாசிகள் என அழைக்கின்றனர்.

**தெப்பக்குளம்:**

கோயில் அமைந்துள்ள சமதளத்தை அடுத்து, பள்ளமான ஒரு பாதை கீழிறங்கிச் செல்கிறது. அவ்வழியே இருபது நிமிடப்பயணமாக இறங்கிச் சென்றால் ஓர் அழகான தெப்பக்குளம் உள்ளது. வழியில் பாதையெங்கும் துண்டுக் கற்களைப் பாவியுள்ளனர். கற்கள் பாவப்பட்ட பாதையும், அதன் இருமருங்கிலும் இருக்கும் காட்டுச் செடிகளும் காண அழகானவை. தெப்பக்குளம் பழங்காலக் கட்டுமானத்துடன் தோற்றமளிக்கிறது. குளத்தின் நீர் தேக்கப்படுகின்ற அடிப்பகுதி ஒரு நீண்ட சதுர வடிவில் அமைக்கப்பட்டு அதன் தலைப்பகுதி (தென்பகுதி) மட்டும் வட்டத்தின் வில் வடிவத்தில் வளைவாகக் கட்டப்பட்டு அழகான தோற்றத்தைக் கொண்டுள்ளது. வடபகுதிக்கு மிக அருகில் ஒரு மண்டபம் (நீராழி மண்டபம்?) உள்ளது. நீர்த்தேக்கத்திலிருந்து கிளம்பி நான்கு பக்கங்களிலும் படிக்கட்டுகள் அடுக்கடுக்காக அமைக்கப்பட்டு மேலே நிலப்பரப்பில் சுற்றுச் சுவர்களுடன் குளத்தின் கட்டுமானம் நேர்த்தியாக உள்ளது. சுற்றுச் சுவர்களின் மூன்று பக்கங்களில் மூன்று திறப்புகள், கீழே இறங்குவதற்காக. குளத்தின் உட்பகுதியில் வடமேற்கு மூலையில் ஆறு தூண்களோடு ஒரு மண்டபம். அதில் ஏழு கன்னிகளின் சிலைத்தொகுப்பு ஒன்று காணப்படுகின்றது. குளத்துக்கு வெளியே வட கரையில், பன்னிரண்டு தூண்களுடன் சற்றுப் பெரிதாக ஒரு மண்டபம் உள்ளது. மண்டபங்கள் இரண்டும் மக்கள் புழக்கமின்றிப் பாழடைந்துள்ளன. மொத்தத்தில், தெப்பக்குளம் அதன் பழந்தோற்றத்துடன், நூறு அல்லது நூற்றைம்பது ஆண்டுப்பழமையை நினைவூட்டுகிறது. அந்தக் காலகட்டத்தில், குளத்தின் பயன்பாடு மிகுதியாக இருந்திருக்கும்.

மண்டபத்துள் கன்னிமார் சிற்பம்


கற்கள் பாவிய அழகான பாதை


தெப்பக்குளம்


குளத்துக்கு வெளியே- மண்டபம்


குளத்துக்கு உள்ளே - மண்டபம்


மண்டபத்துள் கன்னிமார் சிற்பம்

**சித்தர் பீடம்:**

தெப்பக்குளத்தைப் பார்த்துவிட்டுத் திரும்பும் வழியில் காட்டுச் செடிகளையும் பறவைகளின் ஒலிகளையும் பார்த்துக் கேட்டு மகிழ்ந்தோம். நண்பர் தாவரவியல் அறிந்தவர். தம் இளமைக் காலங்களில், மலைப்பகுதிகளில் மலையேற்றப் பயிற்சிகளில் (TREKKING) பங்கு கொண்டவர். எனவே, அவர் "இது புல்புல் பறவையின் ஒலி; இது மூக்குத்திப்பூ; இதன் பெயர் தொ3ட்3ட3 தும்பை." என்றெல்லாம் எனக்கு அறிமுகப்படுத்தி வைத்ததில் வியப்பில்லை.



தொட்ட தும்பை - பூவுடன்



மூக்குத்திப்பூ



சித்தர் பீடம்

மீண்டும் கோயில் இருக்கும் சமதளப்பகுதிக்கு வந்ததும், அங்கிருந்த கிருஷ்ணானந்த சித்தர் பீடத்தைப் பார்த்தோம். நீலகிரியில் ஹுலிக்கல் கிராமத்தில் 1913-இல் பிறந்து, இளம் வயதில் மனம் துறவு வழியை நாட, இமயமலைப்பகுதியில் முப்பது ஆண்டுகளைக் கழித்துக் கிருஷ்ணானந்தா என்னும் பெயரில் திரும்பிவந்து இந்தப் பாலமலையில் தனிமைத் தவத்தில் தங்கியவர் 1983-இல் மறைந்தார் என்று இவரது வாழ்க்கைக் குறிப்பு கூறுகிறது. இவரது பிறப்பிடம் நீலகிரியாதலால், நீலகிரியைச் சேர்ந்த படுக இனத்துத் தன்னார்வலர் சிலர் இந்த சித்தர் பீடத்தைப் பேணி வருகின்றனர். ஓர் அறையில் சித்தரின் படமும், மற்றுமோர் அறையில் சித்தரின் சிற்ப உருவமும் வழிபாட்டில் உள்ளன. தரைக்குக்கீழ் நிலவறையில் தியான அறையும் உள்ளன. நுழைவு வாயிற்சுவரில் கன்னட எழுத்துகள் புலப்பட்டன. கன்னட எழுத்துகளைப் படிக்க முடியும் என்னும் ஆர்வத்தால் அருகில் சென்று பார்த்தேன். அவ்வெழுத்துகள் கன்னட எழுத்துகளின் வடிவங்களைப் போலிருந்தாலும் எந்த எழுத்தும் முழுதாகக் கன்னட எழுத்தோடு பொருந்தவில்லை. அங்கிருந்த படுகப் பெண்மணி, இந்த எழுத்துகள் படுக மொழியின் எழுத்துகள் என்று கூற, வியப்பேற்பட்டது. காரணம், துளு, படுகு(படுக), குடகு, கொங்கணி ஆகிய மொழிகளுக்குத் தனி எழுத்துகள் இல்லை; கன்னட எழுத்தையே பயன்படுத்துகின்றனர். இந்த ஐயத்தைக் கேட்டபோது அப்பெண்மணி, அண்மையில் ஓலைச்சுவடிகளிலிருந்து கண்டெடுக்கப்பட்டதாகக் கூறி இங்குவந்த ஒருவர் இந்த (படுக) எழுத்துகளால்,



**படுக மொழியின் எழுத்துகள்**

**ஓம்**
**பூஜ்ய ஸ்ரீ**
**குரு கிருஷ்ணானந்தய**
**நமஹ**

என்று எழுதிச் சென்றார் என்னும் செய்தியைச் சொன்னார். படுக மொழிக்கு எழுத்துகள் கண்டறியப்பட்டது ஆய்வுக்குரியது.



சித்தர்

**இருளர் பதிகள்:**

கோயிலின் கோபுர வாசலில் இருளர் குடியைச் சேர்ந்த ஒரு இணையரைப் பார்த்துப்பேசினோம். அவர்களிடம் பேசியதில் கிடைத்த செய்திகள்: பாலமலையைச் சுற்றிலும் ஏழு மலைக்கிராமங்கள் உள்ளன. அவை, குஞ்சூர்பதி, பெரும்பதி, பெருக்கைப்பதி, பெருக்கைப்பதிப்புதூர், மாங்குழி, பசுமணி, பசுமணிப்புதூர் ஆகியன. மேற்சொன்ன இணையர் குஞ்சூர்பதியைச் சேர்ந்தவர்கள். கணவர் அரங்கசாமி; மனைவி காளியம்மா. கணவர் 75 அகவையைக் கடந்தவர்; மனைவி 60 அகவையைக் கடந்தவர். மனைவி கோயில் வாசலில் பூ விற்பவர். கணவர் வேளாண் கூலி. இந்த ஏழு மலைக்கிராமங்களிலும் சேர்ந்து சற்றொப்ப ஆயிரம் இருளர் குடியினர் வாழ்கின்றனர். இவர்களின் எல்லாத் தேவைகளுக்கும் பாலமலையே மையம். குடிமைப் பொருள் வழங்கும் அங்காடியும் இங்கு பாலமலையில்தான். பாலமலைக் கோயிலும், கோயில் விழாக்களும் இவர்களுக்கு மேன்மையானவை; முதன்மையானவை. மேற்சொன்ன இணையரின் இரண்டாம் தலைமுறைப் பேத்தி, கல்லூரியில் படிக்கிறாள். கொங்குச்சோழர்

காலத்திலிருந்து (12-ஆம் நூற்றாண்டு முதல்) இன்றுவரையிலும் நிகழ்ந்த மாற்றம் இவ்வளவுதானா?


குஞ்சூர்பதி அரங்கசாமி குஞ்சூர்பதி காளியம்மா

குஞ்சூர்பதி காளியம்மாவிடம் அவர் பேசும் மொழி யாது எனக் கேட்டபோது, அவர் படுக மொழி என்று சொன்னார். படுகரின் மொழி படுகு. கோவைக்கொங்குக்கும் நீலகிரிக்கும் வட பகுதியாய் அமைந்த கருநாடப் பகுதியிலிருந்து புலம் பெயர்ந்தவர்களின் மொழி வடுக (படுக) மொழியாயிற்று. ஆதலால், தமிழ்ப்புலத்தைச் சேர்ந்த இருளருக்குத் தமிழை வேராகக் கொண்டுள்ள ஒரு மொழிதானே இருக்கவேண்டும் என்று ஒரு கேள்வி எழுகிறது. இது ஆய்வுக்குரியது. காளியம்மா, அவர் மொழியைப் பேசிக்காண்பித்தபோது, கன்னடம் கலந்த படுக மொழியை என்னால் அடையாளம் காண முடிந்தது. ஆனால், தமிழின் "அம்மா" என்பதற்கு அவர் மொழியில் "அக்3கா3" என்றும், "அப்பா" என்பதற்கு அவர் மொழியில் "அம்மா" என்றும் அவர் சொன்னது மிகவும் மாறுபட்டுத் தோன்றியது.

**குருவரிஷி மலை - குருடி மலை:**

பாலமலைக் கோயிலிலிருந்து பார்த்தால் எதிரே நெடிதுயர்ந்த ஒரு மலை காணப்படுகிறது. இம்மலையில் தங்கியிருந்த முனிவர் ஒருவர் பெயரால் குருவரிஷி மலை என்றழைக்கப்பட்ட மலை, காலப்போக்கில் மருவி குருடிமலை என்று வழங்குவதாயிற்று. இந்த மலையில், பெரிய பாறை போல அமைந்திருக்கும் ஓர் உச்சி, மேல்முடி என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. இந்த மேல்முடியிலும் அரங்கநாதருக்கு ஒரு கோயில்

அமைந்துள்ளது. இது பற்றிச் சென்ற 2017-ஆம் ஆண்டு "தினமணி" நாளிதழ் வெளியிட்ட சிறப்பிதழில் வெளியான செய்திப்பகுதியை இங்கு தருவது பொருத்தமாக இருக்கும்.

குருடிமலைத் தோற்றம் - பாலமலையிலிருந்து



**மேல்முடி அரங்கநாதர் கோயில் - "தினமணி" நாளிதழ்ச் செய்தி:**

கடல் மட்டத்திலிருந்து 3500 அடி உயரத்தில் உள்ள மேல்முடியைப் பாலமலை அடிவாரத்திலிருந்து நான்கு மணி நேர நடைப்பயணம் மூலம் அடையலாம். இங்கும் அரங்கநாதர் கோயில் உள்ளது. பாறைப்படிக்கட்டுகள். வழியில் தண்ணீர் சோலை, வழுக்குப்பாறை ஆகிய இடங்களில் அரிய மூலிகைகள், செடிகள். கோயில் கட்டுமானம் நடைபெற்று வருகிறது. கோயிலுக்கருகே உள்ள **"மல்லாண்டைப் பாறை"**யினைப் பழங்குடிகளும் மற்றவரும் வணங்குகின்றனர். வேளாண்மைப் பணி தொடங்கும் முன் இந்த "மல்லாண்டைப்பாறை"யை வழிபடுவது மரபு. (கட்டுரை ஆசிரியர் குறிப்பு : வேளாண் மரபில் மல்லாண்டை வழிபாடு பற்றிக் கட்டுரை ஆசிரியர் எழுதிய கட்டுரை - "தாசபாளையத்தில் மல்லாண்டை" என்னும் தலைப்பில் உள்ளது. வெளியான நாள் 20-12-2015.) இக்கோயிலிலிருந்து வடக்கே ஒரு மணி நேர நடைப்பயணத்துக்குப் பின்னர் நாம் அடையும் காட்சி **முனை "நாடுகண்ட போலி"** என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. ஆங்கிலேயர்

ஆட்சியின்போது உருவாக்கப்பட்ட காஃபித்தோட்டம் இன்றும் மேல்முடியில் உள்ளது.

**குருவரிஷி மலையும் "லாம்டன் உச்சி" யும் (LAMBTON'S PEAK):**

குருடிமலை என்று தற்போது வழங்கும் குருவரிஷிமலை, ஆங்கிலேயர் காலத்தில் (1800களில்) LAMBTON'S PEAK என்னும் பெயரில் வழங்கிற்று. வரலாற்றுச் செய்திகளைப் பதிவிடும் - குறிப்பாகச் சென்னை பற்றிய வரலாற்றுச் செய்திகளைப் பதிவிடும் - எஸ்.முத்தையா அவர்கள் 2002-ஆம் ஆண்டு ஜூன் 3 "ஹிந்து" நாளிதழில் பதிவிடும்போது வரலாற்றாளர் தியடோர் பாஸ்கரன் அவர்கள் எழுதிய செய்தியை மேற்கோள் காட்டுகிறார். அது பின்வருமாறு:

லாம்டன் உச்சி



(இணையத்திலிருந்து)

"கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் நோக்கிப் பயணம் செய்யும்போது, ஒரு மலைத்தொடர் கண்ணில் படும். அதன் உச்சி (சிகரம்) ஒரு முக்கோண வடிவில் தோற்றமளிப்பதையும் பார்க்கலாம். இதுதான் "லாம்டன் உச்சி". இங்கு நான் என் குழந்தைகளுடன் மலை ஏறிச் சென்றுள்ளேன். அப்போது ஒரு மலைச்சரிவு முழுதும் வெள்ளை நிற மலர்கள் பூத்த மரங்கள் தென்பட்டன. அது ஒரு கைவிடப்பெற்ற

தேயிலைத்தோட்டம். பிரிட்டிஷார் அந்த மலைத்தொடரை "லாம்டன் மலைத்தொடர்" என்ற பெயரால் குறித்தார்கள். 19-ஆம் நூற்றாண்டின் இறுதி வரை இந்த மலைத்தொடரில் புலிகளும், சிறுத்தைகளும், காட்டெருதுகளும் மிகுந்திருந்தன. தேயிலைப்பயிர் செழித்துவளரவில்லை என்ற காரணத்தினால் இந்த மலைத்தொடரும் "லாம்டன் மலைத்தொடர்" என்னும் பெயரை இழந்தது. ஆனால், ஆவணங்களில் "லாம்டன் மலைத்தொடர்" என்றே குறிப்பிடப்பெற்றுள்ளது. தற்போது "குருடிமலை" என்ற பெயரால் வழங்கும் இம்மலையின் உச்சி, நெடுந்தொலைவிலிருந்தும் கண்ணில் படும் வகையில் உள்ளது. ஈரோட்டிலிருந்து கோவை நோக்கி வரும் வழியிலேயே இந்த உச்சி கண்களுக்குப் புலப்படுவது சிறப்பு. வானம் தெளிவாக இருந்த ஒரு நாளில், ஏற்காட்டில் "LADY'S SEAT" என்னும் முனையிலிருந்து நானே இதைப் பார்த்திருக்கிறேன். சேலம் அரசிதழைப் (GAZETTEER) பார்க்கும் வரையிலும் "லாம்டன் உச்சி" யைப்பற்றி நான் அறிந்திருக்கவில்லை. அதன் பிறகே அவ்வுச்சியைப் பார்க்கும் முனைப்பு வந்தது."

மேலே "தினமணி" நாளிதழ்ச் சிறப்பிதழில், மேல்முடியில் காஃபித் தோட்டம் இருந்துள்ளதாகக் குறிப்பிடப்படும் செய்தி, தியடோர் பாஸ்கரனின் தேயிலைத் தோட்டக்குறிப்பிலிருந்து மாறுபடுகிறது.

**லாம்டன் உச்சி - பெயர்க்காரணம்:**

வில்லியம் லாம்டன்



(இணையத்திலிருந்து)

லாம்டன் உச்சிக்கு அப்பெயர் வந்த காரணம் பொருள் நிறைந்தது. "லெஃப்டினண்ட் கர்னல்" வில்லியம் லாம்டன் (Lieutenant-Colonel **William Lambton** 1753-1823) என்பார் ஒரு நிலவியலாளர்; நிலம் அளக்கும் அறிவியல் அறிஞர். பிரிட்டிஷ் படையிலிருந்து "லெஃப்டினண்ட்" பதவி உயர்வு பெற்று 1796-ஆம் ஆண்டு இந்தியா வந்தவர்; திப்பு சுல்தானுடனான நான்காம் மைசூர்ப்போரில் 1799-ஆம் ஆண்டு கலந்துகொண்டவர். போரில், வானவியல் பற்றிய தம் அறிவுத்திறத்தால் பலவகையில் துணையாய் இருந்தவர். ஜெனரல் பார்ட் (GENERAL BAIRD), திப்புவின் படை முகாமை ஓர் இரவுப்பொழுதில் தாக்கப் புறப்படும்போது, நாள் மீன்களின் (நட்சத்திரங்கள்) இயக்கத்தைக் கொண்டு, ஆங்கிலப்படை தவறான திசையில் செல்வதைச் சுட்டிக்காட்டியுள்ளார். மைசூரைக் கைப்பற்றியதும் அப்பகுதியை அளவீடு செய்யவேண்டிய ஒரு திட்டத்தை முன் வைத்தவர். ஏற்கெனவே, கர்னல் காலின் மெக்கன்சி (COLONEL COLIN MACKENZIE ) இது போன்ற வேறொரு அளவீட்டுத் திட்டத்தைத் தொடங்கிவிட்டதால், லாம்டனின் திட்டம் முதலில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. பின்னர், கிளைவ் பிரபுவால் ஒப்புகை அளிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. 1802-இல் லாம்டன், **"முக்கோண அளவீட்டியல்"** (TRIGONOMETRICAL SURVEY) என்னும் தொழில் நுட்ப அளவீட்டு முறையில் பணியைச் சென்னை "செயிண்ட் தாமஸ் மவுண்ட்" பகுதியிலிருந்து தொடங்கினார். 1806-இல் குருடி மலை முனை அளக்கப்பட்டது. இதன் காரணமாகவே **"லாம்டன் உச்சி"** (LAMBTON'S PEAK) என்னும் பெயர் குருடி மலைக்கு அமைந்தது.

லாம்டனின் முக்கோண அளவீடு, உலகிலேயே மிகப்பெரியதொரு திட்டமாகக் கருதப்படுகிறது. 1802-ஆம் ஆண்டு தொடங்கிய அவரது திட்டப்பணி நாற்பது ஆண்டுகள் கழித்து 1843-ஆம் ஆண்டு ஜார்ஜ் எவரெஸ்ட்டால் (George Everest) நிறைவுற்றது. நிறைவில், எவரெஸ்ட் முனை உலகிலேயே உயர்ந்த சிகரம் என்னும் முடிவு எட்டப்பெற்றது. 2002-ஆம் ஆண்டு லாம்டனின் "முக்கோண அளவீட்டியல்" திட்டத்தின் இருநூறாம் ஆண்டு நிறைவை நினைவு கூரும் ஆண்டு. அவர் பயன்படுத்திய THEODOLITE என்னும் கருவி அரை "டன்" நிறையுடையது; அதைத் தூக்கிக் கையாள பன்னிரண்டு ஆள்கள் தேவைப்பட்டார்கள் என்பது வியப்பான செய்தி.

THEODOLITE கருவி



(இணையத்திலிருந்து)

**Frontline - Issue 9 Apr-May, 2002**

He died to the cause at the age of 70, midway through his task, while surveying at a place called Hinganghat in Maharashtra, where is situated his uncared-for grave, today no more than a flat, weathered and battered piece of stone.

லாம்டன், தம் எழுபதாவது வயதில் மகாராட்டிரத்தில் வார்தாவுக்கு அருகில் "ஹிங்கன்காட்" என்னுமிடத்தில் பணியின்போது மறைந்தார். அங்கே எழுப்பப்பட்ட அவருடைய கல்லறை இன்று யாராலும் கண்டுகொள்ளப்படாமல், காற்றாலும் மழையாலும் வெயிலாலும் மோதுண்டு சிதைந்து கிடக்கும் ஒரு கல்லாகத்தான் இருக்கக் கூடும். மகாராட்டிர அரசின் தொல்லியல் துறை இக்கல்லறையைப் பேணி வைத்துள்ளதா என்பது

தெரியவில்லை. கல்லறையின் படமும் - கல்லறையில் கல்வெட்டும் இருக்கலாம் - கல்வெட்டின் படமும் கிடைக்குமா?

**முடிவுரை:**

பாலமலைப் பயணத்தின்போது, தொல்லியல் தடயங்கள் எவையும் கிடைப்பது அரிது என்னும் எண்ணத்தோடுதான் பயணப்பட்டோம். பழங்குடிகளின் வழிபாட்டுடன் தொடர்புள்ளதாகக் கருதப்படும் அரங்கநாதர் கோயில் பழமையானது என்றும், கோயிலின் தெப்பக்குளம் பழமையானது என்றும் அறிந்து அவற்றைப் பார்க்க எண்ணிச் சென்ற எங்களுக்கு லாம்டன் உச்சி பற்றிய வரலாற்றை அறிந்துகொள்ளும் வாய்ப்பு கிட்டியது மகிழ்வையும் நிறைவையும் அளித்தது. **"சேலம் அரசிதழைப் (GAZETTEER) பார்க்கும் வரையிலும் "லாம்டன் உச்சி" யைப்பற்றி நான் அறிந்திருக்கவில்லை."** என வரலாற்றாளர் தியடோர் பாஸ்கரனே கூறியிருக்கையில் கொங்கு மக்கள் எத்துணை பேருக்குத் தெரிந்திருக்கும்? எனக்கும் நண்பர் பாஸ்கரன் குறிப்பிடும் வரையில் குருடி மலை என்னும் பெயர் மட்டுமே தெரியும். கோவைப்பகுதியின் மற்றுமொரு வரலாற்றுச் செய்தியைச் சிலருக்காவது கொண்டுசேர்க்கும் வண்ணம் இக்கட்டுரை அமைவதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.

**துணை நின்றவை:**


1 WIKIPEDIA

2 FRONTLINE MAGAZINE - ISSUE 9, 2002.

3 kvijayendran.blogspot.in

4 THE HINDU METROPLUS , CHENNAI-JUN 03, 2002.

5 "தினமணி" பாலமலை தேர்த்திருவிழா சிறப்பிதழ்-2017


---


தொடர்பு: து.சுந்தரம்

doraisundaram18@gmail.com

கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.அலைபேசி : 9444939156.

## 16. நடுகல்லும் நடுகல் வழிபாடும்

*—து.சுந்தரம்*

அண்மையில் வெளியான நூல், "தொல்குடி-வேளிர்-அரசியல்" என்பது. எழுதியவர் தொல்லியல் அறிஞர் முனைவர் அர.பூங்குன்றன். நடுகற்களைப் பற்றிய விரிவானதொரு ஆய்வு நூல். அந்நூலில் "தொறுப்பட்டி" என்னும் தலைப்பில் உள்ள செய்திகளைப் படித்துக்கொண்டிருக்கும்போது, அதை ஒட்டிச் சில தரவுகள் எனக்குக் கிடைத்தன. அதை இங்கு பகிர்ந்துகொள்கிறேன்.

**நடுகல் வழிபாடு-ஓர் அறிமுகம்:**

கால்நடை வளர்ப்புச் சமுதாயத்தில், மேய்ச்சல் நிலம் வேண்டிப் புலம் பெயரவேண்டியேற்பட்டது. மேய்ச்சல் தேடிக் குடிபெயரும் தன்மை பூசலை உருவாக்கியது. புதிய இடத்தில் ஏற்கெனவே உள்ள மேய்ப்பவர்களுக்கும் குடி பெயர்ந்தவர்களுக்கும் இடையில் மேய்ச்சல் நிலம் தொடர்பாகப் பூசல் உருவாகியது. சங்க காலம் முதல் பல்லவர் காலம் வரை மாடே கேடில் விழுச்செல்வமாக விளங்கியது. எனவே, ஆநிரை கவர்தலும், ஆநிரை மீட்டலும் நிகழ்ந்தன. மேய்ச்சல் நிலத்திற்காகவும், நிரைக்காகவும் நடைபெற்ற பூசல், மறவர் குலம் உருவாவதில் கொண்டு சென்றது. இவ்வகைப் பூசல் தொறுப்பூசல் என்றழைக்கப்பட்டது. மாடுபிடிச் சண்டையில் தம் புகழ் நிறுத்தி மாய்ந்த மறவர்களுக்கு நடுகல் எடுத்து வழிபட்டார்கள். நடுகற்களில், தொடக்கத்தில் வீரனின் உருவம் ஓவியமாக வரையப்படுதலும், பின்னர் சிற்பங்களாக வடிக்கப்படுதலும் நிகழ்ந்தன.

**எழுத்து - ஓவியம்:**

கால்நடை வளர்ப்புச் சமூகத்தில் எழுத்துப்பயன்பாடு குறைவு; எழுதிவைக்க வேண்டிய அவசியம் இல்லாத வாழ்க்கை. சங்க காலத்து வணிகம் வீழ்ச்சியடைந்த பின், வணிகர்கள், கால்நடை வணிகர்களாக மாறியிருக்கவேண்டும். அவ்வாறு மாறியபோது அவர்கள் நடுகல் பகுதியில்

தங்கினர். இவ்வணிகர்களே பெரும்பாலும் எழுத்தை அறிமுகப்படுத்தியிருக்கக் கூடும். கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து எழுத்துடை நடுகற்கள் மிகுதியும் கிடைக்கின்றன. நடுகல் வழிபாடு பழங்குடியினரின் ஆவி வழிபாட்டிலிருந்து தோன்றியது. தன் இனக்குழுவில் வாழ்ந்த மனிதன் இறந்த பின்னும் தன்னுடனே வாழ்கிறான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் நடுகல் வழிபாடு தொடர்ந்தது.

தொறு (சங்க கால ஆநிரை) கால்நடைக் கூட்டத்தைக் குறிக்கும் சொல் தொறு. தொழு என்றும் வழங்கும்.

தொறுப்பட்டி (நெய்த்தோர் பட்டி) நடுகற்களில், மாண்ட வீரனுக்கு அளிக்கப்பட்ட நிலம் பற்றிய செய்தி கி.பி. 9-10-ஆம் நூற்றாண்டிலிருந்து சுட்டப்படுகின்றது. இது, அரசு உருவாக்கம் நிலைபெற்ற காலத்துடன் தொடர்புடையது என்பதற்குச் சான்றாகும். மாண்ட வீரனுக்கு அளிக்கப்பட்ட நிலத்துக்கு நெய்த்தோர்பட்டி என்று பெயர். நெய்த்தோர் என்பதற்கு இரத்தம் என்று பொருள் கொண்டு இரத்தம் சிந்துவதற்காகத் தரப்படும் நிலம் என்று பொருள் கொள்ளப்படுகின்றது. இத் தானத்தினைக் கல்நாடு என்ற சொல்லாலும் கூறுகின்றனர்.

**கல்நாடு**:

வெ.கேசவராஜ், "தென்னிந்திய வீரக்கற்கள் - ஓர் ஆய்வு" என்னும் தலைப்பிலான தம் பி.எச்.டி. ஆய்வேட்டில், கல்நாடு என்பதற்கு எல்லை வகுத்துக் கல்நாட்டிக் கொடுத்த நிலத்தானம் என்று பொருள் கூறுகிறார். ஆனால், நடுகல்லிற்குக் கொடுக்கப்பட்ட வேளாண் நிலம் அல்லது நிலம் என்ற பொருளில் அச்சொல் ஆளப்பட்டிருக்கவேண்டும்.

மேலே சொல்லப்பட்ட செய்திகள் யாவும் பூங்குன்றனார் அவர்களின் நூலிலிருந்து பெரும்பாலும் அவர் எழுத்துகளிலேயே தரப்பட்டவை. இனி வருபவை, அவருடைய ஆய்வுக்கருத்துகளுடன் ஒட்டிய - எனக்குக் கிடைத்த - சில தரவுகள்.

**என் தரவுகள்:**

நெய்த்தோர் - நெய்த்தோர் என்பதற்கு இரத்தம் என்று பொருள் கொள்ளப்படுகிறது. இக்கருத்து மிகச் சரியே. கன்னட மொழியில் இரத்தம் என்பதற்கு "நெத்துரு" என்ற சொல்லே வழங்குகிறது. தெலுங்கு மொழியிலும் "நெத்துரு" என்னும் சொல்தான். கொங்கு நாட்டில் "ரத்தம்" என்பது "நத்தம்" என வழங்குவது கருதத்தக்கது. "நத்தம்", "நெத்துரு" இரண்டும் நெருங்கிய தொடர்புள்ளன என்பது புலனாகிறது. கருநாடகத்தில், நடுகல்லுக்கு வீரகல்லு என்ற பெயர் வழங்குகிறது. கருநாடகக் கல்வெட்டுகளில் வீரகல்லு (வீரக்கல்) கல்வெட்டுகள் மிகுதியாக உள்ளன. அவற்றில், இறந்துபட்ட வீரனின் குடும்பத்தார்க்கு நிலம் கொடையாக அளிக்கப்பட்ட செய்திகள் காணப்படுகின்றன. "கொடை" யைக் குறிக்கும் கன்னடச்சொல் "கொடகெ" என்றும் "கொடுகெ" என்றும் பயில்கின்றன. இரத்தத்தைக் குறிக்கும் "நெத்துரு", "நெத்ர" ஆகிய சொற்களுடன் சேர்ந்து "நெத்துரு கொடகெ", "நெத்ர கொடகெ" என வருகின்றன.

**எடுத்துக்காட்டு-1:**

மைசூர் மாவட்டம், ஹிரியபட்டண(ம்) வட்டம், ஜோகனஹள்ளி என்னும் ஊரில் உள்ள நடுகல்(வீரகல்லு) கல்வெட்டு கீழ்வருமாறு அமைகிறது:

**1 பஹுதான்ய சம்வத்சரத மார்க**

**2 சிர .... மருளிஹரதி**

**3 ய நாகப்பகள மக்களு பைச்சண்ண**

**4 னூ ஜோகனஹள்ளிய இசுவண்ண**

**5 ஹுலிய இறிதனாகி நெத்ரகொ**

**6 டகெய கொடகெயனூ ஆரொ**

**7 பரு அளுசிதவரூ சத்த**

**8 நாயி திந்தவரு ஶ்ரீ**

கல்வெட்டின் தமிழ் வடிவம் கீழே:

**1 வெகுதான்ய வருடம் மார்கழி**

**2 மாதம் மருளிஹரதி ஊரைச்சேர்ந்த**

**3 நாகப்பனவரின் மகன் பைச்சண்ணன்**
**4 ஜோகனஹள்ளி ஊரைச்சேர்ந்த இசுவண்ணன்**
**5 புலியைக் கொன்றதற்கு (கொன்று இறந்துபட்டமைக்கு) குருதிக்**
**6 கொடை. இக்கொடையை யாரொருவர்**
**7 அழித்தவர் (கேடு செய்தார்) இறந்துபோன**
**8 நாயின் புலவை உண்டவர்க்கு ஒப்பாவார். ஸ்ரீ**

**கட்டுரை ஆசிரியர் குறிப்பு:**

"ப" எழுத்தை முதலாகக் கொண்ட தமிழ்ச் சொற்கள் பல, கன்னடத்தில் "ஹ" ஒலிப்பாக மாறுதல் இயல்பு. எடுத்துக்காட்டாக:

பால்=ஹாலு

பல்=ஹல்லு

பாழாயிற்று=ஹாளாயித்து

இங்கே, புலி, ஹுலி ஆயிற்று. கொடை என்னும் தமிழ்ச் சொல் கொடகெ என்பதும்,

அழித்தவர் என்னும் தமிழ்ச் சொல் அளுசிதவர் என்பதும், கன்னட மொழி தமிழ் வேர்களைக் கொண்டது என்பதைப் புலப்படுத்துகின்றன. (தின்றவர்=திந்தவர் என்பது இவ்வகையானதே) தமிழ்க் கல்வெட்டுகளில் பயிலும் இன்னொரு சொல் "எறிந்து" என்பதாகும். அது, "கொன்று" என்னும் பொருளையுடையது. அதுவே, கன்னடத்தில் "இறிது" என்று திரிந்து வழங்கியிருக்கக் கூடும். கல்வெட்டின் காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு.

**எடுத்துக்காட்டு-2:**

மைசூர் மாவட்டம், யளந்தூர் வட்டம், யளந்தூரில் ஒரு வீட்டின் கொல்லைப்புறத்தில் இருக்கும் ஒரு பலகைக் கல்லில் காணப்படும் கல்வெட்டு. முதல் எடுத்துக்காட்டு ஒரு கன்னடக் கல்வெட்டாக அமைய, இந்த எடுத்துக்காட்டு ஒரு தமிழ்க்கல்வெட்டாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. கல்வெட்டின் காலம் போசளர் (ஹொய்சளர்) காலம். கி.பி. 1266. அரசன், மூன்றாம் நரசிம்மன். கருநாடகத்தின் கங்கபாடிப் பகுதி, முதலாம் இராசராசன் காலம் தொடங்கிச் சோழர் ஆட்சியின்கீழ்

இருந்தபோது, தமிழரும், தமிழ் மொழியும் இப்பகுதியில் குடியேற்றம் பெற்றனர். சோழருக்குப்பின் போசளர் ஆட்சிக் காலத்திலும் தமிழின் செல்வாக்கு உயர்ந்தே இருந்தது. போசளரின் கல்வெட்டுகளும் தமிழில் பொறிக்கப்பட்டன. அத்தகைய கல்வெட்டுகளுள் இந்தக் கல்வெட்டும் அமைகிறது. கல்வெட்டின் பாடம் கீழ் வருமாறு :

கல்வெட்டின் முன் பக்கம்:

1 **ஸ்வஸ்திஸ்ரீ வீர ந**
2 **ரசிம்ஹதேவன் பிருதிவீரா**
3 **ஜ்யம் பண்ணி அருளாநிற்க**
4 **இளமருதூரான ராஜகேசரி ந**
5 **ல்லூர் நாலுகூற்றில் சமஸ்த கா**
6 **முண்ட**
7 **களும்**
8 **ஸ்தானிகரும்**
9 **இளமயரும்**
10 **வியாபாரிக**
11 **ளும் அய**
12 **ணிக்கு**
13 **மெங்க**
14 **ளூர் நாவித உடயச்சன் மகன்**
15 **கேத்தைக்கு பிரமாணம் பண்**
16 **ணிக் குடுத்தபடி க்ஷய சம்**

கல்வெட்டின் பின் பக்கம் :

17 **வத்சரத்து சித்திரை**
18 **மாசத்து இந்த நாவிதன் புலி**
19 **யெறிந்து வீரியஞ்செய்தது ப**
20 **க்கு இவனுக்கு நேத்தல் குடங்**
21 **கை கரிகூடபள்ளத்து குழி**

22 60 **இந்த குழி அறுபது இவ**
23 **ன் மக்களுள்ளதனை செலு**
24 **த்தி இவன் வம்சமுள்ளதன்**
25 **நாளுஞ்செல்லக்கடவதாக**
26 **தாராபூர்வம் பண்ணிக்கு**
27 **(டு)த்தோம் ஆசந்திராஸ்தாஹியாக**
28 **த்தை அழிம்பினார்கள் கங்**
29 **கைக் கரையில் குரால்பசு(வை)**
30 **கொன்ற பாவத்தில் (போ)**

இக்கல்வெட்டில், இருபதாம் வரியில் “நேத்தல் குடங்கை” என்னும் தொடருக்கு, நூலின் பதிப்பாசிரியர் “நெத்தரு கொடகெ” என்றே பொருள் கூறுகிறார். கேத்தை என்னும் நாவிதன் புலியெறிந்து (புலியைக்கொன்று) வீரச்செயல் புரிந்ததற்காக நெய்த்தோர் பட்டியாக (நேத்தல் குடங்கை) அறுபது குழி நிலம் கொடையளிக்கப்பட்டது. கொடையளித்தவர்கள், சமஸ்த காமுண்டர்கள், ஸ்தானிகர், இளமயர், வியாபாரிகள் ஆகியோர். சமஸ்த, ஸ்தானிக ஆகியவை ஊரின் நிர்வாக அமைப்பைக் குறிக்கின்றன எனலாம். காமுண்டர்கள் என்பவர்கள் ஊர்த்தலைவர்கள். இளமையர் என்பதற்குக் காவலர், வீரர் என்று பொருள். மிளை என்னும் காவற்காட்டைக் காத்து நின்றவர் எனலாம். (மிளை, இளை எனத்திரிந்திருக்கலாம்.) கால்நடைகளைக் காத்த காவலரான இளையரும் கொடையளிக்கும் பிரமாணத்தில் பங்கு கொள்வதைக் கல்வெட்டு தெரிவிக்கிறது. எனவே, ஊர்க்காமுண்டரும், இளையரும், வியாபாரிகளும், ஸ்தானிகரும் கொடை ஏற்பாடு செய்கின்றனர். தமிழ்க் கல்வெட்டுகளில் பயிலும் இளையர் என்னும் வழக்குச் சொல் கன்னடக் கல்வெட்டிலும் பயில்கின்றது. இது, தமிழகத்தின் கால்நடைச் சமுதாயத்தின் கூறுகள் கருநாடகப் பகுதியிலும் நிலைபெற்றிருந்தது என்பதை விளக்குகிறது.

**தொறு - எடுத்துக்காட்டு-1:**

அடுத்து, தொறு என்னும் வழக்கும் கருநாடக் கல்வெட்டுகளில் பயில்வதைக் காண்கிறோம். எடுத்துக்காட்டாக, மைசூர் மாவட்டம்,

பிரியபட்டணம் வட்டம், கூரகல்லு என்னும் ஊரிலிருக்கும் வீரக்கல் கல்வெட்டு, தொறுப்பூசலைப்பற்றியது. தொறு என்பது கால்நடைக்கூட்டம் என்று முன்பே பார்த்தோம். கன்னடக்கல்வெட்டுகளில் "தொறு" என்பது "துறு" என்று சற்றே திரிந்து காணப்படுகிறது. இக்கல்வெட்டு, கங்க அரசன் பெர்மானடியின் காலத்தைச் சேர்ந்தது. (கி.பி. 10-ஆம் நூற்றாண்டு). கொங்கல் நாடு-8000 என்னும் நாட்டுப்பிரிவை ஆளும் தலைவனான இறெயப்பன், நிலக்கொடை அளிக்கிறான். கூரகல்லு ஊரின் காவுண்டன், தொறுப்பூசலில் சண்டையிட்டு இறந்துபடுகிறான். அவனுக்கு மூன்று கண்டுகம் நிலம் "கல்நாடாகக்" கொடுக்கப்படுகிறது. ஆகோள் என்று இலக்கியங்களில் பயில்கின்ற ஆநிரை கவர்தல், நடுகற்களில் "தொறு கொள்ளுதல்" என வழங்கும். தமிழகக் கல்வெட்டுகளில் காணப்படும் "தொறு கொள்தல்" அல்லது "தொறு கொளல்" என்னும் தொடர், பழங்கன்னடத்திலும் காணப்படும் சொற்றொடராகும். மேற்படி கல்வெட்டில் "துறு கொளல்" என்று கன்னடத்தில் குறிப்பிடப்படுகிறது. ஆளுத்திரெ, சத்தர் ஆகிய சொற்கள் தமிழ் வேர்களைக் கொண்டுள்ளதை நோக்குக. மண் என்னும் சொல் மண்ணு என்று தமிழ்ச் சொல்லின் வடிவம் மாறாது பயில்வது குறிப்பிடத்தக்கது. காதி என்னும் கன்னடச் சொல் சண்டையிடுதலைக் குறிக்கும்.

கல்வெட்டுப் பாடம்:

1 **ஸ்வஸ்திஸ்ரீ பெர்ம்ம**
2 **னடிகள் பிரிதுவிராஜ்யம்**
3 **கெய்யுத்திரெ கொங்கல் நாடெ**
4 **ண்டாசிரமனு இறெய**
5 **ப்பனாளுத்திரெ குர்கல்ல**
6 **பூதுகனரசி பரமப்பெ**
7 **யாளுத்திரெ குர்கல்ல காவுண்ட**
8 **தம்முத்திர்பொர் துறுகொளல் காதி**
9 **சத்தர் இதக்கெ எறயப்பரசர்**
10 **கொட்ட மண்ணு மூகண்டுக கால்நாடு இத**
11 **க்கெ சக்கி முதிரெ பூவய்ய பெள்ளென கர**

**12 குடி பாரதர் எறெயம்ம கெதறெயரய்ய**

**13 ப**

கல்வெட்டின் தமிழ் வடிவம்:

**1 ஸ்வஸ்திஸ்ரீ பெருமானடிகள்**

**2 ஆட்சி செய்கையில்**

**3 கொங்கல் நாடு**

**4 எண்ணாயிரத்தை இறயப்பன்**

**5 ஆளுகையில் குர்கல்லைப்**

**6 பூதுகனின் அரசி பரமப்பை**

**7 ஆளும்போது குர்கல்லைச் சேர்ந்த காவுண்டன்**

**8 ...... தொறு கொளல் போரில் சண்டையிட்டு**

**9 செத்தான் இதற்காக எறயப்பரசர்**

**10 கொடுத்த மண் (நிலம்) மூன்று கண்டுகம் இது கல்நாடாக**

**11 ...........**

**12............**

**13..........**

**தொறு - எடுத்துக்காட்டு-2:**

மைசூர் மாவட்டம், மல்லெகவுடன கொப்பல் என்னும் ஊரில் உள்ள ஒரு நடுகல் கல்வெட்டும் தொறுப்பூசல் பற்றியதே. கி.பி. 1036-ஆம் ஆண்டைச் சேர்ந்த இக்கன்னடக் கல்வெட்டு முதலாம் இராசேந்திரனின் ஆட்சிக்காலத்தது. ஆநிரை கவர்தலும், ஆநிரை மீட்டலும் இக்கல்வெட்டில் செய்தியாக வருகின்றன. சங்காள்வா(ன்) என்பவன் தன் தம்பியோடு சேர்ந்து ஆநிரை கவர்கிறான். பாகுளி சிரியண்ண(ன்) என்னும் வீரன் ஆநிரை மீட்கும் முயற்சியில் சங்காள்வானுடன் சண்டையிட்டு இறந்துபடுகிறான்.

கல்வெட்டுப்பாடம் கீழ்வருமாறு :

**1 ஸ்ரீ ராஜேந்த்ர சோழதேவர்க்கெ யாண்டு இப்பத்த மூ**

**2 ற மதறொ**

**3 ளெ த்து சம்வ**

4 த்ஸரத ஆஷா

5 ட மாஸத

6 அமாவாச்யெ யந்து திலுகரமாரி சங்காள்வ கிறுசோதர கூடி

7 துறுவ கொ

8 ண்டு போகெ ஒ

9 ளி நாகய்ய

10 ர மக பாகு

11 ளிசிரியண்ண

12 சங்காள்வன

13 காதி துறுவ மகுழ்ச்சி பெண்டிர பெறகிக்கி காதி சத்த அவன

14 தம்ம

15 ஆ..ண்ண பரோக்ஷவினெய கெய்து

கல்வெட்டின் தமிழ் வடிவம்:

1 ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவற்கு யாண்டு இருபத்துமூன்று

2 ......

3 தாது வருஷம் ஆஷாட(ஆடி)

4 மாதம்

6 அமாவாசையன்று திலுகர மாரி (என்னும்) சங்காள்வானும் அவனது சிறிய சகோதரனும் கூடி

7 துறுவைக்

8 கொண்டுபோகும்போது (கவர்ந்து போகும்போது?)

9 ஒளிநாகய்யனின்

10 மகன் பாகுளி

11 சிறியண்ணன்

12 சங்காள்வானுடன்

13 பொருது துறுவை மீட்டு, பெண்டிரைக் காத்து சண்டையில் செத்தான் அவனுடைய

14 தம்பி

15 .... இறந்தவர் நினைவாக......

சோழப் பேரரசன் காலத்துக் கல்வெட்டாகையால், தமிழ்க் கல்வெட்டு மரபுப்படி அரசனின் ஆட்சியாண்டு சுட்டப்பெறுகிறது. ஆனால், கன்னடச் சொல்லுக்கு ஈடாகத் தமிழ்ச் சொல்லான "யாண்டு" என்பது கையாளப்படுவதைக் காண்க. ஆநிரை, துறு என இக்கல்வெட்டில் பயில்கிறது. ஆநிரையைக் கவர்ந்து போகும் நிகழ்வு, "துறுவ கொண்டு போகே" என்னும் தொடரில் தமிழின் தாக்கத்துடன் கூறப்படுகிறது. சிறியண்ணன் ஆநிரை(தொறு) மீட்கச் சண்டையிடுதல் "காதி" என்ற தொடரால் சுட்டப்பெறுகிறது. தொறுவை மீட்டல் என்பது "துறுவ மகுழ்ச்சி" என்னும் தொடரால் அறியப்படுகிறது. தொறு மீட்டல் நிகழ்ச்சியில், பெண்களைப் பாதுகாத்தலும் நிகழ்ந்தது இதை, "பெண்டிர பெறகிக்கி காதி" என்னும் கல்வெட்டு வரி விளக்குகிறது. "பரோக்ஷவினய(ம்) என்னும் வடசொல், இறந்தவர்க்கு மரியாதை செலுத்தும் முகத்தான் செய்கின்ற செயலைக் குறிக்கும். அதாவது, இறந்தவர் நினைவாகச் செய்வது. கல்வெட்டின் காலம் கி.பி. 11-ஆம் நூற்றாண்டாதலால், "மகுழ்ச்சி" என்பது தமிழின் தாக்கத்தால் விளைந்த பழங்கன்னடச் சொல்லாக இருக்கக் கூடும். ஆனால், இச்சொல்லின் தமிழ் வேர் எது எனப் புலப்படவில்லை.

**கல்நாடு:**

எல்லை வகுத்துக் கல்நாட்டிக் கொடுத்ததால் கல்நாடு என்னும் வழக்கு ஏற்பட்டது என்னும் கருத்தைக்காட்டிலும், நடுகல்லிற்குக் கொடுக்கப்பட்ட வேளாண் நிலம் அல்லது நிலம் என்ற பொருளில் அச்சொல் ஆளப்பட்டிருக்கவேண்டும் என்னும் பூங்குன்றன் அவர்களின் கருத்தே கருநாடகக் கல்வெட்டில் காணப்படுகிறது.

**கல்நாடு - எடுத்துக்காட்டு-1:**

மைசூர் மாவட்டம், திருமுக்கூடல் வட்டம் தொட்டஹுண்டி என்னும் ஊர் வீரக்கல் கல்வெட்டில், கங்க அரசனான நீதிமார்க்கப் பெர்மானடி இறந்தபோது, அவனது பணியாள் ஒருவன் (ஆகய்யன் என்பது அவன் பெயர்)), அரசன் மேல் உள்ள பற்றால் தன் உயிரை மாய்த்துக்கொண்டான். அவனுக்கு

நினைவுக்கல் எடுக்கப்பட்டது. கல்நாடாக ஓர் ஊர் கொடுக்கப்பட்டது என்னும் செய்தி கூறப்படுகிறது. கொடையளித்தவன் , இறந்த அரசனின் மகன் சத்தியவாக்கியப் பெர்மானடி. கல்வெட்டின் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு எனக் குறிக்கப்படுகிறது.

கல்வெட்டின் பாடம்:

**1 ஸ்வஸ்திஸ்ரீ நீதிமார்க்க கொங்குணிவர்ம தர்ம மஹாரா**
**2 ஜாதிராஜ கோவளாலபுரவரேஸ்வர நந்த**
**3 கிரி நாத ஸ்ரீமத் பெர்மானடிகள் ஸ்வர்கமேறிதன்**
**4 ஏறிதொடெ பெர்மானடிகள மனெமகத்தின் ஆக**
**5 ய்ய நீதிமார்க்கப் பெர்மானடிகெ கீழ்குண்ட்டெ ஆத**
**6 பெர்மானடிகள் சுபுத்ர சதயவாக்ய பெம்மானடிகள் ..**
**7 பாடி ய**
**8 கல்நாடு**
**9 கொட்ட து**
**10 ப்பஹள்ளி**

**குறிப்பு:**

ஸ்வர்கம் ஏறித - சொர்க்கத்தை அடைந்தான்.
பெர்மானடிகெ - பெர்மானடிகளுக்கு
கீழ் குண்ட்டெ ஆத - கீழ் குண்ட்டெ ஆனான்.
கீழ் குண்ட்டெ என்பது, தமிழகக் நடுகற்களில் காணப்படும் நவகண்டச் செயலை ஒத்தது. அர்சனுக்காகத் தன்னுயிரைத் தானே மாய்த்துக்கொள்ளுதல். கல்நாடாகக் கொடையளிக்கப்பட்ட ஊர் துப்பஹள்ளி.

**கல்நாடு - எடுத்துக்காட்டு-2:**

"தொறு" வைக்குறித்த மேற்படி எடுத்துக்காட்டு-1, கல்நாடு என்னும் கருத்துக்கும்

எடுத்துக்காட்டாக அமைவதைக் காண்க. தொறு கொளல் பூசலில் இறந்துபட்ட காவுண்டனுக்கு மூன்று கண்டுகம் அளவுள்ள நிலம் (மண்ணு) கல்நாடாகக் கொடுக்கப்படுகிறது.

**முடிவுரை:**

நெய்த்தோர் பட்டி என்பது தொறுப்பூசலில் இரத்தம் என்னும் குருதி சிந்தி இறந்துபட்ட வீரர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலத்தைக் குறிக்கவந்தது என்பதும், இதே கருதுகோள்

கருநாடகத்திலும் வழக்கில் இருந்தது என்பதும், இவ்வாறே, கல்நாடு என்பது தொறுப்பூசலில் இறந்த வீரர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் என்பதும், தொறு என்னும் தமிழ்ச் சொல், கால்நடைச் சமுதாயப் பண்பாட்டின் கூறுகளுள் ஒன்று என்பதும், இந்தப் பண்பாடும், இந்தச் சொல்வழக்கும் கருநாடகத்திலும் இடைக்காலத்தில் இருந்துள்ளன என்பதும் பெறப்படுகின்றன.

---

தொடர்பு: து.சுந்தரம்

doraisundaram18@gmail.com

கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.அலைபேசி : 9444939156.

## 17. அரவக்குறிச்சிப் பகுதியில் தொல்லியல் தடயங்கள்

*—து.சுந்தரம்*

**முன்னுரை:**

அண்மையில் அறிமுகமான நண்பர் சுகுமார் பூமாலை. அரவக்குறிச்சிப் பகுதியைச் சேர்ந்தவர். சென்னையில், ஒளிப்படக் கலைஞராகத் தன்னிச்சைப் பணி. வரலாற்றிலும், தொல்லியலிலும் மிகுந்த ஆர்வம் கொண்டு அவை பற்றிய அறிவை வளர்த்துக்கொண்டதோடு , தேடுதல்கள் மூலம் தம்முடைய பகுதியில் தொல்லியல் தடயங்களைக் கண்டறிந்து வருகிறார். அவ்வாறு தாம் கண்டறிந்த பல செய்திகளைத் தம்முடன் நேரில் பார்வையிட அழைப்பு விடுத்திருந்தார். 30, ஜனவரி 2018 அன்று அவரோடு இணைந்து அவர் காண்பித்த தொல்லியல் தடயங்களைப் பார்வையிட்டது பற்றிய ஒரு பதிவு இங்கே.

**அரவக்குறிச்சி:**

கரூர் மாவட்டத்தில் அரவக்குறிச்சி ஒரு வட்டம். குறிச்சி என்னும் பின்னொட்டுக் கொண்ட ஊர்கள் தமிழகத்தில் நிறைய உண்டு. அவை, குறிஞ்சி நிலச் சூழலில் அமையும் ஊர்கள் என்று பொதுவாகக் கருதலாம். அரவக்குறிச்சி என்றும் அரவங்குறிச்சி என்றும் இரு வகையில் வழங்குகிறது. இரண்டிலுமே முதற்சொல் அரவம் அல்லது அரவு. அரவு என்பது பாம்பை மட்டிலுமே குறிக்கும். ஆனால், அரவம் என்பது பாம்பு என்பதோடு தமிழையும் குறிக்கும். ஊர்ப்பெயர்க் காரணம் இவற்றோடு தொடர்புடையதா இல்லையா எனத் தெரியவில்லை. கோவையிலிருந்து பல்லடம், காங்கயம், வெள்ளக்கோவில், தென்னிலை, சின்னதாராபுரம், அரவக்குறிச்சி என்பதான சாலைப்பயணம். அரவக்குறிச்சியின் சுற்றுப்பகுதியில் அமராவதி, குடகனாறு ஆகிய ஆறுகள் அமைந்துள்ளன. இவை தவிர, நல்காசி ஆறு எனறோர் ஆறு இங்கே உண்டு. இது நங்காஞ்சி ஆறு என்றும் வழங்குகிறது. இரண்டு

வழக்காறுகளிலுமே ஊர்ப்பெயர்கள் இயல்பாக அமைந்துள்ளன. காசியும், காஞ்சியும். காசிக்குச் சென்ற பலன்/புண்ணியம் கிட்டும் ஊர் என மக்கள் கருதுவதாக நண்பர் கூறினார்.

**குதிரை குத்திப்பட்டான் கல்:**

அரவக்குறிச்சி - கரூர் சாலையில், அரவக்குறிச்சிக்கருகில் கரடிப்பட்டி என்றொரு சிற்றூர். அங்கு, நல்காசி(நங்காஞ்சி) ஆற்றின் கரையோரம் ஒரு கோயில்; புலிகுத்தி அம்மன் கோயில் என்பது மக்கள் வழக்கில் உள்ள பெயர். நண்பர், அங்கிருப்பது நடுகல் சிற்பங்களுள் ஒன்றான குதிரை குத்திப்பட்டான் சிற்பம் என்று சொல்லி அழைத்துச் சென்றார். ஒரு மண்டபத்தில் மேடையமைத்துச் சிற்பத்தை நிறுத்தியிருக்கிறார்கள். சிற்பத்தை நேரடியாக நிறுத்தாமல் ஒரு சுவரைப் பின்புலமாக அமைத்து நிறுத்தியுள்ளனர். சிற்பம, நாலேகால் அடி உயரமும் இரண்டேமுக்கால் அடி அகலமும் கொண்ட ஒரு பலகைக் கல்லில் புடைப்புருவமாக வடிக்கப்பட்டுள்ளது. வீரன் ஒருவன் தன் இடக்கையால் குதிரையின் வாயைப் பிடித்தவாறும், வலக்கையால் குறுவாளைக்கொண்டு குதிரையைத் தாக்குகின்ற நிலையிலும் காணப்படுகிறான். குதிரை தன் பின்னங்கால்களில் நின்றவாறு முன்னங்கால்களை உயர்த்தி வீரனைத் தாக்குகின்ற தோற்றத்தில் உள்ளது. வீரன் தன் இடையாடைக்கச்சிலும் ஒரு வாளினை வைத்திருக்கின்றான். அவனது இடையாடை முழங்கால் வரையில்கூட அமையுமாறு பெரிதாக இல்லை. சிற்றாடை. ஆடையமைப்பு அழகுறத் தோன்றுகிறது. முகமும், வலக்காலும் முன்புறம் நேர்ப்பார்வையில் உள்ளன. இடக்கால், முன்புறப்பார்வையில் அமையாமல் பக்கவாட்டில் முன்னோக்கி அடியெடுத்து வைக்கும் கோணத்தில் உள்ளது. ஆலிடா ஆசனம் என்று சிற்பக் கலையில் சுட்டப்படும் ஒரு தோற்றநிலையை ஒத்துள்ளது. வீரனின் தலைமுடி நேர்க்கொண்டையாயுள்ளது. காதிலும், மார்பிலும், கைகளிலும் அணிகள் காணப்படுகின்றன. முகத்தின் உறுப்புகள தெளிவாகத் தெரியாவண்ணம் தேய்மானம் கொண்டுள்ளது. மொத்தத்தில் அழகான சிற்பம். சிற்ப அமைதியைக் கொண்டு, நாயக்கர் காலத்துக்கு முந்தைய காலத்தைச் சேர்ந்தது எனக்கருதலாம். இந்த நடுகல்லைத், திருப்பூர்ப் பகுதியில் உள்ள ஒரு குடியினர் தங்கள் குலதெய்வமாக வழிபட்டு வருகின்றனர். திருப்பூரில்

இயங்கிவரும் வீரராசேந்திரன் வரலாற்று மையத்தினர் இந்நடுகல்லைப் பற்றிய செய்தியை நாளிதழ்களில் வெளியிட்டு இதன் வரலாற்றுப் பின்னணியையும் தொன்மையையும் மக்களிடையே எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

குதிரை குத்திப்பட்டான் கல்



"தி இந்து" ஆங்கில நாளிதழில் வெளியான செய்தியில் ஒரு பகுதி கீழே:

**'Rare' hero stone discovered**

R. Vimal Kumar

TIRUPUR:, JUNE 13, 2016 00:00 IST

A team of archaeologists attached to Tirupur-based Virarajendran Archaeological and Historical Research Centre has discovered a hero stone, which is estimated to be nearly 800-years-old.

It was erected for a person who died fighting horses belonging to a cavalry from neighbouring territory that invaded the village.

The memorial was found near a river bank at Karadipatti hamlet situated on the border of Tirupur and Karur districts.

“This is a rare sculpture for a ‘hero’ who died fighting horses trained for combating people after the chieftain and his cavalry from the neighbouring territory invaded to loot the resources in the said village.

**நடுகல் - சதிக்கல்:**

அடுத்து நாங்கள் பார்த்தது ஒரு நடுகல் சிற்பம். மேற்குறித்த சாலையிலேயே சிறிது தொலைவு சென்றதும், நாகம்பள்ளிப் பிரிவு என்றொரு பிரிவுச்சாலைக்கருகில் நடுகல் உள்ளது. குறிப்பாக அந்த இடத்தை மக்கள் தகரக்கொட்டகைப் பேருந்து நிறுத்தம் என்றழைக்கிறாகள். சாலைக்கருகில் ஒரு பழைய மண்டபம். மண்டபத்தை ஒட்டி இரண்டரை அடி உயரமும், இரண்டடி அகல்மும் உள்ள பலகைக் கல்லில் வடிக்கப்பட்ட சிற்பம். இரு கைகளையும் கூப்பியவாறுள்ள ஆண், பெண் உருவங்கள். ஆண் உருவத்தின் தலை முடிக் கொண்டை தெளிவாகத் தெரியவில்லை. தலைப்பாகை போன்ற அமைப்பாக இருக்கலாம். பெண்ணுருவத்தில் தலைமுடி வலப்புறக் கொண்டை அமைப்பில் உள்ளது. இரண்டு உருவங்களிலும், முகத்தின் உறுப்புகள தெளிவாகப் புலப்படவில்லை. இரு உருவங்களிலும் அணிகலன்கள் உள்ளன. ஆடை அமைப்பு எளிமையாய் உள்ளது. இரு உருவங்களின் தலைப்பகுதிகளுக்கிடையில் ஒரு சிவலிங்கம் காணப்படுகின்றது. இருவரும் மேலுலகம் அடைந்தனர் என்பதன் குறியீட்டாகவே இச் சிவலிங்க உருவம். இது ஒரு சதிக்கல் சிற்பம். வீரன் இறந்துபட்டதும், அவன் மனைவியும் உடன்கட்டை ஏறுதல் மரபில் உயிர் நீத்ததன் காரணமாக எடுக்கப்பட்ட நினைவுக்கல். கல்லின் பீடப்பகுதியில் எழுத்துகள் காணப்படுகின்றன. ஆனால் பீடப்பரப்பு மட்டமாக

இழைக்கப்படாததாலும், எழுத்துகளின் தேய்மானத்தாலும் கல்லெழுத்துகளைப் படிக்க இயலவில்லை. இருப்பினும், “பெண்”, “அம்மா” ஆகிய சொற்களை இனம் கண்டுகொள்ள முடிந்தது. சதி மரபில் உயிர்நீத்த பெண்ணின் பெயர் பொறிக்கப்பட்டிருக்கவேண்டும்.

நடுகல் - சதிக்கல்



**மலைக்கோவில்:**

அடுத்து நாங்கள் சென்ற இடம் மலைக்கோவிலூர். மலைக்கோவில் இங்குள்ளதாலேயே ஊர்ப்பெயரும் மலைக்கோயிலூர் என அமைந்தது. ஒரு சிறிய குன்றுப்பகுதியில் அமைந்துள்ள சிவன் கோயில். கற்றளிக்கோயில். கொங்குச் சோழர் காலத்தது. கொங்குச் சோழர் மற்றும் கொங்குப் பாண்டியர் கல்வெட்டுகள் இங்குள்ளன. கல்வெட்டுகள் இன்னும் பதிவாகவில்லை என்றே தோன்றுகிறது. நண்பர் சொன்ன குறிப்புகளின்படி, இக்கோயில் நீண்ட காலம் புறக்கணிக்கப்பட்ட நிலையில் உரிய பேணுதல் இன்றிச் சிதைவுற்றுள்ளது. வாரம் ஒரு முறை, இந்தப்பகுதியில் உள்ள வெஞ்சமாங்கூடல் கோயிலின் பூசையாளர் வந்து நடை திறந்து பூசை செய்துவிட்டுப் போகும் நிலை உள்ளது. மற்ற நேரங்களில் பூட்டப்பட்டுள்ளது. சிவலிங்கத்திருமேனியாக

இறைவன் எழுந்தருளியிருக்கும் கருவறை, அர்த்தமண்டபம் ஆகியன எப்போதும் பூட்டப்பெற்றிருந்தாலும் கோயில் வளாகம் முற்றும் நாள் முழுதும் எவரும் வந்து போகும் வகையில் உரிய பாதுகாப்பின்றிக் கிடக்கின்றது.

மலைக்கோவில் - சில தோற்றங்கள்







பிரநாளம்



குன்றுமேட்டின் தொடக்கத்தில் ஒரு மரத்தடி மேடையில் பிள்ளையார் குடிகொண்டுள்ளார். குறட்டு வாசல் திண்ணையுடன் கூடிய நுழைவாயில் மண்டபத்தை அடையக் கற்களாலான படிகள். நுழைவாயிலைக் கடந்து உள்

நுழைந்ததும் நந்தி மண்டபம். இந்த நந்தி மண்டபம் கோயிலின் தெற்குச் சுவரை நோக்கியமைந்துள்ளது. கோயிலினுள் நுழையவும் தெற்கு நோக்கிய வாசலே. பூட்டப்பெற்றிருந்தது. எனவே அர்த்தமண்டபம், கருவறை ஆகியவற்றைக் காண இயலவில்லை. அர்த்த மண்டபத்தின் கிழக்குப்பகுதிச் சுவரில் ஒரு கற்சாளரம் உள்ளது. சாளரம் வழியாகப் பார்த்தால், கருவறையில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம், சற்று நேரம் இருளில் பழகிய கண்களுக்குப் புலப்படுகிறது. சாளரத்துக்கு எதிரே ஒரு நந்தி மண்டபத்தில் உள்ள நந்தி, சாளரம் வழியே சிவலிங்கத்திருமேனியைக் காணுமாறு அமைத்திருக்கிறார்கள். கருவறைச் சுவர்களில் தேவ கோட்டங்கள் உண்டு. அர்த்தமண்டபச் சுவர்களில் இல்லை. தேவ கோட்டங்களில் பிற்கால இணைப்பாகத் தென்முகக் கடவுள், அண்ணாமலையார்(இலிங்கோத்பவர்) ஆகிய சிற்பத் திருமேனிகள். கற்றளியின் அதிட்டானப் பகுதி, தரை மட்டத்தில் ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டிகை ஆகியவற்றைக் கொண்டுள்ளது. சுவர்களின் அரைத்தூண்களில் சோழர் காலப் போதிகை அமைப்பு உள்ளது. அடுத்துள்ள கூரைப்பகுதியில், கூடுகளும், யாளி வரிசையும் காணப்படுகின்றன. கற்றளி அமைப்பைச் சுற்றிலும் செங்கற்களாலான சன்னதிகள். முருகன், பிள்ளையார், சண்டேசுவரர், கால வைரவர் ஆகியோர்க்கு. சண்டேசுவரர் சன்னதிக்கு எதிரே, கருவறையின் வடக்குப்பக்கத்தில், கருவறையின் தளத்திலிருந்து திருமஞ்சன நீர் வெளியேறப் பயன்படும் பிரநாளம் என்னும் உறுப்பு உள்ளது.

**கல்வெட்டுகள்:**

அர்த்தமண்டபத்தின் நுழைவாயிலின் நிலைக்கால்கள் இரண்டிலும் இரு கல்வெட்டுகள், பிள்ளையார் சன்னதிச் சுவரில் ஒரு கல்வெட்டு, தூண் ஒன்றின் சதுரப்பகுதியில் ஒரு கல்வெட்டு, சாளரத்தின் கீழ் அதிட்டானத்துப் பட்டிகையில் ஒரு கல்வெட்டு, சண்டேசுவரர் சன்னதிக்கு எதிரே பிரநாளத்துக்கருகில் அதிட்டானத்துக் குமுதத்தில் ஒரு கல்வெட்டு என ஆறு கல்வெட்டுகள் இக்கோயிலில் கண்டறியப்பட்டன. கல்வெட்டுகள் பல இடங்களில் தேய்மானம் கொண்டுள்ளதால் முழுமையாகப் படிக்க இயலாவிடினும், நான்கு கல்வெட்டுகள், கல்வெட்டுகள் எந்த அரசர்கள் காலத்தில் வெட்டப்பட்டன என்னும் பயனுள்ள செய்தியைத் தருகின்றன.

மேலும், கல்வெட்டுகளின் காலத்தில் நடைமுறையில் இருந்த, கொங்கு மண்டலத்தின் நாட்டுப் பிரிவுகள் யாவை என்னும் செய்தியும் நமக்குக் கிட்டுகின்றது. கொங்குச்சோழனான வீரராசேந்திரனின் கல்வெட்டுகள் மூன்றும், கொங்குப்பாண்டியன் வீரபாண்டியனின் கல்வெட்டு ஒன்றும் ஆக நான்கு கல்வெட்டுகள் மேற்குறித்த செய்திகளைக் கூறுகின்றன.

**கொங்குச் சோழன் வீரராசேந்திரன்:**

கொங்குச்சோழனான வீரராசேந்திரனின் ஆட்சிக்காலம் கி.பி. 1207-1256. இவன் தன் ஆட்சிக்காலத்தில், தென் கொங்கில் 1207 முதல் 1221 வரையிலும், பின்னர் வடகொங்கு, தென்கொங்கு ஆகிய இரு பகுதிகளையும் சேர்த்து 1256 வரையிலும் ஆட்சி செய்துள்ளான். நாற்பத்தொன்பது ஆண்டுகள் ஆட்சி செய்த அரசன் இவன் ஒருவனே. இக்கோயிலில் கிடைக்கும் இவ்னது கல்வெட்டுகள், இவனுடைய 14-ஆம் ஆட்சியாண்டில் ஒன்று, 18-ஆம் ஆட்சியாண்டில் இரண்டு என அமைகின்றன. 14-ஆம் ஆட்சியாண்டு, கி.பி. 1221 ஆகும். எனவே, கோயிலின் காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பதும், கோயில் 800 ஆண்டுகள் பழமை வாய்ந்தது என்பதும் கல்வெட்டுச் சான்றுகளால் பெறப்படுகிறது.

**கொங்குச் சோழன் வீரராசேந்திரனின் கல்வெட்டு-1:**

பிள்ளையார் சன்னதிச் சுவரில் ஒற்றைக்கல்லில் வெட்டப்பட்ட கல்வெட்டு கி.பி. 1221-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இதன் பாடம் கீழ் வருமாறு:

1 **ஸ்வஸ்தி சிரீ கோவிராச கெசரி ப**
2 **ந்மரான திரிபுவன சக்கரவத்திக**
3 **சிரீ வீரராசேந்திர தேவற்கு யாண்டு பதிநா**
4 **லாவது (வீர)சோழமண்டலத்து வெங்கால நாட்**
5 **டுப் பழநாகந் பள்ளி வெள்ளாழரில் அந்துவ**
6 **ரில் (பெவ)க்கந் வஞ்சிவேளா(னா)ன ...கோயிலில்**
7 **.....இ..............................**

வீரராசேந்திரனின் கல்வெட்டு-பிள்ளையார் சன்னதிச் சுவர்



**விளக்கம்:**

கொங்குச் சோழன் வீரராசேந்திரனின் பதிநாலாவது ஆட்சியாண்டான கி.பி. 1221-இல் பழநாகந் பள்ளி என்னும் ஊரைச் சேர்ந்த அந்துவன் குலத்து வெள்ளாளரில் வஞ்சி வேளான் என்பவன் இக்கோயிலுக்கு ஒரு நிவந்தம் (கொடை) அளித்துள்ளான் என்பது கல்வெட்டுச் செய்தியாகும். சோழர்கள் காலத்தில் தமிழகம் மண்டலம், கோட்டம், நாடு ஆகிய நிருவாகப் பிரிவுகளைக் கொண்டிருந்தன. கரூர்ப் பகுதி வீரசோழ மண்டலம் என்னும் மண்டலப் பிரிவின்கீழ் இருந்துள்ளது. கொங்கு நாடு இருபத்து நான்கு நாட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதில் கரூர்ப் பகுதி வெங்கால நாட்டின்கீழ் அமைந்திருந்தது. கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் பழநாகன் பள்ளி என்னும் ஊர் தற்போது நாகம்பள்ளி என்னும் பெயரில் அமைந்துள்ளது. இக்கோயில் உள்ள பகுதி இன்றும் நாகம்பள்ளி ஒன்றியத்தில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. வரலாற்றறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் தம்முடைய “சமணமும் தமிழும்” நூலில் பழநாகந் பள்ளியைப் பற்றிக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்:

"பழநாகப்பள்ளி: கரூர் தாலூகா நாகம்பள்ளி கிராமத்தில் உள்ள மகாபலீஸ்வரர் கோவில் மண்டபத்தில் உள்ள சாசனம் திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழ தேவர் காலத்தில் எழுதப்பட்டது. இச்சாசனத்தில் பழநாகப்பள்ளிக் கோயிலுக்கு திருவிளக்குத் தானம் செய்யப்பட்ட செய்தி கூறப்படுகிறது. இதில் குறிக்கப்பட்ட பழநாகப்பள்ளி என்பது சமணக் கோயில் என்பதில் ஐயமில்லை. இதனால் இங்குப் பண்டைக் காலத்தில் சமணர் இருந்தது அறியப்படுகிறது."

**கொங்குச் சோழன் வீரராசேந்திரனின் கல்வெட்டு-2:**

அர்த்தமண்டபத்து வாயிலின் நிலைக்கால்கள் இரண்டில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. அவற்றில் முதலாவது கல்வெட்டு கி.பி. 1225-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இதன் பாடம் கீழ் வருமாறு:

1 (ஸ்வஸ்)தி ஸ்ரீ கோவி(ராச)
2 கேசரி பந்ம(ரான)
3 (திரி) புவந சக்(கரவத்தி)
4 (க)ள் ஸ்ரீ வீரரா(சேந்)
5 திர தேவற்கு யா(ண்)
6 டு பதிநெட்டா(வது)
7 (வீ)ர சோழ மண்(டலத்)
8 து வெங்கால..........
9 பழநாக(ந் பள்)ளி
10 (வே)ளாழந் ஆ(ந்தை)
11 (க)ளில்.............
12 (நான) புருஷ(மா)
13 (ணி)க்க(நேன்)
14 .....................வ..............
15 .............(ஆ)ளுடை(யாற்)
16 (கு) வச்ச சந்(தி)
17 (விளக்)கொந்(றுக்)
18 கு ஒடுக்கிந பொ(ன்)
19 ...............கழஞ்சு.....

20 **கோயில் கா(ணி)**

21 **(உ)டைய சிவ**

22 **(பிராமண)ந் ....**

வீரராசேந்திரனின் கல்வெட்டு- நிலைக்கால்-1



**விளக்கம்:**

கொங்குச் சோழன் வீரராசேந்திரனின் பதினெட்டாவது ஆட்சியாண்டான கி.பி. 1225-இல் பழநாகந் பள்ளி என்னும் ஊரைச் சேர்ந்த (ஆந்தை) குலத்து வெள்ளாளரில் புருஷமாணிக்கன் என்பவன் இக்கோயிலுக்கு சந்தி விளக்கு ஒன்று எரிப்பதற்காக கழஞ்சு என்னும் பொன் கொடையாக அளித்துள்ளான். இப்பொன்னைக் கோயிலில் பூசை செய்யும் உரிமை (கோயில் காணி) பெற்ற சிவப்பிராமணன் ஒருவன் பெற்றுக்கொண்டு மேற்படி சந்தி விளக்கு எரிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்கிறான் என்பது கல்வெட்டு தெரிவிக்கும் செய்தியாகும்.

**கொங்குச் சோழன் வீரராசேந்திரனின் கல்வெட்டு-2:**

அர்த்தமண்டபத்து வாயிலின் நிலைக்கால் கல்வெட்டுகளில் இரண்டாவது கல்வெட்டும் கி.பி. 1225-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இதன் பாடம் கீழ் வருமாறு:

1 **ஸ்வஸ்தி ஸ்ரீ (கோ)**
2 **விராசகே(சரி)**
3 **(ப)ந்மராந திரி(பு)**
4 **(வந) சக்கரவத்திகள்**
5 **(ஸ்ரீ)வீரராசேந்தி**
6 **(ர தேவ)ற்கு யாண்டு**
7 **(ப)திநெட்டா**

வீரராசேந்திரனின் கல்வெட்டு- நிலைக்கால்-2



**விளக்கம்:**

கொங்குச் சோழன் வீரராசேந்திரனின் பதினெட்டாவது ஆட்சியாண்டான கி.பி. 1225-இல் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. கொடை பற்றிய செய்திகள் தெரியவில்லை. முதல் ஏழு வரிகளுக்குப் பின்னர் எழுத்துகள் தேய்ந்துள்ளதால் முழுச் செய்தியும் அறியக்கூடவில்லை.

**கொங்குப்பாண்டியன் வீரபாண்டியனின் கல்வெட்டு:**

தூண் ஒன்றின் சதுரப்பகுதியில் ஒரு கல்வெட்டு இருப்பதாக முன்னர் குறிப்பிட்டோம். தென்முகக் கடவுளின் கோட்டச் சிற்பத்தின்கீழ் படிக்கட்டாகக் கிடத்தப்பட்டுள்ள ஒரு தூணின் இரண்டு சதுரப்பகுதிகளில் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இது கொங்குப் பாண்டியர்களில் வீரபாண்டியனின் கல்வெட்டாகும். கல்வெட்டில் இவனது ஆட்சியாண்டு குறிக்கப்பெற்ற பகுதியில் எழுத்துகள் தேய்ந்துள்ளதால் கல்வெட்டின் காலத்தைத் துல்லியமாகச் சொல்ல இயலவில்லை. வீரபாண்டியனின் ஆட்சிக்காலம் கி.பி. 1265-1285. எனவே, கல்வெட்டு 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பது பெறப்படுகிறது. இதன் பாடம் கீழ் வருமாறு:

**முதல் சதுரப்பகுதி:**

**1 கோப்பர**
**2 கேசரி பன்**
**3 மரான திரி**
**4 (பு)வனச் (சக்ர)**
**5 வத்திக**
**6 (ள்) ஸ்ரீ வீ(ர)**
**7 (பா)ண்டி(ய)**
**8 தேவற்கு**
**9 (யா)ண்டு...**
**10 ...வது வீ(ர)**
**11 சோழ ம**
**12 (ண்)டலத்**

**இரண்டாம் சதுரப்பகுதி - மேற்படிக்கல்வெட்டின் தொடர்ச்சி:**

**13 து வெங்**

**14 கால நாட்**

**15 டு ...நாக**

**16 (ந்ப)ள்ளி**

வீரபாண்டியனின் கல்வெட்டு - தூண்



**விளக்கம்:**

அரசன் பெயர், வெங்கால நாட்டுப்பெயர், (பழ)நாகந்பள்ளி என்னும் ஊர்ப்பெயர் ஆகியவை மட்டுமே கல்வெட்டில் காணப்படுகின்றன. கொடை பற்றிய செய்திகள் அமைந்த பகுதியில் எழுத்துகள் முற்றிலும் தேய்ந்துவிட்டதால் செய்திகள் அறியப்படவில்லை.

**புங்கம்பாடி - சிவன்கோயில்:**

மலைக்கோவிலைப் பார்த்துக் கல்வெட்டுகளையெல்லாம் ஒளிப்படம் எடுத்தபின்னர் நாங்கள் சென்ற இடம் புங்கம்பாடி. புங்கம்பாடி செல்லும் வழியில் கொளிஞ்சிவாடி என்னும் சிற்றூர்ப் பகுதியில் தொல்லியல் சின்னங்களுள் ஒன்றான நெடுங்கல் (MENHIR) ஒன்றைக்கண்டோம். மிகவும் உயரமானதொன்றல்ல. அடுத்து, புங்கம்பாடியில் இருக்கும் பழமையான சிவன் கோயிலைப் பார்வையிட்டோம். கோயில் பழமையான தோற்றத்தைக் கொண்டிருந்தது. கோயிலின் பெரிய வளாகத்தை உள்ளடக்கி நெடிதுயர்ந்த ஒரு சுற்றுமதில் எழுப்பப்பட்டுள்ளது. அதன் கட்டுமானம் பழமையை எடுத்துக்காட்டிற்று. மதிற்சுவரின் அடித்தளத்தில் மூன்று வரிசை கல்கட்டுமானம். அதனை அடுத்துச் செங்கல் கட்டுமானம். காரைப்பூச்சு ஏதுமின்றி செங்கல் மட்டுமே தோற்றமளித்தது. செங்கல் கட்டுமானத்தில் காணப்பட்ட நேர்த்தியும் தோற்றப் பொலிவும் குறிப்பிடத்தக்கவை. சுவரின் உச்சியில் செங்கற்கள் கலையழகுடன் வடிவமைக்கப்பட்டிருந்ததைப் பார்த்ததும், இது போன்ற சுற்றுமதிலைக் கூத்தம்பூண்டி பாண்டியர்காலக் கோயிலில் கண்டது நினைவுக்கு வந்தது. நுழைவாயிலில் தூண்களோடு கூடிய குறட்டு வாசல் அமைப்பு - இரு புறமும் திண்ணையோடு - உள்ளது. அதன் இருபுறமும் இரு சன்னதிகள், சூரிய சந்திரர்க்கு.

புங்கம்பாடி - சிவன்கோயில் - சில தோற்றங்கள்





கோயில் மதிற்சுவரின் அழகிய தோற்றங்கள்





குறட்டு வாசலையடுத்து நந்தி மண்டபம். அதனையடுத்து முன்மண்டபம். முன்மண்டபத்தின் உட்பகுதியில் உள்ள கற்றூண்களில், இக்கோயிலின் உருவாக்கத்துக்குத் துணை நின்ற பாளையக்காரத் தலைவர்கள் அல்லது ஜமீந்தார்களது உருவச் சிலைகள் காணப்படுகின்றன. சிற்பங்களில் தலைப்பாகையும், தலையின் ஒரு பக்கமாகச் சரிந்த கொண்டை முடியும், காதணிகளோடு கூடிய நீண்ட செவிகளும், பெரிய மீசையும், கழுத்தணிகளும், இடையில் குறு வாளும் என அமைந்த தோற்றம் நாயக்கர் காலச் சிற்பக்கலையின் தொடர்ச்சியைக் காட்டுவனவாக உள்ளன.

கோயிலின் கருவறை விமானம், ஒரு தள விமானம் ஆகும். நாகரம் என்னும் சதுர அமைப்பைக்கொண்ட விமானம். முறையான பேணுதல் இன்றி கருவறையின் மேற்கூரை, விமானத்தின் செங்கற்தளம் ஆகியவை சிதைவுற்றுள்ளன. கூரைப் பகுதிகளில் செடிகள் முளைத்துள்ளன. முன்மண்டபத்தின் தென்பகுதிச் சுவர்ப்பகுதியில், முற்றாகக் கற்கள் கட்டுமானத்திலிருந்து கழன்று விழுந்துவிட்டிருக்கின்றன. கற்கள் விழுந்த நிலை, சுவர்கள் எவ்வாறு உறுதியாக எழுப்பப்படுகின்றன என்பதை எடுத்துக்காட்டுகின்றன. சுவரின் உட்புறமும், வெளிப்புறமும் உறுதியான

கற்கள் நடுவில் இடைவெளி விட்டு அடுக்கப்படுகின்றன. இடைவெளியில் சிறு சிறு கற்களும் சுண்ணாம்புக் காரையும் கலந்து இருபுறக் கற்களையும் பிணைக்கின்றன. இயல்பாகக் கரடு முரடாக இருக்கும் கற்கள், நம் பார்வை படும் பரப்பில் நன்கு செதுக்கப்பட்டும் இழைக்கப்பட்டும் சமனாக்கப்படுகின்றன.

**கல்வெட்டுகள்:**

கோயிலில் இரு கல்வெட்டுகள் உள்ளன. முன்மண்டப வாயிலின் இடப்பக்கம் சுவரில் ஒரு கல்வெட்டு. மற்றொன்று மடப்பள்ளிச் சுவரில். முன்மண்டபச் சுவர்க் கல்வெட்டு கி.பி. 1702-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. மடப்பள்ளிச் சுவர்க் கல்வெட்டு மிகவும் அணமைக் காலத்தது. கல்வெட்டில் காலக்குறிப்பேதுமில்லை. கோயில் முந்நூறாண்டுப் பழமை கொண்டது என்பதை மேற்படிக் கல்வெட்டுச் சான்றால் அறிகிறோம்.

முன்மண்டபச் சுவர்க் கல்வெட்டு



**முன்மண்டபச் சுவர்க் கல்வெட்டு:**

1 **ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாத்தம் வரு. 1624 கலியுக சகார்த்தம் வரு.**

2 4803 ...(கு செல்லாநின்(ற) சித்திரபானு வரு. ஆனி மாசம் 13 தேதி சுக்கிறவார(த்)தில்

3 த்ரயோதெசி ரோகிணி ..(இ) சூல நாம யோகம் ......

4 ................இப்படிபட்ட சுபதினத்தில்

**விளக்கம்:**

கல்வெட்டில் காலக்குறிப்பு உள்ளது. சாலிவாகன ஆண்டு 1624, கலியுக ஆண்டு 4803 ஆகியன குறிக்கப்பெறுகின்றன. இரு ஆண்டுக்கணக்குகளும் கி.பி. 1702-ஆம் ஆண்டைச் சரியாகச் சுட்டுகின்றன. இந்த ஆண்டில் கோயில் திருப்பணி நடைபெற்றதாகக் கருதலாம். அறுபது ஆண்டுகள் கொண்ட வட்டத்தில் வருகின்ற தமிழ் ஆண்டான சித்திரபானு ஆண்டும் கி.பி. 1702-உடன் பொருந்துகிறது. மாதம் (ஆனி), கிழமை (சுக்கிறவாரம்), திதி (திரயோதசி), நட்சத்திரம் (ரோகிணி), யோகம் (சூலம்) ஆகிய பஞ்சாங்கக் குறிப்புகள் இக்கல்வெட்டில் தரப்பட்டுள்ளன. கரணம் என்னும் குறிப்பு மட்டும் இல்லை.

**மடப்பள்ளிச் சுவர்க் கல்வெட்டு:**



மடப்பள்ளிச் சுவர்க் கல்வெட்டு

தடவை கோயில் காணியாளனாகிய
ஆண்டியப்ப பிள்ளை குமாரன்
குமாரசுவாமி பிள்ளையவர்கள்
மீனாட்சி சுந்தரேசுபரர்
சன்னதி கட்டிவிச்ச
உபயம்

**விளக்கம்:**

கல்வெட்டு மிகவும் அண்மைக்காலத்தது என்று முன்னரே குறிப்பிட்டுள்ளோம். காலக் குறிப்புகள் கல்வெட்டில் இல்லை. கோயிலின் திருப்பணியாக மீனாட்சி சுந்தரேசுவரரின் சன்னதியைக் கட்டுவித்த செய்தியைக் கல்வெட்டு கூறுகிறது. திருப்பணி செய்தவர், மன்னர் காலத்தில் கோயிற்காணி உரிமை பெற்ற ஒருவரின் குடி வழியினர் என்பதைத் "தடவை கோயில் காணியாளனாகிய"என்னும் தொடர் குறிக்கிறது. அவர் தற்போது "தடா கோயில்" என்று அழைக்கப்பெறும் ஊரினர். "தடா கோயில்" என்று தற்போது அழைக்கப்பெறும் ஊர், பண்டைய நாள்களில் "தடவை கோயில்" என்னும் பெயரால் வழங்கிற்று என்பதை இக்கல்வெட்டால் அறிகிறோம்.

**குடகனாற்றுப் பாறைக்கல்வெட்டுகள்:**

புங்கம்பாடி மீனாட்சி சொக்கநாதர் கோயிலைப் பார்த்துவிட்டு, அடுத்து நாங்கள் சென்ற இடம் குடகனாற்றுப் பாலம். புங்கம்பாடி ஆத்துமேடு-மேல்கரை என்று மக்கள் குறிப்பிடும் அந்த இடத்தில் பாலத்தடியில், பாறைப்பரப்பில் இரு கல்வெட்டுகளை நண்பர் கண்டறிந்து வைத்துள்ளார். தொல்லியல் தடயங்களைத் தேடும் ஆர்வமும் அறிவும் உடையவர்கள் மட்டுமே இவை போன்ற கல்வெட்டுகளை இனம் காண முடியும். புதிய கண்டுபிடிப்புகள் தருகின்ற மகிழ்ச்சி இந்தப் பாறைக்கல்வெட்டுகளைக் கண்டபோதும் எழுந்தது. இரு கல்வெட்டுகளில் ஒன்று அரபு எழுத்துகளில் பொறிக்கப்பட்டிருந்தது. வேற்று மொழிக் கல்வெட்டுகள் கிடைப்பது மிகவும் அரிதான ஒன்று. மற்ற கல்வெட்டு தமிழ்க்கல்வெட்டு. தமிழ்க்கல்வெட்டின் எழுத்துகள் நேர்த்தியாகப் பொறிக்கப்படவில்லை. எழுத்துகளும் பல

காரணங்களால் தேய்ந்துவிட்டன. எனவே, தமிழ்க்கல்வெட்டு சுட்டும் செய்திகள் தெரியவில்லை.

**பத்தாம் நூற்றாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு:**



சுனை நீர்ப்பள்ளம்

பயணத்தின் இறுதியாக நாங்கள் சென்று பார்த்தது மொட்டை ஆண்டவர் திருக்கோவில். அரவக்குறிச்சி வட்டத்தில் கணக்குவேலம்பட்டி என்னும் ஊரில் இக்கோவில் அமைந்துள்ளது. கோயில் அமைந்துள்ள இடம் ஒரு சிறிய கரட்டுக் குன்று இருக்குமிடம் ஆகும். சிறு குன்றுப்பாதையில் சற்றே மேலே ஏறிச் சென்றால் சமதளமாகக் காணப்படும் பெரிய பாறைப்பரப்பு. ஓரிடத்தில் பசிய இலைகள் படர்ந்து நிற்கும் சுனை நீர்ப்பள்ளம். மற்றோரிடத்திலும் சிறிய சுனை ஒன்று. பாறைப்பரப்பைக் கடந்து சற்று மேலே சென்றால், பெரிய குன்றுப்பாறையின் கீழ் சிறிய குகைத் தளம். சமணத்துறவிகள் தங்கியிருக்கும் படுக்கையும் காணப்படுகிறது. குகைத் தளத்துள் நீர் புகுந்துவிடாமல் பாறையின்மீது மழைநீர் வடிந்து வெளியேறக் கல்லில் விளிம்பு வெட்டியிருக்கிறார்கள். குகை அமைப்பு மிகச் சிறிது. மற்ற இடங்களில் இருப்பதுபோல், பாறையே கூரையாக மடிந்து காணப்படும் சூழல்

இங்கு இல்லை. இதுபோன்ற இடங்களில், கூரை போன்ற செயற்கை அமைப்பு உருவாக்கப்படும். அதற்கேற்றவாறு, பாறையில் குழிகளை அமைப்பது வழக்கம். பாறையில் அத்தகைய குழிகள் காணப்படுகின்றன.

குகைத்தளத்திலிருந்து திரும்பும் வழியில் பாறைச் சமதளத்தில் தாம் கண்டுபிடித்த வட்டெழுத்துக் கல்வெட்டினைத் தேடிக்கொண்டிருந்தார் நண்பர். செந்நிறம் கொண்ட பாறை முழுதும் வரிவரியாக ஓவியம் போல, எங்கு பார்த்தாலும் எழுத்துப்போலவே தோற்றமளித்து நம்மை மயங்கவைத்தது. முடிவில் கல்வெட்டு இருக்குமிடம் கண்டுபிடிக்கப்பட்டது. நிறைய எழுத்துகள் இருந்திருக்க வேண்டும். ஆனால், ஆறு எழுத்துகள் கொண்ட ஒரு வரியும் அதன்கீழ் ஒன்றன்கீழ் ஒன்றாக இரண்டு எழுத்துகளுமே தற்போது காணப்படுகின்றன. கல்வெட்டு அறிஞர் திரு.பூங்குன்றன் அவர்களிடம் இக்கல்வெட்டின் படத்தைக் காண்பித்துக் கருத்துக் கேட்டபோது, இது பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டாகும் எனக் கூறினார். கல்வெட்டின் பாடத்தைப் படிப்பது இன்னும் ஆய்வு நிலையிலேயே உள்ளது.

வட்டெழுத்துக் கல்வெட்டு





**முடிவுரை:**

அரவக்குறிச்சிப் பகுதியில் இதுவரை வெளிப்படாத தொல்லியல் தடயங்களான, மலைக்கோயில் சிவன்கோயில் கல்வெட்டுகள், நடுகல், புங்கம்பாடிச் சிவன் கோயில் கல்வெட்டு, குடகனாற்றுப் பாறை அரபுக் கல்வெட்டு, சமணக் குகைத்தளம், ஆதிநாதர் சிற்பம், வட்டெழுத்துக் கல்வெட்டு ஆகியவற்றைக் கண்டு அவை பற்றிய பல வரலாற்றுச் செய்திகளை அறிந்து பகிர்ந்து கொள்ளக் கிடைத்த வாய்ப்பு மிகுந்த மகிழ்வையும் நிறைவையும் அளித்த்து. தொல்லியல் சார்ந்த ஆய்வுகளில் ஈடுபடும், பாராட்டுக்குரிய வரலாற்று ஆர்வலர் சுகுமாரன் பூமாலை போன்ற இளைஞர்கள் நிறைய முன்வரவேண்டும்.

நன்றி:

துணை நின்றவர்: திரு. இராமச்சந்திரன், தொல்லியல் துறை (பணி நிறைவு), சென்னை.

தொல்லியல் தேடலுக்கு மூலமாய் நின்றவர்: திரு. சுகுமார் பூமாலை.

---

தொடர்பு: து.சுந்தரம்

doraisundaram18@gmail.comகல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.அலைபேசி : 9444939156.

## 18. ஆதி மனிதர்கள் வாழ்ந்த அத்திராம்பாக்கம்

*—சிங்கநெஞ்சம் சம்பந்தம்*

வரலாற்றிற்கு முந்தைய இந்திய தொல்லியலின் தந்தை எனப் போற்றப்படும் இராபர்ட் ப்ரூஸ் ஃபுட் (Robert Bruce Foote) அவர்களின் தொல்லியல் பயணம் 1863 ஆம் ஆண்டு மே மாதம் 30 ஆம் தேதி, பல்லாவரத்தில் துவங்கியது. அன்றுதான், இன்றைய விமான நிலையம் உள்ள பகுதிக்கு எதிரே உள்ள கண்டோன்மென்ட் மைதானத்தின் அருகே ஈட்டி போன்று ஒரு முனையில் மட்டும் கூறாக இருந்த கல்லாயுதம் ஒன்றை அவர் கண்டு பிடித்தார். இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட முதல் கல்லாயுதம் இதுதான். தொடர்ந்து வந்த மாதங்களில் பல்லாவரம் பகுதியில் கைக்கோடரி கல்லாயுதங்கள் இரண்டு கிடைத்தன.




அந்த ஆண்டின் செப்டம்பர் மாதம் இன்றைய திருவள்ளூர் மாவட்டத்தில் புவியியல் பணியைத் தொடர்ந்தபோது, அத்திராம்பாக்கதிற்கு அருகே, கொற்றலையாற்றில் கலக்கும் ஒரு ஓடைப் படுகையில் இரண்டு பழங்கற்கால ஆயுதங்களை ஃபுட் அவர்களின் சக பணியாளர் வில்லியம் கிங் (William King) கண்டுபிடித்தார். சில நிமிடங்களிலேயே ஃபுட் அவர்களும் தன்

பங்கிற்கு சில பழங்கற்கால ஆயுதங்களைக் கண்டுபிடித்தார். இது ஒரு துவக்கம்தான். தொடர்ந்து வந்த நாட்களில் அந்தப் பகுதியில் கொற்றலை ஆற்றின் கரைகளிலும், அதற்கு வடக்கே உள்ள நாரணவீரம் ஆற்றங்கரைகளிலும் நூற்றுக்கணக்கான பழங்கற்கால ஆயுதங்களை இருவரும் சேர்ந்து சேகரித்தனர்.

அருகேயுள்ள பகுதிகளிலிருந்து அடித்துக்கொண்டுவரப்பட்டு ஆற்றுப் படுகைகளில் கிடக்கும் கல்லாயுதங்கள் மட்டுமன்றி, இருந்த இடத்திலேயே இருக்கும் கல்லாயுதங்கள் பலவும் இந்தப் பகுதிகளில் கிடைத்தன. இவை சுமார் எட்டு முதல் பத்தடி ஆழத்தில் செம்புராங்கல்லும் கூழாங்கற்களும் கலந்துள்ள படுகைகளில் காணப்படுகின்றன. இந்தக் கல்லாயுதங்கள் உருவான காலத்தில் வாழ்ந்த உயிரினங்களின் எச்சங்களை செம்புராங்கல்லில் உள்ள இரும்பு ஆக்சைட் அரித்து விட்டிருக்கும் என ஃபுட் கருதுகிறார். இவற்றிற்குக் கீழே செம்புராங்கல் படிவங்களும், இதற்கும் கீழே தாவர தொல்லுயிர் எச்சங்கள் (PLANT FOSSILS) தாங்கிய மேல் கோண்டுவானா படிவங்களும் அமைந்திருக்கின்றன. வல்லக்கோட்டை அருகே இந்த கோண்டுவானா படிவங்களில் மூன்றடி நீளமும் ஒரு அடி விட்டமும் கொண்ட கல்மரம் (FOSSILWOOD) ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டது. இந்தப்படிவங்களில் கடல்வாழ் உயிரினங்களின் எச்சங்களும் (MARINE FOSSILS) அபூர்வமாகக் கிடைக்கின்றன. கல்லாயுதங்கள் மட்டுமன்றி, முன்னோர்கள் வாழ்ந்ததற்கு அடையாளமாக ஈமச்சின்னங்கள் பலவும் இந்தப் பகுதிகளில் இவ்விருவராலும் கண்டறியப்பட்டன.

முழுமையாக உருப்பெற்ற கல்லாயுதங்கள் மட்டுமன்றி, அரைகுறையாய் உள்ள கல்லாயுதங்களும் அவற்றைச் செதுக்கும்போது உடைந்த சில்லுகளும் குவியல்களாக, குப்பிடு எனும் கிராமம் அருகே கிங் அவர்களால் 1863ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இனம் காணப்பட்டன. இதன் அடிப்படையில் இங்கே கல்லாயுதம் தயாரிக்கும் தொழிற்சாலையே ( MADRAS STONE AXE FACTORY) இருந்திருக்கலாம் என்று கிங் கருத்து வெளியிட்டார்.

PIONEERS IN SOUTH INDIAN GEOLOGY




ROBERT BRUCE FOOTE



WILLIAM KING




PALAEOLITHIC IMPLEMENTS DISCOVERED BY BRUCE FOOTE IN PALLAVARAM, CHENNAI, 30th MAY, 1863



PALAEOLITHIC IMPLEMENT DISCOVERED IN ATHIRAMPAKKAM, by FOOTE and KING of GSI, 1863













இந்தப் பகுதிகளில் கிடைத்துள்ள கல்லாயுதங்கள் அனைத்துமே வன் கற்களான குவார்ட்சைட் பாறைகளால் ஆனவை என்பது குறிப்பிடத்தக்கது. கல்லாயுதங்கள் செய்யப்பட்ட கற்களையும் , அல்லிக்குழி கங்லாமெரேட் கூழாங்கற்களையும் ஒப்புநோக்கிய ஃபுட், இந்தக் கல்லாயுதங்கள் செய்யப்

பயன்பட்ட குவார்ட்சைட் கற்கள், அல்லிக்குழி கங்லாமெரேட் கூழாங்கற்களே என்று கருத்து தெரிவித்துள்ளார்.




A PALAEOLITHIC IMPLEMENT FROM ATHTHIRAMPAKKAM - METALLIC MODEL
COUTESY: RAMESH YANTHRA

அத்திராம்பாக்கதிலும் அதைச் சுற்றியும் , பழங்கற்கால கல்லாயுதங்கள் கிடைத்தப் பகுதிகளை கூகுள் பதிமத்தில் பதிவிட்டுப் பார்த்தபோது இவையனைத்தும் பழைய பாலாற்றின் கழிமுகப் பகுதியிலேயே கிடைக்கின்றன என்பது தெளிவாகிறது. வரைபடத்தில் பழங்கற்கால ஆயுதங்கள் ( both in situ and transported) கிடைத்த இடங்களில் சில பச்சை நிறத்தில் குறிக்கப்பட்டுள்ளது. மேற்கொண்டு தொல்லியல் ஆய்வுகள் நடந்த இடங்கள் இளஞ்சிவப்பு நிறத்தில் குறிக்கப்பட்டுள்ளது. பட்டறைப்பெரும்புதூர், நெய்வேலி, வடமதுரை போன்ற இடங்கள். அத்திராம்பாக்கமும் இதில் சேரும்.




N.B.: Luminescence dating at the stratified prehistoric site of Attirampakkam, India, has shown that processes signifying the end of the Acheulian culture and the emergence of a Middle Palaeolithic culture occurred at 385 ± 64 thousand years ago (ka), much earlier than conventionally presumed for South Asia1. The Middle Palaeolithic continued at Attirampakkam until 172 ± 41 ka.

- Nature volume554, pages97–101 (01 February 2018)

---

தொடர்பு: சிங்கநெஞ்சம் சம்பந்தம் (singanenjam@gmail.com)

## 19. அல்லிக்குழி கலவைக்கல் பாறைகள்

*—சிங்கநெஞ்சம் சம்பந்தம்*

தீக்குழம்பாய் சுழன்று கொண்டிருந்த புவிப்பந்து, குளிரத் தொடங்கியது. கெட்டிப் பட்டது. பாறைகள் தோன்றின. இவையே தீப் பாறைகள் அல்லது 'அழற் பாறைகள்' (IGNEOUS ROCKS). பின்னர் இந்த அழற்பாறைகள் அழுத்தத்திற்கும் வெப்பத்திற்கும் ஆட்பட்டு உருமாற்றம் அடைந்து 'உருமாற்றுப் பாறைகள்' (METAMORPHIC ROCKS) உருவாகின.

தொடர்ந்து நிகழ்ந்து வரும் தட்ப வெப்ப மாற்றங்களால், பூமியின் மேற்பரப்பிலுள்ள பாறைகள் இயற்பியல் மற்றும் வேதியியல் மாற்றங்களுக்கு உட்பட்டுச் சிதைவுற்று மணலாகவும், களிமண்ணாகவும் மாற்றமடைகின்றன. குவார்ட்சைட் போன்ற வன்பாறைகள் கற்களாக உடைந்து போகின்றன. கோணல் மாணலாகச் சிதைந்து போன குவார்ட்சைட் போன்ற வன்கற்கள் ஆறுகளில் உருட்டிக்கொண்டு வரப்படும்போது உருண்டை வடிவினைப் பெற்று வழுவழுப்பான கூழாங்கற்களாக மாறிவிடுகின்றன. ஆற்றங்கரைகளில் நாம் காணும் பெரும்பாலான கூழாங்கற்கள் குவார்ட்ஸ் அல்லது குவார்ட்சைட் கற்களாகவே இருக்கும்.

இந்த சிதைவுகள் காற்று, மழை மற்றும் ஆறுகளால் அடித்துக் கொண்டுவரப்பட்டு பெரிய ஏரி - கடல் போன்ற நீர் நிலைகளில் படிகின்றன.இந்த நிகழ்வு லட்சக்கணக்கான-கோடிக்கணக்கான ஆண்டுகள் தொடர்ந்து நடைபெறும்போது பல நூறு மீட்டர்கள் கனத்திற்குப் படிவங்கள் படிந்துவிடுகின்றன. இதனால் அடிப்பகுதியில் உள்ள படிவங்களில் அழுத்தமும் வெப்பமும் அதிகரிக்கின்றன. இதன் விளைவாகவும் இன்ன பிற புவியியல் மாற்றங்களாலும் படிவங்கள் பாறைகளாக கெட்டிப்பட்டு "படிவப் பாறைகள்" ( SEDIMENTARY ROCKS) உருவாகின்றன.

மணல் நிறைந்த படிவங்கள் மணற்பாறைகளாகவும் (SAND STONE), களிமண் நிறைந்த பகுதிகள் களிப்பாறைகளாகவும் (SHALE) உருப்

பெறுகின்றன. மாறாக நிறைய கூழாங்கற்களும், மணலும், களிமண்ணும் கலந்துள்ள படிவங்கள் கெட்டிப்படும்போது ‘கலவைப் பாறைகள்’( CONGLOMERATE) உருவாகின்றன. கடலை உருண்டையில் வெல்லப்பாகில் வேர்க்கடலைப் பருப்பு பொதிந்து இருப்பதுபோல் கங்லாமெரேட்டில், அதாவது கலவைப் பாறையில் களிமண்-மணல் குழம்பில் கூழாங்கற்கள் பொதிந்து கிடக்கின்றன.




PANORAMIC VIEW OF ALLIKKUZHI HILLS - UPPER GONDWANA CONGLOMERATES


ALLIKKUZHI HILLS – WELL EXPOSED UPPER GONDWANA CONGLOMERATE IN THE FORE FRONT

கங்லாமெரேட் பாறைகள் பெரும்பாலும் சிறு சிறு மேடுகளாகத்தான் இருக்கும் அல்லது ஆற்றங்கரைகளில் வெளிப்பட்டிருக்கும். அவை மலைகளாக அமைந்திருப்பது அபூர்வம். ஆனால் அல்லிக்குழி குன்றுகள் அப்படியல்ல.

அல்லிக்குழி குன்றுகள், சென்னையிலிருந்து அறுபது கி.மீ. வடமேற்கே,திருவள்ளூர் மாவட்டத்தில், ஆந்திர எல்லையில் அமைந்துள்ளன. இந்த குன்றுகள் கங்லாமெரேட் பாறைகளால் உருவாகியுள்ளன. இவை கீழ் கிரிட்டேஷியஸ் காலத்தில் ( சுமார் 13 கோடி ஆண்டிகளுக்கு முன்) உருவான கோண்டுவானா பாறைகள். இந்தப் பாறைகளில் உள்ள அழகிய வழுவழுப்பான குவார்ட்சைட் கூழாங்கற்கள் குசத்தலையாறு போன்ற ஆற்றங்கரைகளிலும் ஓடை ஓரங்களிலும் விரவிக் கிடக்கின்றன. இந்த கூழாங்கற்களைப் பற்றி இவ்வளவு பேசக் காரணம், இவற்றில் இருந்துதான் அத்திராம்பாக்கம் பகுதியில் வாழ்ந்த பழங்கற்கால மனிதர்கள் ஆயுதங்கள் தயாரித்திருக்கிறார்கள்.

படங்கள் உதவி: உதயன் மற்றும் இணையம்

---

தொடர்பு: சிங்கநெஞ்சம் சம்பந்தம் (singanenjam@gmail.com)

## 20. பழைய பாலாற்றின் கழிமுகம்

*—சிங்கநெஞ்சம் சம்பந்தம்*

சென்னையில் பாயும் கூவம் ஆறு, கொசத்தலையாறு (கொற்றலையாறு) ஆகியவை பழைய பாலாற்றின் கிளையாறுகளின் எச்சங்களே என்று ராபர்ட் ப்ருஸ் ஃபுட் (Robert Bruce Foote) கருதுகிறார். இவர் 1860 களில் சென்னையிலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் புவியியல் ஆய்வுகள் மேற்கொண்டவர், இந்திய புவியியல் ஆய்வுத்துறையில் புவியியலாளராக பணி புரிந்தவர். பின்னாட்களில், 'வரலாற்றிற்கு முந்தைய இந்தியத் தொல்லியலின் தந்தை' என்று புகழப்பட்டவர். கூவம், கொசத்தலை ஆற்றுப் படுகைகளின் அளவினைக் கண்ட இவர் இவை போன்ற சிறிய ஆறுகளால் இத்தனை பெரிய ஆற்றுப் படுகைகளை உருவாக்க முடியாது என்று கூறுகிறார்.




தமிழ்நாட்டின் புவியியல் வரைபடம், காவிரி ஆற்றின் கழிமுகப் பகுதியில் சுமார் 7000 ச.கி.மீ அளவிற்கும், தென்பெண்ணை ஆற்றின் கழிமுகப்

பகுதியில் 1300 ச.கி.மீ. அளவிற்கும் டெல்டாக்கள் உருவாகியிருப்பதைக் காட்டுகிறது. சற்றேறக்குறைய தென் பெண்ணை ஆற்றின் அளவிலான பாலாற்றின் கழிமுகப் பகுதியில் டெல்டா ஒன்றும் உருவாகவில்லை. மாறாக, திருவான்மியூர்-புலிக்காட் ஏரி - காவேரிப்பாக்கம் இவற்றிற்கு இடைப்பட்ட பகுதியில் சுமார் 1500 ச.கி.மீ. அளவிற்கு டெல்டா ஒன்று உருவாகியுள்ளது. ஆனால் தற்போது அங்கே பெரிய ஆறு எதுவும் பாயவில்லை; கூவம், கொசத்தலையாறு , அடையாறு போன்ற சிற்றாறுகள் தவிர.




இந்த சிற்றாறுகளால் இத்தனை பெரிய டெல்டா உருவாகியிருக்க முடியாது எனக் கூறும் ப்ருஸ் ஃபுட், ‘முற்காலத்தில் பாலாறு, காவேரிப் பாக்கம் பகுதியிலிருந்து, வடகிழக்கு திசையில் பாய்ந்து புலிக்காட் ஏரியின் தென்புறத்தில் கடலில் கலந்திருக்கக் கூடும்; பின்னாளில் புவியியல் காரணங்களால் திசை மாறி தற்போது சென்னையிலிருந்து 70 கி.மீ தெற்கே கடலில் கலக்கிறது', எனும் கருத்தை முன் வைக்கிறார். இவர் காலத்தில்

வானூர்தியிலிருந்து எடுக்கப்பட்டப் புவிப்படங்களோ, செய்கோள் பதிமங்களோ இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.




செய்கோள் பதிமங்கள் இன்றைய புவியியலாளர்களுக்குக் கிடைத்துள்ள மிகப் பெரிய வரப்பிரசாதம். இவற்றை உற்று நோக்குகையில் காவேரிப்பாக்கம் அருகேயிருந்து வடகிழக்கு நோக்கிச் செல்லும் ஆற்றின் தொல்தடச்சுவடுகள் தெளிவாகத் தெரிகின்றன. திருவான்மியூருக்கும் புலிக்காட் ஏரிக்கும் இடையே விரிந்திருக்கும் டெல்டாவின் மேற்கு முனை (டெல்டாவின் துவக்கப் பகுதி) காவேரிப்பாக்கதிற்கு அருகே பாலாற்றில்தான் ஆரம்பிக்கிறது. இவற்றையெல்லாம் பார்க்கும் போது ப்ரூஸ் ஃபுட் அவர்களின் கருதுகோள் சரியே எனத் தோன்றுகிறது.

திருவள்ளூர் மாவட்டத்தில் கொசத்தலையாற்றின் மருங்கே அமைந்துள்ள அத்திராம்பாக்கம், பட்டரைப் பெரும் புதூர், திருவள்ளூர், மேட்டுப்பாளையம்,வடமதுரை போன்ற இடங்களில் கற்கால மனிதர்கள் வாழ்ந்ததற்குச் சான்றுகளாக பல தடயங்களை தொல்லியலாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். இந்த கண்டுபிடிப்புகளுக்கு பிள்ளையார் சுழி போட்டதும் ப்ரூஸ் ஃபுட் அவர்கள்தான். 'நதிகளை நாகரிகத்தின் தொட்டில்கள்' என்பர்

வரலாற்று அறிஞர்கள். கற்கால மனிதர்கள் வாழ்ந்தபோது பெரிய ஆறு ஒன்று இங்கே பாய்ந்திருக்கலாம் என்பதற்கு தொல்லியல் தடயங்கள் வலு சேர்கின்றன. மீஞ்சூர் அருகேயுள்ள அரியலூரில் முற்றாக் கரி மற்றும் பெரும் மரத்துண்டுகள் கிடைப்பது, இந்தத் தொல்தடத்தில் பேராறு ஒன்று ஓடியிருக்க வேண்டும் என்பதை உறுதி செய்கிறது.




காவேரிப்பாக்கத்திற்கு அருகே இருந்து வடகிழக்காகப் பாய்ந்த பழைய பாலாற்றின் கிளை நதிகளோ அல்லது கிளை நதிகளின் மிச்சங்களோதான் இன்றைய கொசத்தலையாறும், கூவம் ஆறும் என்பது தெளிவாகிறது. எனில், சென்னை பழைய பாலாற்றின் கழிமுகம்தானே. அதுசரி, பாலாறு பாதை மாறியது எப்போது?

**பாலாறு பாதை மாறியது எப்போது?**

காஞ்சிபுரத்திலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் பதினான்கிற்கும் மேற்பட்ட திவ்யத்தலங்கள் உள்ளன, இத்தலங்களைப் பற்றிப் பாடப்பட்ட பாடல்கள் திவ்யப் பிரபந்தத்தில் ஐம்பதிற்கும் மேல் உள்ளன. ஆனால் எங்கேயும் பாலாறு எனும் சொல் கண்ணில் படவில்லை. வெஃகாணை உள்ளது. வேகவதி ஆற்றில் பெருக்கெடுத்த வெள்ளத்தைத் திருமால் கிடந்த

கோலத்தில் தடுத்து காஞ்சியைக் காத்தார் என்பது வைணவக் கதை. ஆக, வேகவதி இருந்திருக்கிறது, பாலாறு இல்லை. எனவே, பக்தி இலக்கியங்கள் தோன்றிய காலத்தில் (கி.பி. 8 - 9 ஆம் நூற்றாண்டு) இன்றைய பாலாறு வேகவதி ஆற்றின் வழித்தடத்தில் பாய்ந்தது என எண்ண இடம் உண்டு.

**பரணியில் பாலாறு:**

தமிழ் இலக்கியங்களில், கலிங்கத்துப்பரணியில்தான் முதன் முதலில் பாலாறு காணப்படுகிறது. காஞ்சியிலிருந்து கலிங்கம் நோக்கிப் படையெடுத்து செல்லும் கருணாகரத் தொண்டைமான் , வடபெண்ணையாற்றை அடையும் முன் வழியில் எந்தெந்த ஆறுகளைத் தாண்டினான் எனும் குறிப்பு, பரணியில் 376 ஆவது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பாலாறு குசைத்தலை பொன் முகரிப் பழவாறு**
**படர்ந்தெழு கொல்லிஎனும்**
**நாலாறும் அகன்று ஒரு பெண்ணை எனும்**
**நதியாறு கடந்து நடந்துடனே .......**

**(கலிங்கத்துப்பரணி 367).**

கலிங்கத்துப் பரணியின் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி. அப்போது காஞ்சிக்கு வடக்கே பாலாறு ஓடியிருக்கிறது. அதாவது வேகவதியாறு, பாலாறு எனும் பெயரை அப்போது பெற்றிருக்கிறது. இந்தப் பாட்டில் குசத்தலையாறும் குறிக்கப்படுவதால், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பாலாறு பாதை மாறிவிட்டது என அறிய முடிகிறது.

**பெரிய புராணத்தில் பாலாறு:**

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பாடிய பெரிய புராணத்தில், 'திருக்குறிப்புத் தொண்ட நாயனார்'என்ற பகுதியில் பாலாற்றின் வளமும் அது பாய்ந்தோடிய தொண்டை மண்டலத்தின் செழிப்பையும், மக்களின் வாழ்க்கை முறைகள், சைவ தலங்களின் சிறப்புகளையும் 11 பாடல்களில் விளக்கியுள்ளார்.

**'துங்க மாதவன் சுரபியின் திருமுலை சொரிபால்**
**பொங்கு தீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே**
**அங்கண் நித்திலம் சந்தனம் அகிலோடு மணிகள்**
**பங்க யத்தடம் நிறைப்பவந் திழிவது பாலி' - 1098**

(விளக்கம்: உயர்ந்த தவமுடைய வசிட்ட முனிவனிடமிருக்கும் காமதேனு சொரிந்த பாலானது, பெருகும் தீர்த்தமாக உருபட்டு நந்தி மலையினின்றும் இறங்கி, அங்குள்ள முத்துக்களையும் சந்தனம் அகில் முதலானவற்றுடன், மணிகளையும் கொணர்ந்து தாமரைக் குளங்களை நிறைக்குமாறு கீழ் நோக்கி ஓடி வருவது பாலாறு).




பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் காஞ்சியை ஆண்ட மன்னனின் ஆணைப்படி, குண்டு கோபால் ராவ் என்பவர் , பாலாற்றின் பாதையை மாற்றி அமைத்தார் என்று செவிவழிச் செய்தி ஒன்று உள்ளது. ஆனால் சான்றுகள் ஏதும் இல்லை.

காவேரிப்பாக்கத்திற்கு மேற்கே, ஓடை ஒன்று “விருத்தக்க்ஷிரா நதி’ எனும் பெயரில் அழைக்கப்படுவதாக ப்ருஸ் ஃபுட் தனது நினைவேட்டில் குறிப்பிடுகிறார். இந்த வட சொல்லின் தமிழாக்கம் ‘பழைய பாலாறு’ என்பதே.

---

தொடர்பு: சிங்கநெஞ்சம் சம்பந்தம் (singanenjam@gmail.com)

## 21. அன்னை மீனாம்பாள் சிவராஜ் ஆற்றிய தலைமையுரை

*—மீனாம்பாள் சிவராஜ்*

திருநெல்வேலி ஜில்லா ஆதிதிராவிடர் மகா நாடு

**ஸ்ரீமதி மீனாம்பாள் சிவராஜ்**

தலைமைப் பிரசங்கம்

**31 -1 -1937 இல் திருநெல்வேலி - ஆதிதிராவிடர் மாநாட்டில்**

அன்னை மீனாம்பாள் பேசியது :-

"ஒற்றுமையில்லாக் குடும்பம், ஒருமிக்கக் கெடும் என்பார்கள். அதுபோல ஒரு குடும்பமோ, ஒரு சமுதாயமோ, ஒரு தேசமோ முன்னேற்றமடைய வேண்டுமானால் ஒற்றுமை மிகவும் அவசியம். நாம் தேசத்தில் சாதிப்பிரிவினை அறவே ஒழிய இன்னும் பல ஆண்டுகள் செல்லுமாயினும் நம் சமூகத்தினர், நாம் முன்னேற்றமடைய நாங்களும் மனிதர்கள்தான்; எல்லா உரிமைகளும் எங்களுக்கும் உண்டு என்று நிரூபிப்பான் வேண்டி நாம் யாவரும் பிரிவினை இல்லாமல் ஒற்றுமையாக இருக்க வேண்டும்".

**மீனாம்பாள் சிவராஜ்**



திருநெல்வேலி ஆதிதிராவிடர் மகாநாட்டிற்கு என்னை தலைமை வகிக்கும்படி கேட்டுக்கொண்ட வரவேற்பு கழகத்தாருக்கு நான் மிகவும் நன்றி பாராட்டுகிறேன். ஓர் சமுகமோ, ஓர் தேசமோ விடுதலையடைய வேண்டுமானால் கல்வி, ஒற்றுமை, மாதர் முன்னேற்றம் இம் மூன்றும் மிகவும் அவசியமாக கவனிக்கற்பாலன. நம் நாடோ கல்வியில் மற்றெல்லா தேசங்களையும் விட மிகவும் பிற்போக்கான நிலைமையிலிருக்கின்றது. அதோடு நம் நாட்டில் ஜாதி வேற்றுமை முதலிய காரணங்களால் நமக்குள்ளாக ஒருவருக்கொருவர் ஒற்றுமை கிடையாது. இத்தேசத்தில் மாதர்கள் கேவலமாக நடத்தப்படுவதைப்போல் வேறெந்த தேசத்திலும் கிடையாது. ஸ்திரீகள் பிற்போக்கான நிலைமையிலிருப்பதனால் தான் நம் நாடும் மிகவும் பிற்போக்கான நிலைமையிலிருக்கிறது. மாதர்கள் எங்கு முன்னேற்றமடைகின்றார்களோ அத்தேசமே முன்னேற்றமடையும்மென்று ஓர் பெரியார் சொல்லியிருக்கிறார். ஆகவே, நாம் எல்லோரும் முன்னேற்றமடைய வேண்டுமானால் ஸ்திரீகள் முன்னேற்ற விஷயத்தில் எல்லோரும் ஏகமனதாக பாடுபடவேண்டும்.

**கல்வி**:

"கண்ணுடைய ரென்போர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்" என்றார் நம்மரபிலுதித்த திருவள்ளுவநாயனார். அதாவது முகத்தில் இரண்டு கண்களிருந்தபோதிலும் கற்றவர்களுக்கே அக்கண்கள் இரண்டும் கண்களென்றும், கல்லாத பேர்களுக்கு அவ்விரண்டு கண்களும் புண்ணுக்குச் சமானமென்றும் சொல்லியிருக்கிறார். ஆகவே, உலகில் ஜனித்த ஆண் பெண் ஆகிய இருபாலருக்கும் கல்வி மிகவும் முக்கியமானது. நம்மவர்களில் அநேகர் பெண்கள் கல்வி கற்கவேண்டியது முக்கியமில்லையென்றும், "அடுப் பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு" என்றும் சொல்லுகிறார்கள். ஏனெனில் வீட்டில் சகல காரியங்களையும் கவனிக்கவேண்டியது ஸ்திரீகளாகையாலும், குழந்தைகள் தாய்மார்களின் பராமரிப்பிலேயேயிருக்க நேரிடுவதாலும் இல்வாழ்க்கையின் பொறுப்பு பெரும்பாலும் பெண்களே கவனிக்கவேண்டியிருப்பதாலும் பெண்மணிகள் முக்கியமாக கல்வி கற்பது மிகவும் அவசியம். மற்றெல்லா தேசங்களையும் விட நம் தேசமே கல்வியில் மிகவும் பிற்போக்கான

நிலைமையிலிருக்கின்றது. அதிலும், நமது சமூகமோ பலவாண்டுகளாக உயர் ஜாதியாரென்போரால் புறக்கணிக்கப்பட்டு, கல்வியிலும், மற்றெல்லா விஷயத்திலும் மிகவும் பிற்போக்கான நிலைமையிலிருக்கின்றார்கள். நம் சமூகத்தில் ஆண்களே கல்வித்துறையில் மிகவும் பிற்போக்காயிருக்கிறார்களென்றால் பெண்களைக்குறித்து சொல்லுவானேன். ஆயின், இப்பொழுதோ காருண்யம் பொருந்திய அரசாங்கத்தாரால் நமக்கு கல்வியில் முன்னேற்றமடைய பல வசதிகள் செய்தளிக்கப்பட்டுள்ன. இம்மாதிரியான சந்தர்ப்பத்தை நாம் கைநழுவவிடாமல் நம் சமூகத்தார் யாவரும் கல்வியில் தேர்ந்து மற்றெல்லா சமூகத்தாரைப்போலும் முன்னேற்றமடைய வேண் டிய முயற்சிகள் செய்யவேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**ஒற்றுமை:**

"ஒற்றுமையில்லாக் குடும்பம் ஒருமிக்கக் கெடும்" என்பார்கள். அதுபோல் ஓர் குடும்பமோ, ஓர் சமூகமோ, ஓர் தேசமோ முன்னேற்றமடைய வேண்டுமானால் ஒற்றுமை மிகவும் அவசியம். ஆயினும், நம் தேசத்திலோ பல்வேறு ஜாதி பாகுபாடுகளினால் நம் தேசமானது இன்று இந்நிலையிலிருக்கிறது. நம் தேசத்தில் இச்சாதிப் பிரிவினை அறவே ஒழிய இன்னும் பலவாண்டுகள் செல்லுமாயினும், நம் சமூகத்தினர் நாம் முன்னேற்றமடைய வேண்டுமென்றும், எல்லா சமூகத்தினரைப்போலும் முற்போக்கடைய வேண்டுமென்பதையும், மற்றவர்களால் மிருகத்தினும் கேவலமாக நடத்தப்படுவதை விலக்கி, நாங்களும் மனிதர்கள் தான்; எல்லோரைப்போலவும் எல்லா உரிமையும் எங்களுக்குமுண்டு என்று நிரூபிப்பான் வேண்டி எல்லோரும் ஒன்றாகச் சேரவேண்டும். "தன் கையே தனக் குதவி" என்றவாறு நாம் யாவரும் ஒன்றுபட்டு நம் சமூகத்தின் முன்னேற்றத்திற்கு தேவையானவற்றிற்குப் பாடுபடவேண்டும். நாம் யாவரும் ஒன்றுபடுவதற்கும் நம் சமூகம் முன்னேற்றமடைவதற்கும் நமக்கு வேண்டியனவற்றை போராடி பெறுவதற்கும் நமக்குள் போதிய சங்கங்கள் ஸ்தாபிக்க வேண்டும். சங்கத்தின் மூலமாக நாம் அளப்பறிய நன்மைகள் அடையலாம். நமது சமூகம் முன்னேற்றமடைய வேண்டுமானால் நாம்

யாவரும் ஒன்றுபட்டு நமக்குள் பிரிவினையில்லாமல் ஒற்றுமையாக யிருக்கவேண்டும்.

**சங்கங்கள்:**

சங்கங்கள் ஸ்தாபிப்பதன் மூலமாக நாம் எவ்வளவோ நன்மையடையலாம்.

1. நாம் அடிக்கடி ஒருவரோடொருவர் சேர்ந்து பழகுவதால் நமக்குள் பரஸ்பரம் ஒற்றுமை யேற்படும்.
2. நமக்கு வேண்டிய பள்ளிக்கூடம், கிணறு முதலிய சௌகரியங்களை சாதித்துக்கொள்வதற்கு சங்கங்கள் மூலமாக மனு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.
3. சங்கங்கள் மூலமாக சுற்றுப்புறங்களிலுள்ள கிராமங்களில் இராப்பள்ளிக்கூடங்கள் ஸ்தாபித்து பகலில் வேலைகளுக்குப் போய்த் திரும்பும் சிறியோர், பெரியோர் யாவரும் படிப்பதற்கு வேண்டிய வசதிகள் செய்வதற்கு அநுகூலமாகயிருக்கும்.
4. நமது சமூகத்தினருக்கு மற்றவர்களால் செய்யப்படும் அட்டூழியங்களை காருண்யம் பொருந்திய அரசாங்கத்தாருக்கு விண்ணப்பித்துக் கொள்வதற்கு சங்கத்தின் மூலமாக மனு அனுப்பலாம். இன்னும் நமக்கு வேண்டியனவற்றை எல்லா சௌகரியங்களையும் சங்கத்தின் மூலமாக நிறைவேற்றிக்கொள்ள லாம்.

**ஐக்கிய நாணய சங்கங்கள் அல்லது கூட்டுறவு சங்கங்கள்:**

கூட்டுறவு சங்கங்கள் இப்பொழுது எல்லா ஊர்களிலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி சங்கங்களின் மூலமாக விவசாயிகள் தங்கள் நிலங்களை பணக்காரரிடம் அதிக வட்டிக்கு அடமானம் வைத்து நஷ்டமாகாமற்படி, ஓர் குறித்தளவு வட்டி யில்கடன் கொடுப்பதற்கு அரசாங்கத்தாரால் நிறுவப்பட்டதாகும். நம்மவர்களில் நிலங்கள் வைத்துக்கொண்டு எல்லா உயர் ஜாதி இந்துக்களைப்போலும் வரி கொடுத்துவரும் அநேகர் தங்கள் பூமிகளின்பேரில் கூட்டுறவு சங்கத்தாருக்கு மனு அனுப்பி கடன் கேட்டால் அன்னவர்களுக்கு கடன் கொடுக்க மறுக்கப்படுவதல்லாமல் உயர் ஜாதி இந்துக்களிடம் பூமியை அடமானம் செய்து ஒன்றுக்கு பத்து வட்டியாக கொடுக்கும்படியாக வற்புறுத்துவதாக

சென்னையிலிருக்கும் தாழ்த்தப்பட்டார் தலைவர்களுக்கு அடிக்கடி வெளியூர்களிலிருந்து மனுக்கள் கிடைக்கின்றன. இக்கூட்டுறவு சங்கங்கள் மேல் ஜாதியாரின் பராமரிப்பிலிருப்பதால் நம்மவர்களின் மனுக்களை அவர்கள் துச்சமாக எண்ணி எறிந்துவிடுகிறார்கள். ஆகையால், நமக்கென்று தனிச்சங்கங்கள் ஏற்படுத்தி நம்மவர்கள் நஷ்டமடையாமலிருப்பதற்கு வேண்டிய ஹேதுக்களை செய்து கொடுக்குமாறு அரசாங்கத்தாருக்கு விண்ணப்பித்துக் கொள்ளுவதற்கு செய்ய வேண்டிய முயற்சிகள் யாவும் செய்ய நாம் ஒரே கட்டாக முயல வேண்டும். இம்மாதிரி தனிக்கூட்டுறவு சங்கங்கள் நமக்கு மிகவும் அவசியம்.

**மாதர் முன்னேற்றம்:**

"மாதர் முன்னேற்றமே தேசிய முன்னேற்றம்" என்றார் ஒரு பெரியார். மாதர்களுக்கு கல்வி எவ்வளவு அவசியமென்பதை ஒவ்வொரு ஆண் மகனும் கூர்ந்து கவனிக்கவேண்டும். ஓர் மாதானவள் உலகில் தாயாகவும், சகோதரியாகவும், மனைவியாகவுமிருந்து ஆடவருக்கு உதவியாயிருக்கிறாள். மாதர்கள் ஆண்களின் சுக துக்கங்களில் பங்கெடுத்துக்கொள்ளுகிறார்கள். ஓர் பெண்ணானவள் கற்றவளாயிருந்தால் அவள் தன் பிள்ளைகள் கல்வி விஷயத்தில் வேண்டிய சிரத்தை எடுப்பதல்லாமல், குழந்தைகள் துர்ப்பழக்கங்களுக்கு உள்ளாகி தங்களைக் கெடுத்துக்கொள்ளாமல் பாதுகாப்பதற்கும், இல்லறத்தை சரிவர நடத்துவதற்கும், அரசியல் துறையிலும், சமூக முன்னேற்றத்திலும் தம் கணவன்மாருக்கு பக்க பலமாகயிருந்து உதவி செய்வதற்கும், ஆடவருக்கு பலவித அசந்தர்ப்பங்களால் ஏற்படும் துயரைப் போக்கி கூடுமான வரை அவர்களை சந்தோஷமாக வைக்க முயற்சி செய்யவும், நல்ல வீரர்களாகவும் புத்தியிற் சிறந்த குழந்தைகளை ஈன்றெடுத்து தேசத்திற்கு பேரும் புகழும், கீர்த்தியும் கொண்டு வருபவர்களாகவுமிருப்பதாலும், நம் நாடு தாய் நாடென்றும், நாம் பேசும் பாஷை தாய் பாஷையென்றும் கல்விக்குத் தலைவி சரஸ்வதியென்றும், செல்வத்திற்குத் தலைவி இலட்சுமியென்றும், சிறப்பாக பெண்களைக் குறித்தே சொல்லப்படுவதால் மாதர்களை கேவலம் மிருகமாக மதித்து நடந்தாமற்படிக்கு அவர்கள் முன்னேற்றமே நமது விடுதலை, நம் தேச முன்னேற்றம் என்பதை மனதிலிருத்தி ஸ்திரீகள் முன்னேற்ற

விஷயத்தில் ஏகமனதாகப் பாடுபட்டு அவர்களுக்கும் தக்க கல்வியை அளிக்குமாறு மிகவும் வந்தனத்தோடும் கேட்டுக்கொள்கிறேன்.

**ஜஸ்டிஸ் கட்சி செய்த நன்மைகள்:**

ஜஸ்டிஸ் கட்சி தோன்றிய பிறகே தீண்டப்படாதவர்கள், தாழ்த்தப்பட்டவர்களாகியவர்களுடைய விஷயங்கள், அரசியல் பிரச்சினையாக வரமுடிந்தது. ஜஸ்டிஸ் கட்சியின் அரசியல் திட்டங் களின் ஆரம்பத்திலேயே தீண்டப்படாதவர்களுடைய விஷயங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. அதைப்பார்த்த பிறகே காங்கிரஸ்காரர்கள் 1920ல் தீண்டாமை விலகினாலொழிய சுயராஜ்யம் கேட்பதில்லையென்று சொல்லி தீண்டப்படாதாரை காங்கிரஸில் வந்து சேரும்படி சூழ்ச்சி செய்தார்கள். ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் சட்ட மூலமாக பல உருப்படியான நன்மைகள் அதாவது கல்வி, சுகாதாரம், வீட்டு வசதி, நில வசதி, உத்தியோக வசதி, அரசியல் பிரதிநிதித்துவங்களில் நாமினேஷன் (நியமிக்கப்படல்) வசதி முதலியவைகளும், தீண்டாமை பொது வாழ்வில் பாராட்டக்கூடாதென்று தெரு, குளம், பொது சாவடி, பள்ளிக்கூடங்கள் ஆகியவைகளில் பிரவேசிப்பதற்குத் தடையில்லாதபடி சட்டங்களும் செய்த பிறகே காங்கிரஸ்காரர்கள் "ஹரிஜன சேவா சங்கம்" என்று ஒரு பெயரை உண்டாக்கிக்கொண்டு பல லட்சக்கணக்காக ரூபாய்களை வசூலித்து மேல் ஜாதிக்காரர்களே பயன் அடையும்படி செய்தார்கள். இவ்வளவுமல்லாமல் வட்டமேஜை மகா நாட்டில் காந்தியார் சுயராஜ்யம் கிடைத்த பிறகுதான் தீண்டாமையொழிக்க முடியுமென்றும் அது வரையில் தீண்டாதாருக்கென சட்டசபை முதலிய பிரதிநிதித்துவ ஸ்தாபனங்கள் தனித்தொகுதி மூலமோ, ஒதுக்கிவைப்பதின் மூலமோ ஏதாவது ஸ்தானங்கள் அளிக்கக் கூடாதென்றும் நமக்கு பிரதிநிதியாக சென்றிருந்த தாழ்ப்பட்டார் மாபெருந்தலைவர் அம்பேட்காரின் பிரச்சினைக்கு எதிராக வாதாடி தடைசெய்தார்.

காங்கிரஸ்காரருடைய தடையை மீறி அரசாங்கத்தாரால் நமக்கு 18 ஸ்தானங்கள் அளிக்கப்பட்டன. அதுவும் பூனா ஒப்பந்தத்தின் மூலம் பாழாக்கப்பட்டது. பூனா ஒப்பந்தம் இல்லாதிருந்திருக்குமானால் இன்று நடைபெறும் தேர்தல்களில் தகுதியுள்ளவர்களும், தங்கள் சமூக முன்னேற்றத்தை முக்கியமாகக் கருதக்கூடியவர்களும்

ஆதிதிராவிடர்களுடைய பிரதிநிதிகளாக தாராளமாக வரக்கூடும். ஆனால், பூனா ஒப்பந்தம் மூலம் இன்று அரசியலே இன்னதென்று தெரியாதவர்களும் சமூகத்திற்கு என்ன செய்யவேண்டுமென்பதை அறியாதவர்களும், மேல் ஜாதிக்காரர்களுக்கு அடிமையாக இருக்கக்கூடியவர்களுமே பெரும்பாலும் வரமுடியும்படியாக ஏற்பட்டுவிட்டது. தேர்தல்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் விஷயத்தில் காங்கிரஸ்காரர்கள் பிரவேசிக்கக்கூடாது என்று பூனா ஒப்பந்தத்தில் விளக்கப்பட்டிருந்தும், அது ஒரு முக்கிய நிபந்தனையாக இருந்தும், சமீபத்திலும் காந்தியார் தாழ்த்தப்பட்டவர்கள் விஷயத்தில் காங்கிரஸ்காரர்கள் தலையிடக்கூடாதென்று கூறியிருந்தும், பிறகு காங்கிரஸ்காரர்கள் அதில் பிடிவைத்து காந்தியாருடைய அறிக் கையை மாற்றச் செய்து இப்பொழுது பூனா ஒப்பந்தத்தில் "காந்தியின் உயிரைக் காப்பாற்ற" கையெழுத்திட்டவர்களுக்கே காங்கிரஸ்காரர் எதிர் அபேட்சகரை நிறுத்தி தொந்தரவு கொடுத்து வருகிறார்கள். ஆகவே, காங்கிரஸ்காரர்கள் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு என்ன நன்மை செய்திருக்கிறார்கள் என்பதும் ஜஸ்டிஸ் கட்சியார் என்ன நன்மை செய்தார்களென்பதும் நன்றாக விளங்கும். நிற்க.

**சகோதர சகோதரிகளே** !

நான் கூறின விஷயங்களை நீங்கள் பொறுமையோடிருந்து கேட்டுக்கொண்டிருந்ததோடல்லாமல், நமது சமூக முன்னேற்ற விஷயத்தில் செய்யவேண்டியவைகளைக் குறித்து சிந்தித்துப்பார்க்கும்படியாக கேட்டுக்கொள்வதோடு, மற்றுமோர் முறை என்னை இம்மகாநாட்டிற்கு தலைவியாகத் தேர்ந்தெடுத்த வரவேற்புக் கழகத்தாருக்கும், உங்களுக்கும் என் மனமார்ந்த வந்தனத்தோடு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

---

திருநெல்வேலி ஜில்லா - ஆதிதிராவிடர் மகா நாடு, ஸ்ரீமதி மீனாம்பாள் சிவராஜ், (கௌரவ நீதிபதி, சென்னை) தலைமைப் பிரசங்கம், 31.1.1937

http://www.subaonline.net/TPozhil/e-books/THF-Meenambal%20Speech-1937.pdf

உதவி: திரு. கௌதம சன்னா

---

## 22. பாரதிதாசன் தேசீயக் கவிஞரா ?

*—சி. ஜெயபாரதன்*

**வீர சுதந்திரம் வேண்டி நின்றார், பின்னர்**
**வேறொன்று கொள்வாரோ? .....**
**மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்**
**மாண்பினை இழப்பாரோ?**

- மகாகவி பாரதியார்(சுதந்திரப் பெருமை)

கவிஞர் பாரதிதாசன் தனிப்பட்ட எவருக்கும் சொந்தமும் இல்லை, பந்தமும் இல்லை. கவிஞர் யாவரும் பூமியில் பிறந்த மனிதர்களே! சாதாரண மாந்தரை விடக் கவிஞர்கள் உன்னத சிந்தனை உடையவராயினும், அவரிடமும் குறைவு, நிறைவுகள் இருக்கலாம். குறைகள், நிறைகள் இல்லாத கவிஞர்கள் இருப்பது வெகு, வெகு அபூர்வம். நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே என்று சிவபெருமான் எழுதிய பாட்டில் கூடப் பிழை யிருப்பதாகப் பாண்டிய மன்னன் முன்பாக வாதாடியவர் புலவர் நக்கீரர். எப்பொருள் யார்யார் வாய் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு. மேலும் எப்பொருள் எத்தன்மைத் தாயினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு.

என் பெயர் செயபாரதன் இல்லை! நண்பர் திரு இளங்கோவன் என் பெயரைச் சிதைவு செய்து தூய தமிழில் எழுதி இருக்கிறார். அது அவரது எழுத்துரிமை என்று கருதி, அப்பிழையை விட்டு விடுகிறேன்! வங்காளிகள் வகரத்தைப் பகரமாக எழுதுவார்கள்! வங்காள நாடு, பெங்கால் என்று அழைக்கப்படுகிறது. வங்காள தேசம், பங்களா தேசமாகியது. வங்காளி ஒருவர் திரு இளங்கோவன் பெயரை "இளங்கோபன்" என்று எழுதினால், அவருக்குக் கோபம் வருமா அல்லது சிரிப்பு வருமா எனக்குத் தெரியாது. நண்பர் இளங்கோவன் போன்ற தூய தமிழர்கள் காஷ்மீர், ஆஸ்திரேலியா, ஆஸ்டிரியா, ஸ்பெயின், பிரான்ஸ், கிரீஸ், ஹாங்ஹாங், பாகிஸ்தான், ராஜஸ்தான், ஹிந்துகுஷ், பலுஜிஸ்தான், ஸ்காட்லாந்து, இஸ்லாம்,

பாஸ்கரன், புஷ்பா, குஷ்பு, சரஸ்வதி போன்ற பெயர்களை எப்படித் தமிழில் எழுதுவார் என்று காட்டினால், நானும் கற்றுக் கொள்வேன். அதுவரை என் பெயரை என் தந்தை எனக்கு வைத்தபடி ஜெயபாரதன் என்று எழுதினால் பூரிப்படைவேன். நான் அவரது பெயரை இலங்கோவன் என்று எழுதினால் அவர் சகித்துக் கொள்வாரா? தமிழில் ஸ, ஷ, ஹ, ஜ போன்ற அன்னிய எழுத்துக்களை தமிழ்மொழி சுவீகாரம் எடுத்துக் கொள்வதால், தமிழின் ஆற்றல் பன்மடங்கு மிகையாகி வலுக்குமே தவிர, தமிழின் செழுமை பழுதுபடாது! உலகெங்கும் ராக்கெட் வேகத்தில் விஞ்ஞானமும், அதை ஒட்டிச் சமூகமும் இணைந்து முன்னேறுகின்றன! தூய தமிழர்களே! நீங்கள் தமிழ் அன்னைக்குக் கைவிலங்கு, கால்விலங்கு, வாய்விலங்கு போட்டு, கொலுப் பொம்மையாக கண்ணாடிப் பேழையில் வைத்துப் பின்னோக்கிப் போக வேண்டாமெனக் கேட்டுக் கொள்கிறேன்!

**சலுகை போனால் போகட்டும்! என்**
**அலுவல் போனால் போகட்டும்!**
**தலைமுறை ஒரு கோடி கண்ட, என்**
**தமிழ் விடுதலை ஆகட்டும்!**

**என் உயிர் போனால் போகட்டும்!**
**என் புகழ் உடல் மட்டும் நிலைக்கட்டும்!**
**தேனால் செய்த என் செந்தமிழ்தான்**
**திக்கெட்டுமே தொழ நிற்கட்டும்!**

என்று பாரதிதாசன் திக்கெட்டும் வளரும் தமிழைத் தடுக்காதே என்று "தமிழ் விடுதலை ஆகட்டும்", என்னும் கவிதையில் தமிழை முடக்கிப் பெட்டிக்குள் மூடும் தூய தமிழ் மேதாவிகளுக்குக் கூறுகிறார்.

ராஜஸ்தான் அணுமின் நிலையத்தில் எட்டாண்டுகள் பணியாற்றிய பிறகு மாற்றலாகி 1978 ஆம் ஆண்டு கல்பாக்கம் சென்னை அணுமின் நிலையத்தில் வேலை செய்ய வந்தேன். ராஜஸ்தான் பள்ளிகளில் எல்லாவற்றையும் ஹிந்தியில் படித்த என் பெண் புதல்விகள் இருவரையும், கல்பாக்கத்தில் இருக்கும் கேந்திரியா வித்தியாலய உயர்நிலைப் பள்ளியில்

சேர்த்தேன். இதுவரை வீட்டிலே தமிழ் கற்ற புதல்வியர், இனியாவது சென்னையில் தமிழ்மொழியைக் கற்கலாம் என்று எதிர்பார்த்த எனக்குப் பெருத்த ஏமாற்றம் காத்துக் கொண்டிருந்தது! தமிழ் நாட்டிலே பணம் கொடுத்துப் படிக்கும் கல்பாக்கம் கேந்திரியா வித்தியாலயத்தில் எந்த வகுப்பிலும் சுத்தமாகத் தமிழ் கிடையாது! ஆங்கிலத்தைத் தவிர முழுக்க முழுக்க அனைத்துப் பாடங்களும் ஹிந்தியில் சொல்லித்தரப் படுகின்றன! இதே போல் எத்தனையோ தமிழகத்தின் பள்ளிக்கூடங்களில் சிறுவர், சிறுமிகளுக்குத் தமிழ்மொழி கட்டாயப் பாடமாக வைக்கப்பட்டுப் பயிலப் படுவதில்லை! புகாரி கவிதை வெளியீட்டு விழாவில், தமிழுக்குக் கிடைத்துள்ள இப்பெரும் அவமான நிலையைத் திரைப்படப் பெயரைத் தமிழாக்கப் போராடும் தூய தமிழ்த் தொண்டர் அனைவர் காதிலும் படும்படி நான் பறைசாற்றினேன்! திரு இளங்கோவன் சாமர்த்தியமாக அதை மட்டும் ஒதுக்கிவிட்டு, அவரது தூய நண்பர்கள் மீது தூசி படாமல் பார்த்துக் கொண்டார்!

இதைக் குறிப்பிட்டுத்தான் அடிப்படைப் பிரச்சனைகளை விட்டு, திரைப்படப் பெயர் மாற்றம் போன்ற வெளிமுலாம் பூசும் பணிகளில் தமிழ்த் தொண்டர் முனைவது முறையா என்று கேட்டிருந்தேன். அரைகுறையாய்க் கட்டிய ஆடை களில் அந்தரங்க உறுப்புகளைக் காட்டிக் கொண்டு ஆடவரும், பெண்டிரும் தப்புத் தாளங்கள் போட்டுப் பணம் சுரண்டும் தரங்கெட்ட நூறு திரைப்படங்களின் பெயரைத் தூய தமிழில் மாற்றினால், அது தமிழுக்குத்தான் அவமானம்! ஆயினும் அது ஒற்றைப் பணிதான்! நூறு பணிகள் அல்ல! அகஸ்திய முனிவர் தமிழுக்கு ஓர் உன்னத இலக்கண நூலை ஆக்கித் தந்தார்! இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் என்னும் காவியத்தைப் படைத்துத் தமிழ் அன்னைக்கு ஆரமாக அணிவித்தார். கவிஞர் கண்ணதாசன் ஏசுநாதர் திருப்பணியைக் கவிதை நூலாகப் படைத்தார்! தமிழ்த் தொண்டர்கள் தமிழை வளர விடாமல் முடக்கிச் சிறையில் வைக்க முற்படுகிறார்கள்! தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும்!

"வாளினை எடடா!" என்னும் ஒரு பாடலில் பாரதிதாசன், குணம் மேவிய தமிழனை ஜனநாயகத்தில் அறமே புரியக் "கொலை வாளினை எடடா," என்று முரசடிக்கிறார்! பாரதிதாசனின் அந்தப் பாடலை

படிப்போருக்குப் பெரும் குழப்பம் உண்டாகிறது. "காந்தியின் அறச் செயல் வெல்லும்'" என்று எழுதிய பாரதிதாசன் குடியரசு நாட்டில் கொலை வாளினை எடடா என்று ஏன் தீவிரவாதியாகக் கட்டளை யிடுகிறார் என்பது எனக்குப் புரியவில்லை. இதோ அப்பாடல்:

**கொலை வாளினை எடடா! மிகு**
**கொடியோர் செயல் அறவே!**
**குகைவாழ் ஒரு புலியே உயர்**
**குணமேவிய தமிழா! .....**

**தலை யாகிய அறமே புரி,**
**சரி நீதி உதவுவாய்!**
**சமமே பொருள் ஜனநாயகம்**
**எனவே முரச றைவாய்!**

நண்பர் நாக இளங்கோவன் குடியாட்சியில் கொலை வாளினை எடுப்பது தீவிரவாதமில்லை என்று எனக்குச் சுட்டிக் காட்டுகிறார்! இதே போல் பீரங்கி, வில்லெடுப்பு இவையெல்லாம் தீவிரவாதியின் ஆயுதங்கள் இல்லை என்றால், வேறு எவை அவரின் ஆயுதங்கள் என்று கட்டுரையில் எடுத்துக் காட்டி யிருக்கலாம்! பிளாஸ்டிக் வெடிகள் தீவிரவாதிகளின் கொலை ஆயுதங்களாக அஞ்சப்படும் இந்த காலத்தில், கொலை வாளையும், பீரங்கியையும் எந்த வகுப்பில் பிரித்து வைக்கலாம்?

பாரதியார் காலத்தில் விரிந்த பாரதிதாசனின் பாரத விடுதலைத் தரிசனம், பிற்காலத்தில் குறுகித் தமிழக விடுதலையாகச் சுருங்கிப் போனது என்று தெளிவாகக் கூறுகிறார், நண்பர் இளங்கோவன். இதை எதிர்த்துத்தான் பாரதியார் தனது "சுதந்திரப் பெருமை" என்னும் பாடலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

**வீர சுதந்திரம் வேண்டி நின்றார், பின்னர்**
**வேறொன்று கொள்வாரோ? .....**
**விண்ணில் இரவிதனை விட்டுவிட் டெவரும் போய்**
**மின்மினி கொள்வாரோ? ....**

**மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்**
**மாண்பினை இழப்பாரோ?**

பாரதியின் நிழலில் வளர்ந்த பாரதிதாசன் கடைசிப் பாதிக் காலத்தில் எப்படிச் சுதந்திர தேவியை மறந்தார் என்பது எனக்கு இன்னும் வியப்பாகவே இருக்கிறது!

**அக்கா, அக்கா என்றாய்**
**அக்கா வந்து கொடுக்க**
**சுக்கா, மிளகா சுதந்திரம் கிளியே !**

என்று நக்கல் புரிகிறார் கவிஞர் பாரதிதாசன் !

பாரதியாரின் தாசனாகக் கூறிப் பெயரைக் கூடப் பாரதிதாசன் என்று மாற்றிக் கொண்டவர். பாரதியார் "ஆனந்த சுதந்திரம் அடைத்து விட்டோம்", என்று சுதந்திரம் பெறுவதற்கு முன்பே பாடியவர். ஆனால் பாரதிதாசன் சுதந்திரப் போராட்டத்தைக் கிடைக்குமா வென்று கிண்டல் செய்தவர்.

'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் ' என்று பாரதியார் தீர்க்க தரிசியாய் 1908 இல் கனவு காணும் போது, விடுதலை இயக்கத்தைப் பாரதிதாசன் ஒரு பாட்டில் நக்கல் புரிந்து கேலி செய்வதைப் பலர் அறிய மாட்டார்கள்! கூண்டுக் கிளியைப் பற்றி எழுதும் போது பாரதிதாசன், 'அக்கா! அக்கா! என்றாய், அக்கா வந்து கொடுக்க சுக்கா, மிளகா, சுதந்திரம் கிளியே ? ' என்று எள்ளி நகையாடுகிறார்!

அகிலவலைத் திண்ணை, பதிவுகளில் வெளிவந்த எனது விஞ்ஞானக் கட்டுரைகளைப் பாராட்டியதற்கு நண்பர் நாக. இளங்கோவன் அவர்களுக்கு எனது ஆழ்ந்த நன்றி.

ஒரு கவிஞன் ஆத்மீகக் கவிஞனாக இருக்க வேண்டும் என்று நான் எதிர்பார்க்க வில்லை! ஆத்மீகக் கவிஞனாக இருக்க வேண்டிய தேவையு மில்லை! கவிஞன் எப்படி இருக்க வேண்டும் என்று ஓர் இலக்கண விதியை நான் ஆக்க விரும்பவும் வில்லை! கவிஞன் தானாக உருவாகிறான். கவிஞன் தானாக மாறுகிறான். ஆனால் பாரதியின் நிழலில் தோன்றித் தன் பெயரைப் பாரதிதாசன் என்று மாற்றிக் கொண்ட கவிஞர் சுப்புரத்தினம்

மெய்யாகப் பாரதியாரின் சீடரா என்பதைத்தான் நான் சிந்தித்து உளவு செய்கிறேன். முதலில் பாரதியின் சீடராய்த் துவங்கிப் பாதி காலத்திற்குப் பிறகு முற்றிலும் மாறுபட்டு வேறு வடிவில் உலவி வந்தார் பாரதிதாசன் என்பதைத்தான் நான் கூற விரும்புகிறேன்.

**ஓர் கடவுள் உண்டு!**
**பேரும் அதற்கில்லை!**
**பெண்டும் அதற்கில்லை!**
**தேரும் அதற்கில்லை!**
**சேயும் அதற்கில்லை!**

என்று பாரதிதாசன் தன் கடவுள் நம்பிக்கையைத் தனித்துவ முறையில் அழகாகக் காட்டி உள்ளார். ஆனால் அதை ஆத்மீகக் கருத்தென்று நான் சொல்ல மாட்டேன்.



இந்து சமயக் கருத்துக்களைப் பாடிய பாரதியாரின் எண்ணற்ற ஆத்மீகக் கவிதைகள் மாதிரி பாரதிதாசன் பலவிதப் பக்திப் பரவசக் கவிதைகள் எழுதவில்லை. நண்பர் கிரிதரன் கூறியபடி, காளி, முத்து மாரி, சிவன், பராசக்தி, விநாயகர், முருகன், கலைமகள், லட்சுமி, கண்ணனைப் பலவிதத் தோற்றங்களில் கண்டு சூரியன், அக்கினி மீது துதிகள், ஊழிக் கூத்து, சக்திக் கூத்து என்றெல்லாம் தோத்திரப் பாடல்கள் பாடித் தான் முழுக்க முழுக்க ஓர்

ஆத்மீகக் கவிஞராகக் காட்டி யிருக்கிறார், பாரதியார். அவர் பாடிய பல வேதாந்த பாடல்களைப் போல், வசன கவிதைகளில் தனது விஞ்ஞான அறிவைக் காட்டியது போல் பாரதிதாசன் தன் பாக்களில் எழுத வில்லை!

**ஈசன் வந்து சிலுவையில் மாண்டனன்!**
**எழுந்து யிர்த்தனன் நாள் ஒரு மூன்றில்!**

என்று ஏசு பெருமானைப் பற்றி இந்து சமயவாதி பாரதியார் எழுதுகிறார். பிறகு இஸ்லாமியரின் தேவரான அல்லாவைப் பாராட்டி இந்து ஆத்மீகவாதி பாரதியார் பாடுகிறார். ஆனால் இதற்கு முற்றிலும் எதிராகப் பாரதிதாசன் ஏசு, முகமது, சிவன் ஆகியோர் பக்கம் போகாதே என்றல்லவா மக்களுக்குப் பாதை காட்டுகிறார். பண்டித நேரு, "உலக ஆற்றல்களிலே மிகச் சக்தி வாய்ந்தவை மதங்களும், மத நம்பிக்கைகளும்," என்று தன் நூல் ஒன்றில் கூறுகிறார். எந்த அணு ஆயுதங்களாலும், பல நூற்றாண்டுகள் பூமியில் ஆலமரமாய் வேர் ஊன்றி, விழுதுகள் விட்ட மதங்களையும், அவற்றின் தனித்துவ மதக் கடவுள்களையும் அழிக்க முடியாது! ஆத்மீகக் கவிஞரான பாரதி ஒருவனுக்கு அது புரிந்திருப்பதால் அவர் மதங்களை வெறுக்காமல் வரவேற்கிறார். விவேகானந்தர், முன்னாள் இந்திய ஜனாதிபதி டாக்டர் இராதாகிருஷ்ணன் ஆகியோரை ஆத்மீகவாதிகளுக்குச் சான்றாகக் கூறலாம். அவ்விதம் நோக்கினால் பாரதிதாசனை ஓர் ஆத்மீகக் கவிஞராகக் கருத முடியுமா என்பது ஐயப்பாடே!

பாரதியாருடன் இருந்த பிரெஞ்ச் பகுதியில்தான் பாரதிதாசன் ஆரம்ப காலக் கவிதைகளை எழுதியிருக்க முடியும் என்பது என் கருத்து. பாரதிதாசன் வசித்த புதுச்சேரியில் பாரதியார் போல் அநேகக் கவிதைகளைத் தான் எழுத முடிய வில்லை என்று நண்பர் கிரிதரன் கூறுவதில் எனக்கு உடன்பாடில்லை. பண்டித நேரு ஆங்கில ஆட்சியில் கைதி செய்யப்பட்டு, வடநாட்டில் அகமத்நகர் கோட்டைச் சிறையில் இரண்டரை ஆண்டுகள் [1942-1945] அடைபட்டுள்ள போதுதான், உலகப் புகழ் பெற்ற அவரது, "இந்தியக் கண்டுபிடிப்பு" [Discovery of India] என்னும் நூலை எழுதினார். ஆக்க உந்து சக்தி உள்ளவருக்கு வாழும் தளம் எதிர்ப்பு அளித்துத் தடை செய்தாலும்,

படைப்புகள் இரகசியமாய் எழுதப்பட்டு அன்னிய நாடுகளில் வெளியாகி யிருப்பதை நாம் வரலாறுகளில் படித்திருக்கிறோம்.

பாரத விடுதலை மீது நம்பிக்கை இல்லாவிட்டாலும், பாரதிதாசன் ஒரு சிறந்த தமிழ்க் கவிஞர் என்பதில் எனக்கு ஐயமில்லை என்று நான் எனது முதல் புகாரி கவிதை விழாக் கட்டுரையில் கூறி யிருக்கிறேன். இப்போது உருவக் கடவுள் மீது நம்பிக்கை இல்லாவிட்டாலும், பாரதிதாசன் ஒரு சிறந்த தமிழ்க் கவிஞர் என்பதில் எனக்கு ஐயமில்லை என்று சொல்கிறேன். நண்பர் கிரிதரனின் இரண்டாம் கட்டுரைப்படி பாரதிதாசன் பாரதியார் காலஞ் சென்ற பின்னும் 9 ஆண்டுகள், அதாவது மொத்தம் 39 வருடங்கள், பாரத விடுதலைப் பற்றி நினைவில் வைத்திருந்தார் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஆயினும் பிற்காலத்தில் சுயமரியாதை இயக்கத்தில் சேர்ந்துள்ள சமயம், பாரதிதாசனிடம் நான் சுட்டிக் காட்டிய சில குறைபாடுகள், மறைபாடுகள் இன்னும் விளக்கம் பெறவில்லை! தேசப் பிதா மகாத்மா காந்தி சுட்டுக் கொல்லப்பட்ட போது, பாரதிதாசன் இரங்கல் கவிதை எதுவும் எழுதாமல் புறக்கணித்தது ஒன்று. அடுத்தது, பாரதம் விடுதலை பெற்று 200 ஆண்டு கால வரலாறு மாறியதைப் பற்றிக் கண்டும் காணாமல் புறக்கணித்தது. பாரதிதாசனைப் பற்றி நன்கு தெரிந்தவர்கள் இவற்றின் காரணங்களை எனக்கு எடுத்துச் சொன்னால் நான் தெரிந்து கொள்வேன்.

பார்க்கப் போனால் இரட்டைக் கவிஞர்கள் பாரதிதாசன் வடிவில் வாழ்ந்திருப்பது போல் எனக்குத் தெரிகிறது! பாரதியார் காலத்தை ஒட்டிச் சுமார் 39 வருடங்கள் பாதி வயதுவரைக் கடவுள் நம்பிக்கை கொண்டு, காந்தியார் மேல் பாசமும், விடுதலைப் பற்றும் கொண்டு வாழ்ந்த கவிஞர் ஒருவர். பிறகு சுமார் 34 வருடங்கள் காந்தியாரைத் துறந்து, பெற்ற சுதந்திரத்தைப் போற்றாது, முற்றிலும் வேறான பகுத்தறிவுக் கருத்தாளராக வாழ்ந்த கவிஞர் அடுத்தவர். இவ்விரண்டு கவிஞர்களில் யார் மெய்யானர், யார் பொய்யானவர் என்பதைப் பாரதிதாசனின் கவிதை ஆக்க எண்ணிக்கை, கவிதைக் கருத்துக்களைப் படிப்போர்களே ஊகித்துக் கொள்ளட்டும். பாரதி மறைவுக்குப் பின்னர் வாழ்ந்த பகுத்தறிவுப் படைப்பாளியான பாரதிதாசனே மெய்யான கவிஞர் என்பது என் கணிப்பு! பாரதியாரின் பக்கத்தில்

இணையாக நிறுத்திப் பாரதிதாசனை ஓர் ஆத்மீகக் கவிஞராகவோ அல்லது ஒரு தேசீயக் கவிஞராகவோ என்னால் கருத முடியவில்லை!

**நன்றி:**

PathivukaL By V.N. Giritharan

**தகவல்:**

1. தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன் [சாகித்திய அக்காடெமி வெளியீடு, பதினெட்டாம் பதிப்பு (2003)]
பாரதியார் பற்றிப் பக்கங்கள்: இக்காலப் பாட்டிலக்கியம் (236-349)
பாரதிதாசன் பற்றிப் பக்கங்கள்: (349-355)

2. தமிழ் இலக்கிய வரலாறு, பேராசிரியர் எம். ஆர். அடைக்கலசாமி எம்.ஏ. [ராசி பதிப்பகம் முப்பத்து ஆறாவது பதிப்பு (2003)]
பாரதியார் பற்றிப் பக்கங்கள்: 20 ஆம் நூற்றாண்டுக் கவிதைகள் (235-241)
பாரதிதாசன் பற்றிப் பக்கங்கள்: (241-246)

3. பாரதிதாசன் கவிதைகள் [உமா பதிப்பகம், சென்னை .. மார்ச் 2007]

4. http://www.geotamil.com/pathivukal/response6_jeyabarathan_barathithasan.html

---

தொடர்பு: சி. ஜெயபாரதன் (jayabarathans@gmail.com)
http://jayabarathan.wordpress.com/

## 23. ஆரோவில்லில் கலைஞர்...

*—கோ.செங்குட்டுவன்*

விழுப்புரம் மாவட்டம் ஆரோவில் அப்போதுதான், சர்வதேச நகரமாக உருவாகிக் கொண்டிருந்தது. இந்த நிலையில், அங்கு அமைக்கப்பட்ட தமிழக அரங்கிற்கான அடிக்கல் நாட்டுவிழா, 1973ஆம் ஆண்டு, அக்டோபரில் நடந்தது.



விழாவுக்குத் தலைமை அமைச்சர் நாவலர். இதில் பங்கேற்ற, முதல்வர் கலைஞர், தமிழக அரங்குக்கு அடிக்கல் நாட்டிப் பேசியதன் சுருக்கம் வருமாறு:

'விழாத் தலைவர் நம் நாவலர் அவர்கள் புறநானூறு பாடிய பெரும்புலவன் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கருத்தை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எடுத்து ஓதியிருக்கிறான் என்று குறிப்பிட்டார்கள். அவர் அப்படிக் குறிப்பிட்டபோது ஓர் இளம் நண்பர் வேகமாக என் பின்னே ஓடிவந்து ஒருவேளை அந்தப் புறநானூற்றுக் கவிஞன் இந்தக் கிராமத்திலேதான் பிறந்திருப்பானோ என்று என்னிடத்தில் கேட்டார்.

அவன் இந்தக் கிராமத்தில் பிறந்தானோ இல்லையோ என்று எனக்குத் தெரியாது. ஆனால் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற அந்த முழக்கம் தமிழ்நாட்டிலே இருந்து உலகுக்கு அறிவிக்கப்பட்டது என்பது புறநானூற்றுக் காலத்திலே மாத்திரம் அல்ல, அதற்குப் பிறகு பல்லாண்டு காலம் கடந்தபிறகு இப்போதும் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்று அறிவிப்பதும் தமிழ்நாட்டிலே இருந்துதான் என்று எண்ணுகிற நேரத்தில் நான் மிகுந்த

மகிழ்ச்சி அடைகிறேன். தமிழ்நாடு பல்வேறு உணர்ச்சிகளுக்கு, பல்வேறு உன்னதமான நிலைகளுக்கு வழிகாட்டுகிற நாடாகும்.

ஆரோவில் என்றால் பிரெஞ்சு மொழியில் புதிய நகர் அல்லது புதிய வாழ்வு உதயம் என்று பொருள். பிரெஞ்சு மொழியில் சொல்லிப் பார்த்தாலும் அது பொருத்தமாக இருக்கிறது. ஆங்கிலத்தையும் தமிழையும் இணைத்துச் சொல்லிப் பார்த்தாலும் ஒரு வகையிலே இது பொருத்தமாக இருக்கிறது. உள்ளபடியே இது ஒரு மகத்தான சாதனையாகும். இந்த மகத்தான சாதனையினுடைய விளைவை உடனடியாக நாம் காணமுடியுமா என்றால் - நாளைக்கோ, நாளைய மறுநாளைக்கோ கண்டுவிட முடியுமா என்றால் - இயலாது. ஆனால் இதற்கு ஒரு பெரிய எதிர்காலம் இருக்கிறது என்பதை நாம் இன்றைக்கே நிச்சயித்துக்கூற முடியும். அந்த எதிர்காலத்தை இப்போதே அமைத்துக் காட்ட இயலாது.

ஒரு இணைப்பு - அதாவது ஒரு சங்கமம் - மாநிலத்துக்கு மாநிலம் அல்ல - நாட்டுக்கு நாடு - உலகத்திலே இருக்கிற பல்வேறு நாடுகளுக்கு இடையே இங்கே உருவாகிறது. நாங்கள் உலக அளவிலேகூட இணைப்பை விரும்புகிறவர்கள். இணையாமல் இருக்கிற தன்மையை எந்த நேரத்திலும் நாங்கள் விரும்பாதவர்கள். நாங்கள் என்றைக்கும் உலக அரங்கத்தில் இணைப்பை விரும்புகிறவர்கள். இந்த ஆரோவில் நகரம் நல்ல முறையிலே வளர்வதைத் தமிழ்நாடு அரசு தனக்குற்ற ஒரு இலட்சியமாகக் கொண்டு ஒத்துழைப்பை எந்த அளவுக்குத் தருமோ அந்த அளவுக்குத் தரும்.'

இவ்வாறு கலைஞர் பேசினார். ஆரோவில் இன்று வளர்ந்திருக்கிறது. தமிழ்நாட்டின், விழுப்புரம் மாவட்டத்தின் முக்கிய அடையாளங்களுள் ஒன்றாகவும் மாறியிருக்கிறது.

படம் உதவி: விக்கிப்பீடியா

---

தொடர்பு: கோ.செங்குட்டுவன் (ko.senguttuvan@gmail.com)

## 24. விவேகானந்தர்: புத்தர் ஓர் உன்னத மனிதர்

*—சி. ஜெயபாரதன்*




உலகத்திலே உன்னத மனிதராக நான் மதிப்பவர் இருவர் : கௌதம புத்தர், ஏசு கிறிஸ்து. ஏசு நாதரின் மலை உபதேசத்தையும், கீதையும் எடுத்துக் கொள்ளுங்கள். அவை எத்தகைய எளிமையாக உள்ளன ! தெருவில் நடக்கும் சாதாரண மனிதருக்கும் அவை புரிகின்றன ! எத்தகைய மகத்தான படைப்புகள் அவை ! அவற்றில் மெய்ப்பாடுகள் தெளிவாக, எளிதாகக் கூறப்பட்டு இருப்பதை நீங்கள் அறியலாம்.

புத்தர் மேன்மையான மெய்ப்பாடுகளை உபதேசித்தார். வேத நெறிகளை உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வேறுபாடின்றி அனைவருக்கும் போதித்தார். உலக மாந்தருக்கு அவற்றை எடுத்துக் கூறினார். அவரது உன்னத போதனை நெறிகளில் ஒன்று மனித சமத்துவம் ! மனிதர் சம மதிப்புள்ளவர். அந்த கருத்தில் எவருக்கும் தனிச்சலுகை இல்லை. புத்தரே சமத்துவத்தைப் போதித்த ஓர் மகத்துவக் குரு ! ஒவ்வொரு மனிதருக்கும், மாதருக்கும் ஆன்மீக உன்னதம் அடைவதில் ஒரே தர உரிமை உள்ளது. அதுதான் புத்தரின்

போதனை. குருமாருக்கும், பிற மானிடருக்கும் இருந்த வேற்றுமை புத்தரால் நீக்கப்பட்டது.

புத்தரின் வாழ்க்கை ஒரு மகத்தான கவர்ச்சி கொண்டது. என் வாழ்நாள் முழுவதும் நான் புத்தரைப் போற்றி வந்தேன். யார் மீதும் இல்லாத ஒரு தனி மதிப்பு அவர் மீது எனக்கிருந்தது : அவருக்கிருந்த அந்த மன உறுதி, அந்த அச்சமற்ற தன்மை, அந்த அளவில்லா அன்பு . . . (என்னைக் கவர்ந்தது.)

ஏசு கிறிஸ்து பிறப்பதற்கு 600 ஆண்டுகளுக்கு முன்பு புத்தர் வாழ்ந்தவர். அப்போது வாழ்ந்த இந்திய மக்கள் உயர்ந்த கல்வி கற்றவராக இருந்திருக்க வேண்டும். ஆழ்ந்த விடுதலை மனத்துடன் வாழ்ந்திருக்க வேண்டும். பெருவாரியான மக்கள் புத்தரைப் பின்பற்றினர். அரசர்கள் தமது அரச பீடத்தை விட்டகன்றனர் ! நாட்டு அரசிகள் தம் அரசாங்கத்தை விட்டுச் சென்றார். பல யுகங்களாக மதக் குருமார்கள் போதித்த நெறிமுறைகளுக்கு மாறாகப் புரட்சிகரமாக இருந்த புத்தர் உரைமொழிகளைப் பின்பற்றினர். ஆதலால் மக்களின் மனது அக்காலத்தில் சுதந்திரமாக விரிந்திருக்க வேண்டும்.

புத்தர் மானிட நன்னெறி படைப்புக்காகப் பிறந்தவர். எப்படி மக்களுக்கு உதவுவது என்பது மட்டுமே புத்தரின் சிந்தனையாக இருந்தது. வாழ்நாள் பூராவும் தனக்கென அவர் எதுவும் கருதியது கிடையாது. அவரது உன்னத மூளையைப் பற்றிச் சிந்திப்பீர். எதிலும் உணர்ச்சி வசப்படுவது அவரது வழிமுறையன்று. அவரது பூதகரமான மூளையில் மூட நம்பிக்கை, குருட்டுப் பழக்க வழக்கங்கள் எவையும் கிடையா.

புத்தர் வாழ்ந்த போதும் உன்னதமாய் இருந்தார். இறந்த பிறகும் உன்னதமாய் ஒளிர்ந்தார். தான் இறக்கும் போது தனக்காக அவர் எந்த மதிப்புச் சின்னத்தையும் நிலைநாட்டிக் கொள்ள வில்லை ! புத்தரை அதனால் நான் போற்றி வழிபடுகிறேன்.

குருவுக்குச் சீடராக இருப்பது எளியதன்று. அதற்கு அநேகச் சுயத் தயாரிப்புகள் அவசியம். பல்வேறு நிபந்தனைகள் பூர்த்தியாக வேண்டும். உலகளாவிய சகோதரத்துவ உணர்ச்சி மட்டுமில்லாது, உலகளாவிய

ஒற்றுமைக்கு நம் வேத நெறிகள் விளக்கம் அளிக்கின்றன. உலக வரலாறு என்பது புத்தரின் சரிதையும், ஏசுவின் சரிதையும் கொண்டிருக்க வேண்டும்.

வயதாக வயதாக எனக்கு ஒவ்வொன்றும் மனித உறுதியில்தான் அடங்குகிறது என்று தெரிகிறது. என்னுடைய புதிய உபதேசம் இதுதான்.

புத்தரின் பணியாட்களின் பணியாட்களுக்கு நானொரு பணியாள் ! புத்தரைப் போலோர் தனக்கென வாழா ஓர் உத்தமரை நான் இதுவரைக் கண்டதில்லை.அவரது உன்னத சிந்தனைகள் இந்தியாவைத் தாண்டி, உலகம் முழுவதும் பரவிச் சென்றன. இரக்கக் குணம் மிக்க இளவரசராகவும், துறவியாகவும் வாழ்ந்து ஓர் ஆட்டின் உயிரைக் காக்கத் தன்னுயிரை அளிக்கவும் தயாராக இருந்தவர்.

உன்னத ஆன்மீக மெய்ப்பாடுகளை உபதேசிக்க ஒருவர் மிக்க இளைய வயதிலே துவங்கக் கூடாது ! கீதையையும், மற்ற வேதாந்தத்தில் உள்ள உன்னத படைப்புகளையும் படிக்க வேண்டும்.

புத்தரிடம் உலக நாடுகள் போற்றும் உன்னத இதயம் இருந்தது. மதத்தை ஒவ்வொரு வீட்டு வாசலுக்கும் கொண்டுவந்து அதனை மனித நடைமுறைக்கு அமைத்த எல்லையற்ற பொறுமை அவரிடம் இருந்தது. . . . . ஞானச் சூரியன் புத்தர் இதயத்தோடு சேர்ந்து வரையறை யில்லா அன்பும் பரிவும் மேலோங்குவது இன்றைய உலகில் நமக்குத் தேவை. அத்தகைய சேர்க்கை நமக்கு உன்னத வேதாந்த சிந்தனை அளிக்க வல்லது. . . . . விஞ்ஞானமும், மதமும் சந்தித்துக் கைகுலுக்க வேண்டும்.

-----கர்மயோகி விவேகானந்தா (1863-1902)

பெர்னார்ட் ஷாவின் தமிழாக்கம், "உன்னத மனிதன்" நாடக நூலில் சி. ஜெயபாரதன்

---

தொடர்பு: சி. ஜெயபாரதன் (jayabarathans@gmail.com)

## 25. ஐஸ் பிரியாணியின் புலம்பல்

*—முனைவர் ச. கண்மணி கணேசன்*

அரை நூற்றாண்டுக்கு முன்பு வரை என் அருமை எல்லோருக்கும் தெரிந்து தானே இருந்தது.

எதனால் இந்த திடீர் மாற்றம்?

என்னை எல்லோரும் ஒதுக்கி விட்டார்கள்.

வெறும் வயிற்றில் ஒரு செம்பு நிறைய என்னை ஊற்றிக் குடித்துவிட்டு தெம்பாக வேலை பார்த்த பாட்டாளி வர்க்கத்திற்கு இப்போது என் நினைவே இல்லாமல் போய் விட்டதே !?

அந்த அளவிற்குப் போலி நாகரிகம் மேலாதிக்கம் செலுத்துகிறது.



வட்டில் நிறைய என்னைப் போட்டு கெட்டித்தயிர் ஊற்றி பச்சை மிளகாயைக் கல்லுப்போடு சேர்த்துக் கடித்துச் சுவைத்தவர் அளவிட முடியுமா?

பச்சை வெங்காயத்தைக் கூட்டி பசியாற்றியதோடு ஆரோக்கியத்தையும் கட்டிக் காத்ததெல்லாம் பழைய கதையாகி விட்டது.

ஊறுகாயும், வடகமும், வத்தலும் என எத்தனை எண்ணிலடங்கா கூட்டாளிகள் எல்லாம் எளிமையின் சின்னங்கள்.

ஒருவேளை இந்த எளிமை தான் என்னை ஓரங்கட்ட வைத்து விட்டதோ?!

என்னோடு சேர்த்து வைத்துச் சுவைத்த பக்கஉணவுகள் ... அவற்றுக்கு எல்லாம் இன்னும் மவுசு குறையவில்லை.

மாதா ஊட்டாத சோறு மங்கா ஊட்டும் என்பார்களே ... ஒரு ராஜபாளையம் சப்பட்டை ... தோல் சீவி துண்டு போட்டால் ... இந்த இணைக்கு ஈடு எது?

பங்குனி சித்திரை கத்தரி வெயிலின் போது களைப்பு நீங்க என்னளவிற்குத் தகுதியான வேறு உணவு எது?

சப்பட்டை சீசன் ஓய்ந்து பஞ்சவர்ணம் வந்தால் தோலைச் சீவ வேண்டியதில்லை. ...உரித்து விட்டு என்னோடு கடித்துச் சாப்பிடுவது தானே ருசி.

எல்லா மாம்பழமும் வரத்து குறையும்போது வரத்தொடங்கும் காசாலட்டு; சும்மா கழுவித் தோலோடு வைத்துக்கொண்டு ஒருவாய்சோற்றுக்கு ஒருகடி.

சைவம் மட்டும் அல்லாமல் அசைவத்திற்கும் ....அசறாமல் ஈடு கொடுத்தேன்.

ஒரு விரலளவு சீலா கருவாடு போதும்; அப்படியே எல்.பி.ஜி. காஸ் அடுப்பிலேயே சுட்டு விடலாம்...பானை சோறும் காலி.

இன்னும் வக்கணையாக வேண்டுமென்றால் ...... "மையூன் தெரிந்த நெய்"யில் வெடித்து வேகத் தொடங்கும் .....வெடிகறி

இப்படியே இன்னும் நீட்டிக்கொண்டே போகலாம்.

நீர்ச்சோறு /பழையது என்றெல்லாம் பெயர் பெற்ற எனக்கு மாணவர் கூட்டம் வைத்த பெயர் தான் ஐஸ் பிரியாணி.

என்னோடு போட்டி போட .....ஹைதராபாதி /செட்டிநாடு /ஆம்பூர் .....இன்னும் என்னென்ன .....

பருப்புச் சோற்றுக்கு நெய் ஊற்றித் தயிரோடு உண்ணும் கூட்டத்தைப் பார்த்து ரசித்துச் சிரித்து விடலாம்.......குழந்தைக் கூட்டம் என்று ....

ஆனால் அதைக் கூகைக்குப் பலியாகப் படைத்த சமுதாயம் தமிழ்ச் சமுதாயம் என்றால் ......கொடுமை ...கொடுமை என்று கூக்குரலிடத் தோன்றுகிறது.

உஷ்ஷ் ....எழுத்து கத்தக் கூடாது.

அமைதி ...அமைதி ......அமைதி

படம் உதவி: http://news.lankasri.com/health/03/132817

---

தொடர்பு: முனைவர்.ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)
முதல்வர் (ஒய்வு), ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

## 26. எல்லாம் வல்ல கொலம்பஸ்!!!

*—தேமொழி*

கிறிஸ்டோஃபர் கொலம்பஸ் ஸ்பெயின் நாட்டு அரசி இசபெல்லா, அரசர் ஃபெர்டினாண்ட் ஆகியோரின் நன்னம்பிக்கையையும் பண உதவியையும் பெற்று, ஸ்பெயின் நாட்டிற்காக இந்தியாவுடன் வணிகம் செய்ய ஒரு புதிய கடல்வழித்தடத்தைக் கண்டுபிடிக்க கடற்பயணம் மேற்கொண்டார். பொது ஆண்டு 1492 இல் தொடங்கி தொடர்ந்து பத்து ஆண்டுகளில் நான்கு முறை ஐரோப்பாவில் இருந்து மேற்கு நோக்கிப் பயணம் செய்து இந்தியப்பெருங்கடலை அடைய விரும்பினார். ஆனால் அவர் ஒரு முறை கூட வெற்றியடையவில்லை என்பதுடன், அமெரிக்கக் கண்டத்தை வந்தடைந்து அதுதான் இந்தியா என்று நம்பி, அங்கு வாழ்ந்த பழங்குடி மக்களை இந்தியர்கள் எனவும் அழைக்கத் துவங்கினார். இந்தியாவிற்குப் புதிய கடல்வழிப்பாதையைக் கண்டுபிடிக்கும் போட்டியில் போர்த்துக்கீசியர்களிடம் ஸ்பெயின் தோல்வி அடைய நேர்ந்தது. வாஸ்கோடகாமா பொது ஆண்டு 1498 மே, 17ல் இந்தியாவில் கோழிக்கோடு கப்பாட்டு என்ற இடத்தில் வந்திறங்கினார்.

இருப்பினும் ஸ்பெயின் நாடு அமெரிக்கக் கண்டத்தில் வலுவாகக் காலூன்றிவிட்டதற்குக் கொலம்பஸ் செய்த உதவியே காரணம். அமெரிக்கக் கண்டத்தில் உள்ள எத்தனையோ நாடுகளுக்கு ஸ்பெயின் ஏற்படுத்திய தாக்கத்தின் காரணமாக ஸ்பானிஷ் மொழிதான் இந்நாட்களில் தேசியமொழி. கொலம்பஸ் செய்தது தவறான கணிப்பாக இருந்தாலும் ஐரோப்பிய கண்டத்தில் உள்ள நாடுகளுக்கு அமெரிக்க கண்டத்தில் உள்ள நாடுகளில் குடிபுக, ஆட்சி செய்ய ஒரு வழி வகுத்துக் கொடுத்து கடற்பயண வரலாற்றில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியவர் கொலம்பஸ் என்பதை மறுப்பதற்கில்லை. கொலம்பஸ் அட்லாண்டிக் கடலைக் கடந்து அமெரிக்க கண்டத்தில் பஹமாஸ் பகுதியில் கரையேறிய நாள் 1492 ஆம் ஆண்டு

அக்டோபர் 12 வது நாள். ஒவ்வொரு ஆண்டும் அக்டோபர் 12 ஆம் நாள் கொலம்பஸ் நாளாக அமெரிக்காவில்  கொண்டாடப்படுகிறது.

கொலம்பஸ் தினமான அக்டோபர் 12, 2014 க்கு சில தினங்களுக்கு முன்னர் அக்டோபர் 8, 2014 அன்று நிகழ்ந்த முழுச்சந்திரகிரகணமும் தொடர்ந்து அடுத்தடுத்து வந்ததில் பலருக்கு சந்திரகிரகணத்தையும் கொலம்பசையும் இணைக்கும் ஒரு சுவையான நிகழ்ச்சியையும் நினைவிற்குக் கொண்டு வந்தது.

தனது இந்தியப் பயணங்களில் மூன்று முறை தோல்வியடைந்திருந்த கொலம்பஸ் தனது கடலோடிக் குழுவினரையும், பழங்குடி மக்களையும் கொடுமைப்படுத்திய காரணத்திற்காகக் கைகால்களில் விலங்கிடப்பட்டுச் சிறையிலும் அடைக்கப்பட்டார்.  கரீபிய தீவுகளில் ஆளுநர் பதவியும் அவரிடம் இருந்து பறிக்கப்பட்டது. ஆனால் ஸ்பெயின் மன்னரும் அரசியும் மனமிரங்கி  அவரை மன்னித்து மீண்டும் ஒருமுறை பயணம் செய்து இந்தியாவிற்கு வழி கண்டுபிடிக்க உதவ முன் வந்தனர். நான்காவது முறையாகத் தனது  கடற்பயணத்தை 1502 ஆம் ஆண்டு மே 12 ஆம் நாள் துவக்கினார் கொலம்பஸ். இப்பயணத்தில் அவருடைய சகோதரர்கள் பார்த்தலோமோ, டியாகோ மேண்டேஸ், கொலம்பஸின் 13 வயது மகன் ஃபெர்னாண்டோ ஆகியோரும் உடன் பயணித்தனர்.

'காப்டியானா', 'கல்லீகோ', 'விஸ்கைனா', 'சாண்டியாகோ டி பாலோஸ்' என்ற நான்கு கப்பல்களில் மேற்கு நோக்கிப் பயணம் செய்தனர். கடற்புழுக்கள் கப்பலின் மரத்தைக் கரையான் போல அரித்துவிட, இரு கப்பல்களில் துளைகள் விழுந்து நீர் உள்ளே வரத் துவங்கிய காரணத்தினால் கொலம்பஸ் அந்தக் கப்பல்களைக் கைவிட நேர்ந்தது. கரீபியன் கடல் பகுதியை அடைந்து, அங்குத் தீவுகளையும் மத்திய அமெரிக்க பகுதிகளையும் சுற்றிவரும்பொழுது கியூபா நாட்டின் பகுதியில் ஏற்பட்ட புயலில் சிக்கி அடுத்த இரு கப்பல்களும் சேதமடைந்து 1503 ஆம் ஜூன் மாதம், ஜமைக்காவின் வடகரையில் 'செயின்ட் ஆன்' வளைகுடாப் பகுதியில் கரைதட்டி நின்றன.  சென்ற முறை அங்கு வந்திருந்த பொழுது ஏற்படுத்திய ஸ்பானிஷ் குடியிருப்புகளின் உதவியை நாடித்  தகவல் அனுப்பச் சிறு

படகொன்றில் சிலரை அனுப்பிவிட்டு தனது குழுவினருடன் ஜமைக்காவில் கொலம்பஸ் காத்திருந்தார். இவ்வாறு சற்றொப்ப ஓராண்டுக் காலம் போல அப்பகுதியில் தங்கும் நிலை அவருக்கு ஏற்பட்டது.

அப்பகுதியில் வாழ்ந்த 'அராவாக்' (Arawak Indians) பழங்குடியினர் நட்புள்ளம் கொண்டவர்கள் என்றாலும், கொலம்பஸும் அவர் குழுவினரும் செய்யும் அடாவடிகள், கலவரம், கொள்ளை ஆகியவற்றில் மிகவும் வெறுத்துப் போயிருந்தார்கள். முதலில் அன்புடன் உதவியவர்கள், பின்னர் கொலம்பஸ் கேட்ட அளவிற்கு அவர் குழுவினருக்கு உணவு அளித்துப் பராமரிக்க மறுத்துவிட்டனர். கடற்பயணிகள் வழங்கிய பண்டமாற்றுப் பொருள்கள் யாவும் அவர்களுக்கு உதவும் வகையிலும் இல்லாமல் (தகர ஊதுகுழல்கள் போன்றவை) அவர்கள் ஆர்வத்தையும் கவரவில்லை. இதன் விளைவாக கொலம்பஸ் குழுவினர் பசி பட்டினியில் நொந்து போனார்கள். தங்களுக்கு உதவி வரும் வரை எப்படித் தாக்குப் பிடிப்பது என்று யோசித்துக் கொண்டிருந்த கொலம்பஸிற்கு, நூல்களைப் புரட்டியதில் ஒரு யோசனையும் கிடைத்தது.

அக்காலத்தில் கடற்பயணம் செய்பவர்கள் மிகத் தடித்த வானியல் குறிப்புக்கள் கொண்ட நாட்குறிப்பு நூல்களை தங்கள் பயணத்திற்குத் துணையாகக் கொண்டு செல்வார்கள். இது 'அல்மனக்' (Almanac) என்றழைக்கப்படும். இந்திய மக்கள் வானின் கோள்களைக் கணித்துப் பயன்படுத்தும் பஞ்சாங்கம் போன்றே சூரியன், சந்திரன், மற்ற பிற கோள்களின் நிலையையும், பயணத்திற்கு வழிகாட்டி உதவும் விண்மீன் கூட்டங்களையும், பருவநிலை, தட்பவெட்ப நிலைக் குறிப்புகளையும் கொண்ட நிரல்களும் அட்டவணைகளும் கொண்டது இந்த அல்மனக். அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த ஜெர்மன் நாட்டுக் கணிதமேதையும் வானியல் வல்லுநருமான 'ரிஜியோமாண்ட்டனஸ்' கோள்களைக் கணித்து வழங்கிய நாட்குறிப்பில் (Ephemeris of the German astronomer Regiomontanus) கொலம்பஸிற்கு ஒரு தகவல் கிடைத்தது. அந்த 1504 ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் 29 ஆம் நாள் ஜமைக்கா பகுதியில் முழுச்சந்திரகிரகணம் தோன்றும் என்ற குறிப்பு அந்நூலில் அவருக்குக் கிடைத்தது.



இத்தகவல் தெரிந்ததும் கொலம்பஸ் அராவாக் பழங்குடியினருடன் ஒரு சந்திப்பிற்கு ஏற்பாடு செய்தார். தங்களை வெறுத்துச் சரிவர நடத்தாமல், உணவும் வழங்காத பழங்குடியினர் மீது அவருடைய கிறிஸ்துவக் கடவுள் மிகக் கோபமான இருக்கிறார். தான் கோபம் கொண்டதை உணர்த்த இரு நாட்களில் நிலாவை மறையச் செய்து அதனைச் செந்நிறமாக்கி தனது கோபத்தை பழங்குடியினருக்கு உணர்த்துவார். அவர்களது நடவடிக்கை மாறாவிட்டால் பழங்குடியினருக்கு கேடு காலம்தான் என்று மொழிபெயர்ப்பாளர் உதவியுடன் கொலம்பஸ் கதைகட்டினார். பழங்குடியினர் அதை நம்பவில்லை, சிலர் பகடி செய்தும் நகர்ந்தனர். ஆனால் கொலம்பஸ் குறிப்பிட்ட நாளில் கீழ்வானில் நிலா வழக்கம் போலத் தோன்றினாலும், சிறிது நேரத்தில் கிரகணம் துவங்கி, இருள் சூழத் துவங்கியது. பழங்குடியினர் அச்சமடைந்து கொலம்பஸ்ஸிடம் ஓடிவந்தார்கள்.

“பழங்குடியினர் அச்சத்தில் அலறியடித்துக் கொண்டு பல திசைகளில் இருந்தும் கப்பலை நோக்கி ஓடிவந்தார்கள். தங்களுக்காக கொலம்பஸ் கடவுளிடம் பேசி கடவுளை அமைதிப்படுத்த வேண்டும், இனி தவறாது

உணவு தர சம்மதம் என்று உடன்பட்டார்கள்" என்று கொலம்பஸின் மகன் ஃபெர்னாண்டோ தனது குறிப்பில் எழுதியுள்ளார்.



Fig. 86. — L'éclipse de lune de Christophe Colomb.

கொலம்பஸ் தனது அறைக்குள் சென்று கதவை அடைத்துக் கொண்டு மணற்கடிகாரத்தை நிமிர்த்தியும் கவிழ்ந்தும் காலத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தார். கிரகணம் முடியும் சில நிமிடங்களுக்கு முன் வெளிவந்து கடவுள் இனி அவர்களுக்கு ஒரு தீங்கும் செய்ய மாட்டார், தனது கோபத்தை மறந்து அவர்களுக்கு ஒரு தீங்கும் செய்யப்போவதில்லை என்பதற்கு அடையாளமாக நிலா சில நிமிடங்களில் மீண்டும் பழைய நிலையை அடையும் என்று அறிவித்தார். அவ்வாறே நிலவும் சிறிது நேரத்தில்

கிரகணத்தில் இருந்து விடுபட்டது, பின்னர் பழங்குடியினர் ஒத்துழைப்பும் அவருக்குத் தவறாது கிடைத்தது.

கொலம்பஸ் ஜமைக்கா பகுதியில் வந்து சேர்ந்த ஓராண்டுக் கழித்து 1504 ஆம் ஆண்டு ஜூன் மாதம் அவருக்கு உதவிக் கப்பல் வந்து சேர்ந்தது. அந்த ஆண்டு நவம்பர் மாதம் ஸ்பெயின் திரும்பினார், பின்னர் தனது 54 ஆவது வயதில், முடக்குவாதம் கொடுத்த மூட்டுவலியின் காரணமாகவும், உணவு ஒவ்வாமையின் காரணமாக இரு ஆண்டுகளில் (மே 20, 1506) அவர் மரணமடைந்தார்.

இந்த நிகழ்ச்சியை ஒவ்வொருவரும் அவரவர் பின்னணியின் காரணமாக கொலம்பஸ் செய்தது புத்திசாலித்தனம் என்றும், அவர் செய்தது அறநெறிக்கு மீறிய சூழ்ச்சி, பழங்குடியினரை ஏமாற்றியது சரியல்ல என்றும் கருத்தில் வேறுபடுவர். ஆனால் இது அறிவிப்பது 'அறிவே சக்தி' (Knowledge is Power) என்பதைத்தான். ஆர்வமூட்டும் இந்த நிகழ்வு சில எழுத்தாளர்கள் கவனத்தைக் கவர, இதை அடிப்படையாக வைத்து கதைகள் எழுதத் துவங்கினர். சிலர் சூரியகிரகணம் என்று மாற்றியும் கதைபுனைந்தனர். அவற்றில் குறிப்பிடத்தக்கன, எச். ரைடர் ஹாகர்ட் எழுதிய 'கிங் சாலமான்ஸ் மைன்ஸ்' (H. Rider Haggard's King Solomon's Mines) என்ற கதையும், மார்க் டுவைன் எழுதிய 'எ கனிக்ட்கட் யாங்கீ இன் கிங் ஆர்தர்ஸ் கோர்ட்' (Mark Twain's A Connecticut Yankee in King Arthur's Court) என்ற கதையும், டின் டின் படக்கதையான, 'ப்ரிசனர்ஸ் ஆ்ஃப் தி சன்' (Hergé's Tintin adventure Prisoners of the Sun) என்ற கதையுமாகும். தங்கள் கதைகளில் அவர்கள் குறிப்பிடப்பட்ட நாட்களில் எந்தக் கிரகணமும் நிகழவில்லை என்பதையும் சில ஆசிரியர்கள் கவனமின்றி கையாண்டும் உள்ளார்கள்.

சுதந்திர தேவியின் மண்ணில்..., தேமொழி - நூலிலிருந்து
https://books.google.com/books?id=YTRCDwAAQBAJ&pg=PA66

---

தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

## 27. அட்லாண்டிக் கடலைக் கடந்த தமிழ்க்கப்பல்

*—செல்வன்*

அட்லாண்டிக் கடலைக் கடந்து இலங்கையில் இருந்து பாஸ்டன் வரை ஒரு தமிழ்க்கப்பல் சென்றுள்ளது. அட்லாண்டிக் கடலை கடந்த கடைசி பாய்மரக்கப்பல் இதுவே எனத் தெரிகிறது.

1938ம் ஆண்டு வல்வட்டித்துறையில் செட்டியார்கள் பெரும் அளவில் பாய்மரக்கப்பல் வணிகம் செய்து வந்தனர். கொச்சின், ரங்கூன் முதல் அரபு நாடுகள் வரை அவர்களின் பாய்மரக்கப்பல்கள் சென்று வந்தன.

1938ல் வளவை மாரியம்மன் தீர்த்தத்திருவிழாவில் கலந்துகொண்ட அன்னபூரணி எனும் கப்பலின் அழகில் மயங்கிய வில்லியம் ராபின்சன் எனும் அமெரிக்கர் அந்தக் கப்பலை விலைக்கு வாங்கினார். அதை பாஸ்டன் துறைமுகத்துக்கு கொண்டு சேர்க்கும் பொறுப்பு ஐந்து தமிழ் மாலுமிகளுக்கு வழங்கப்பட்டது.

படத்தில்: அன்னபூரணி கப்பலில் தமிழ் மாலுமிகள்



கனகரத்தினம் தம்பிப்பிள்ளை தலைமையில் கிளம்பிய அக்கப்பல் மாலுமிகள் யாருமே அமெரிக்காவை முன்னர் கண்டதில்லை. சூயஸ் கால்வாய் வழியாகச் சென்று ஐரோப்பா வழியே அமெரிக்கா செல்லவேண்டும். கொலம்பஸின் கடல்பயணத்தை மிஞ்சிய தூரம். கொலம்பஸிடம் மூன்று கப்பல்களும் நூற்றுக்கணக்கான மாலுமிகள் இருந்தனர். இவர்கள் ஐந்தே பேர்.

அத்தனை தடைகளையும் தாண்டி பாஸ்டன் துறைமுகத்துக்கு மூன்று மாதத்தில் கப்பலை கொண்டு சென்றுவிட்டனர். சட்டை அணியாமல் திருநீறு, குடுமியுடன் கூடிய ஐந்து பேர் பாஸ்டன் துறைமுகத்தில் பாய்மரக் கப்பலில் இறங்கிய காட்சியை காண பாஸ்டன் நகரமே கூடியது. பனிமூட்டம், காற்று வீசாத கடல் எனப் பல தடைகளைத் தாண்டி இந்தச் சாதனையை அவர்கள் செய்தார்கள்.

அதன்பின் அந்த ஐந்து மாலுமிகளும் பாஸ்டனில் தங்கிவிட்டதாகத் தெரிகிறது.

**தகவல் உதவி:**


(1) வல்வெட்டித்துறையிலிருந்து அமெரிக்கா வரை கப்பலோட்டிய தமிழர்கள் - ராஜகோபால்

http://www.noolaham.org/wiki/index.php/வல்வெட்டித்துறையிலிருந்து_அமெரிக்கா_வரை_கப்பலோட்டிய_தமிழர்கள்

(2) அமெரிக்க கடற்படையில் வல்வெட்டித்துறை அன்னபூரணிஅம்மாள் கப்பல் ! - பொன்.சிவா(சிவகுமாரன்)

https://eelamaravar.wordpress.com/2017/03/12/annapoorani-ship/

(3) “Westward ho!”

http://www.sundaytimes.lk/090419/Plus/sundaytimesplus_01.html


---


தொடர்பு: செல்வன் (holyape@gmail.com)

## 28. வல்வெட்டித்துறை கடலோடிகள் - நூல்மதிப்புரை

*—கே.ஆர்.ஏ. நரசய்யா*




**வல்வெட்டித்துறை கடலோடிகள்**
**ஆசிரியர்: செல்வராசகோபால், க. தா.**
**வெளியீடு: 2011**
**வெளியீட்டாளர்: விஷ்ணுசுந்தரம் நினைவு வெளியீட்டு நிதியம்**

சென்றவருடத்தின் பிற்பகுதியில் நான் கனடா சென்றிருந்தேன். அங்குள்ள தமிழ்ச் சங்கம் கூட்டிய ஒரு அமர்வில் அங்கு வாழ் இலங்கைத் தமிழர்களைச் சந்திக்க நேர்ந்தது. எங்கேயோ பிறந்து உலகமெல்லாம் ஓடிக் களைத்து, இருக்க இடமின்றி தவித்து வந்த பலருக்கு புகலிடமளித்து வரவேற்றது கனடா. அங்கு சேர்ந்தபிறகு இத்தனை இடர்கள் பட்டிருப்பினும் சிறிதும் தமிழையோ தமது உன்னத மதத்தையோ கலாச்சாரத்தையோ

மறவாது போற்றும் இவர்களது மனநிலை கண்டு வியந்தேன். அதிலும் சாதாரண மனிதர்கள் அங்கு சென்று, தமது வழித்தடங்களை மறக்காது, தமது பின்புலங்களைச் சரிவர நினைவு கூறும் ஆற்றல் கண்டும் அகமகிழ்ந்தேன். ஆகையால் ஒரு எளிய இலங்கைத் தமிழரான, பொன்னம்பலம் சிவகுமாரன் என்ற ஒரு இளைஞர், தொழிலால் கடலோடி, தம்மால் முயன்ற மட்டும் உழைத்து எனக்கு அனுப்பி வைத்த "வல்வெட்டித் துறைக் கடலோடிகள்" என்ற ஒரு அழகான நூல் எனது கவனத்தை முற்றிலுமாக ஈர்த்தது. அழகான என்று கூறுகையில், அதன் வடிவ அமைப்பையும் தன்னுள் கொண்டிருக்கும் பொருளையும் சேர்ந்து தான் கூறுகிறேன். இவ்வளவு சிறப்பாக நூல் அமைக்கப்படுவது கனடாவின் தொழில் நுட்பத் திறனாலும், அங்கு வாழ் இலங்கைத் தமிழரின் முயற்சியாலும் தான்.

இந்நூல் முதன் முதலாக விருத்த வடிவில் ஆக்கப்பட்டது கலாநிதி க. தா. செல்வராசகோபால் என்ற ஈழத்துப்பூராடனார் என்பவரால். அதைச் சேகரித்துக் கொடுத்தவர் அருள் சுந்தரம் விஷ்ணுசுந்தரம் என்பவர். அதை ஒரு புத்தக வடிவில் தொகுத்தவர் பொன்னம்பலம் சிவகுமாரன்.

இந்நூலில் முக்கியமாக என்னைக் கவர்ந்தது "அன்னபூரணி" என்ற கப்பலின் கதை சொல்லப்பட்டிருக்கும் எளிய ஆனால், தவறில்லாத முறை. இது ஒரு பாய்மரக் கப்பல். கட்டப்பட்டது இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வல்வெட்டித்துறை என்னும் இலங்கைத் துறைமுகத்தில் தமிழர்களால்.

இந்நூல் தொகுப்பதில் அதிக சிரத்தை காட்டப்பட்டுள்ளது. முக்கியமாக, வல்வெட்டித்துறையின் வரலாற்றை ஆய்வு செய்தவர்கள் நூல்களிலிருந்து மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன. அவர்கள் வித்துவான் வ. மு. கனகசுந்தரம், பூ. க. முத்துக்குமாரசுவாமி, செ. வைத்திலிங்கம் பிள்ளை, இ. கே. ராஜகோபால், ஆதிகோயிலடி ஜெயம் (ந. சிவரெத்தினம்), வல்வை ந. நகுல சிந்தாமணி மற்றும் பா. மீனாட்சி சுந்தரனார்.

இந்நூல் ஆரம்பமே நம்மை வியக்க வைக்கிறது. துரதிருஷ்டவசமாக இது போல தமிழ் நாட்டில் ஒரு நூலும் கிடையாது. எழுதப்பட்டாலும் அதற்கு எவ்வாறு வரவேற்பு இருக்குமெனச் சொல்ல இயலாது.

ஆரம்பத்திலேயே பெயருக்கான காரணம் விளக்கப்படுகிறது:

**"தனத்திரு தானியந் தைரியம் தகைசுகம்**
**தந்திடும் தகவாம் தயவுடன்**
**மனம்நிறை மாமதி மாண்புறு அறிவுடை**
**மட்டறு கல்வியும் வீரமும் மதிப்பதும்**
**அனைத்துல காளுமை ஆட்சியாம் அருளவை**
**ஆகிட அருளென் றங்கரம் இணைத்துனை**
**தினந்தினம் வேண்டிலென் தேவிகாள் திருவருட்**
**திகழ்வுறு பாக்கியம் தேடினேன் தருகவே.**

என அட்டலெட்சுமி அம்மாள் அலங்காரம் என்ற நூலில் ஒரு பா உண்டு. இதனில் சொல்லப்பட்ட எட்டுச் (அட்ட) செல்வங்களையும் "வடமொழியில் தனம், தானியம், தைரியம், சௌரியம், வித்தியா, ஜெயம், மகிமை, ராஜ்யம் என்பர்" என்ற சொற்றொடர்களுடன் முதலாகும். ஒரு கப்பல் நாட்டிற்குச் செல்வம் கொண்டு வரும் என்பதைத் திறம் பட வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

இந்நூலைத் தமிழகம் கண்டுகொண்டதாகத் தெரியவில்லை! அரசு நூலகங்களில் வைக்கப்படவேண்டிய நூலெனத் திட்டமாக என்னால் கூற இயலும். முதலில் நூலின் அமைப்பைப் பற்றிச் சொல்லியே ஆகவேண்டும். சிறந்த முறையில் படங்களுடனும் விளக்கங்களுடனும் அழகான ஆர்ட் தாட்களில் கையில் எடுக்கும் போதே ஒரு விதமான இறையுணர்வை ஏற்படுத்துகிறது. இத்தனை வருடங்களில் நான் படித்த கடல், கப்பல் பற்றிய தமிழ் நூல்களில் எவையும் இதன் ஒரு சிறு பகுதிக்குக் கூட சமானமாகாது என்பது என் கணிப்பு.

இந்நூலின் ஒரு பகுதியாக, விருத்த வடிவில் அன்னபூரணி அம்மாளின் ஆழ்கடல் பயண வரலாற்று நிகழ்வின் இலக்கிய ஓவியம் என்ற பெயரில், 30 பக்கங்களில் வல்வெட்டித்துறைக் கடலோடிகளால் 1937 - 38 ல் செலுத்தப்பட்டு அமெரிக்க மாசசூசெட்ஸ் மாநில குளோசெஸ்டர் துறைமுகத்தைச் சென்றடைந்த என்ற தொடக்கத்துடன் அழகாக ஈழத்துப் பூராடனார் வடித்துள்ளது தரப்பட்டுள்ளது. விவேகானந்தர் படத்துடன் ஆரம்பமாகும் அவ்விருத்தம் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் இந்தியனைத் தலை நிமிர்ந்து நிற்கச்செய்யும்.

விவேகானந்தரைப் பற்றிச் சொல்லுகையில்,

**"நிமிர் நெஞ்சு சீருடையில் நிலவென்னதலைப்பாகை**
**நெடுமுயரம் நீள்மேனி. நிலைத்த சிலை தனை நிகர்த்து,**
**அமிர்தமென ஆங்கிலத்தில் அங்கு இடம் பெற்றதொரு**
**அனைத்துலக மத ஆய்வு அவை தனிலே ஏறி நின்று**
**திமிரழத்த ஞானியவர் திருக்கரந் தனைக் குவித்து,**
**திரண்டிருந்த மக்கள்தமை தெய்வீகச் சகோதரரே**
**தமிழொத்த சகோதரிகாள் தானென்று விழித்துரைக்க**
**தாரணியோர் அரண்டு விட்டார் தருவார்த்தை என்றுரைத்தார்.."**

இது போல இந்தியத் தமிழர் எவரும் எழுதவில்லையே என்று என் மனம் ஏங்கிற்று!

சிறந்த முறையில் பயணத்தின் தொடர்ச்சியை 28 பகுதிகளாக விருத்த வடிவில் தந்துள்ளார், ஈழத்துப் பூராடனார். எனது கவனத்தை மிகுவாக ஈர்த்தது புலம் பெயர்ந்து குலம் வளர்த்த வல்வெட்டித்துறைக் கடலோடிகள் என்ற பகுதி இதை ஒரு தனித்த ஆய்வெனவே கொள்ளலாம். பல உண்மைகள் மிக எளிதாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

அன்னபூரணியின் அமெரிக்க வருகை 'பாஸ்டன் க்ளோப்' என்ற பத்திரிகையில் 1938 ஆகஸ்ட் 2 அன்று விரிவாக ஆங்கிலத்தில் தரப்பட்டிருந்ததை இங்கே சேர்த்திருப்பது நூலின் மதிப்பை நன்கு உயர்த்துகிறது. இம்மாதிரி ஆவணங்களுடன் சொற்ப நூல்களே தமிழகத்தில் காணலாம்.

அப்பத்திரிகை, ஜோசப் கோன்ராட் என்ற சிறந்த கப்பல் பற்றிக் கதைகள் எழுதிப் பிரபலமடைந்த எழுதிய நாவலொன்றைப் படிப்பது போல உள்ளது இக்கப்பலின் நீண்ட பயணமும் வருகையும் என்றே குறிப்பிடுகிறது. ஏனெனில் இது (அன்னபூரணி) ஒரு பாய்மரக் கப்பல். அமெரிக்கர்களுக்கு அவ்வருகை ஒரு கண்கொள்ளாக் காட்சியாக இருந்திருக்கும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை எனலாம்.

1937 பிப்ரவரி 27 ஆம் நாள் வல்வெட்டித்துறையினின்றும் புறப்பட்ட இக்கப்பல், ஆகஸ்டு 1, 1938 அன்று மசாசூசெட்ஸ் மாநிலத்தின் குளோசெஸ்டர் துறைமுகத்தையடைந்தது ஒரு பெரும் பணிதான்.

அத்துறைமுகத்தைச் சென்றடைந்தபோது மாலுமிகள் தமது வந்தனங்களை ஆண்டவனுக்குச் செலுத்திவிட்டு, நெற்றி நிறைய விபூதியுடன் நின்ற காட்சியை ஆங்கிலத்தில் பாஸ்டன் க்ளோப் இவ்வாறு விவரிக்கிறது:

**The Sacred Ash**

**Some of the Hindus sported a yellow dab on the forehead. The inquirer was informed that the dab was called the 'sacred ash' and its presence brought their God, Siva, closer to them. Siva knew all personally who wore that mark, they said. A spot on the forehead is whitewashed and then powdered and the dab stuck on that spot. The Hindus who belong to a high caste in Ceylon held their weekly worship on Friday night, their Sunday, by the way.**

சொல்லப் போனால், இது ஒரு சாதாரண நூலல்ல; இதன் மகிமை என் போன்ற கடலோடிகளுக்கு முக்கியமாகத் தென்படும். எவ்வளவு தான் படித்துத் தெரிந்து கொண்டாலும், அவ்வுணர்வு கடலில் கப்பலில் சென்றவர்களுக்குத் தான் தெரியும். இவர்கள் தான் உண்மையான தேசபக்தர்கள். நாட்டின் தூதுவர்கள். உழைப்பினாலும், தளராத முயற்சியாலும் உயர்ந்தவர்கள்.

நூலைப் படித்து முடிக்கையில் ஏதோ ஒரு சக்தி நம்மையே பிடித்து ஆட்டுவது போன்ற உணர்வு ஏற்படுகிறது.

நூலாக்கியவர்களைச் சிரம் தாழ்த்தி வாழ்த்துவதைத் தவிர என்ன செய்ய இயலும்? முக்கியமாக நண்பர், சக கடலோடி, பொன்னம்பலம் சிவகுமார் போற்றுதலுக்குரியவர்.

படம்: http://www.noolaham.org/wiki/index.php/வல்வெட்டித்துறை_கடலோடிகள்

---

தொடர்பு: கே.ஆர்.ஏ. நரசய்யா (narasiah267@gmail.com)

## 29. சர்வதேச மனித உரிமைச் சாசனம் - நூல்மதிப்புரை

*—முனைவர்.க.சுபாஷிணி*



**சர்வதேச மனித உரிமைச் சாசனம் 1948 - மானிடத்தின் சாதகம்**
**ஆசிரியர்: தா.தேச இலங்கை மன்னன்**
**வெளியீடு: சென்னை மித்ரா ஆர்ட்ஸ் & க்ரியேஷன்ஸ்**
**பதிப்பு ஆண்டு: 2015**

பிறந்தது முதல் இறக்கும் வரை இந்த உலகில் பிறந்த ஒவ்வொரு தனி மனிதருக்கும் அடிப்படை உரிமைகளும் சுதந்திரமும் கட்டாயமான அடிப்படைத் தேவையே. எவ்வகையான நம்பிக்கையைக் கொண்டிருந்தாலும், எந்தச் சமூகத்தில் பிறந்திருந்தாலும், எந்த இனக்குழுவில் அடையாளப்படுத்தப்பட்டாலும் அவற்றிற்கு அப்பால் ஒரு தனி மனித சுதந்திரம் என்பது முக்கியத்துவம் பெறுகின்றது. ஒரு தனி மனிதர் தாம் சார்ந்திருக்கும் இனத்தின் அடிப்படையிலோ, அல்லது தான் நம்பிக்கை

கொண்டிருக்கின்ற ஒரு மதத்தின் அடிப்படையிலோ, அல்லது தான் வாழ்கின்ற சமூகச் சூழலினாலோ, அல்லது தான் வாழ்கின்ற நாடு பிரகடனப்படுத்தியிருக்கும் சட்டங்களினாலோ, தனி மனிதர்கள் தங்களின் சிந்தனையின் வடிவங்களை முழுமையாக வெளிப்படுத்த முடியாத நிலை அல்லது தடைகள் என்பன ஏற்பட வாய்ப்புக்கள் உண்டு. ஆயினும் கூட பொது நலனைக் கருத்தில் கொண்டு, சட்ட ரீதியாக வடிவமைக்கப்படும் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொண்ட வகையில் தனி மனித சுதந்திரம் என்ற கோட்பாட்டின் அடிப்படையில், தனி மனித சிந்தனைகளையும் செயல்பாடுகளையும் வெளிப்படுத்த சுதந்திரப் போக்கு ஏற்பட வேண்டியது இன்றியமையாத தேவையாகின்றது. ஒரு தனி மனிதரின் முழுமையான சிந்தனை வளர்ச்சிக்கு அது வாய்ப்பினை வழங்குவதாகவும் அமைகின்றது.

வரலாற்றினைப் பின்னோக்கிப் பார்க்கும் போது, ஒரு தனி மனித சிந்தனைச் சுதந்திரத்தை உலகம் முழுவதுமே பண்டைய அரசுகள் எதிர்த்தன, அரசியல் அமைப்புக்கள் மறுத்தன என்பதைக் காண்கின்றோம். மூலிகை மருத்துவத்தை அறிமுகப்படுத்திய ஆயிரக்கணக்கான பெண் அறிவு ஜீவிகள் சூனியக்காரர்கள் என அழைக்கப்பட்டு உயிரோடு எரிக்கப்பட்ட வரலாறு ஐரோப்பாவின் கடந்த சில நூற்றாண்டுகள் வரை நிகழ்ந்தமையை இதற்கு நாம் உதாரணமாகச் சொல்லலாம். கலிலியோவின் கண்டுபிடிப்புக்களை ஏற்க மறுத்த வாட்டிக்கனின் சிந்தனை மறுப்பும், லியானார்டோ டாவின்சியின் சிந்தனை பரப்பிற்கு ஈடுகொடுக்க முடியாது திணறிய அரசுகளும் இன்று அத்தகைய அறிவியல் அறிஞர்களின் ஆய்வினால் பெருமை கொள்கின்றன. கல்வியே மனித வாழ்விற்கு ஆதாரம், கல்வியே மனிதக் குல மேன்மைக்கு வழிகாட்டி, கல்வியும் ஆய்வுகளும் தான் மனிதக் குலத்தை மேம்படுத்தும் என்று முயன்றவர்களால் தான் உலகம் இன்று மேம்பட்டுள்ளது. மிக இருக்கமான சமுதாய சூழலில் கடந்த நூற்றாண்டுகளில் வீட்டை விட்டு வெளிவர வாய்ப்பில்லாது இருந்த பெண்கள், ஆணுக்கு மட்டும் கல்வி, என்ற கோட்பாட்டை உடைத்துத் தனி மனித கல்வி உரிமையைப் போராடி பெற்றுள்ளனர். ஆயினும் கூட, தனி மனித உரிமைகள் மீறப்படும் நிகழ்வுகள் உலகம் முழுவதும் தொடர்கின்றன என்பது உண்மை.

கடுமையான சூழலில் மாட்டிக் கொண்ட பலருக்கு, ஒரு தனி மனிதருக்கு உரிமையும் உண்டா? என்ற ஐயப்பாடு எழுவது இயல்பே.

இந்த ஐயப்பாட்டை நிவர்த்தி செய்ய வேண்டுமென்றால் சர்வ தேச அளவில் தனி மனிதருக்கு வழங்கப்பட்டுள்ள தனி மனித உரிமை பற்றிய புரிதல் என்பது ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டியது மிக அவசியமாகும்.

ஐக்கிய நாடுகளின் சபையில் உறுப்பினராக அங்கம் வகிக்கும் நாடுகளில் 58 நாடுகளால் இனைந்து உருவாக்கப்பட்டதே மனித உரிமைச் சாசனம். இந்தத் தனி மனிதருக்கான உரிமைகளைப் பற்றி விளக்கும் மனித உரிமைச் சாசனம், உலக நாடுகளில் 194 நாடுகளால் அதிகாரப்பூர்வ மனித உரிமை அடிப்படை சாசனமாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

தனி மனித உரிமைகளை மறுப்போர் பலர் உள்ளனர். அவர்களுக்கு அதிகாரப்பூர்வமாக அங்கீகரிக்கப்பட்ட உரிமைகள் யாவை என்பதை விளக்க இந்த சாசனத்தைப் பற்றி பேச வேண்டியது அவசியமாகின்றது. அதே வேளை, தனி மனித உரிமைகளில் ஈடுபாடு கொண்டு உழைக்கும் சமூக நல அமைப்புக்களுக்கும் சமூக நல ஆர்வலர்களுக்கும் இந்தச் சாசனம் அளிக்கின்ற விவரங்கள் தங்கள் முயற்சிகளில் அவர்கள் சிறப்புடன் செயலாற்ற வழிகாட்டியாகவும் அமைந்துள்ளது.

இந்தச் சாசனங்களை விளக்கி தமிழில் ஒரு நூலாக வடித்திருக்கின்றார் இலங்கையில் பிறந்து வளர்ந்து இன்று இங்கிலாந்தின் லண்டன் மாநகரில் வசிக்கும் இனிய நண்பர் தேச இலங்கை மன்னன். உலகளாவிய மனித உரிமைகளைப் பற்றிய தெள்ளிய பின்புலத்தை அறிந்தவர், இலங்கையில் தமிழ் மக்களுக்கான சமூக நீதி சார்ந்த நடவடிக்கைகளின் பின்புல அனுபவங்கள் என்பதோடு பரந்த வாசிப்பும் கொண்டவர் இவர் என்பது இந்த நூலுக்கு உள்ள ஒரு தனிச்சிறப்பு எனலாம். 2016ம் ஆண்டு டென்மார்க் வீயன் நகரில் நிகழ்ந்த ஒரு தமிழ் பண்பாட்டுக் கலைவிழாவில் நான் கலந்து கொள்ளச் சென்றிருந்த வேளை இந்த நூல் எனக்கு வழங்கப்பட்டது. அதன் ஆசிரியர் முன்னிலையில் இந்த நூலைக் கிடைத்த குறுகிய நேரத்தில் வாசித்து முடித்து ஒரு விமர்சன சொற்பொழிவு ஆற்றினேன். ஒரு குறுகிய சூழலுக்குள் மட்டும் இந்த நூல் அடங்கி விடக்கூடாது என்பதாலும், இந்த

நூலுக்குப் பரந்த வாசிப்பு ஏற்பட வேண்டுமென்ற எண்ணத்தினாலும் இந்த நூலை விவரித்து சில தகவல்கள் இப்பதிவில் பகிரப்படுகின்றன.

"சர்வதேச மனித உரிமைச் சாசனம் 1948 - மானிடத்தின் சாதகம்" என்பது நூலின் பெயர். நூலாசிரியர் தா.தேச இலங்கை மன்னன். இந்த நூல் சென்னை மித்ரா ஆர்ட்ஸ் & க்ரியேஷன்ஸ் பதிப்பகத்தாரால் அச்சிடப்பட்டு 2015ம் ஆண்டு வெளியிடப்பட்டது.

நூல் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டு தகவல்கள் வழங்கப்பட்டுள்ளன.

முதல் பாகத்தில் அறிமுகப் பகுதியாக ஐக்கிய நாடுகள் அமைப்பின் சாசனம், அதன் பிரகடனம், சர்வ தேச மனித உரிமைகளின் ஆணையத் தோற்றம், மனித உரிமைகளின் சாசனத் தயாரிப்பு, நடைமுறைப்படுத்தலுக்கான யோசனைகள், அமுலாக்கலுக்கான செல்வாக்குமிக்க உடன்படிக்கைகள், நாடுகளுக்கிடையிலான வேறுபாடுகள், இந்தச் சாசன அமைப்பில் குறிப்பிடத்தக்க பங்களிப்பை வழங்கியவர்கள், சர்வதேச மனித உரிமைச் சாசனத்தின் அணிந்துரை, ஆகியன வழங்கப்பட்டுள்ளன.

நூலின் இரண்டாம் பாகம் இந்த நூலுக்கான மையப் புள்ளியை விளக்குகின்றது. இந்தப் பகுதியில் விதி எண் ஒன்றிலிருந்து விதி எண் 30 வரை விளக்கப்படுகின்றது. அதிகாரப்பூர்வ ஆவணத்தில் வழங்கப்பட்ட விதி ஆங்கிலத்தில் வழங்கப்பட்டு அதற்கான தமிழ் விளக்கம் ஒவ்வொரு விதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ளது. இந்த விதிகளுக்கு ஆசிரியர் தேர்ந்தெடுத்து வழங்கியிருக்கும் படங்கள் விதிகளுக்குப் பொருத்தமில்லாமல் இருக்கின்றன. இவற்றை நீக்குவது அவசியம் எனக் கருதுகிறேன். நூலாசிரியரும் எனது கருத்தை ஏற்பார் என்ற எண்ணம் எனக்குண்டு.

இறுதியாக வரும் மூன்றாம் பாகத்தில், சட்ட வடிவம் பெற்று வரும் இந்த மேற்குறிப்பிட்ட விதிகளில் நடைமுறை அமுலாக்கச் செய்தியும், வளர்ச்சியும் பேசப்படுகின்றன. உதாரணமாகக் குறிப்பிடவேண்டுமென்றால், குற்றவியல் நீதிமன்றத்தைப் பற்றிய ரோம் சாசனத்தின் நிலை, 1966 குடியியல் அரசியல் உரிமைகளுக்கான சர்வதேச உடன்படிக்கையின் நிலை, 1966 பொருளாதார, சமூக, கலாச்சார உரிமைகளுக்கான சர்வதேச

உடன்படிக்கையின் நிலை, பெண்களுக்கு எதிரான எல்லாவித பாரபட்சங்களையும் இல்லாது ஒழிப்பதற்கான மாநாட்டின் நிலை. பலவந்தமாகக் காணாமல் போனோர் பாதுகாப்பு பற்றிய சாசனத்தின் நிலை, வளர்ச்சி உரிமை பற்றிய பிரகடனத்தின் நிலை, மாற்றுத் திறனாளிகளின் உரிமை பற்றிய சாசனத்தின் நிலை என இருபத்தாறு பகுதிகளில் சாசனங்களின் வளர்ச்சி அலசப்படுகின்றது.

உலக நாடுகள் பெரும்பாலானவற்றில் தமிழர்கள் குடியேறியுள்ள இந்தக் காலச் சூழலில், இந்த நூல் நமக்கான அடிப்படை உரிமைகளை நமக்கு எடுத்துரைக்கும் ஒரு வழிகாட்டியாகத் திகழ்கின்றது என்று கூறலாம். திரு. தா. தேச இலங்கை மன்னனின் இந்த நூல் தமிழ் மக்களின் பொது அறிவு நலனுக்கான ஒரு தேவை. இந்த நூலை எல்லோரும் வாசித்து தகவல் பெற்று பலன் பெற வேண்டும் எனக் கருதுகிறேன். இது போன்ற சமூக நலன் சார்ந்த நூல்களை ஆசிரியர் மேன்மேலும் படைக்க வேண்டும் என்றும் என் கோரிக்கையை முன் வைக்கின்றேன்.

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 30. சூரியோதயம் முதல் உதயசூரியன் வரை- தலித் இதழ்கள் - நூல்மதிப்புரை

*—முனைவர்.க.சுபாஷிணி*




**சூரியோதயம் முதல் உதயசூரியன் வரை - தலித் இதழ்கள் 1869-1943**
**ஆசிரியர்: ஜெ.பாலசுப்பிரமணியம்**
**வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம்**

பல நூறு ஆண்டுகளாகச் சாதீய உயர்வு தாழ்வுகளால் ஒடுக்கப்பட்ட தலித் மக்கள், 19ம் நூற்றாண்டின் இறுதிக்காலக்கட்டத்தில் தமக்குக் கிடைத்த கல்வி வாய்ப்புகளின் பலனாலும் அக்கால சுயமரியாதை சிந்தனை எழுச்சியின் காரணத்தினாலும் சமூக விழிப்புணர்வு பெற்றனர். சமூகப் பார்வை என்பது அரசியல் பார்வையுடன் ஒருமித்த வகையில், அக்காலகட்ட எழுச்சி நிலை அமைந்திருந்தது. இந்த விழிப்புணர்வின் அடையாளமாகத்

தலித் மக்கள் முயற்சியில், தமது சமூகத்தவர் பிரச்சனைகளை அலசும் வகையிலும், தீர்வுகளைக் காண முனையும் வகையிலும் இதழ்கள் வெளிவரத்தொடங்கின. இந்த இதழ்கள், பத்திரிக்கைகள் பற்றி இன்று பலரும் மறந்து விட்ட சூழலில் கி.பி. 19ம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வெளிவந்த 42 தலித் பத்திரிக்கைகள், இதழ்கள் பற்றிய தகவல்களைத் திரட்டி அவற்றை மேற்கோள்களுடனும், அவற்றை வெளியிட்ட ஆசிரியர், பதிப்பகத்தார் பற்றியும் தொகுத்து நல்லதொரு நூலைப் படைத்திருக்கின்றார் நூலாசிரியர். எனது அண்மைய வாசிப்புக்களில் மிக விரிவான களப்பணியுடன் கூடிய ஒரு ஆய்வு நூலாக இந்த நூலைக் காண்கின்றேன்.

20ம் நூற்றாண்டின் பத்திரிக்கை மற்றும் இதழ்கள் பற்றின முயற்சி எனப் பேசத்தொடங்கும் போது பொதுவாக பலரும் அறிந்தவையாக இருப்பவை சுதேசமித்திரன், இந்தியா, ஆனந்த விகடன், கலைமகள், கல்கி எனக் குறிப்பிடலாம். தலித் இதழ்கள் எனக் குறிப்பிட்டு தேடத் தொடங்கினால் ஒரு சிலருக்கு அயோத்திதாசப் பண்டிதரது முயற்சியில் வெளிவந்த ஒரு பைசா தமிழன் பத்திரிக்கை நினைவுக்கு வரலாம். இந்த நூலிலோ 42 இலக்கிய முயற்சிகள் தலித் சமூக விழிப்புணர்ச்சிக்காக இயங்கியமை பற்றியும் இவை அனைத்துமே தலித் சமூகத்தவரால் தொடங்கி நடத்தப்பட்டவை என்பதையும் அறிகின்றோம்.

கல்வி பெறுவதிலிருந்து ஒதுக்கப்பட்ட தலித் சமூகத்தவர் கல்வி பெற வேண்டும் என சீரிய பணியாற்றியோர் பலரைப் பற்றி இன்று யாரும் பேசுவதில்லை. திரு.ஜான் ரத்தினம் அயோத்திதாசப்பண்டிதரோடு இணைந்து திராவிடப்பாண்டியன் என்ற இதழை நடத்தியவர். இவர் 1889ம் ஆண்டு தலித் சமூகத்துக் குழந்தைகள் கல்வி கற்கும் வகை செய்ய ஒரு மாதிரி பள்ளியை உருவாக்கியிருக்கின்றார். 1892ம் ஆண்டு சென்னை ஆயிரம் விளக்கு பகுதியில் ஆண் பெண் குழந்தைகள் இருபாலருக்கும் என ஒரு பெரிய பள்ளிக்கூடத்தைத் தொடங்கியிருக்கின்றார். அதோடு சென்னை மக்கீம் நகரில் ஒரு பள்ளிக்கூடத்தையும், 1889ம் ஆண்டு பெண்களுக்கான மாணவியர் விடுதி ஒன்றையும் உருவாக்கியிருக்கின்றார். இவருக்கு அடுத்து 1906ம் ஆண்டு எம்.ஒய்.முருகேசம் பிள்ளை (தலித் சமூகத்தவர் குறிப்பாகப் பண்டிதர்கள்

அக்காலச் சூழலில் பிள்ளை என்ற அடையாளத்தைப் பயன்படுத்தினர்) கோலார் தங்கவயல் பகுதியிலும், மாரிக்குப்பம் பகுதியிலும், சாம்பியன் காலணியிலும் இன்னும் வேறு சில பகுதிகளிலும் பள்ளிக்கூடங்களைத் தொடங்கியிருக்கின்றார். இவர் மட்டுமே பகல் வேளையில் இயங்கும் இரண்டு பள்ளிக்கூடங்களையும் 16 இரவு பள்ளிக் கூடங்களையும் தொடங்கியிருக்கின்றார். சிதம்பரத்தில் தலித் மக்கள் சமூக மேம்பாட்டிற்காகச் சேவை செய்தவர் சுவாமி சகஜானந்தா அவர்கள். இவர் சிதம்பரத்தில் 1910ம் ஆண்டு நந்தனார் பள்ளியைத் தொடங்கினார்.

தலித் சமூகத்தில் பெரிதும் அறியப்பட்ட எம்.சி.ராஜா 1916ம் ஆண்டு சென்னை நுங்கம்பாக்கம் ஜகந்நாதன் சாலையில், அதாவது தற்போது வள்ளுவர் கோட்டம் உள்ள சாலைக்கும் நுங்கம்பாக்கம் சாலைக்கும் இடையில் இருப்பது, ஆதிதிராவிட மகாஜன சபையின் பள்ளியைத் தொடங்கினார். எல்.சி.குருசாமி என்பவர் 1921ம் ஆண்டு சென்னை ராயபுரத்திலும் புதுப்பேட்டையிலும் இரவுப்பள்ளிகளை நிறுவினார். இவை மட்டுமன்றி தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளிலும் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தலித் சமூகத்தைச் சேர்ந்த சமூக ஆர்வலர்களால் தலித் மக்கள் கல்வி மேன்மைக்காகப் பள்ளிக்கூடங்கள் தொடங்கப்பட்டன என்றாலும் அவை பற்றின தகவல்களும் ஆவணங்களும் முறையாகப் பதியப்படவில்லை என்பதையும் கவனிக்க வேண்டியுள்ளது.

இப்படி பல்வேறு பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளினால் தலித் சமூகத்துக் குழந்தைகள் நவீன ஆரம்பக் கல்வியையும் அதன் பின்னர் உயர் நிலைக்கல்வியையும் பெறும் வாய்ப்பினை பெற்றனர். இத்தகைய கல்வி வாய்ப்பு பெற்று வளர்ந்தவர்களில் சிலரே ஏனைய தலித் சமூகத்து மக்கள் நலன் கருதி பத்திரிக்கைகளும் இதழ்களும் ஏற்படுத்தி சமூக சீர்திருத்தச் செயல்பாடுகளை முன்னெடுத்தனர். இதன் காரணமாக விளைந்தவையே அக் காலச்சூழலில் வெளிவந்த பத்திரிக்கைகளுக்கும் இதழ்களுக்கும் எனலாம்.

இந்த நூலில் ஆசிரியர் தனது ஆய்வில் அடையாளம் கண்டு ஆராய்ந்த பத்திரிக்கைகளின் பெயர்களையும், அவற்றின் ஆசிரியர்களையும்,

பதிப்பகத்தையும், அவை முன்னெடுத்த சீரமைப்பு சிந்தனைகளையும் முடிந்த வரைக்கும் மிகச் சிறப்பாக விளக்கிச் செல்கின்றார்.

இந்த நூலில் முதலில் வருவது சூரியோதம் இதழ். இது திருவேங்கடசாமி பண்டிதர் என்பவரால் 1869ம் ஆண்டு சென்னையிலிருந்து வெளியிடப்பட்டது. அடுத்து வருவது பஞ்சமன் இதழ். இது 1871ம் ஆண்டு வெளிவந்தது. தலித் மக்களின் முன்னேற்றத்திற்கான போராட்டக் குரலாக இந்த இதழ் செயல்பட்டதாக ஆசிரியரின் தகவல்கள் அமைகின்றன. 1872ம் ஆண்டு சுவாமி அரங்கையாதாஸ் என்பவரால் மெட்ராஸிலிருந்து வெளியிடப்பட்டது சுகிர்தவசனி எனும் இதழ். இது சமூக சீர்திருத்தம், மூட நம்பிக்கை ஒழிப்பு போன்ற கருத்துக்களை முன்வைத்துச் செயல்பட்ட ஒரு இதழாக அமைகிறது. இந்துமத சீர்திருத்தி எனும் இதழ் 1883ம் ஆண்டு பாளையங்கோட்டையில் கே.ஆறுமுகம் பிள்ளை எனும் ஆதிதிராவிடரால் தொடங்கப்பட்ட முயற்சி. வேலூர் முனிசாமிப் பண்டிதரின் முயற்சியால் 1886ம் ஆண்டு ஆன்றோர் மித்திரன் எனும் இதழ் தொடங்கப்பட்டது. சென்னை கிருத்துவக் கல்லூரியில் பணியாற்றிய பா.அ.அ.இராஜேந்திரம் பிள்ளை என்பவரால் தொடங்கப்பட்ட இதழ் மஹாவிகடதூதன். இது 1886 முதல் 1927 வரை வெளிவந்தது என்றும் வேறு தலித் சமூகத்துப் பத்திரிக்கை ஆசிரியர்கள் இதன் வெளியீட்டைத் தொடர்ந்தனர் என்பதையும் அறிய முடிகின்றது. பறையன் இதழ் இரட்டைமலை சீனிவாசன் அவர்களால் 1893 முதல் 1900 வரை வெளியிடப்பட்டன. மாத இதழாகத் தொடங்கி பின்னர் வார இதழாக இது மாற்றம் பெற்றது. இந்தப் பத்திரிக்கை ஒடுக்கப்பட்டோருக்காக அதிலும் பறையர் சமூகத்தோருக்காகத் தனிப்பள்ளி தொடங்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையையும் முன் வைத்து வெளிவந்தது என அறியமுடிகின்றது. திராவிடப் பாண்டியன் எனும் இதழை ஜான் இரத்தினம் அவர்களும் அயோத்திதாசப் பண்டிதரும் இணைந்து 1896ம் ஆண்டு தொடங்கினர் முதலில் ஒரு சங்கமாகத் தொடங்கப்பட்ட இந்த முயற்சியின் தொடர்ச்சியாக இதே பெயரில் இதழையும் தொடங்கினர் என்பதையும் இந்த நூலிலிருந்து அறியக் கூடியதாக உள்ளது.

இல்லற ஒழுக்கம் (1898), பூலோகவியாஸன் (1903-1917), ஒரு பைசா தமிழன், திராவிட கோகிலம், மதுவிலக்கு தூதன், ஆல்காட் கிண்டர்கார்ட்டன்

ரிவியூ, விநோதபாஷிதன், ஊரிஸ் காலேஜ் கிண்டர்கார்ட்டன் மேகசின், வழிகாட்டுவோன், ஆதிதிராவிடன், மெட்ராஸ் ஆதிதிராவிடன், ஜாதி பேதமற்றோன் இந்திரகுல போதினி, சாம்பவர் நேசன், ஆதிதிராவிட பாதுகாவலன், சாம்பவகுல மித்திரன், தருமதொனி, சந்திரிகை என ஒவ்வொரு இதழைப்பற்றிய குறிப்புக்களையும் நூலாசிரியர் தேடிச் சேகரித்து இந்த நூலில் வழங்கியிருக்கின்றார். 42 இதழ்கள் மட்டும்தானா, என்று நம் மனதில் எழும் கேள்விக்கு, இன்னும் கூட பத்திரிக்கை முயற்சிகள் இருக்கலாம், ஆனால் அவை மேலும் ஆராயப்பட வேண்டும் என்ற சிந்தனையையே வாசிக்கும் வாசகர்களுக்கு நூல் வழங்கும் செய்தியாக இருக்கின்றது.

இந்த நூல் குறிப்பிடும் தலித் இதழ்களில் பல இன்று தமிழகத்தில் தேடிக் கண்டுபிடிப்பதில் சிரமங்கள் இருக்கின்றன. ஆங்கிலேய காலணித்துவ ஆட்சியின் போது அரசினால் பாதுகாக்கப்பட்ட ஆவணங்களில் தேடினால் இவற்றைக் கண்டெடுக்க வாய்ப்புண்டு. அதோடு இங்கிலாந்தின் பிரித்தானிய நூலகத்தில் இவற்றின் படிகள் இருக்கவும் வாய்ப்பு நிச்சயம் இருக்கலாம். அவ்வகையில் தேடுதல் முயற்சிகளை முன்னெடுத்தால் 19ம் நூற்றாண்டின் இறுதி தொடங்கி வெளிவந்த தலித் பத்திரிக்கைகளையும் இதழ்களையும் நாம் காணும் வாய்ப்பு கிட்டும்.

நூலாசிரியரின் கடுமையான ஆய்வு முயற்சியும், இத்துறையிலான விரிவான வாசிப்பும் நூலில் முழுமையாக வெளிப்படுகின்றது. நல்லதொரு ஆய்வு நூலை வழங்கியிருக்கும் முனைவர் ஜெ.பாலசுப்பிரமணியம் பாராட்டுதலுக்குரியவர். மேலும் சிறந்த ஆய்வுப் படைப்புக்களை அவர் வழங்க எனது நல்வாழ்த்துகள்.

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 31. தமிழகத்தில் தேவதாசிகள் - நூல்மதிப்புரை

*—முனைவர்.க.சுபாஷிணி*



**தமிழகத்தில் தேவதாசிகள்**
**ஆசிரியர்: முனைவர் கே.சதாசிவன் (ஆங்கிலம்)**
**தமிழ் மொழிபெயர்ப்பு: கமலாலயன்**
**வெளியீடு: அகநி பதிப்பகம்**
**முதல் பதிப்பு: 2013**

தேவதாசி, தேவரடியார் என்ற சொற்களின் பொருளை அறிந்து கொள்ளும் ஆர்வம் இன்று அதிகரித்திருக்கின்றது. உலகம் முழுவதுமே மக்களின் பண்பாட்டில் ஆணும், பெண்ணும் இறைவனுக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளும் நடைமுறை வழக்கில் உள்ளது. இந்தியாவில் அதிலும் குறிப்பாகத் தமிழகத்தில் பன்நெடுங்காலமாக இருந்து வரும்

இறைவனுக்குத் தம்மை அர்ப்பணிக்கும் பெண்களைப் பற்றிய ஒரு ஆய்வு நூலாக இதனைக் காண்கின்றேன்.

இந்த நூலின் ஆசிரியர் முனைவர் கே.சதாசிவன், திருநெல்வேலி மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் வரலாற்றுத் துறையின் மேனாள் பேராசிரியராக, துறைத்தலைவராக இருந்து ஓய்வு பெற்றவர். இந்த நூலின் முன்னுரையில், தேவதாசி முறை என்பது கி.பி. 6ம் நூற்றாண்டில் வளர்ச்சிகண்ட ஒன்று என்றும், பக்தி இயக்கம் படிப்படியாக செழித்து வளர்ந்த காலத்தில் தங்களை முழுமையாகக் கோயில் பணிக்காக அர்ப்பணித்துக் கொண்ட முழுநேரத் தொண்டர்கள் ஆண், பெண் இருபாலரிலும் தேவைப்பட்டமையே இந்த முறை வளர்ச்சி கண்டமைக்குக் காரணம் எனவும் இவர் பதிகிறார்.

தேவதாசிகளின் கோயில் பங்களிப்புக்களும் அவர்களின் ஆளுமைகளும் பெருமைகளும் விரிவாக எடுத்துச் சொல்லப்படும் அதே வேளை, படிப்படியாக அரசுகள் தலையீட்டினாலும் சமூகச்சூழல் மாற்றத்தினாலும் இத்தகைய பெண்களின் வாழ்வில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றியும் இந்த நூல் விரிவாக விவரிக்கின்றது.

நடனக்கலை வளர்த்த பெண்டிர் எனும் போது, சிந்து வெளி அகழ்வாய்வுகளிலிருந்து இக்கலை வளர்ந்திருக்கலாம் என்பதற்குக் கிடைத்திருக்கும் சான்றுகள் உதவுகின்றன. சிலப்பதிகாரம் மணிமேகலை காலத்தில் நடனமகளிர் பங்களிப்புக்கள், அவர்களின் பங்கு எனவும் ஆய்வுத் தகவல்கள் இணைக்கப்பட்டுள்ளன.

தமிழகத்தில் இதுவரை கண்டெடுத்து படியெடுக்கப்பட்டு வாசிக்கப்பட்ட கல்வெட்டுக்களில், ஏறக்குறைய 500 கல்வெட்டுச் சாசனங்களை அடிப்படையாகக் கொண்டு இந்த நூலுக்கான ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. அத்துடன், நேரடி கள ஆய்வும் இந்த நூல் உருவாக்கத்திற்குத் துணை புரிந்துள்ளது. 400 பக்கங்கள் கொண்ட இந்த நூலில் தேவதாசி எனும் பெண்பால் கோயிலுக்கான முழு நேரத் தொண்டர்கள் பற்றின பல அம்சங்கள் வரலாற்று ரீதியாகவும், பண்பாட்டு ரீதியாகவும் பதியப்பட்டுள்ளன.

இந்த நூலின் அறிமுகப்பகுதியும் துணை நூற்குறிப்புகளும் போக, பத்து அத்தியாயங்களில் ஆய்வுக்குறிப்புகள் வைக்கப்பட்டுள்ளன. அவை:

- தேவதாசி முறையின் தோற்றம்
- தேவதாசி முறையின் மீது ஆகமங்கள் மற்றும் பக்தி இயக்கத்தின் தாக்கம்
- தேவதாசிகளின் வாழ்க்கை
- மேலும் அதிகச் சடங்குகள், மேலும் அதிக தேவதாசிகள்
- கடமைகளும் பரிசுகளும்
- உள்ளார்ந்த முரண்பாடு
- தேவதாசி முறை மீது படிந்த கிரகண நிழல்
- மீளவும் வந்தது இந்த முறை
- சீர்குலைவும் வீழ்ச்சியும்
- தேவதாசி முறையும் தமிழ்நாட்டின் நுண்கலைகளும்

தமிழர் வரலாற்றிலும், பண்பாட்டிலும் கோயிற்கலை என்பது தவிர்க்கப்பட முடியாது ஒரு கூறு. பண்டைய கோயிற்கலை மரபுகளை ஆராய முற்படும் போது தேவதாசி முறையும், கோயில் தொழிலாளர்கள் முறையும் மிக முக்கியமானவை. இவற்றை ஒதுக்கிப் பார்ப்பதோ, தேவதாசி என்ற சொல்லிற்குத் தவறான ஒரு பார்வையை மட்டுமே வழங்கி ஒதுக்குவதோ மிகத் தவறான ஒரு போக்காகும். இன்றைய காலச் சூழலில் மேலெழுந்தவாரியாக மட்டுமே சில செய்திகளைக் கேட்டு உணர்ச்சி வசப்பட்டு கொந்தளித்துச் செல்வது ஒரு அவசர நிலை மனப்பாட்டைத்தான் வெளிப்படுத்துகின்றது. மிக நுணுக்கமான பல கூறுகளை அடித்தளமாகக் கொண்ட தமிழர் பண்பாட்டை புரிந்து கொள்ள ஆய்வுத்துறையில் திறந்த மனம் தான் அனைவருக்குமே அடிப்படைத் தேவை!

---

தொடர்பு: முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

# 32. இந்துக்கோயில்களின் சின்னமேள ஆடற்கலை மரபு – ஓர் பெண்ணிய நோக்கு

*—வலன்ரீனா இளங்கோவன், மா.வேதநாதன்*

**“ஈழத்தின் வடபால் யாழ்ப்பாணத்து இந்துக்கோயில்களில் இடம்பெற்ற சின்னமேள ஆடற்கலை மரபு - ஓர் பெண்ணிய நோக்கு”**

**திருமதி. வலன்ரீனா இளங்கோவன்**
B.A (Hons), PGD.Edu, M.A(Dist)
முதுதத்துவமாணி பட்ட ஆய்வாளர்,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், இலங்கை.

**பேராசிரியர்.மா.வேதநாதன்,**
இந்துநாகரிகத்துறை, கலைப்பீடம்,
யாழ்.பல்கலைக்கழகம், இலங்கை.

**அறிமுகம்** :-

ஈழத்தமிழரின் வரலாற்று அடையாளங்கள் பதிவு செய்யப்பட வேண்டிய இக்காலப்பகுதியில் அவர்களின் கலை, கலாச்சாரம், பண்பாடு பற்றிய ஆய்வுகள் அவசியமாகின்றன. ஈழத்தமிழரின் கலாச்சார மையமாகத் திகழும் யாழ்ப்பாணக் குடாநாடு நீண்டகால வரலாற்றையும், தொடர்ச்சியான பண்பாட்டுப் பாரம்பரியத்தையும் கொண்ட பிரதேசமாக விளங்குகின்றது. இப்பிரதேசத்தில் இந்துக் கோயில்களை அடிப்படையாகக் கொண்ட கலைமரபு வளர்ச்சியுற்று வந்துள்ளதை அறிய முடிகின்றது. அவ்வகையில் ஒரு காலகட்டத்தில் கோயில்களில் பக்திபூர்வமாக இறைவனுக்கு நிருத்த தானமாகப் பெண்களால் நிகழ்த்தப்பட்டு வந்த நிகழ்த்துக் கலையே சின்னமேள ஆடற்கலை மரபு ஆகும்.

**சின்னமேளம் :-**

கோயில் ஆராதனை சார்ந்த நாட்டியத்தில் பெண்கள் மட்டும் ஆடும் நடனமும் கோயில்களில் தேவதாசிகளால் ஆடும் நடனமும் 'நட்டுவமேளம்' என்றும், ஆண்கள் மட்டும் செய்யும்முறை 'நாட்டியமேளம்' என்றும், 'பெரியமேளம்' என்பது டோல், சண்ணாய, தாளம் ஆகியவை இணைந்த இசைக்குழு என்றும், சின்னமேளம் என்பது சுருதி, முகவீணை, மிருதங்கம், தாளம் என நிருத்தியத்தில் வாசிக்கும் "இசைக் குழுவினர் கூட்டமே" என்றும் கலைமாமணி எஸ்.என்.ஸ்ரீராமதேசிகன் பரதக்கலைக் களஞ்சியம் எனும் ஆய்வு நூலில் குறிப்பிடுகின்றார். (ஸ்ரீராம தேசிகன், 2001:42)

'சதிராட்டம்' என அழைக்கப்பட்டு வந்த தாசிகளின் ஆட்டமானது சினிமாவின் தாக்கத்தால் 'சதிர்' ஆட்டத்தின் தன்மையற்று ஒருபுதுவித ஆடலாகத் தோன்றியமையால் மக்கள் 'சதிர் ஆட்டம்' என்று அழைக்காது 'சின்னமேளம்' என்று அழைத்திருக்கக் கூடும்.

'க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதியில் 'சின்னமேளம்' என்பது சதிர் ஆட்டத்திற்கு வாசிக்கப்படும் தோற்கருவி என்றும், இலங்கையில் திருவிழா போன்றவற்றில் திரைப்படப் பாடலுக்கு ஆடும் நடனம், dance performed to the tunes of film songs (as part of temple festivals) இந்தமுறை திருவிழாவிற்கு மூன்றுசோடி சின்னமேளம் பிடித்துள்ளார்கள். பெரியமேளக் கச்சேரி முடிந்ததும் சின்னமேளக் கச்சேரி தொடங்கும்" என்றும் குறிப்பிடப்படுகின்றது. (ராமகிருஷ்ணன் 2011:590)

**சின்னமேளத்தின் தோற்றம் :-**

தமிழர் தம் நாட்டியக் கலையானது ஆரம்பக் காலத்தில் 'கூத்து' என்ற பெயருடன் விளங்கியது. இருபதாம் நூற்றாண்டு வரை சதிராட்டம், தாசியாட்டம், தேவரடியார் ஆட்டம் எனப் பெயர் பெற்று விளங்கியதாகத் தெரிகின்றது. எனினும் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தின் முன்பின்னாக இது 'சின்னமேளம்' என அழைக்கப்படுவது பெருவழக்காக இருந்தது.

யாழ்ப்பாணத்தில் செட்டிமார்கள் கட்டிய கோயில்களில் இறைவனுக்கு ஆடற்கிரியை வழங்குவதற்காக இலங்கைக்குக் கூட்டி வரப்பட்டவர்கள் தமிழகத்து ஆடல் மங்கையர்கள். இவர்களைப் போல் இலங்கையிலும் ஆடல்

மங்கையர்கள் இருந்துள்ளார்கள். இவ் ஆடல் மங்கையரின் ஆடல்களே 'சின்னமேளம்' என்று அழைக்கப்பட்டது.

யாழ்ப்பாணத்தில் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இத்தகையோர் கோயில் ஆடல் மங்கையர்களாகக் கடமையாற்றிய அதேவேளையில் சிறிய நிலமானியப் பொருளாதார முறையை அடியொற்றிய பரத்தைத் தொழில் புரிந்து காதற் பரத்தைகளாக வாழ்ந்து வந்தனர் என்பதனை நட்டுவச்சுப்பையனார் எழுதிய கனகிபுராணம், நாவலர் பிரபந்தத்திரட்டு என்னும் நூல்கள் வாயிலாகவும் உறுதி செய்ய முடிகின்றது.

எனவே தாசிகள் என்ற பரத்தை தொழில் புரியும் குலத்தினர் கோயில்களிலே குறிப்பாக, திருவிழாக் காலங்களிலே நிகழ்த்தி வந்த ஆடற்கலையே 'சின்னமேளம்' என்று மக்கள் அழைத்ததாக அறிய முடிகின்றது. அரசவைக் களங்களிலும், சில ஆண்டவன் சந்நிதிகளிலும் ஆடப்பட்டு கால ஓட்டத்தில் எல்லாக் கோயில்களிலும் இடம்பெறும் நிகழ்ச்சியாக வளர்ந்தது. அங்கெல்லாம் கோயில் பூசைகளில் நட்டுவ மேளத்தைக் கண்ட மக்கள், தேவதாசிகள் ஆட்டத்திற்குச் சிறிய அளவிலான மேளம் (மிருதங்கம்) பாவிக்கப்படுவதனைக் கண்டு அதனை (சின்னமேளம்) என அழைக்க முற்பட்டு நாளடைவில் அம்மேளம் பாவிக்கும் நாட்டியக் கலையையே 'சின்னமேளம்' என்ற பெயர் கொண்டு அழைக்கும் மரபு தோன்றியது எனக் கலாநிதி பத்மா சுப்பிரமணியம் போன்றவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்.

எனவே ஆரம்பத்தில் சின்னமேளம் என்பது மிருதங்கத்தினைக் குறித்துப் பின்னர் இவ்வாத்தியத்துடன் ஆற்றுகையை நிகழ்த்தும் குழுவினரையே குறிப்பிட்டிருத்தல் வேண்டும். இதனால் இந்நடனத்தை ஆடும் பெண்களை 'சின்னமேளக்காரி' என்று அழைக்கும் மரபு யாழ்ப்பாணத்தில் பெருவழக்காக நிலவியது.

'சின்னமேளம்' என்ற பெயர் இருபதாம் நூற்றாண்டில் பிரபல்யம் அடைய ஏனைய பெயர்கள் பின்னடைந்தன. இப்பெயர் தமிழகத்தைவிட யாழ்ப்பாணத்தில் பிரபல்யம் அடைந்தது. இருபதாம் நூற்றாண்டின்

முன்னரைப் பகுதியில் இவ் ஆடற்கலை பெருவளர்ச்சி கண்டு மிகப் பிரபல்யமடைந்தமையைப் பற்றி அறிய முடிகின்றது.

**சின்னமேளத்தின் வளர்ச்சி** :-

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இருந்த பிரித்தானியரர் ஆட்சியே இருபதாம் நூற்றாண்டின் முன்னரைப் பகுதி வரை (1948) ஈழத்திலும் இந்தியாவிலும் தொடர்ந்து இருந்து வந்தது. எனவே காலவளர்ச்சிக்கு ஏற்ப யாழ்ப்பாணத் தமிழகத் தொடர்புகள் இக்காலத்தில் நெருக்கமாயின. இதனால் சமய கலை கலாச்சார ஊட்டம் மேன்மேலும் நெருக்கம் அடைந்தது. தமிழகத்து பல்துறைக் கலைஞர்கள் ஈழத்தினைத் தரிசிக்கும் நிலை ஏற்பட்டது. இவர்கள் ஈழத்திற்கு வந்து செல்வதை புகழ் தரும் நிகழ்வாகக் கருதினர் எனத் தெரிகின்றது.

இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட தமிழகக் கலையலையில் ஆடல் மகளிர் பலர் யாழ்ப்பாணத்திற்கு வந்து சென்றதாகவும், சிலர் இங்கு நிலையான வாழ்க்கையை ஏற்படுத்திக் கொண்டதாகவும் கூறப்படுகின்றது. ஆரம்பக்காலத்தில் யாழ்வண்ணார் பண்ணையில் (1900ஆம் ஆண்டில்) புத்துவாட்டி மடுவமே தேவதாசிகளின் முக்கிய வதிவிடமாக இருந்தாகத் தெரிகின்றது. பேராசிரியர் கா.சிவத்தம்பி அவர்கள் “புத்துவாட்டி” குடும்பத்தினரை விட்டு யாழ்ப்பாணத்தின் இசை, நாடக, நடன வரலாறுகளை எழுத முடியாது” என்று கூறியமை இக்கருத்தினை உறுதிசெய்கின்றது. (வலன்ரீனா 2008:17).

ஆரம்பத்தில் கோயில் கலை மரபாக சமயச் சடங்குகளுடன் ஒட்டிய கலையாக விளங்கிய இவ் ஆடற்கலை 20ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலகட்டத்தினைத் தொடர்ந்து நாடக மேடைகளிலும் இடம்பெறலாயிற்று. ஆடல் மகளிர் நாடகங்களில் நடிக்கவும் செய்தனர். இவ்வாறு நடித்தவர்களில் இராஜலக்சுமி, கன்னிகா பரமேஸ்வரி என்பவர்கள் முக்கியமானவர். 1910க்களில் புத்துவாட்டி சின்னத்தம்பி என்பவர் அங்கு ஏற்படுத்திய நாடகக் கொட்டகையில் தமிழக நாடக, ஆடற்கலைஞர்களின் நிகழ்ச்சிகள் இடம்பெற்றன. புத்துவாட்டியார் மடுவத்தில் ஆரம்பத்தில் இருந்த தேவதாசிகளில் செல்லக்கண்டு, இராஜலக்சுமி, இராஜாம்பாள் என்பவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாகக் கூறப்படுகின்றார்கள்.

**கோவில்களில் சின்னமேள ஆடல் நிகழ்வுகள் :-**

யாழ்ப்பாணத்துக் கோவில்களிலே கோயில் திருவிழாக்களின்போது, வசந்த மண்டபத்தில் முதலில் தவில் நாதஸ்வரக் கச்சேரிகள் ஆரம்பமாகும். இக்கச்சேரியானது களைகட்டி வாசிக்கப்படும் போது, அடுத்த நிகழ்வாகச் சின்னமேளக் கச்சேரிக்கான ஆயத்தங்கள் நடைபெறும். அதன் முன்னோடியாகச் சின்னமேள நிகழ்ச்சிக்குரிய பக்கவாத்தியக் கலைஞர்களான மத்தளக்காரரும், ஆர்மோனியக்காரரும் தென்படுவார்கள். பார்வையாளர்கள் இவர்களைக் கண்டதும் தவில் நாதஸ்வரக் கச்சேரிகளின் ரசனையை விடுத்து சின்னமேள நிகழ்ச்சியை எதிர்பார்த்து ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிவிழுத்திக் கொண்டு சபையில் அமர்வார்கள். இதனால் தவில் கலைஞர்கள் தங்கள் கச்சேரிகளை இடையில் நிறுத்த வேண்டிய நிலை ஏற்படும்.

இந்நிலையைப் பற்றி பல்துறைக் கலைஞரும், நாதஸ்வரக் கலைஞருமான திரு.வி.மாசிலாமணி அவர்களின் மனைவி முத்துலட்சுமி அவர்களின் கீழ் கண்ட செவ்வி எடுத்து விளக்குகின்றது.

“சபையோரின் ஆரவாரத்தினால் களைகட்டி அற்புதமாக வாசித்துக் கொண்டிருக்கும் தவில் நாதஸ்வரக் கலைஞர்கள் மேளத்தையும் நாதஸ்வரத்தையும் கட்டிக்கொண்டு எழும்பிச் செல்லவேண்டிய நிலை உருவாகும்.”. (வயது 89, 23.03.2017 முத்துலட்சுமி.மா, வீட்டுப்பணி - நேர்காணல்).

சின்னமேள ஆடல் நிகழ்வானது தவில், நாதஸ்வர நிகழ்வுகளையெல்லாம் பின்தள்ளி முதன்மையான இடத்தைப் பெறுவதற்கு அக்கால சமூக நிலையையும் ஒரு காரணம் என்று பல முதியவர்களின் செவ்விகள் மூலம் அறிந்துகொள்ளக் கூடியதாக உள்ளது.

அதாவது, அக்காலத்தில் யாழ்ப்பாணத்தில் பெண்கள் வீட்டை விட்டு வெளியில் வருவது மிகக்குறைவு. பொது இடங்களில் அவர்களைக் காணும் வாய்ப்பு அக்கால இளைஞர்களுக்கு மிகவும் குறைவாக இருந்தமையால் அழகும் கவர்ச்சியும் மிக்க சின்னமேள ஆடல் மகளிரைக் காண்பது இளைஞர்களுக்கு அரிய சந்தர்ப்பமாக அமைந்தது. எனவே எல்லாத்

தடைகளையும் தாண்டி வந்து இச்சின்னமேள ஆடல்களை முண்டியடித்துக்கொண்டு வந்து இளைஞர்கள் பார்ப்பதில் வியப்பேதுமில்லை.

அன்றைய காலத்தில் சுவாமி வீதியுலா வரும்போது ஆடல்மகளிர் சுவாமிக்கு முன்பாக நடனமாடிக்கொண்டு சென்றதாகவும் அறியமுடிகின்றது. இவ்வாறு சுவாமிக்கு முன்பாக புனிதமாக தெய்வீக மணங்கமழ சின்னமேள ஆடல் நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன என்பதையும் அறியமுடிகின்றது. இவ்வாறான நிகழ்ச்சிகள் சின்னமேளக்; கலைக்குரிய தெய்வீகப் பின்புலத்தை வளமூட்டுவதாக அமைகின்றது.

**சின்னமேளம் ஜனரஞ்சகமடைதல்:-**

யாழ்ப்பாணத்துக் கோயில்களில் பக்தி பூர்வமாக ஆடப்பட்டு வந்த ஆடற்கலையானது வெகுவிரைவில் கோயிற்கலையாக இல்லாது வருமானம் தேடுவதற்குரிய கலையாக மாறியது. ‘சின்னமேளம்’ என்ற நாமம் யாழ் குடிமக்கள்; ஒவ்வொருவருக்கும் மனப்பதிவு பெற்றது. கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களின் போது சமய நோக்கிலன்றிக் கேளிக்கைக்குரிய நிகழ்வாக இவ் ஆடற்கலை பெருவளர்ச்சி கண்டது. தவில் நாதஸ்வர நிகழ்ச்சிகளை எல்லாம் பின்தள்ளி முதன்மையான இடத்தைப் பெற்றது.

இந்துக்கோயில் திருவிழாக்களில் இறுதி நிகழ்ச்சியாகச் சின்னமேளம் நடைபெறும். இக்கருத்தை எடுத்துக்கூறிய முதியவர்கள் பலர் "விருந்திற்குப் பாயசம் போல ஒவ்வொரு கோயில் நிகழ்ச்சிகளிலும் சின்னமேள ஆடல் சிறப்பான நிகழ்வாக இறுதியில் இடம்பெறும்" எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.(வலன்ரீனா 2008 : 18) சின்னமேளம் எந்தெந்த ஆலயங்களில் எல்லாம் நடைபெறுகின்றதோ அங்கெல்லாம் மக்கள் கூட்டம் அலைமோதியதாக அறியப்படுகின்றது.

**சின்னமேளக் குழுக்கள் உருவாகுதல்:-**

இந்நிலைமை 1930களில் உச்சமடைந்து காணப்பட்டதாக அறியப்படுகின்றது. இந்நிகழ்வுகள் வருமானம் தேடும் ஒரு கலையாக அமைந்ததால் யாழ்ப்பாணத்தில் பல்வேறு பகுதிகளிலும் உள்ள வசதி படைத்தவர்களிற் சிலர் சின்னமேளக் குழுக்கள் (செற்றுக்களை) உருவாக்கினர். இவர்கள் தென் இந்தியாவில் இருந்து தரகர்கள் மூலம்

தொடர்புகொண்டு ஆடல் மகளிரை வரவழைத்தனர். இவ்செற்றுக்களை வைத்திருக்கும் உரிமையாளர்களின் பெயர், ஊர் என்பன சேர்த்து அக்குழுவினர் அழைக்கப்பட்டனர். இவற்றில் புத்தூர் மார்க்கண்டு செற், கொக்குவில் சின்னத்துரை செற், நீர்வேலி வைத்திலிங்கம் செற், இணுவில் சரவணமுத்து செற், விளான் பஞ்சலிங்கம் செற், ஆவரங்கால் யூனியன் செல்லத்துரை செற், கீரிமலை பொன்னுச்சாமி செற், அளவெட்டி ஐயாத்துரைசெற், வண்ணார்பண்ணை இராமசாமி செற், வறணி சின்னத்தம்பி செற், கச்சாய் குஞ்சையா செற், நாச்சிமார் கோவிலடி வேணுகோபால் செற், சிறுவிளான் நாகலிங்கம் செற், வடலியடைப்பு பஞ்சலிங்கம் செற், சுதுமலை மணியம் செற் போன்றவை  குறிப்பிடத்தக்கவை ஆகும்.

அத்தோடு சில குழுக்கள் ஆடல்களை ஆடியவர்களின் பெயர்களாலும் அழைக்கப்பட்டு வந்தன. எடுத்துக்காட்டாகச்  சரசு விசாலினி செற், விஜயா செற், மல்லிகா செற், அம்பிகா செற், ஈஸ்வரி சகோதரிகள் செற், ரூசிஸ்ரேஸ் செற், லக்சுமி சகோதரிகள் செற், இராமலட்சுமி செற், முல்லை சகோதரிகள் செற், நாகேஸ்வரி செற், இந்திராசந்திரா செற் என்பன குறிப்பிடத்தக்கன. இவ்வாறான 40ற்கு மேற்பட்ட செற்றுக்கள் யாழ்ப்பாணத்தில் பிரபல்யம் பெற்றிருந்தன என்பது அறியப்படுகின்றது.

**தமிழ்நாட்டு நடனமகளிரின் வருகை:-**

யாழ்ப்பாணத்தில் பொதுவாக ஆலய உற்சவங்கள் பங்குனி மாதம் முதல் புரட்டாதி மாதம் வரையுள்ள 6 மாதங்களும் நடைபெறும். இவ் ஆறு மாதங்களுக்கும் நடன விருந்தளிப்பதற்காகத் தமிழகத்தில் இருந்து ஒப்பந்தம் பேசி நாட்டிய மகளிர் இங்கு அழைத்து வரப்பட்டனர். அவர்கள் யாழ்ப்பாணத்தின் பல்வேறு இடங்களிலும் உள்ள கோவில்களில் ஆடல் நிகழ்ச்சிகளை ஆற்றுகை செய்தார்கள். அவர்களுக்கு வீட்டு வசதி, உணவு வசதி, சமையற்காரர் வசதி எல்லாவற்றையும் "செற்" முதலாளி ஏற்படுத்திக் கொடுத்தார் என அறியப்படுகின்றது.

செற்றுக்களை வைத்திருந்த முதலாளிகள் இந்நிகழ்ச்சிகளை ஒழுங்குபடுத்திச் செய்வதன்மூலம் ஆடல் மகளிரின் ஒப்பந்தப் பணத்தையும் மற்றும் செலவுகளையும் நீக்கி நல்ல வருமானத்தைப் பெற்றுக்

கொண்டார்கள் எனத் தெரிகின்றது. தமிழ்நாட்டில் தஞ்சாவூர், கும்பகோணம், பண்ருட்டி, எண்கண், குழிக்கலை, வேதாரணியம் முதலான இடங்களில் இருந்து ஆடல் மகளிர் இங்கு வந்ததாக அறியப்படுகின்றது. இவ்வாறு வந்தவர்களில் தாராபாய், எண்கண் ராஜலக்சுமி, அம்புஜம், செல்லக்கண்டு, கோகிலாப்பட்டு, ஆனந்தவல்லி, கமலகுமாரி, மீனாம்பாள், எண்கண்ணாள், இந்திரா சந்திரா, வேணுபத்மா, யசோதா, சிறிவாஞ்சியம் போன்றோர் பிரபல்யம் ஆனவர்கள் எனக் கூறப்படுகின்றது.

1930ஆம் ஆண்டின் பின் சின்னமேளக் கச்சேரி மேலும் பிரபல்யமடைந்ததற்கான சூழல்கள் ஏற்பட்டன. தமிழகத்தில் "தேவதாசிகள் தடைச்சட்டம்" கொண்டு வரப்பட்டது, எனவே அங்கு தேவதாசிகள் தொழில் இழந்து வருமானம் இழந்து வாழும்நிலை ஏற்பட்டது. இந்நிலைமை அவர்கள் யாழ்ப்பாணத்தை நோக்கி வருவதற்குக் காரணமாக அமைந்தது.

**வெளியரங்குளில் சின்னமேளம்:-**

ஜனரஞ்சகக் கலையாக வளர்ச்சி கண்ட சின்னமேள ஆடற்கலை கோயில் உற்சவங்கள் திருவிழாக்களில் மட்டுமன்றி திருவிழாக்களின்போது நிறுவப்பட்ட தண்ணீர்ப்பந்தல்கள், திருமணச்சடங்குகள், பொதுநிறுவனங்களின் விழாக்கள், மிருகபலி நிகழ்வுகள் போன்றவற்றிலும் இடம்பெற்று வந்ததாகவும், விழாக்களில் இவ் ஆடற்கலையின் தேவையை பூர்த்தி செய்வதற்கு செற்றுக்களின் தொகைபோதா நிலை கூட ஏற்பட்டது எனக் கூறப்படுகின்றது.

**தாக்கு திறன் மிக்க கலையாகச் சின்னமேளம்:-**

திருவிழாக்களில் ஒன்றுக்கு மேற்பட்ட குழுக்களை அழைக்கும் நிலை ஏற்பட்டது. ஒரே நேரத்தில் பலமேடைகளில் சின்னமேள நிகழ்வுகள் இடம்பெறலாயின. மேலும் சின்னமேள ஆடல்மகளிரை கண்டி, கொழும்பு, மட்டக்களப்பு, நாவலப்பிட்டி, புத்தளம், ஹற்றன், மாத்தளை, அம்பாறை என இலங்கையின் பல பகுதிகளுக்கும் அழைத்துச் சென்று நிகழ்ச்சிகள் நடாத்துவது வழக்கமாக இருந்தது.

சின்னமேள ஆடற்கலை கோயில் திருவிழாக்களில் முக்கிய இடம்பெற்ற வேளையில், கோயில்களில் ஆடுவதற்குக் குழுக்களின் தொகை

போதாத போதும், ஒரு இரவில் பல கோவில்களுக்குச் சென்று ஆடவேண்டிய நிலை ஏற்பட்ட போதும், இந்நிகழ்வுகளை இரவில் ஆற்றுகை செய்வதற்கு நேரம்போதாது இருந்தமையாலும்; பகலிலே இந்நிகழ்வுகளை நடாத்தும் நிலையும் ஏற்பட்டது. நிகழ்வுகள் இரவில்; நடைபெறும்போது மக்கள் இரவிரவாக கண்விழித்திருந்து உற்சாகமாக இந்நிகழ்வுகளைப் பார்த்தார்கள்; என்று கூறப்படுகின்றது. அத்தோடு இந்நடனத்தை ஆடும்பெண்களுக்கு பரிசுப் பொருட்களை உபயகாரரும் பொதுமக்களும் அள்ளி வழங்கியதாகக் குறிப்பிட்டார்கள். அக்கால இளைஞர்கள் இந்நிகழ்வுகளைப் பார்ப்பதற்கு பெற்றோருக்குத் தெரியாமல் சென்று பார்ப்பதாகவும் பல முதியவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இச் சம்பவங்களை ஆறுமுகநாவலரும் "பற்பல மாணவர்கள் இராத்திரியிலே திருவிழா என்றோடிச் சனக்கூட்டத்திலே நெருங்குண்டு தள்ளுண்டு அடியுண்டு நுழைந்து தாசிகளுடைய நாட்டிய கீதங்களை பார்த்துங் கேட்டுங் கெட்ட வார்த்தைகளுங் கெட்ட செய்கைகளும் பழகிக் கொண்டதும் அவர்கள் இராப்பாடமும் இழந்து இருபது இருபத்தைந்து நாளிகை வரையும் நித்திரை இழந்து....."எனக் கண்டித்துக் கூறியிருக்கின்றார். இவ்வாறே சின்னமேள ஆடல்நிகழ்வுகள் இளைஞர்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தமை புலனாகின்றது.

**சின்னமேளத்தின் உச்சக்காலம்** :-

யாழ்ப்பாணத்தில் 1930 முதல் 1960 வரை சின்னமேளத்தின் உச்சக்காலம் எனக் குறிப்பிடலாம். கோயில்களில் இவ் ஆடலை ஆடுவதற்குத் தமிழக ஆடல் மகளிரின் தொகை போதாது இருந்தமையும், 1960களில் இந்தியாவில் இருந்து இங்குவந்து போவதற்கு விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் காரணமாகவும் புதிய நிலை ஒன்று தோன்றியது. இலங்கையின் பல பகுதிகளில் இருந்தும் இந்துக்கோயில்களில் ஆடல் நிகழ்வுகளை நடாத்துவதற்கு இன, மத, பேதமின்றி பெண்களை அழைத்து ஆடல்களை ஆடப்பழக்கி கோவில்களில் ஆடுவதற்குரிய ஒழுங்குகளைச் சின்னமேள செற் உரிமையாளர்கள் மேற்கொண்டனர்.

இவ்வாறு புத்தளத்தில் இருந்து கிறிஸ்தவரான றீற்றா, கொழும்பைச் சேர்ந்த சிங்களப் பெண் "நோனா", பறங்கி இனத்தைச் சேர்ந்த "அன்ரா"

போன்றோரும், புத்தளத்தைச் சேர்ந்த றலி, நல்லி, மாத்தளை சறோசா, சிலாபம் கனகா, முல்லைச் சகோதரிகள், கிளிநொச்சி சரசுவதி மட்டக்களப்பு சறோசா, கொழும்பைச் சேர்ந்த சறோ, கனகா, சசிகலா, சந்தானலக்சுமி போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

சின்னமேளத்துறை வறுமையில் வாடிய குடும்பங்களைச் சேர்ந்த பெண்களுக்கு பணம் சேர்ப்பதற்குச் சுலபமான ஒரு வழியாக விளங்கியமையால் இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி யாழ்ப்பாணத்தில் உள்ள சிலரும் சின்னமேளம் ஆட ஆரம்பித்தனர். இவ்வாறானவர்களில் நாகேஸ்வரி, நாகபூசணி, சறோசா, அம்பிகா, ராணி, மல்லிகா, அன்னம்மா, சிவகாமி, கன்னிகா பரமேஸ்வரி, நீலாம்பிகை, புஸ்பாம்பிகை, நகுலாம்பிகை, லக்சுமி, விஜயா, சுப்புலக்சுமி, விசாலினி, கானசரஸ்வதி, சீதாலக்சுமி, மகாலக்சுமி, ஜனா போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

இக்காலப்பகுதியில் சாஸ்திரியமாக ஆடப்பட்டு வந்த சின்னமேள ஆடற்கலையானது திசைமாறி திரைப்படங்களின் செல்வாக்கால் திரைப்படப்பாணியில் உச்சக்கட்டத்தை அடைந்தமையை நோக்க முடிந்தது. அத்தோடு சின்னமேள ஆடற்கலையானது வேறொரு பாணியில் திசை திரும்ப வழிவகுத்தது. திரைப்படப் பாடல்களுக்கு ஆடுவது அக்கால மக்களுக்கு இரசனையைக் கொடுத்ததால் இப்பாடல்களுக்கு ஆடல்களை ஆடுவதையே மக்கள் பெரிதும் விரும்பினர். இரசிகர்கள் “இன்னுமொருமுறை, இன்னுமொருமுறை” என்றும் “மேலும் ஒன்று மேலும் ஒன்று” என்று கோரிக்கை விடுப்பதும் அவர்களது கோரிக்கையை நடனமகளிர் நிறைவேற்றுவதும் அக்காலத்தில் சர்வசாதாரணமாக இருந்தது. சின்னமேளம் “நேயர் விருப்ப நிகழ்ச்சியாக” மாறியிருந்தது. இவ்வாறான நிகழ்ச்சிகள் இல்லாவிடில் திருவிழா உயிர்ப்பற்றதாகக் காணப்பட்டது.

சின்னமேள ஆடல்களில் சாஸ்திரிய நடனங்களுடன் சாகசச் செயல்கள் செய்து ஆடுவது, மேலைத்தேச பொப்பிசைப் பாடல்களுக்கு ஆடுவது போன்ற நடனங்களும் ஆடப்பட்டதுடன் லைற் நடனங்கள், ஆடைகளைக் கழற்றி ஆடும் துகிலுரி நடனமான “காபறே” நடனங்கள் என்பவற்றையும் ஆடி ஆடல்மகளிர் பணம் சம்பாதிக்கும் நிலை ஏற்பட்டது. இதனை மக்கள் விரும்பியமையாலும், ஆண்கள் இந்நடனமாடும் பெண்களுக்குப் பரிசுகளை

வாரி வழங்கியமையாலும் ஆடல்மகளிரும் அவர்களது வறுமையின் காரணமாக தமது மனம்போன போக்கில் மாற்றங்களைப் புகுத்தி நெறி தவறி ஆடினார்கள் என்று அறியப்படுகின்றது.

**சின்னமேள ஆடற்கலையின் வீழ்ச்சியும் பின்புலமும்** :-

20ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்து சின்னமேள ஆடற்கலை வளர்ச்சியடைந்தது. இந்த நூற்றாண்டின் நடுப்பகுதியில் புதிய மாற்றங்களைப் பெற்று ஒப்பற்ற மக்கள் கலையாக உயர்ச்சி பெற்ற காலப்பகுதியிலேயே அக்கலையின் வீழ்ச்சிக்கான காரணிகளும் எதிர்நிலையாக வளர்ந்து வந்தன. இருபதாம் நூற்றாண்டின் முன் ஆலயக் கிரியைகளில் இணைந்திருந்த இவ் ஆடற்கலையினால் ஏற்பட்ட தீமைகள் எண்ணில் அடங்காதவை. இத்தீமைகளைக் கண்ணுற்ற பல பெரியார்கள் இக்கலையை தீவிரமாகக் கண்டித்து ஒதுக்க முயன்றார்கள். இவ்வாறு கண்டனங்களை மேற்கொண்டோரில் ஆறுமுகநாவலர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர் தனது யாழ்ப்பாணச் சமயநிலை என்னும் நூலிலே,

"சைவசமயிகளே! உங்கள் கோயில்களில் பொதுமகளிருடைய நடன, சங்கீத, வாண விளையாட்டு முதலியவற்றை ஒழித்து விடுங்கள் நிர்வாணமாயும் காமத்தை வளர்ப்பதற்கு ஏதுவாயும் உள்ள பிரதிமைகளையும்,படங்களையும் அமைப்பியாது ஒழியுங்கள். சைவப்பிரசங்கங்கள், வேதபாராயணம், தேவார திருவாசக பாராயணம் முதலியவற்றைச் செய்யுங்கள்..." என்று கண்டித்தார்.(ஆறுமுகநாவலர் 2017 : 29)

1930ஆம் ஆண்டின் பின்னர் இக்கலையானது பணம் சம்பாதிப்பதற்கு உரிய ஒரு துறையாக மாறியமை, சமூகப் பொருளாதார அரசியல் மாற்றங்களினால், மக்களுடைய வாழ்க்கை நிலையில் ஏற்பட்ட மாற்றங்கள், சனத்தொகை அதிகரித்தமை, திரைப்படங்கள் தோன்றிச் செல்வாக்குச் செலுத்தியமை, மேலைத்தேச கலைகளின் செல்வாக்கு போன்றவை இப்பாரம்பரியக் கலையின் அழிவிற்கு வழிவகுத்த காரணிகள் ஆயின.

மேலும் இலவசக்கல்வியின் தோற்றத்தினால் குறிப்பாக பெண்கள் கல்வியறிவு பெற்று வந்தமையால் இக்கலையை வெறுத்து ஒதுக்குகின்ற ஒரு நிலை பெண்கள் மத்தியில் தீவிரமாக ஏற்பட்டதாகத் தெரிகின்றது.

தேவதாசிகள் தடைச்சட்டம், சிங்களத் தடைச்சட்டம், செந்நெறி நாட்டியக் கலையின் பரம்பலும், வளர்ச்சியும், இன உணர்வு வளர்ச்சி, தமிழின உரிமைப் போராட்டம் போன்ற காரணிகளும் இக்கலைவடிவத்தின் வீழ்ச்சிக்குக் காரணங்களாக அமைந்தன.

**ஆணாதிக்கமும் ஆடல்மகளிரின் அவலநிலையும்:-**

ஆரம்பத்தில் தெய்வீகக்கலையாக ஆலயங்களில் ஆடப்பட்டு வந்த இவ்ஆடற்கலையானது ஆண்களின் தவறான பார்வையாலும் அணுகுமுறைகளாலும் வீழ்ச்சி கண்டது. ஆடல் மகளிரின் வறுமையினையும், சமூக ஆதரவற்ற நிலையையும் சாதகமாகப் பயன்படுத்தி பாலியல் இச்சைக்கு பலிக்கடாவாக்கியதன் விளைவாக இக்கலை நலிவடையத் தொடங்கியது.

சாஸ்திரிய நிலைப்பட்ட கலைகளின் எழுச்சி அவை உயர்நிலைப்பட்ட மக்களின் குறிப்பாக யாழ்ப்பாண உயர் வேளாளரின் ஆதரவைப் பெற்றதால் பெரும்பாலும் அடிநிலை சமூகப் பெண்களால் ஆடப்பட்ட சின்னமேள நாட்டியக்கலை ஒடுக்கப்பட்ட கலையாக கணிக்கும் மரபு உண்டானது.

ஆறுமுகநாவலர் போன்ற சமூக சமயப் பெரியார்கள், சைவசமயிகளின் சமூக அந்தஸ்தும் சமயப் புனிதமும் இழக்கப்படுவதற்கு இத்தகைய சின்னமேள ஆடலும், அதனை ஆடும் பெண்களும் காரணம் எனவும் கூறப்படுகின்றது. இதனால் சின்னமேளக்கலை அதன் ஆடுகளமான கோயில்களை விட்டு வெளியேற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. சின்னமேளக்கலையின் முதற்களமாக இருந்த வண்ணார்பண்ணை சிவன்கோவிலில் நாவலரின் எதிர்ப்பும் ஆரம்பமானது. காலகதியில் மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில், நல்லூர் கந்தசுவாமி கோவில், சுட்டிபுரம் அம்மன் கோவில் உள்ளிட்ட எழுபதுக்கு மேற்பட்ட ஆலயங்களிலும் சின்னமேளக்கலை தடைசெய்யப்பட்டது. இதனால் ஏதிலிகள் ஆக்கப்பட்ட சின்னமேள ஆடல்மகளிர் தமது வாழ்வுக்கான புதிய சூழலைத் தேடவேண்டிய நிலை ஏற்பட்டது.

இந்நிலையில் ஆடல்மகளிரிற் சிலர் ஆவிக்குரிய கிறிஸ்தவ சபைகளுக்கு மதம்மாறி புதிய வாழ்க்கையை ஆரம்பித்தனர். யாழ்ப்பாணத்து முதலாளிமார்களில் சிலர் அவர்களை தங்கள் காதற்பரத்தையராக ஆக்கிக்

கொண்டனர். பாலியல் அடிமைகளாக நடாத்தினார்கள். அதனாலும் சின்னமேளக் கலைஞர்கள் மீதான சமூகத்தின்பார்வை மாறாத தடையாகக் காணப்பட்டது. இம்மகளிர் இன்று முதியவர்கள் ஆகிவிட்ட சூழலிலும் கூட அவர்களின் மீதும் அவர்களின் தலைமுறையினர் மீதும் இப்பழி நீங்கவில்லை. ஒருகாலத்தில் உன்னத கலைஞராக விளங்கிய இவர்கள் இன்று தாம் சின்னமேளக்கலைஞர் என்று கூறமுடியாத அவலநிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். சமகாலத்தில் சின்னமேளம் குறித்து எழுந்த இலக்கியப் பதிவுகள் கூட இக்கலையை இழிவுபடுத்துவனவாகவே எழுந்துள்ளன.

இதற்குக் காரணம் இவற்றை எழுதியவர்களும் ஆண்களே. எடுத்துக்காட்டாக நட்டுவச் சுப்பையனார் எழுதிய "கனகிபுராணம்"; கனகி என்னும் ஆடல் மகளின் ஆடற்கலை நுட்பங்களைக் கூறாமல் அவளிடம் வந்துசென்ற உயர்வர்க்கத்தினரைப் பட்டியலிடுவதாக அமைந்துள்ளது.

**"நட்டுவ னொருவனாலே நாடகசாலை வந்தாள்**
**செட்டியில் ஒருவன் பட்டான் சேணியர் இருவர் பட்டார்**
**மட்டுவில் குருக்கள் பட்டார் கொக்குவிற் சுப்பன் பட்டார்**
**மட்டிகள் இவரைப் போலப் பட்டவர் பலபேர் அம்மா"**
**என்று கூறப்படுகின்றது. (சிவலிங்கராஜா 2003:118).**

இப்புராணத்தைக் கூட ஆண்கள் விட்டுவைக்கவில்லை. இப்புராணத்தின் சிலபாடல்களே இன்று எமக்குக் கிடைக்கின்றன. ஏனையவை இருட்டடிப்புச் செய்யப்பட்டதாக கலாநிதி.எஸ்.சிவலிங்கராஜா குறிப்பிடுவது இவ்விடத்தில் மனங்கொள்ளத்தக்கது. சமயப்பெரியார்களின் தூரநோக்கற்ற கண்டனங்களும் புனிதமான இக்கலைமரபு அழிந்துபோவதற்குக் காரணமாக அமைகின்றது. இக் காரணங்களால் தாங்கள் ஒரு சின்னமேளக் கலைஞர் என்று தம்மை வெளிப்படுத்தத் தயக்கம் காட்டும் நிலையையும் சின்னமேள ஆடல் மகளிரிடம் இன்றும் காணக்கூடியதாக உள்ளது.

**முடிவுரை:-**

யாழ்ப்பாணத்தில் பெண்கள் மீதான ஆணாதிக்க சமூகத்தின் செயல்களும், ஒடுக்கு முறைகளும், பாலியல் வன்மங்களும் புனிதமான ஒரு கோயிற்கலை மரபு அழிந்துபோவதற்குக் காரணமாக அமைந்திருந்தது

என்பதனை அறிய முடிகின்றது. இறைவனுக்கு வழிபாடாற்றும் வழிபாட்டு முறையில் இருந்த ஓர் ஆடல்மரபு பல்வேறுபட்ட காரணங்களினால் கைவிடப்பட்டமை உணரப்பட்டுள்ள இவ்வேளையில் இறைவனுக்கு வழிபாட்டின்போது மீண்டும் இவ் ஆடற்கிரியை நடைபெறவும், மறுமலர்ச்சி அடையவும் வழிசமைக்கப்பட வேண்டும் என்ற தேவை உணரப்படுவது காலத்தின் தேவை என்பதுடன் அது யாழ்ப்பாணத்தின் தனித்துவ மரபு என்பதும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

**துணை நூல்கள்:**


1) நட்டுவச் சுப்பையனார் (பதிப்பாசிரியர் வட்டுக்கோட்டை இராமலிங்கம்)., 1961, கனகி புராணம், சுதந்திரன் அச்சகம், கொழும்பு.

2) சிவத்தம்பி, கா., 2000, யாழ்ப்பாணம் சமூகப்பண்பாடு கருதுநிலை, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

3) மகேஸ்வரன், வ., 2011, உருத்திர கணிகையர் கலாச்சாரத் திரட்டு, இந்துசமய கலாச்சார அலுவல்கள் திணைக்களம்.

4) பவித்திரா, ஏ., 2006, நடனச் சுவடுகள், உப்புக்குளம், மன்னார்.

5) Raghavan, M.D., Tamil culture in Ceylon, Kalai Nilavan Limited, „Shantham‟, Colombo.co.(N.D)

6) ஸ்ரீராமதேசிகன், எஸ்.என்., 2001இ பரதக்கலைக்களஞ்சியம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை.

7) 28.06.1936, தேவாலயங்களும் தேவதாசிகளும், ஈழகேசரி.

8) பரதன்., 07.04.1946, ஆலய நடனம், ஈழகேசரி, ஞாயிறு வாரஇதழ்.

9) வலன்ரீனா இளங்கோவன்., 2008, யாழ்ப்பாணத்து நாட்டிய மரபுகள், வெற்றிமணி வெளியீடு. ஜெர்மனி.

10) ஆறுமுகநாவலர், 2017, யாழ்ப்பாணத்துச் சமயநிலை, நாவலர் நற்பணி மன்றம், குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

11) கணேசலிங்கன், செ., 2009, நீண்டபயணம், குமரன் புத்தக இல்லம்.

12) ஸுந்தரம். பி.எம்., 2003, மரபுதந்த மாணிக்கங்கள் டாக்டர்.வே.ராகவன், நிகழ்கலை மையம், சென்னை.

13) சுந்தரம்பிள்ளை காரை., 1990, ஈழத்து இசைநாடக வரலாறு, கழக வெளியீடு.

14) சிவசாமி, வி., 2005, பரதக்கலை, யாழ்ப்பாணம், இலங்கை.

15) சிவலிங்கராஜா, எஸ்., 2003, ஈழத்துத் தமிழ் இலக்கியச் செல்நெறி, குமரன் புத்தக இல்லம், கொழும்பு, சென்னை.

---

# 33. கிரந்தம் கலந்த சொற்களைத் தமிழுக்கு மாற்றும் முறை: ஒரு வழிகாட்டி

*—இசையினியன்*

மொழிகள் என்பது இடத்திற்கு இடம் மாறுபாடு அடைகின்றன. சில சொற்கள் பிற மொழியில் இருந்து ஒரு மொழிக்கு வரும் பொழுது, பிற மொழியின் உச்சரிப்பு மாறுபாடு அடையவே செய்யும். அவ்வாறே தமிழில் வடமொழிச் சொற்களையும் ஆங்கிலச் சொற்களையும் கொண்டு வரும் பொழுது அச்சொற்கள் திரிந்து தமிழின் தன்மைக்கு ஏற்ப மாறுபாடு அடையும். இதைப் புரிந்து கொள்ள மறுப்பவர்களே கிரந்தம் என்னும் எழுத்து முறையைத் தமிழில் அறிமுகம் செய்து உள்ளனர். ஆனால் கிரந்தம் தமிழுக்குச் சிறப்பு செய்யும் என்ற நோக்கில் பார்த்தால், அந்த எழுத்துக்கள் தமிழின் தன்மையை மாற்றவே செய்து உள்ளன என்பதை உணர முடிகிறது.

இவ்வாறு **மொழியின் தன்மை மாறாமல் தம் எழுத்திலும், பேச்சிலும் பயன் படுத்த வேண்டும் என்பவர்களுக்கு வட, ஆங்கில மொழி உச்சரிப்புகளை எவ்வாறு தமிழில் மாற்றி வழங்க வேண்டும்** என்பது பற்றி நன்னூல் கூறுகின்றது. செய்யுள் வடிவில் உள்ள அந்த விதிகளைப் புரிந்து கொள்ள முற்பட்ட போது இந்தக் கட்டுரை உருவானது.

தமிழில் 12 உயிர் எழுத்துக்கள், 18 மெய் எழுத்துக்கள், 216 உயிர் மெய் எழுத்துக்கள், ஒரு ஆய்தம் என 247 வரிவடிவ எழுத்துக்கள் இருக்கின்றன. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதி பின்னர் தமிழில் கிரந்த எழுத்துக்கள் என்பவை சாதாரணமாக உபயோகம் செய்யப்பட்டன. ஏன் இந்தக் கிரந்த எழுத்துக்கள் அன்று முதல் இன்று வரை கோலோச்சி வருகின்றன? அவசியம் இந்தக் கிரந்த எழுத்துக்கள் தமிழுக்குத் தேவையா? என்பதை ஆராய முற்படும் போது சமற்கிருதத்தையும் தமிழின் எழுத்துக்களையும் ஆராய்ந்தே ஆக வேண்டும் எனும் கட்டாயம் ஏற்படுகிறது. சாதாரணமாக எழுத்துக்கள்

இரண்டு வகைப்படும் உயிர் மெய். சரிதானே. முதலில் உயிரைப் பற்றிப் பார்ப்போம்.

உயிர் எழுத்துக்கள்:

உயிர் எழுத்துக்கள்:

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | | 3 | 4 | | 5 | 6 | 7 | 8 | வடம் |
| அ | ஆ | | இ | ஈ | | உ | ஊ | ரு | ரூ | |
| அ | ஆ | | இ | ஈ | | உ | ஊ | | | தமிழ் |
| 9 | 10 | | 11 | 12 | | 13 | 14 | 15 | 16 | வடம் |
| லு | லூ | | ஏ | ஐ | | ஓ | ஔ | அம் | அஃ | |
| | | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | | | தமிழ் |
| | | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | | | |

ஆரியத்தில் உள்ள சிறப்பு அச்சுக்கள்

இந்த அட்டவணையைக் காணும் போது ரு, ரூ, லு, லூ, அம், அஃ என்னும் எழுத்துக்கள் தமிழில் உயிர் எழுத்துக்களில் இல்லை. ஏன்? தமிழ் என்பது உயிர் என்பதற்கு ஒரு தெளிவான விளக்கம் வைத்து உள்ளது.

மெய் எழுத்துக்கள்:

மெய் எழுத்துக்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | |
| க | Kha | ga | Gha | ங | வடம் |
| க | | | | ங | தமிழ் |
| 6 | 7 | 8 | 9 | 10 | |
| ச | Chha | Ja | Jha | ஞ | வடம் |
| ச் | | | | ஞ் | தமிழ் |
| 11 | 12 | 13 | 14 | 15 | |
| ட | tha | da | dha | ண | வடம் |
| ட் | | | | ண் | தமிழ் |
| 16 | 17 | 18 | 19 | 20 | |
| த | ttha | ddha | dhaa | ந | வடம் |
| த் | | | | ந் | தமிழ் |
| 21 | 22 | 23 | 24 | 25 | |
| ப | pha | ba | bha | ம | வடம் |
| ப் | | | | ம் | தமிழ் |
| 26 | 27 | 28 | 29 | 30 | |
| ய | ர | ல | வ | Sa | வடம் |
| ய் | ர் | ல் | வ் | | தமிழ் |
| 31 | 32 | 33 | 34 | 35 | |
| sha(ஷ) | ssa(ஸ) | ha(ஹ) | ள | க்ஷ | வடம் |
| 36 | 37 | | | | |
| ஷ்க | ஷ்ப | | | | வடம் |
| ழ் | ள் | ற் | ன் | | தமிழ் |

மேலே காணும் அட்டவணையை உற்று நோக்கினால் நாம் ஒரு முடிவுக்கு வர முடிகிறது. முதலாவது இரண்டு மொழிகளுக்கும் பொதுவான எழுத்துக்கள். ஒவ்வொரு மொழிக்கும் உள்ள சிறப்பான எழுத்துக்கள்.

சிறப்பு எழுத்துக்கள்:

இந்த சிறப்பு எழுத்துக்கள் என்றால் என்ன? ஒரு மொழியில் உள்ள எழுத்து மற்றொரு மொழியில் இருக்காது. அவையே சிறப்பு எழுத்துக்கள் எனப்படும்.

ஆரியத்தில் உயிர் சிறப்பு எழுத்துக்கள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | |
| | | | | | | ரு | ரூ | வடம் |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | |
| லு | லூ | | | | | அம் | அஃ | வடம் |

ஆரியத்தில் உள்ள சிறப்பு அச்சுக்கள்

தமிழில் சிறப்பு உயிர் எழுத்துக்கள்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 12 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | |
| | | | | | எ | | தமிழ் |
| 910 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | |
| ஒ | | | | | | | தமிழ் |

தமிழில் உள்ள சிறப்பு உயிர்கள்

**ரு, ரூ, லு, லூ, அம், அஃ தமிழில் உயிர் அல்ல ஏன்?**

உடலின் முயற்சி இல்லாமலே உயிர்பெறுவது உயிர் எழுத்து ஆகும். வட மொழியில் உள்ள இந்த ரு, ரூ, லு, லூ, அம், அஃ எழுத்துக்கள் மெய்யினால் உருவாக்கம் பெறுகின்றன. எனவே தமிழ் உயிர் எழுத்துக்களில் இவற்றை வைக்கவில்லை.

ஒரு உடலில் உயிர் மட்டும் போதுமா? உடல் இருந்தால்தானே அது மதிக்கப்படும். இப்போது உடல் பற்றி பார்ப்போம். அதாவது, மெய் பற்றி பார்க்கப் போகிறோம்.

**மெய் எழுத்துக்கள்:**

உடலின் அவையங்கள் முயற்சியின் போது எழும் ஓசை மெய் எழுத்துக்கள் எனப்படுகின்றன. அடுத்து, ஆரிய தமிழ் சிறப்பு மெய் எழுத்துக்களைப் பார்க்கப் போகிறோம்.

ஆரியத்தில் சிறப்பு மெய் எழுத்துக்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | |
| க | Kha | ga | Gha | ங | வடம் |
| 6 | 7 | 8 | 9 | 10 | |
| ச | Chha | Ja | Jha | ஞ | வடம் |
| 11 | 12 | 13 | 14 | 15 | |
| ட | tha | da | dha | ண | வடம் |
| 16 | 17 | 18 | 19 | 20 | |
| த | ttha | ddha | dhaa | ந | வடம் |
| 21 | 22 | 23 | 24 | 25 | |
| ப | pha | ba | bha | ம | வடம் |
| 26 | 27 | 28 | 29 | 30 | |
| ய | ர | ல | வ | Sa | வடம் |
| 31 | 32 | 33 | 34 | 35 | |
| sha(ஷ) | ssa(ஸ) | ha(ஹ) | ள | க்ஷ | வடம் |
| 36 | 37 | | | | |
| ஷ்க | ஷ்ப | | | | வடம் |

ஆரிய சிறப்பு மெய் எழுத்துக்கள்

தமிழில் சிறப்பு மெய் எழுத்துக்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | |
| க | | | | ங | தமிழ் |
| 6 | 7 | 8 | 9 | 10 | |
| ச் | | | | ஞ் | தமிழ் |
| 11 | 12 | 13 | 14 | 15 | |
| ட் | | | | ண் | தமிழ் |
| 16 | 17 | 18 | 19 | 20 | |
| த் | | | | ந் | தமிழ் |
| 21 | 22 | 23 | 24 | 25 | |
| ப் | | | | ம் | தமிழ் |
| 26 | 27 | 28 | 29 | 30 | |
| ய் | ர் | ல் | வ் | | தமிழ் |
| 31 | 32 | 33 | 34 | 35 | |
| | | | ள் | | தமிழ் |
| 36 | 37 | | | | |
| ழ் | | ற் | ன் | | தமிழ் |

தமிழ் சிறப்பு எழுத்துக்கள்

**திரியும் சொற்கள்:**

வடமொழியும் ஆங்கிலம் சார் மொழிகளும் இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பத்தின் கீழ் பகுக்கப் படுகின்றன. ஒரு வகையில் பார்த்தால் இந்த மொழிகளின் ஒலி அமைப்பு ஒத்துப் போகின்றன. ஆனால் தமிழின் தனித்தன்மையின் காரணமாக இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பத்தின்

உள்ள மொழிகளின் வார்த்தையைத் தமிழில் கூற வேண்டுமானால் தமிழில் அல்லாத ஒலியமைப்புகள் தமிழின் இலக்கண வரம்புகளுக்கு ஏற்ப திரிந்த ஒலியாக மாறும்.

**தமிழில் திரியும் வட வெழுத்துக்கள்:**

மேற்கண்ட அட்டவணையின் படி பார்த்தால் பின்வரும் எழுத்துக்கள் தமிழில் திரிகின்றன.

> **இடையில் நான்கும் ஈற்றில் இரண்டும்**
> **அல்லா அச்சு ஐ வருக்கம் முதல் ஈறு**
> **யவ்வாதி நான்மை ளவ்வாகும் ஐ ஐம்**
> **பொது எழுத்து ஒழிந்த நால் ஏழும் திரியும்**

நன்னூல் - எழுத்ததிகாரம் - பதவியல் 146; என்கிறது. சரி இந்தப் பாடலின் பொருளை உணர்வோம்.

**தமிழில் திரியும் வட உயிர் எழுத்துக்கள்:**

பாடலின் பொருளை உணர,

> **இடையில் நான்கும் ஈற்றில் இரண்டும்**
> **அல்லா அச்சு ... பொது எழுத்து**
> **ஒழிந்த நால் ஏழும் திரியும்**

தொடர்ந்து, தற்போது அட்டவணையைப் பார்ப்போம்.

| | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | | 11 | 12 | | 13 | 14 | 15 | 16 | வடம் |
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | ரு | ரூ | லு | லூ | | ஏ | ஐ | | ஓ | ஔ | அம் | அஃ | |
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | இடையில் | | | | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஈற்றில் | | தமிழ் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | நான்கும் | | | | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | இரண்டும் | | |

ஆரியத்தில் உள்ள சிறப்பு அச்சுக்கள்
தமிழில் உள்ள சிறப்பு உயிர்கள்
இரண்டுக்கும் பொதுவானவை
இடையில் 4 ஈற்றில் 2 அல்லாதவை பொது எழுத்து
ரு, ரூ, லு, லூ, அம், அஃ ஆகிய வட உயிர் எழுத்துக்கள் தமிழில் திரியும்.

**தமிழில் திரியும் வட மெய் எழுத்துக்கள்:**

அச்சு ஐவருக்கம் முதல்,

ஈறு

யவ்வாதி நான்மை

ளவ்வாகும்

ஐ ஐம்

பொது எழுத்து

வடமொழியில் மெய் எழுத்துக்களை அச்சு என்கின்றனர்.

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | வடம் |
| க | Kha | ga | Gha | ங | ச | Chha | Ja | Jha | ஞ | ட | tha | da | dha | ண | |
| க் | அ.ஐ.வ | | | ங் | ச் | அ.ஐ.வ | | | ஞ் | ட் | அ.ஐ.வ | | | ண் | தமிழ் |
| 1 | | | | 2 | 3 | | | | 4 | 5 | | | | 6 | |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 | வடம் |
| த | ttha | ddha | dhaa | ந | ப | pha | ba | bha | ம | ய | ர | ல | வ | Sa | |
| த் | அ.ஐ.வ | | | ந் | ப் | அ.ஐ.வ | | | ம் | ய் | ர் | ல் | வ் | ழ் | தமிழ் |
| 7 | | | | 8 | 9 | | | | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | |
| 31 | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | | | | | | | | | வடம் |
| sha | ssa | ha | ள | க்ஷ | ஷ்க | ஷ்ப | | | | | | | | | |
| ஷ | ஸ | ஹ | ள் | | | | ற் | ன் | | | | | | | தமிழ் |
| | | | 16 | | | | 17 | 18 | | | | | | | |

ஆரியத்தில் உள்ள சிறப்பு அச்சுக்கள்

தமிழில் உள்ள சிறப்பு மெய்கள்

இரண்டுக்கும் பொதுவானவை ஐ வருக்கத்தின் முதல் எழுத்துக்கள், அடுத்து நிற்கும் ங, ஞ, ண, ந, ம; ய, ர, ல, வ என்னும் நான்கும்; ள என்னும் ஒன்றும்.

அச்சு ஐ(ந்து) வருக்கம் எழுத்துக்கள்

தமிழில் / ஆரியத்தில் உயிரில் உள்ள பத்து எழுத்துக்களும், தமிழில் / ஆரியத்தில் உள்ள பதினைந்து எழுத்துக்களும் இரு மொழிக்கும் பொதுவான எழுத்துக்கள். இவை அல்லாமல் ஆரியத்தில் உள்ள பிற எழுத்துக்கள் தமிழுக்கு வரும் போது திரிந்த எழுத்துக்களாக மாறும்.

**வடமொழியின் மாற்றம் அடையும் எழுத்துக்கள்:**

ரு, ரூ, லு, லூ, அம், அ:, Kha, ga,Gha, Chha,Ja,Jha, tha, da, dha, ttha,ddha,dhaa, pha,ba,bha, Sa, sha(ஷ),ssa(ஸ),ha(ஹ),க்ஷ, ஷ்க, ஷ்ப ஆகிய எழுத்துக்கள் தமிழில் திரியும்.

சரி இதுவரை திரியும் எழுத்துக்கள் பற்றி பார்த்தோம். இனி அந்த எழுத்துக்கள் எவ்வாறு மாறும் எனப் பார்ப்போம்

**எழுத்து திரிபுகள்:**

அவற்றுள்,

ஏழாம் உயிர் இய்யும் இருவும் ஐ வருக்கத்து

இடையின் மூன்றும் அவ்வம் முதலும்

எட்டே யவ்வும் முப்பது சயவும்

மேல் ஒன்று சடவும் இரண்டு சதவும்

மூன்றே அகவும் ஐந்து இரு கவ்வும்

ஆ ஈறு ஐயும் ஈ ஈறு இகரமும்

நன்னூல் 147

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 4 | 5 6 | 7 | 8 | |
| அ | ஆ | இ ஈ | உ ஊ | ரு(ர்)ரூ | | வடம் |
| அ | ஆ | இ ஈ | உ ஊ | இரு | தமிழ் | |
| 9 | 10 | 1112 | 1314 | 15 | 16 | |
| லு | லூ | ஏ ஐ | ஓ ஔ | அம் | அஃ | வடம் |
| | எ | ஏ ஐ ஒ | ஓ ஔ | | | தமிழ் |
| | 7 | 8 9 10 | 11 12 | | | |

விதி ஏழாம் உயிர் இய்யும் இருவும்

<u>நன்னூல் விதி 147</u>

<u>நன்னூல் விதி: 147</u>

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | | 15 | வடம் |
| க | Kha | ga | Gha | ங | ச | Chha | Ja | Jha | ஞ | ட | tha | da | dha | | ண | |
| க் | அ.ஐ.வ | | | ங் | ச் | அ.ஐ.வ | | | ஞ் | ட் | அ.ஐ.வ | | | | ண் | தமிழ் |
| 1 | க | | | 2 | 3 | ச | ய | ச | 4 | 5 | ட | | | | 6 | |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | | 30 | வடம் |
| த | ttha | ddha | dhaa | ந | ப | pha | ba | bha | ம | ய | ர | ல | வ | | Sa | |
| த் | அ.ஐ.வ | | | ந் | ப் | அ.ஐ.வ | | | ம் | ய் | ர் | ல் | வ் | ழ் | சசய | தமிழ் |
| 7 | த | | | 8 | 9 | ப | | | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | | |
| 31 | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | | | | | | | | | | வடம் |
| ஷ | ஸ | ஹ | ள | க்ஷ | ஷ்கஷ்ப | | | | | | ஆ | ஈ | | | | |
| சடடசததஅகக | | | ள் | கக்கN | | | ற் | ன் | | | ஐ | இ | | | | தமிழ் |
| | | | 16 | | | | 17 | 18 | | | | | | | | |

| | |
|---|---|
| (மஞ்சள்) | தமிழில் திரியும் எழுத்துக்களின் பட்டியல் |
| (இளஞ்சிவப்பு) | ஆரியத்தில் உள்ள சிறப்பு அச்சுக்கள் |
| (பச்சை) | தமிழில் உள்ள சிறப்பு மெய்கள் |
| (சாம்பல்) | இரண்டுக்கும் பொதுவானவை ஐ வருக்கத்தின் முதல் எழுத்துக்கள், அடுத்து நிற்கும் ங, ஞ, ண, ந, ம; ய, ர, ல, வ என்னும் நான்கும்; ள என்னும் ஒன்றும். |
| (சிவப்பு) | அச்சு ஐ(ந்து) வருக்கம் எழுத்துக்கள் |

இனி கிரந்த எழுத்துக்களில் ஒரு சொல்லை எழுத முற்படும் போது அவற்றைத் தமிழ் எழுத்துக்களில் மாற்றி எழுதும் முறையைக் கைக்கொண்டால், நாம் இறந்த பின்னும் தமிழ் வாழும் என்பதில் ஐயம் இல்லை. இந்த முறைகள் கிரந்த நீக்கியாக **தனித்தமிழகராதிக்களஞ்சியம்** மென்பொருளில் கிரந்த நீக்கி'கூறாகச் சேர்க்கப்பட்டு உள்ளது.

**உரைநடையில் கூறினால்:**

1. பிற மொழி எழுத்து ரு(ர்); இ ஆகவும், இரு ஆகவும் மாறும்;
(எ.கா) ர்ஷபம் - இடபம்; மிர்கம் - மிருகம்

2. க, ச, ட, த, ப எழுத்துக்களின் பிற உச்சரிப்புகள்;
Kha, ga, Gha, ha ==> க எனவும்;
Chha, Ja, Jha, sha, saa ==> ச எனவும்;
tha, da, dha ==> ட எனவும்;
ttha, ddha, dhaa ==> த எனவும்;
pha, ba, bha ==> ப எனவும் மாறும்.
(எ.கா)நKhaம் => நகம்; நாGaம் => நாகம், மேGhaம் => மேகம்.

3. ஜ என்பது ய கரமாகும்;
(எ.கா) பங்கஜம் - பங்கயம்

4. வார்த்தையின் முதலில் வரும் Sa தமிழில் ச ஆக மாறும்;
(எ.கா) Saங்கரன் - சங்கரன்
வார்த்தையின் இடையில், முடிவில் வரும் Sa தமிழில் ச அல்லது ய ஆக மாறும். (எ.கா)பாSaம் - பாசம்; தேSaம் - தேசம்

5. வார்த்தையின் முதலில் வரும் ஷ தமிழில் ச ஆக மாறும்;
ஷண்முகம் - சண்முகம்;
வார்த்தையின் இடையில், முடிவில் வரும் Sa தமிழில் ட ஆக மாறும்.
விஷம் விடம்; ஷாஷி - சாசி

6. வார்த்தையின் முதலில் வரும் ஸ தமிழில் ச ஆக மாறும்;
ஸபை - சபை;
வார்த்தையின் இடையில், முடிவில் வரும் ஸ தமிழில் ச அல்லது த ஆக மாறும்.
மாஸம் - மாசம்; மாதம்

7. வார்த்தையின் முதலில் வரும் ஹ தமிழில் அ ஆக மாறும்;
ஹரன் - அரன்
வார்த்தையின் இடையில், முடிவில் வரும் ஹ தமிழில் க ஆக மாறும்.
மோஹம - மோகம்; மஹி- மகி

8. வார்த்தையின் முதலில் வரும் க்ஷ தமிழில் க்க ஆக மாறும்;
பக்ஷம் - பக்கம்;
வார்த்தையின் இடையில் வரும் க்ஷ தமிழில் அ ஆக மாறும்;
க்ஷீரம் - கீரம்

9. ஆகாரம் ஐகாரமாக மாறும்;
மாலா - மாலை; சபா - சபை

10. ஈ என்பது இ ஆக மாறும்;
மக்ஷீ - மகி

11. வார்த்தையின் முதலில் வரும் ர தமிழில் அர, இர, உர ஆக மாறும்;
ரங்கன் - அரங்கன்; ராமன் - இராமன்; ரோமம் - உரோமம்.
வார்த்தையின் முதலில் வரும் ல தமிழில் இல, உல ஆக மாறும்;
லாபம் - இலாபம்; லோபம் - உலோபம்
வார்த்தையின் முதலில் வரும் ய தமிழில் இய ஆக மாறும்;
யக்கன் - இயக்கன்.

12. ஈரெழுத்து ஓரெழுத்துப் போல் நிற்றல் = இகரம் வருதல்;
சுக்லம் - சுக்கிலம்; வக்ரம் - வக்கிரம்

13. ஒற்றை அடுத்து மகர வகரம் நிற்றல் - உகரமாக மாறும்;
பத்மம் - பதுமம்; பக்வம் - பக்குவம்

14. ஒற்றை அடுத்து நகரம் இருப்பின் அகரமாகத் தோன்றும்;
ரத்நம் - ரத் + அ + நம் - ரதனம் = அரதனம்

15. ரகரத்தின் பின் உகரம் வருதல்;
அர்த்தம் - அருத்தம்

16. பிறமொழிச் சொல் என்றமையால் திரிபும் கேடும் உண்டு;
சக்தி - சத்தி (திரிபு); ஸ்தூலம் - தூலம் (கெடுதல்)

இனி அடுத்த முறை எந்தக் கிரந்தம் கலந்த சொல்லைப் பார்த்தாலும் அதனை எவ்வாறு தமிழ் எழுத்துக்களில் மாற்றுவது என்பதைச் செய்து பாருங்கள். மொழியின் சுவை இன்னும் உங்களில் அதிகரிக்கும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

---

தொடர்பு: இசையினியன் (isaiyini@yahoogroups.com)
https://thanithamizhakarathikalanjiyam.github.io/

## 34. உலகமயமாக்கலும் வாழ்வியல் மொழியியல் மாற்றங்களும்

*—முனைவர். வீ. ரேணுகாதேவி*

உலகமயமாக்கல் ஒரு நாட்டின் பொருளாதாரத்தை மட்டுமல்லாது அந்நாட்டு மக்களின் வாழ்வியல் நெறிமுறைகள், பேசும் மொழி ஆகியவற்றிலும் மிகப் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. எனவே உலகமயமாக்கல் பற்றிய எந்த விவாத்திதிலும் விவரணையிலும் பொருளாதர விவகாரங்களை விவாதித்தல் மிக முக்கியமான பகுதியாக இருந்தாலும், அதை மட்டுமே உலகமயமாக்கல் என்பதாகக் குறுக்கி விடமுடியாது. உலகமயமாக்கல் என்பது எந்தவொரு தனித்த கருத்தமைவிலும் முடக்கப்பட்டு விட முடியாத பல பரிமாணமுள்ள சமூக நிகழ்வுகளின் தொகுதி ஆகும். உலகமயமாக்கலின் மாறுதலுண்டாக்கும் சக்திகள் தற்காலச் சமூக வாழ்க்கையின் பொருளாதார, அரசியல், கலாச்சார, தொழில் நுட்பம், சுற்றுச்சூழல், மொழி பரிமாணங்களுக்குள் ஆழமாக ஊடுருவிச் செல்கின்றன.

தொழில் நுட்பத்தின் மீதும், அதன் விளைவாக உற்பத்தியாகும் வெகுஜனச் சந்தை பொருட்களின் மீதும் தீராத வெறி கொண்ட நிலை இன்று காணப்படுகின்றது. 'உலகமயமாக்கல்' என்ற சொல் 1960களில் முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்டது. மரபுவழிப்பட்ட அரசியல், பொருளாதாரம், கலாச்சார, புவியியல் எல்லைகளை மீறுகின்ற, மேலும் ஏற்கனவே இருந்து வருகின்ற, சமூக வலைப்பின்னல்களையும் செயல்பாடுகளையும் மென்மேலும் 'பெருக்குவதையும்' 'படைப்பதையும்' உலகமயமாக்கல் உள்ளடக்கியிருக்கிறது (மான்ஃப்ரெட் பி.ஸ்டெகர், 2006:13).

உலகமயமாக்கல் பல்வேறு பரிமாணங்களையும், பல்வேறு தாக்கங்களையும் உள்ளடக்கியதாக இருந்த போதிலும் இக்கட்டுரை மக்களின் அன்றாட வாழ்க்கை முறைமையில் ஏற்படுத்தியுள்ள மாற்றங்களையும்,

அதன் விளைவாக அம்மக்கள் பேசும் மொழியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

சமீபத்தில் சென்னை நகர நட்சத்திர விடுதி ஒன்றில் ஒரு கருத்தரங்கம் நடைபெற்றது. அக்கருத்தரங்கில் பங்கு கொள்ளும் வாய்ப்பு கிடைத்த்து. கருத்தரங்கு முடிவுற்ற பின் பின்னிரவு வரை அந்த விடுதியில் தங்கும் சூழல் ஏற்பட்டது. அந்த நட்சத்திர விடுதியின் வரவேற்பறையில் அமர்ந்திருந்தேன். சுமார் இரவு 10 மணியளவில் பதின்ம வயது பெண்களும் ஆண்களும் வரிசையாக வர ஆரம்பித்தனர். சிறிது நேரத்தில் காதை கிழிக்கும் இசையின் ஓசையுடன் ஆட்டமும் பாட்டமும் ஆரம்பித்த்து. அது நள்ளிரவையும் தாண்டி 1.00 மணி வரை நீடித்தது என்னவென்று கேட்டதற்கு அங்கு 'pub' என்று அழைக்கப்படுகின்ற கேளிக்கை அரங்கு இருக்கின்றது. வார இறுதி நாட்களில் இவ்வாறான பொழுது போக்கு நிகழ்ச்சிகள் நடைபெறுவது வழக்கம் என்றார்கள். அந்த இசை நம் பாரம்பரிய இசை அல்ல, அவர்கள் அணிந்த உடை நம் கலாச்சாரத்தை பிரதிபலிப்பதாக இல்லை, அங்கு பரிமாறப்பட்ட உணவு வகைகள் நம் பாரம்பரிய உணவுகள் அல்ல. நமக்கும் இரவு நேரக் கேளிக்கைகள் இருந்தன கதாகலாட்சேபங்கள், நாடகங்கள், பாட்டு, வீர விளையாட்டுகள் என. ஆனால் இன்றைய இந்த இரவு நேர கேளிக்கைகள் மேலை கலாச்சாரத்தின் தாக்கமாகவே காணப்படுகின்றது.

விழாக்களுக்குப் பதிலாக கொண்டாட்டங்களே உலகமயமாக்கலின் விளைவுகளாகின்றன. தமிழர் திருநாள், பொங்கல், தீபாவளி, காரமடையான் நோன்பு போன்றவை மெல்ல விடைபெற, மகளிர் தினம், காதலர் தினம், அன்னையர் தினம், தந்தையர் தினம் என வரிசையாக பல்வேறு தினங்கள் தான் இன்று வெகு சிறப்பாக இளையோர்களாலும், ஊடகங்களாலும் கொண்டாடப்படுகின்றன. ஊடகங்கள் இக்கொண்டாட்டங்களை பிரத்யோகமாக நாள் முழுவதும் காட்சிப்படுத்திக் கொண்டு இருக்கின்றன. கலாச்சாரம் என்ற பெயரில் வணிகத்தைப் பெருக்கும் ஒரு முயற்சியே இக்கொண்டாட்டங்கள்.

நம் உணவு பழக்க வழக்கங்களும் மிக விரைவாக மாறி வருகின்றன. இளைய தலைமுறையினரின் விருப்ப உணவாக நூடுல்ஸ், பிரைடுரைஸ், பர்க்கர், பிரஞ்சு பிரைஸ், சிக்கன்65, கே.எப்.சி, நான், மேக்டொனால்ட்ஸ்,

சாப்ஸ்டிக்ஸ், கோகோ கோலா, தம்ஸ் அப். பெப்சி, ஆப்பிள் பை, சீஸ், பன்னீர் என்னும் மேலை நாட்டு உணவு வகைகளே இருக்கின்றன. அவையும் அமர்ந்து உண்ணப்படுவதில்லை நின்று கொண்டே உண்ணும் 'பப்பே' முறையே பெரிதும் காணப்படுகின்றது.

நம் பாரம்பரிய உணவு வகைகளான இட்லி, தோசை, சோறு, சாம்பார், கூட்டு, பொரியல், அவியல், புட்டு, களி, கூழ், அப்பம், வற்றல், பொரிவிளங்காய், சிறுதானிய வகைகளைக் கொண்டு செய்யப்படும் பல்வேறு உணவு வகைகள் நம் உணவுப் பண்பாட்டிலிருந்து மெல்ல மெல்ல விடைபெற்று சென்று கொண்டிருக்கின்றன.

ஆதிக்க நாடுகளின் ஒரே மாதிரியாதலின் வெளிப்பாடுகள் இங்கு புலப்படுகின்றன. உலகின் பல பகுதிகளிலும் துரித உணவகங்கள் ஆதிக்கம் பெற்று வருகின்றன. இவற்றின் பரவலுக்கு வீச்சுமிக்க சமூகக் கலாச்சாரப் போக்குகள் உறுதுணையாக உள்ளன. இவற்றைக் குறிக்க அமெரிக்கச் சமூகவியலாரான ஜார்ச் ரிட்டர் 'மேக்டொனால் டைசேஷன்' (Mc Donaldization) என்ற சொல்லை உருவாக்கினார். மேம்போக்காகப் பார்த்தால் மக்கள் தேவைகளை நிறைவேற்றுவதற்கு நம்பகமான வழிகளை அளிக்கும் முயற்சிகளுக்குத் துணை நிற்பவை என்ற அளவில் இவை தர்க்க ரீதியாகவே தொன்றுகின்றன. ஆனால் திரும்ப திரும்ப 'உங்களை மகிழ்விப்பதே எங்கள் இலட்சியம்' எனக் கூறும் பகற்றுத் தோற்றத்துடன் நம்மீது திணிக்கப்படும் வணிக விளம்பரங்களின் பகற்றுத் தோற்றத்தினைக் கிழித்துப் பார்த்தோமானால் தீவிரப் பிரச்சனைகள் இருப்பது தென்படுகின்றன. எடுத்துக்காட்டாக துரித உணவுகளின் மிகக் குறைந்த ஊட்டச்சத்தும், குறிப்பாக அவற்றில் கொழுப்பு சக்தி மிகுதியும், இதய சம்பந்தமான நோய்கள், நீரிழிவு, புற்றுநோய், சின்னஞ்சிறு வயதில் ஊளைச் சதை போன்ற தீவிரமான உடல்நலப் பிரச்சனைகளுக்குக் காரணமாக இருக்கின்றன என்பதை சுட்டிக் காட்டலாம்.

உடல் நலம் பேணுவதற்கு விளையாட்டுகள் தேவைப்படுகின்றன. அவ்விளையாட்டுகளில் கூட நம் பண்பாட்டுடன் இணைந்து இருந்த கபாடி, பல்லாங்குழி, தட்டாங்கல், மல்யுத்தம், வாட்போர், பாண்டி, சிலம்பம், பச்சைக்

குதிரை, குலை குலையா முந்திரிக்காய், பரமபதம், தாயம், ஆடுபுலி போன்ற விளையாட்டுகள் அரிதாகி விட்டன. இன்று எங்கெங்கு காணினும் கையில் மட்டையுடன் நின்று கொண்டிருக்கின்றனர். கிரிக்கெட் மோகம் தலைவிரித்தாடிக் கொண்டிருக்கிறது. நம்பாரம்பரிய வீர விளையாட்டுகள் மெல்ல மெல்ல காணமல் போய்க் கொண்டிருக்கின்றன.

உடைகளும் அவ்வாறே நாட்டின் சீதோச நிலைக் கேற்ற உடைகளான சேலை, தாவாணி, வேட்டி, துண்டு என்பவற்றை காண்பது அரிதாகிவிட்ட்து. சல்வார், குர்தா, சூட், கோட், டை, ஸ்கார்ட், ஜீன்ஸ், நைட்டி, லெக்கின்ஸ் என்ற உடைகளே பரவலாக அணியப்படுகின்றது.

இசையிலும் மாற்றத்தை உணர முடிகின்றது. நம் இசை மெல்லிசை, வீணை, தம்பூர், ஹார்மோனியப் பெட்டி, மிருதங்கம், நாதஸ்வரம், தபேலா, பறை என்னும் இசைக் கருவிகள் எங்கே? அவற்றிற்குப் பதிலாக பாப், ராக், சிம்பனி என்னும் இசை வடிவங்களே இளைஞர்களால் இன்று பெரிதும் விரும்பப்படுகின்றன.

அன்றாடம் பயன்படுத்தப்படும் அழகு சாதன பொருட்களும் மேலை நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப் பட்ட பொருள்களாகவே உள்ளன.

குடும்ப அமைப்பு முறையிலும் அந்நிய கலாச்சாரம் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது. கூட்டு குடும்ப வாழ்க்கை சிதைந்து கொண்டிருக்கிறது. கூட்டுக்குடும்பம் தனிக்குடும்பமாகி தனிமனித குடும்பமாகிக் கொண்டிருக்கின்றது. குழந்தைகளும், முதியோர்களும் அன்புக்கும், அரவணைப்புக்கும் ஏங்கும் நிலை ஏற்ப்பட்டுள்ளது. கூட்டுக் குடும்ப சிதைவின் நீட்சியாக இன்று நிறைய முதியோர் இல்லங்களையும், சிறுவர்களைப் பாதுகாக்கும் பாலர் இல்லங்களும் பெருகிக் கொண்டிருக்கின்றன. வீட்டிற்கு ஒரு குழந்தை, தனித்து வளரும் குழந்தை முரட்டு பிடிவாதத்துடன் தான் எனது என்ற மனப்பான்மையுடன் வளர்கின்றது. பகிர்ந்து உண்ணும் மனப்பான்மை அறவே இல்லை. மழலையர் மனநல பாதிப்புகளுக்கு உள்ளாகின்றனர்.

உலகமயமாக்களின் விளையாக மிக மோசமாக பாதிக்கப்பட்ட ஒரு தொழில் விவசாயம். உழவு மாடுகள், நெல் வகைகள், சிறுதானிய வகைகள் போன்றன ஏறக்குறைய அழிந்து விட்டன் எனலாம்; 92 வகை நாட்டு மாடு வகைகள் நம்மிடம் இருந்தன. அவற்றில் எத்தனை வகை மாடுகள் இன்று நம்மிடம் உள்ளன என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். தமிழர்களின் வீர விளையாட்டான ஜல்லிக்கட்டு தடை செய்யப்பட்டு அதை மீட்டெடுக்க பெரும் போராட்டம் நடத்த வேண்டிய சூழல் ஏற்பட்டது. உடல் நலனுக்கு தீங்கு விளைவிக்கும் பாலைத்தரும் மரபணு மாற்றம் செய்யப்பட்ட ஜெர்சி மாடுகள் இறக்குமதி செய்யப்படுகின்றன.

1.அத்தக்கருப்பன்

2. அழுக்குமறையன்

3.அணறிகாலன்

4. ஆளைவெறிச்சான்

5. ஆனைச்சொறியன்

6. கட்டைக்காளை

7. கருமறையான்

8. கட்டைக்காரி

9. கட்டுக்கொம்பன்

10. கட்டைவால் கூளை

11. கருமறைக்காளை

12. கண்ணன் மயிலை

13. கத்திக்கொம்பன்

14. கள்ளக்காடன்

15. கள்ளக்காளை

16. கட்டைக்கொம்பன்

17. கருங்கூழை

18. கழற்வாய்வெறியன்

19. கழற்சிக்கண்ணன்

20. கருப்பன்

21. காரிக்காளை

22. காற்சிலம்பன்
23. காராம்பசு
24. குட்டைசெவியன்
25. குண்டுக்கண்ணன்
26. குட்டைநரம்பன்
27. குத்துக்குளம்பன்
28. குட்டை செவியன்
29. குள்ளச்சிவப்பன்
30. கூழைவாலன்
31. கூடுகொம்பன்
32. கூழைசிவலை
33. கொட்டைப்பாக்கன்
34. கொண்டைத்தலையன்
35. ஏரிச்சுழியன்
36. ஏறுவாலன்
37. நாரைக்கழுத்தன்
38. நெட்டைக்கொம்பன்
39. நெட்டைக்காலன்
40. படப்பு பிடுங்கி
41. படலைக் கொம்பன்
42. பட்டிக்காளை
43. பனங்காய் மயிலை
44. பசுங்கழுத்தான்
45. பால்வெள்ளை
46. பொட்டைக்கண்ணன்
47. பொங்குவாயன்
48. போருக்காளை
49. மட்டைக் கொலம்பன்
50. மஞ்சள் வாலன்
51. மறைச்சிவலை

52. மஞ்சலி வாலன்
53. மஞ்ச மயிலை
54. மயிலை
55. மேகவண்ணன்
56. முறிகொம்பன்
57. முட்டிக்காலன்
58. முரிகாளை
59. சங்குவண்ணன்
60. செம்மறைக்காளை
61. செவலை எருது
62. செம்ம(ப)றையன்
63. செந்தாழைவயிரன்
64. சொறியன்
65. தளப்பன்
66. தல்லயன் காளை
67. தறிகொம்பன்
68. துடைசேர்கூழை
69. தூங்கச்செழியன்
70. வட்டப்புல்லை
71. வட்டச்செவியன்
72. வளைக்கொம்பன்
73. வள்ளிக் கொம்பன்
74. வர்ணக்காளை
75. வட்டக்கரியன்
76. வெள்ளைக்காளை
77. வெள்ளைக்குடும்பன்
78. வெள்ளைக்கண்ணன்
79. வெள்ளைப்போரான்
80. மயிலைக்காளை
81. வெள்ளை

82. கழுத்திகாபிள்ளை
83. கருக்காமயிலை
84. பணங்காரி
85. சந்தனப்பிள்ளை
86. சர்ச்சி
87. சிந்துமாடு
88. செம்பூத்துக்காரி
89. செவலமாடு
90. நாட்டுமாடு
91. எருமைமாடு
92. காரிமாடு

ஏறக்குறைய 120 நெல் வகைகள் புழக்கத்தில் இருந்திருக்கின்றன, அவையும் எங்கே சென்றன எனத் தெரியவில்லை. இப்போது நமக்குத் தெரிந்த நெல் வகைகள் ஐ.ஆர்.20, கர்நாடக பொன்னி, ரப்பர் போன்றவைதான்.

1. அன்னமழகி
2. அறுபதாங்குறுவை
3. பூங்கார்
4. கேரளா ரகம்
5. குழியடிச்சான் (குழி வெடிச்சான்)
6. குள்ளங்கார்
7. மைசூர்மல்லி
8. குடவாழை
9. காட்டுயானம்
10. காட்டுப்பொன்னி
11. வெள்ளைக்கார்
12. மஞ்சள் பொன்னி
13. கருப்புச் சீரகச்சம்பா
14. கட்டிச்சம்பா
15. குருவிக்கார்

16. வரப்புக் குடைஞ்சான்
17. குறுவைக் களஞ்சியம்
18. கம்பஞ்சம்பா
19. பொம்மி
20. காலா நமக்
21. திருப்பதிசாரம்
22. அனந்தனூர் சன்னம்
23. பிசினி
24. வெள்ளைக் குருவிக்கார்
25. விஷ்ணுபோகம்
26. மொழிக்கருப்புச் சம்பா
27. காட்டுச் சம்பா
28. கருங்குறுவை
29. தேங்காய்ப்பூச்சம்பா
30. காட்டுக் குத்தாளம்
31. சேலம் சம்பா
32. பாசுமதி
33. புழுதிச் சம்பா
34. பால் குடவாழை
35. வாசனை சீரகச்சம்பா
36. கொசுவக் குத்தாளை
37. இலுப்பைப்பூச்சம்பா
38. துளசிவாச சீரகச்சம்பா
39. சின்னப்பொன்னி
40. வெள்ளைப்பொன்னி
41. சிகப்புக் கவுனி
42. கொட்டாரச் சம்பா
43. சீரகச்சம்பா
44. கைவிரச்சம்பா
45. கந்தசாலா

46. பனங்காட்டுக் குடவாழை
47. சன்னச் சம்பா
48. இறவைப் பாண்டி
49. செம்பிளிச் சம்பா
50. நவரா
51. கருத்தக்கார்
52. கிச்சிலிச் சம்பா
53. கைவரச் சம்பா
54. சேலம் சன்னா
55. தூயமல்லி
56. வாழைப்பூச் சம்பா
57. ஆற்காடு கிச்சலி
58. தங்கச்சம்பா
59. நீலச்சம்பா
60. மணல்வாரி
61. கருடன் சம்பா
62. கட்டைச் சம்பா
63. ஆத்தூர் கிச்சிலி
64. குந்தாவி
65. சிகப்புக் குருவிக்கார்
66. கூம்பாளை
67. வல்லரகன்
68. கௌனி
69. பூவன் சம்பா
70. முற்றின சன்னம்
71. சண்டிக்கார் (சண்டிகார்)
72. கருப்புக் கவுனி
73. மாப்பிள்ளைச் சம்பா
74. மடுமுழுங்கி
75. ஒட்டடம்

76. வாடன் சம்பா
77. சம்பா மோசனம்
78. கண்டவாரிச் சம்பா
79. வெள்ளை மிளகுச் சம்பா
80. காடைக் கழுத்தான்
81. நீலஞ்சம்பா
82. ஜவ்வாதுமலை நெல்
83. வைகுண்டா
84. கப்பக்கார்
85. கலியன் சம்பா
86. அடுக்கு நெல்
87. செங்கார்
88. ராஜமன்னார்
89. முருகன் கார்
90. சொர்ணவாரி
91. சூரக்குறுவை
92. வெள்ளைக் குடவாழை
93. சூலக்குணுவை
94. நொறுங்கன்
95. பெருங்கார்
96. பூம்பாளை
97. வாலான்
98. கொத்தமல்லிச் சம்பா
99. சொர்ணமசூரி
100. பயகுண்டா
101. பச்சைப் பெருமாள்
102. வசரமுண்டான்
103. கோணக்குறுவை
104. புழுதிக்கார்
105. கருப்புப் பாசுமதி

106. வீதிவடங்கான்
107. கண்டசாலி
108. அம்யோ மோகர்
109. கொள்ளிக்கார்
110. ராஜபோகம்
111. செம்பினிப் பொன்னி
112. பெரும் கூம்பாழை
113. டெல்லி போகலு
114. கச்சக் கூம்பாழை
115. மதிமுனி
116. கல்லுருண்டையான் (கல்லுருண்டை)
117. ரசகடம்
118. கம்பம் சம்பா
119. கொச்சின் சம்பா
120. செம்பாளை

**பாரம்பரிய விளையாட்டுகள் வகைப்படுத்தப்பட்டு விளையாடப்பட்டன.**

<u>சிறுவர் (பையன்கள்) கைத்திறன்:</u>

1. அச்சுப்பூட்டு
2. கிட்டிப்புள்
3. கோலி
4. குச்சி விளையாட்டு (எல்லா வயதினரும், ஆண், பெண் இருபாலாரும்)
5. குதிரைக் கல்லு
6. குதிரைச் சில்லி
7. சச்சைக்காய் சில்லி
8. சீச்சாங்கல்
9. தெல்லு (தெல்லுருட்டான்)
10. தெல்லு (தெல்லு எறிதல்)
11. பட்டம்
12. பந்து, பேய்ப்பந்து

13. பம்பரம்
14. மல்லு
15. வில்லுக்குச்சி

<u>அணி விளையாட்டு:</u>

1. ஓடுசிக்கு
2. சூ விளையாட்டு
3. நாடு பிரித்து
4. பந்து, பிள்ளையார் பந்து
5. பூச்சொல்லி
6. மதிலொட்டி
7. மந்திக் குஞ்சு
8. வண்டி உருட்டல்

<u>நீர் விளையாட்டு:</u>

1. காயா பழமா
2. நீரில் தொடல்
3. நீரில் விழுதல்

<u>கண்டுபிடி:</u>

1. உருண்டை திரண்டை
2. சீப்பு விற்கிறது

<u>இருபால் இளைஞர் உடல் திறன்:</u>

1. ஊதுமுத்து
2. உயிர் எழுப்பு
3. ஐந்து பந்து
4. எலியும் பூனையும்
5. கல் எடுத்தல்
6. கல்லா மண்ணா

7. கல்லுக் கொடுத்தான் கல்லே வா
8. குஞ்சு விளையாட்டு
9. குத்து விளையாட்டு
10. துரத்திப் பிடி
11. தூண் விளையாட்டு
12. தொடு விளையாட்டு
13. நாலு மூலை விளையாட்டு
14. நிலாப்பூச்சி
15. நெல்லிக்காய் (பாடித் தொடுதல்)
16. பாரிக்கோடு
17. புலியும் ஆடும்
18. மரங்கொத்தி
19. மல்லர் கம்பம்
20. மலையிலே தீப்பிடிக்குது
21. மாங்கொழுக்கட்டை

உத்தித் திறன்:

1. உப்பு வைத்தல்
2. எண் விளையாட்டு
3. ஓடுகுஞ்சு
4. கண்ணாம்மூச்சி
5. கிச்சுக் கிச்சுத் தம்பலம்
6. கொப்பரை கொப்பரை
7. தந்தி போவுது தபால் போவுது
8. நிலாக் குப்பல்
9. பாக்குவெட்டியைக் காணோமே
10. மாது மாது

ஊழ்த்திறன் (திருவுளம்):

1. ஒற்றையா இரட்டையா
2. கண்கட்டி விளையாட்டு
3. மோதிரம் வைத்தல்
4. ராசா மந்திரி

பட்டவர் தெரிவு:

1. ஓ... சிய்யான்
2. பருப்பு சட்டி (விளையாட்டு)
3. புகையிலைக் கட்டை உருட்டுதல்

காளையர்:

1. அடிமுறை
2. இளவட்டக்கல்
3. கிளித்தட்டு
4. சடுகுடு (கபடி)
5. சல்லிக்கட்டு (பாய்ச்சல் காளை)
6. சிலம்பம்

கன்னியர்:

1. அம்மானை

(ஒருவர் ஆடுவது சங்ககாலப்பந்து விளையாட்டு. மூவர், ஐவர் எனக் கூடிப் பாட்டுப் பாடிக்கொண்டு அடுவது அம்மானை விளையாட்டு)

முதியோர்:

1. ஆடுபுலி
2. ஓட்டம்
3. கட்ட விளையாட்டு
4. கைச்சில்லி

5.சூது தாயம்

6. தாயம்
7. திரிகுத்து
8. துரும்பு
9. நட்சத்திர விளையாட்டு
10. பரமபதம் (விளையாட்டு)
11. பல்லாங்குழி
12. முக்குழியாட்டம்

<u>எல்லாரும் விளையாடும் விளையாட்டு.. கலை விளையாட்டு:</u>

1. கரகம்
2. கழியல்
3. கழைக்கூத்து
4. காவடி
5. கோக்கழிக் கட்டை
6. வர்மம்

<u>கால் திறன்:</u>

1. ஆனமானத் திரி
2. கரணப்பந்து
3. குதிரைக்குக் காணம் காட்டல்
4. கொக்கு விளையாட்டு
5. கோழிக்கால்
6. தை தக்கா தை
7. நடைவண்டி ஓட்டம்
8. நொண்டி
9. பச்சைக் குதிரை
10. பொய்க்கால் நடை, கொட்டாங்குச்சி நடை
11. மந்தி ஓட்டம்
12. மாட்டுக்கால் தாண்டல்
13. மூக்குப்பிடி (துரத்திப் பிடி)

குழு விளையாட்டு:

1. அணில் பிள்ளை
2. ஆடும் ஓநாயும்
3. உயிர் கொடுத்து
4. கல்லுக்குச்சி
5. காக்கா கம்பு
6. காக்கா குஞ்சு
7. குச்சிக்கல்
8. குரங்கு விளையாட்டு
9. கோட்டான் கோட்டான்
10. கோழிக்குஞ்சு
11. தவளை விளையாட்டு
12. நாலுமூலைக் கல்
13. மரக்குரங்கு
14. வண்ணான் தாழி
15. வண்ணான் பொதி

உல்லாசம்:

1. ஊதல்
2. கால் தூக்கிற கணக்கப்பிள்ளை
3. சீத்தடி குஞ்சு
4. தோட்டம் (விளையாட்டு)
5. பஞ்சு வெட்டும் கம்போடா
6. இதென்ன மூட்டை
7. கிளி செத்துப்போச்சு
8. ஊதாமணி
9. என் உலக்கை குத்து குத்து
10. ஒருபத்தி இருபத்தி
11. ஒளிதல்

12. குச்சு குச்சு ரங்கம்மா
13. குறிஞ்சி வஞ்சி
14. கொடுக்கு
15. சிறுவீடு விளையாட்டு
16. சோத்துப்பானை (சோற்றுப்பானை)
17. ராட்டு பூட்டு
18. தவிட்டுக் குஞ்சு
19. பிஸ்ஸாலே பற
20. பூசனிக்காய் விளையாட்டு
21. பூப்பறி விளையாட்டு
22. பூப்பறிக்க வருகிறோம்
23. பூப்பூ புளியம்பூ
24. மச்சிலே யாரு
25. மத்தாடு
26. மோரு விளையாட்டு
27. வேடிக்கை விளையாட்டு
28. ஊஞ்சல்
29. ஈசல் பிடித்தல்
30. உப்பு விற்றல்
31. ஒருகுடம் தண்ணி ஊத்தி - விளையாட்டு
32. கரகர வண்டி
33. கள்ளன் போலீஸ்
34. காற்றாடி
35. கிய்யா கிய்யா குருவி
36. கிழவி விளையாட்டு
37. கிறுகிறு மாம்பழம்
38. குலையா குலையா முந்திரிக்காய்
39. சங்கிலி விளையாட்டு
40. தட்டான் பிடித்தல்
41. தட்டை

42. நடிப்பு விளையாட்டு (தண்ணீர் சேந்துகிறது)
43. பந்து, எறிபந்து
44. பந்து, பிடிபந்து
45. பன்னீர்க்குளம் (விளையாட்டு)
46. பூக்குதிரை
47. வண்டி உருட்டல்

<u>பாப்பா விளையாட்டு:</u>

1. அந்தக் கழுதை இந்தக் கழுதை
2. அய்யன் கொம்பு
3. அட்டலங்காய் புட்டலங்காய்
4. அத்தளி புத்தளி
5. உப்பு மூட்டை
6. கிள்ளாப் பறண்டடி
7. தட்டலங்காய் புட்டலங்காய்
8. தென்னைமரம் விளையாட்டு (ஐலேலம் ஐலகப்பல் விளையாட்டு)
9. நடைவண்டி
10. நான் வளர்த்த நாய்க்குட்டி
11. பருப்பு கடை (விளையாட்டு)

<u>தெய்வ ஆடல்கள் மக்கள் ஆடல்கள் விழா விளையாட்டு:</u>

1. உரிமரம்
2. உரியடி
3. கார்த்திகை விளக்கு
4. கார்த்திகைச் சுளுந்து
5. தைப்பாவை
6. பரணி பரணி
7. பாரி வேட்டை
8. பானை உடைத்தல்
9. புலியாட்டம்

10. பொம்மைச்சீட்டு
11. மஞ்சள் நீர் விளையாட்டு
12. மாட்டுப் பந்தயம்
13. மூணுகட்டை
14. மோடி விளையாட்டு

<u>சொல் விளையாட்டு:</u>

1. கேலி
2. பூக்குதிரை
3. பூச்சொல்லி
4. மொழி விளையாட்டு
5. ரானா மூனா தண்டட்டி

மேற்கூறப்பட்டவை தமிழர்களின் வாழ்வில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் இளைய தலைமுறையினர் நம் பண்பாடு, உணவு, உடை, விளையாட்டு, தொழில், கலை ஆகிய அனைத்திலிருந்தும் விலகிச் செல்கின்றனர். இந்த மாற்றங்கள் தமிழர்களின் வாழ்வியலில் மட்டுமல்லாமல் அவர்கள் பேசும் மொழியிலும் மாற்றங்க்ளை ஏற்படுத்தியுள்ளன. ஒரு மொழி வளர அம்மொழியின் சொற்களஞ்சியம் விரிவடைய வேண்டும். ஆனால் நம் சொற்களஞ்சியம் மேலே கூறப்பட்ட அத்தனை சொற்களையும் இழந்து விட்டது. சொற்கள் இன்றைய பயன்பாட்டில் இல்லை அதற்கு பதிலாக சொற்களஞ்சியத்தில் ஏராளமான கடன் வாங்கப்பட்ட சொற்கள் சேர்ந்துள்ளன. அதனால் தமிழ் மொழியின் கட்டமைப்பில் மாற்றங்கள் காணப்படுகின்றது. அன்றாடம் பயன்படுத்தும் சொற்கள் கூட தமிழ் சொற்களாக இல்லை. ஆங்கிலச் சொற்களே ஆட்சி செய்கின்றன. அரிசி ரைஸ் என்றும், உப்பு 'சால்ட்' என்றும், வேம்பு 'நீம்' என்றும், கற்றாழை 'ஆலிவோரா' என்றும், மஞ்சள் 'டர்மரிக்' என்றும், பால் 'மில்க்' என்றும், தண்ணீர் 'வாட்டர்' என்றும் கையாளப்படுகின்றது.

ஒரு இனத்தை அழிக்க வேண்டுமென்றால் அவர்களின் மொழியை முதலில் அழிக்க வேண்டும். மொழியின் அழிவு ஒரு பண்பாட்டிற்கு முற்று

புள்ளி வைக்கும். உலகமயமாக்கல் என்னும் பொருளாதார கோட்பாடு நாட்டின் பொருளாதாரத்தில் மட்டுமல்லாது மக்களின் வாழ்விலும் அவர்களின் மொழியிலும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி வருவதை அன்றாட நிகழ்வுகளில் பார்த்துக் கொண்டு நிற்கின்றது தமிழ் சமுதாயம்.

**துணைநூற்பட்டியல்**


மான்ஃபிரட் பி. ஸ்டெகர், 2006, உலகமயமாக்கல், அடையாளம், பூதநத்தம்.

Renuga devi, V., 2010, Globalization and Cultural Genocide, Aayukkoovai, Madurai, Vol.4, pp. 2436 - 2442.


**தொடர்பு:**


முனைவர். வீ. ரேணுகாதேவி (prof.renuga@gmail.com)
தகைசால் பேராசிரியர் மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலை கழகம், மதுரை - 62502.

## 35. சங்க இலக்கியத்தில் பூனை

*—திருத்தம் பொன். சரவணன்*

**முன்னுரை:**

பூனை - என்றதும் குறுகுறு மீசைமுடிகளுடன் கண்களைச் சுருக்கிக்கொண்டு மியாவ் என்று கத்தும் அந்த அழகிய குட்டி விலங்கினை யாருக்கும் நினைவு வராமல் இராது. இரவு நேரத்தில் திருட்டுத்தனமாக வீட்டிற்குள் நுழைந்து பாலைக் குடித்துவிடும் பூனை இப்போதெல்லாம் பகலிலும் அந்த வேலையைச் செய்கிறது. பாலுக்குக் காவல் பூனையா? என்று கேட்ட காலமெல்லாம் போய் இப்போது பூனைகளை வீட்டிலேயே செல்லமாக வளர்க்கிறார்கள். நாயினைப் போலவே பூனைக்கென்று தனிப்பட்ட உணவுவகைகளும் வந்துவிட்டன. நாயினைப் போலன்றி, வீட்டுக்குள்ளேயே அடைந்துகிடக்கும் செல்ல விலங்கான பூனைகளைச் சங்க காலத்தில் தமிழர்கள் தங்கள் வீட்டில் வளர்த்தார்களா என்பதைப் பற்றியும் சங்க இலக்கியங்களில் பூனைகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ள பல்வேறு செய்திகளையும் இக் கட்டுரையில் விரிவாகக் காணலாம்.

**பூனை - பெயர்களும் காரணங்களும்:**

பூனை என்னும் விலங்கினைக் குறிக்க வெருகு, வெருக்கு, பிள்ளை, பூசை ஆகிய பெயர்களே சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளன. நாம் தற்போது புழங்கிவரும் பெயரான பூனை என்ற பெயர் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்படவில்லை என்பது வியப்புக்குரியது. ! இவற்றுள்,

**வெருகு, வெருக்கு ஆகிய பெயர்கள் இவ் விலங்கின் வெருவுதல் அதாவது அஞ்சுதல் பண்பினாலும்**
**பிள்ளை என்ற பெயர் குழந்தையைப் போல இரவில் ஓசையெழுப்பும் பண்பினாலும்**



**பூசை என்ற பெயர் பூப்போல பலமற்ற உடலினை உடையது என்ற பொருளிலும் ஏற்பட்டிருக்கலாம்.**

பூசை என்னும் பெயரே பின்னாளில் பூஞை என்றும் பூனை என்றும் மருவியிருக்க வேண்டும். பல்வேறு இந்திய மொழிகளில் பூனைகளைக் குறிக்கும் பெயர்கள் சங்க இலக்கியத் தமிழ்ப் பெயர்களை ஒட்டியே அமைந்துள்ளது இங்கே குறிப்பிடத்தக்கதாகும்.

**இந்தி - பில்லி - சங்க இலக்கியப் பெயரான பிள்ளை என்ற பெயரில் இருந்து மருவியது.**
**மலையாளம் - பூச்சா - சங்க இலக்கியப் பெயரான பூசை என்ற பெயரில் இருந்து மருவியது.**
**தெலுங்கு - பில்லி - சங்க இலக்கியப் பெயரான பிள்ளை என்ற பெயரில் இருந்து மருவியது.**
**கன்னடம் - பெக்கு - சங்க இலக்கியப் பெயரான வெருகு என்ற பெயரில் இருந்து மருவியது.**

**சங்க இலக்கியத்தில் பூனை:**

சங்க இலக்கியத்தில் பேசப்பட்டுள்ள பூனை காட்டுப்பூனை ஆகும். பாலூட்டி இனத்தைச் சேர்ந்த இந்த காட்டுப்பூனையின் விலங்கியல் பெயர் ஃபெலிஸ் சாவஸ் ( Felis chaus ) ஆகும். காடுகளில் மட்டுமின்றி காடுகளுக்கு அருகில் உள்ள ஊர்களிலும் இவை வசித்தன. காட்டுப்பூனையின் கடைவாயில் உள்ள கோரைப்பற்கள் நீண்டு கூரிதாய் இருந்ததாகவும் பார்ப்பதற்கு இவை முல்லைமலரின் கூரிய மொட்டுக்களைப் போலத் தோன்றியதாகவும் இலக்கியம் கூறுகிறது. காட்டுப்பூனையின் காலடி விரல்கள் குவிந்தநிலையில் இருந்ததாகவும் அது இலுப்பைப் பூவினைப்

போலத் தோன்றியதென்றும் கூறப்பட்டுள்ளது. காட்டுப்பூனையின் கண்கள் இரவிலும் ஒளிரும் தன்மை கொண்டவை என்று கூறுகிறது. இரவு நேரங்களில் எலியினை வேட்டையாடி உண்ணும் காட்டுப்பூனையானது சில நேரங்களில் வீடுகளில் வளர்க்கப்பட்ட கோழிகளையும் வேட்டையாடிக் கொன்றுண்ட செய்திகள் கூறப்பட்டுள்ளன. காட்டுப்பூனையின் உடலில் பல நிறங்கள் உண்டென்றும் வரையப்பட்ட ஓவியம் போல அது இருந்ததாகவும் கூறுகிறது. காட்டுப்பூனையின் குட்டிகளின் உடலில் இருந்த மயிர் வெள்ளைநிறத்தில் புசுபுசுவென்று இலவம் பஞ்சு போல இருந்ததாகவும் தாயினைச் சுற்றி குட்டிகள் இருந்தபோது பார்ப்பதற்கு வானத்தில் நிலவினைச் சுற்றி விண்மீன்கள் இருந்ததைப் போலத் தோன்றியதாகவும் இலக்கியம் குறிப்பிடுகிறது. சங்ககாலத் தமிழர்களின் வீட்டில் பூனை வளர்க்கப்பட்டதாகச் செய்திகள் எதுவும் சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்படவில்லை.

சங்க இலக்கியத்தில் காட்டுப்பூனை குறித்துப் பதிவு செய்யப்பட்டுள்ள செய்திகளைக் கீழ்க்காணும் தலைப்புக்களில் விரிவாகக் காணலாம்.

1. பூனையின் மயிர்
2. பூனையின் பல்
3. பூனையின் கண்கள்
4. பூனையின் காலடி
5. பூனையின் உணவு
6. பூனையும் குட்டிகளும்

**1. பூனையின் மயிர்:**

பூனையின் பல சிறப்பு அம்சங்களில் அதன் மயிரும் ஒன்று. புசுபுசுவென்று பஞ்சினைப் போல மென்மையான மயிர் அதன் உடல் முழுவதும் மூடியிருக்கும். பூனையை வளர்ப்பவர்கள் அடிக்கடி அதனைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சுவதற்கான காரணங்களில் பூனையின் மென்மயிரும் ஒன்று. பூனையின் உடல் மயிரில் பல நிறங்கள் உண்டு. உடல் முழுவதும் அழகிய வண்ணத்தில் நேர்த்தியான பல

கோடுகளைக் கொண்டிருந்த ஒரு காட்டுப்பூனையானது பார்ப்பதற்கு வரையப்பட்ட ஒரு ஓவியம் போலத் தோன்றியதாகக் கீழ்க்காணும் பாடல் கூறுகிறது.

**எழுதி அன்ன கொடி படு வெருகின் - அகம்.** 297



இலவம் பஞ்சும் பூனை மயிரும் ஒப்பீடு

காட்டுப்பூனையின் குட்டிகளின் உடலில் புசுபுசுவென்று பொலிந்திருந்த மென்மையான வெண்ணிற மயிரினை இலவ மரத்தின் பஞ்சுடன் ஒப்பிட்டுக் கூறுகிறது கீழ்க்காணும் அகப்பாடல்.

**பூளை அன்ன பொங்கு மயிர்ப் பிள்ளை - அகம்.** 297

இப்பாடலில் வரும் பூளை என்பது இலவ மரத்தின் பஞ்சினைக் குறிக்கும்.

**2. பூனையின் பல்:**



பூனையின் பல்லும் முல்லையின் மொட்டும் ஒப்பீடு

பூனையின் வாய்க்குள் பார்த்தால், சிறிய கோரைப்பற்கள் சிலவற்றுடன் மேல்தாடையில் நீண்ட கோரைப்பற்கள் இரண்டும் கீழ்த்தாடையில் நீண்ட கோரைப்பற்கள் இரண்டும் இருக்கும். இரையினைக் கிழித்துச் சாப்பிட இந்த நீண்ட கோரைப்பற்கள் உதவுகிறது. வெண்ணிறத்தில் கூர்மையுடன் விளங்கும் இந்த நீண்ட கோரைப்பற்களுக்கு உவமையாக வெண்ணிறத்தில் பூத்திருக்கும் முல்லை மலரின் கூரிய மொட்டுகளைச் சங்கப் புலவர்கள் பல பாடல்களில் பாடியுள்ளனர். அவற்றுள் சிலவற்றை மட்டும் இங்கே சான்றாகக் காணலாம்.

**வெருக்கு பல் உருவின் முல்லையொடு கஞலி - குறு.240**

**பார்வல் வெருகின் கூர் எயிற்று அன்ன**
**வரி மென் முகைய நுண் கொடி அதிரல் - அகம். 391**

**பிள்ளை வெருகின் முள் எயிறு புரைய**
**பாசிலை முல்லை முகைக்கும் - புறம். 117**

**பூத்த முல்லை வெருகு சிரித்து அன்ன**
**பசு வீ மென் பிணி குறு முகை அவிழ்ந்த - குறு. 220**

முல்லையின் மலராத கூரிய மொட்டுக்களைப் பார்த்த போதெல்லாம் புலவர்களுக்குப் பூனையின் கூரிய நீண்ட கோரைப்பற்களே நினைவுக்கு வந்ததனை மேற்பாடல் வரிகள் கூறாநிற்கின்றன. அருகில் உள்ள படத்தில் முல்லையின் கூரிய மலர் மொட்டும் பூனையின் நீண்ட கோரைப்பல்லும் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

**3. பூனையின் கண்கள்:**

பூனையின் சிறப்பு அம்சமே அதன் கண்கள் தான். பூனையின் கண்கள் மற்றும் பார்வையினைப் பற்றி விக்கிப்பீடியா இவ்வாறு கூறுகிறது: " பூனைகள் சிறந்த இரவுப்பார்வையைக் கொண்டுள்ளன. குறைந்த அளவிலான ஒளியை டபீட்டம் லூசிடம் என்ற இமைப்பானது கண்ணின் விழித்திரைக்குப் பின்னால் குவிப்பதால் குறைந்த அல்லது மங்கலான ஒளியிலும்

துல்லியமான பார்வைத்திறன் கொண்டுள்ளன. இவை மனிதனுக்குப் பார்க்கத் தேவைப்படும் ஒளியில் ஆறில் ஒரு பங்கு ஒளியிலேயே பார்க்கக்கூடிய திறன் படைத்தவை. "



விக்கிப்பீடியா கூறுவதைப் போலவே நள்ளிரவு நேரத்திலும் பூனையின் கண்கள் ஒளிர்வதைக் கீழ்க்காணும் சங்கப்பாடலும் உறுதிசெய்கிறது.

**வெருகு இருள் நோக்கி அன்ன கதிர் விடுபு**
**ஒரு காழ் முத்தம் இடை முலை விளங்க - அகம்.** 73

இரவிலும் ஒளிவீசும் பூனையின் கண்களைப் போல ஒளிவீசுகின்ற பெரிய முத்துப் போன்ற கண்கள் இமைகளுக்கு இடையில் விளங்க .. என்பது மேற்பாடல் வரிகளின் பொருளாகும். இவ்வாறு புலவர் கூறுவதன் காரணம், தலைவனைச் சந்திக்கத் தலைவியானவள் நள்இரவு நேரத்திலும் புறப்படத் தயாராகி விட்டாள். தலைவனைச் சந்திக்கப் போகும் ஆவலினால் பூனையின் கண்களைப்போல அவளது முத்துப் போன்ற பெரிய கண்கள் இரவிலும் ஒளிர்கின்றனவாம். என்ன ஒரு உவமை !. இப்பாடலில் வரும் முலை என்பது மார்பகங்களைக் குறிக்காமல் கண்ணிமைகளைக் குறிக்கும். இதைப்பற்றி கண்ணகி மதுரையை எரித்தது எப்படி?. என்ற ஆய்வுக் கட்டுரையில் விரிவாகக் காணலாம்.

மேற்பாடலைப் போலவே, எலிவேட்டை ஆடிய வேட்டுவச் சிறுவர்களின் கண்களும் ஆண் காட்டுப்பூனையின் கண்களைப் போல இருளில் ஒளிர்ந்ததாகக் கீழ்க்காணும் புறப்பாடல் கூறுவதைப் பாருங்கள்.

**வெருக்கு விடை அன்ன வெருள் நோக்கு கயம் தலை**
**......... வெள் வாய் வேட்டுவர் வீழ் துணை மகாஅர்**
**...... பருத்தி வேலி கருப்பை பார்க்கும் - புறம். 324**

**4. பூனையின் காலடி:**



பூனையின் அடியும் இலுப்பையின் பூவும் ஒப்பீடு

பூனையின் காலடியானது விரிந்து பரந்திராமல் குவிந்தநிலையில் காணப்படும். நடக்கும்போது ஓசையேதும் கேட்காத வண்ணம் இருக்க இத்தகைய குவிந்த காலடி அமைப்பு உதவுகிறது. இதனால் பூனை தனது இரையினை மிக அருகில் நெருங்க முடிகிறது. பூனையின் காலடி விரல்கள் குவிந்திருப்பதைக் கூறும் சங்கப்பாடல் கீழே:

**குவி அடி வெருகின் பைம் கண் ஏற்றை - அகம். 367**

வீடுகளில் பூனை வளர்ப்பவர்கள் ஒரு பாதுகாப்பிற்காகப் பூனையின் கால்விரல் நகங்களை வெட்டிவிடுவர். ஆனால் காட்டுப்பூனையின் கால் விரல்கள் உருண்டு திரண்டு கூரிய நீண்ட நகங்களுடன் காணப்படும். இவை

பார்ப்பதற்கு நீண்ட கூரிய மருப்புடன் கூடிய இலுப்பைப்பூவின் குவிந்த மலர் மொட்டுக்களைப் போலத் தோன்றியதாகக் கீழ்க்காணும் அகப்பாடல் கூறுகிறது.

**வெருக்கு அடி அன்ன குவிமுகிழ் இருப்பை - அகம். 267**

அருகில் உள்ள படத்தில் பூனையின் காலடித்தடமும் இலுப்பைப் பூவின் வடிவமும் ஒப்பிடப்பட்டுக் காட்டப்பட்டுள்ளது.

**5. பூனையின் உணவு:**

காட்டுப்பூனையின் முதன்மை உணவுகளாகக் குழிமுயல், எலி போன்ற சிறு விலங்குகளை விக்கிப்பீடியா கூறுகிறது. விக்கிப்பீடியா கூறுவதைப் போலவே கீழ்க்காணும் குறுந்தொகைப் பாடலும் நள்ளிரவில் பூனையானது வீட்டில் திரியும் எலியினை வேட்டையாடி உண்பதைப் பற்றிக் கூறுகிறது.



**நள்ளிருள் யாமத்து இல் எலி பார்க்கும்**
**பிள்ளை வெருகிற்கு - குறு.107**

காடுகளில் குழிமுயல், எலி போன்றவை கிடைக்காதபோது காட்டுப்பூனைகள் வீடுகளில் வளர்க்கப்படும் சேவல் மற்றும் பெட்டைக்கோழிகளை வேட்டையாடிக் கொன்றுண்ணும். காதலி ஒருத்தி தனது காதலனுடன் இரவில் சேர்ந்து மகிழ்ந்திருக்கும்போது திடீரென்று கூவித் துயில் எழுப்பிய சேவலுக்கு " காட்டுப்பூனையின் வாய்ப்பட்டு ஒழிவாயாக " என்று சாபம் விடுவதாகக் கீழ்க்காணும் பாடல் அமைந்துள்ளது.

**தொகு செம் நெற்றி கணம்கொள் சேவல்**
**..... பிள்ளை வெருகிற்கு அல்கு இரை ஆகி**
**..... யாணர் ஊரனொடு வதிந்த**
**ஏம இன் துயில் எடுப்பியோயே - குறு.107**

காட்டுப்பூனை ஒன்று வீட்டில் வளர்க்கப்பட்ட சேவல்கோழியைக் கொன்றுண்ண, அது கண்மூடி அயரும் வேளையினை எதிர்பார்த்துக் காத்திருக்கும் காட்சியினை கீழ்க்காணும் அகப்பாடல் அப்படியே நம் கண்முன்னால் கொண்டுவருகிறது.

**கரும் கால் வேங்கை செம் சுவல் வரகின்**
**மிகு பதம் நிறைந்த தொகு கூட்டு ஒரு சிறை**
**குவி அடி வெருகின் பைம் கண் ஏற்றை**
**ஊன் நசை பிணவின் உயங்கு பசி களைஇயர்**
**தளிர் புரை கொடிற்றின் செறி மயிர் எருத்தின்**
**கதிர்த்த சென்னி கவிர் பூ அன்ன**
**நெற்றி சேவல் அற்றம் பார்க்கும்**
**புல்லென் மாலையும் - அகம். 367**

வேங்கை மரத்தருகில் வரகின் கதிர்கள் பெரும் போராகக் குவித்து வைக்கப்பட்டிருக்க, அதன் பின்னால் இருந்தவாறு குவிந்த அடிகளை உடைய ஆண் காட்டுப்பூனையானது, தனது பெண் துணையின் பசியினைப் போக்குவதற்காக, முருக்கம்பூப் போன்ற உச்சிக்கொண்டையினை உடைய சேவல் கோழியானது கண் அயரும் வேளையினை எதிர்நோக்கிக் காத்திருந்ததாக மேற்பாடல் வரிகள் கூறுகின்றன.

சங்ககாலத் தமிழர்கள் தமது வீட்டில் வளர்க்கப்பட்ட சேவல் கோழி மற்றும் பெட்டைக் கோழிகளைக் காட்டுப்பூனைகள் தாக்கிக் கொல்லாதிருக்கச் சுற்றிலும் வேலி அமைத்திருந்தனர். ஆனால் காட்டுப்பூனைகள் இரவு நேரத்தில் இந்த வேலிகளின் மேலிருந்தவாறு கோழிகளை நோட்டம் விட்டு வேட்டையாடின. இதனால் இவற்றை 'வேலி வெருகு' என்று இலக்கியம்

குறிப்பிடுகிறது. இதைப்பற்றிய ஒருசில பாடல்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**மனை உறை கோழி குறும் கால் பேடை**
**வேலி வெருகு இனம் மாலை உற்று என - குறு.** 139

**ஊர் முது வேலிப் பார்நடை வெருகின்**
**இருள் பகை வெரீஇய நாகு இளம் பேடை - புறம்.** 326

**6. பூனையும் குட்டிகளும்:**

பெரிய பூனையைக் காட்டிலும் அதன் குட்டிகள் தான் மிக அழகாக இருக்கும். வீட்டுப்பூனையோ காட்டுப்பூனையோ எதுவானாலும் தாய்ப்பூனைக்கும் அதன் குட்டிகளுக்கும் இடையிலான பாசம் அதிகம். பல சமயங்களில் தனது சிறிய குட்டியினைப் பூனைத் தன் வாயினால் கவ்வியவாறு தூக்கிச் செல்வதைப் பார்த்திருக்கிறோம். தாய்ப்பூனை எங்கு சென்றாலும் அதன் பின்னாலேயே அதன் குட்டிகள் தொடர்ந்து செல்லும். இதனை ஒரு அழகான உவமையுடன் கீழ்க்காணும் பாடலில் புலவர் கூறுவதைப் பாருங்கள்.

**பூளை அன்ன பொங்கு மயிர்ப் பிள்ளை**
**மதி சூழ் மீனின் தாய் வழிப்படூஉம் - அகம்.** 297

காட்டுப்பூனையின் குட்டிகள் தன் தாயினைச் சூழ்ந்தநிலையில் இருந்ததனை வானத்தில் விண்மீன்கள் நிலவினைச் சூழ்ந்து இருந்ததனைப் போலத் தோன்றியதாக மேற்பாடலில் கூறுகிறார் புலவர். இதிலிருந்து, அந்தக் காட்டுப்பூனை மற்றும் குட்டிகளின் உடலில் வெண்மை நிறம் மிக்கிருந்ததனை அறியமுடிகிறது.

**முடிவுரை:**

சங்க இலக்கியங்களில் காட்டுப்பூனைகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ள பல்வேறு செய்திகளைக் கண்டோம். சங்ககாலத் தமிழர்கள் வீடுகளில் பூனை வளர்க்கவில்லை என்றே தெரிகிறது. அப்படி வளர்த்திருந்தால் வீட்டில்

வளர்க்கப்பட்ட ஆடு, மாடு, நாய், கோழிகளைப் பற்றிக் கூறியதைப்போல வீட்டுப்பூனைகளைப் பற்றியும் பதிவுசெய்திருப்பர். ஆனால் காலம் மாறமாற தமிழர்களுக்குத் தமது வீடுகளிலும் பூனைகளை வளர்க்கவேண்டிய தேவை ஏற்பட்டது. காரணம், அறுவடை செய்து சேமித்து வைத்திருந்த நெல் முதலான தினைகளை எலிகளும் பெருச்சாளிகளும் கவர்ந்து சென்றுண்டன. இவற்றைக் கொல்வதற்காகவே வீடுகளில் பூனைகளை வளர்க்கலாயினர். ஆனால் வளர்ப்புப் பூனைகளுக்கும் காட்டுப்பூனைகளுக்கும் குணவேறுபாடுகள் உண்டு; இரண்டின் விலங்கியல் பெயரும் வேறுவேறு. வீட்டுப்பூனைகள் எலிகளையும் பெருச்சாளிகளையும் வேட்டையாடியதே ஒழிய வீட்டில் வளர்க்கப்பட்ட கோழிகளைத் தாக்காமல் நட்புடன் பழகத் துவங்கின. இப்படியாக மனித சமுதாயத்துடன் பூனைகள் இயைந்து வாழ்ந்த நிலையில், பூனை தொடர்பாகப் பல பழமொழிகளும் உருவாயின. " ஆனைக்கு ஒரு காலம்; பூனைக்கு ஒரு காலம் " என்பது அவற்றுள் ஒன்று.

---

தொடர்பு:
திருத்தம் பொன். சரவணன் (vaendhan@gmail.com)
https://thiruththam.blogspot.in/2018/02/7.html

# 36. சங்ககாலச் சேரர் வரலாறு -நெடுங்கட்டுரை

*—இராம.கி.*

## 1

சிலம்பின் "காட்சிக்காதை 163 ஆம் வரியில் வரும் 'ஆரிய மன்னர் ஈரைஞ்ஞூற்றுவர்க்கு' என்பதன் பொருளென்ன?" என்று ஒரு கேள்வி எழுந்தது: இதற்கானவிடை சற்றுநீளமானது. அதைச் சொல்லுமுன் சங்ககாலச் சேரர்வரலாற்றையும், அதற்குதவியாய் இணையத்திலுள்ள மகத அரசர் காலங்களையும் சற்று ஆழமாய்ப் பார்க்கவேண்டும்.



சிலப்பதிகாரக் காலத்தில் வடக்கே மகத அரசே பேரரசாய் இருந்தது. (என் "சிலம்பின் காலம்" நூலையும் படியுங்கள்.) மகதத்தோடு பொருதாதவன் அந்தக்காலத்தில் வடக்கே மேலெழ முடியாது. அல்லாவிடில் மகதத்திற்கடங்கிக் கப்பங்கட்டவேண்டும். தெற்கிருந்து படையெடுத்துப் போனவன் (இந்தப் படையெடுப்பை இதுவரை எந்த வடவரும் ஏற்றதில்லை. பாகதச் சான்றுகள் ஏதும் இதுவரை கிடைக்கவில்லை. வெறுமே "தமிழ் வாழ்க" என்று கூப்பாடு போடுவதிற் பயனில்லை. சிலப்பதிகாரத்தைச் சரியாய்ப் பொருத்தித் தேடவேண்டும். இல்லாவிட்டால், 5/6 ஆம் நூற்றாண்டுப் புதினம் என்று சொல்லித் திரியவேண்டும்) மகதத்தைச்

சண்டைக்கிழுக்காது தமிழன் போய்வந்தானென்பது ஒரு கட்டுக்கதையாகிவிடும் "இளங்கோ வடிகட்டிய பொய்சொல்கிறார்" என்று கருதவில்லையெனில், கதைக்காலம் மகதத்தோடு பொருந்த வேண்டும்.

கதையை 5, 6 ஆம் நூற்றாண்டிற்குத் தள்ளுகிறவர் வஞ்சிக்காண்டத்தையே மறுக்கிறார். "எல்லாமே கப்சா, இதுவொரு புதினம்" என்பார் ஒருநாளும் வஞ்சிக்காண்ட முகன்மை புரிந்தவர் இல்லையென்று பொருளாகும். அவர் தமிழரை இழிவுசெய்கிறாரென்பது இன்னொரு ஆழமானபொருள். அப்படிமறுக்கிறவர் "சேரன் யாரோடு போர்செய்திருப்பான்?" என்பதை ஆதாரத்தோடு சொல்லவேண்டும். இளங்கோவென்ற எழுத்தாளர் கற்பனைக்கதை சொல்லியிருந்தால், மதுரைக்காண்டத்தோடு முடிப்பதே சரியான உச்சக்கட்ட உத்தியாகும். அதற்கப்புறம் காதையில் ஓரிரு காட்சிகளைச் சொல்லி "சுபம்" என முடித்திருக்கலாம். (அப்படியே சிறுவயதில் இரவெலாம் நான் விழித்துபார்த்த 15 நாள் கண்ணகி கூத்துக்கள் நடைபெற்றன. இக்கூத்துகளை 3,4 முறை பார்த்திருக்கிறேன். கோவலன் கதையெனும் நாட்டுப்புறக் கூத்துப்பாட்டும் அப்படித்தானிருக்கும். வஞ்சிக்காண்டமிருக்காது.)

ஒருகதையை எங்கு முடிக்கவேண்டுமென்பதற்கு உளவியல் தொடர்பாய்க் கதையிலக்கணமுண்டு. அக்கதையிலக்கணம் மீறிச் சிலப்பதிகாரமுள்ளது. கண்ணகி பாண்டியனைப் பழிவாங்கியதும் மதுரையை எரித்ததும் சிலம்பின் முடிவல்ல. மதுரைக்காண்டத்தில் முடிவது சிலம்பு அணிகலனின் அதிகரிப்பால் வந்தது. வஞ்சிக்காண்டத்தில் முடிவது சிலம்பெனும் மலையரசின் அதிகாரம். அது வடக்கேபோய் வெற்றிகொண்டு தமிழகத்திற் தன்னைப் பேரரசனாய்க் காட்டிக்கொள்கிறது. அதனாற்றான் சிறைப்பிடித்த ஆரியவரசரை மற்றவேந்தருக்குக் காட்டச்சொல்கிறான். சிலம்பென்ற சொல்லிற்கு காப்பியத்தில் இருபொருளுண்டு. "இளங்கோ வஞ்சிக்காண்டத்தை ஏன் தன்நூலில் வைத்தான்? அதிலென்ன சொல்லவிழைகிறான்? உட்கருத்தென்ன? ஒரு காட்சி, காதை, காண்டம் நூலில் ஏன் வருகிறது?" என்பதே கட்டுக்கதைக்கும், காப்பியத்திற்குமான வேறுபாடு.

சிலம்பில் வரும் ஆரியவரசர் பெரும்பாலும் மகதத்திலும், மகத்தைச் சுற்றியுமிருந்தவரே. வடக்கென்றவுடன் நம்மையறியாது தில்லியையும், தில்லிக்கு வடமேற்கையுமே எண்ணிக் கொள்கிறோம். அது பிற்காலப்பார்வை. பழங்காலத்தில் வடக்கென்பது வாரணாசி, பாடலிபுத்தம் சுற்றிய பகுதிகளே. சங்ககாலத்திற் கங்கையே வடக்கின் வற்றாத ஊற்று பாடலிபுத்தத்தை தக்கசீலத்தோடு உத்தரப்பாதையும், தென்னாட்டோடு தக்கணப்பாதையும் கலிங்கத்தோடு கடற்கரைப்பாதையும் இணைத்தன. மூன்றாம்பாதை அக்காலத்தில் தமிழகத்தை இணைக்கவில்லை. பெரும்பாலான பயணங்கள், படையெடுப்புக்கள் உத்தர, தக்கணப்பாதைகளின் வழியே நடந்தன. இற்றை அவுரங்காபாதிற்குத் தெற்கே கோதாவரி வடகரைப் படித்தானத்தில்> பயித்தான்> பைத்தான்) தக்கணப்பாதை முடிந்தது. மோரியருக்கான தண்டல் நாயகராய் படித்தானத்திலிருந்து, பின்பு ஆளுநராகவும் மன்னராகவும் நூற்றுவர்கன்னர் (சாதவாகன்னர்) மாறினார். நூற்றுவர்/ சாத்துவருக்கு, நொறுக்குவரென்ற பொருளுண்டு. நூறென்ற எண்ணிக்கைப் பொருள் கிடையாது. சிலம்புக்காலத்தில் நூற்றுவர் கன்னரும், அவருக்கு வடக்கில் இருந்த மகதக் கனக அரசரும் வலியிழந்திருந்தார்.

மொழிபெயர்தேயக் கருநாடக, வேங்கடத்தின் (காடுவிரவிய வேகுங்கடத்தில் மக்கள் வதிவது மிகக்குறைவு) வழி தகடூர் ஊடே மூவேந்தர் நாட்டிற்கு தக்கணப்பாதையின் தொடர்ச்சி இருந்தது. Plus there was a standing Tamil army to protect the language changing country as per Maamuulanaar. மொழிபெயர்தேயத்தைத் "திராமிரசங்காத்தம் 1300 ஆண்டுகள் காப்பாற்றியதென்றும், தானே சங்காத்தத்தை உடைத்ததாயும்" கலிங்கக் காரவேலன் தன் கல்வெட்டிற்குறிப்பான். மொழிபெயர் தேயத்தை ஒட்டியதால் நூற்றுவர்கன்னர் நாணயத்தின் ஒருபக்கம் தமிழும், இன்னொரு பக்கம் பாகதமும் இருந்தது. நூற்றுவர்கன்னர் தாம் சுருங்கிய காலத்தில் ஆந்திர அமராவதிக்குத் தலைநகரை மாற்றிக்கொண்டார். நூற்றுவர்கன்னர் தொடங்கியது படித்தானம்; முடிந்தது அமராவதி. கன்னருக்குப்பின் படித்தானத்தில் கள அப்ரர்>களப்ரர் அரசேறினார். பின்னாளில் அவரே மூவேந்தரைத் தொலைத்தார். (களப்ரர் என்கிறோமே, அவர் இவர்தாம்.) சங்ககாலத்தில் தொண்டைநாட்டிற்கு மேல் கலிங்கம்வரை கடற்கரை

தவிர்த்திருந்தது தொண்டகக் காடு (>தண்டக ஆரண்யம்) எனவாயிற்று. பின் இக்காடழிந்து இற்றை ஆந்திரமானது. காடழித்த காரணத்தால் பல்லவருக்குக் காடவர்/ காடுவெட்டி என்ற பெயர்வந்தது.

தகடூரிலிருந்து வயநாடு வழியாகக் குடவஞ்சிக்கும், கொங்குவஞ்சி வழியாக உறையூருக்கும், பொதினி (பழனி) வழியாக மதுரைக்கும் பாதைகளிருந்தன. (இன்றும் பாதைகள் இப்படித்தான்.) குறிப்பிட்ட இக்கூட்டுச்சாலைகள் இருந்ததாலேயே அதியமான்கள் வடக்கே அறியப்பட்டார். காரணமின்றி அசோகன் சத்தியபுத்திரரைச் சொல்லவில்லை. மகதத்திலிருந்து தமிழகம் வர தகடூரின் அதியமானைத் தாண்டி வரமுடியாது. இன்று சிங்கப்பூரை மீறி இந்தியப்பெருங்கடலிலிருந்து பசிபிக்பெருங்கடலுக்குள் எந்தக்கப்பலாவது போகமுடியுமா? அதன் தடந்தகை இருப்பாற் (strategic existence) சிங்கப்பூர் பெரிதாகப் பேசப்படுகிறது. அப்படியேதான் தகடூரின் இருப்பு தமிழகத்திலிருந்து வடக்கே போவதற்கு இருந்தது.

(சங்கப்பாடல்களில் பாதிக்குமேல் பாலைத்திணைப் பாடல்கள். அவற்றிற் பெரும்பகுதி வணிகத்திற்போன செய்திகள்தான். வணிகரெல்லாம் எங்குதான் போனார்? முடிவில் எல்லாமே மகதத்திற்குத்தான். அதேபோல மகதத்திலிருந்தும் தமிழகம் வந்தார். அவருக்கு வேண்டிய பொன் (வடகொங்கிற்-பிற்காலத் தென்கருநாடகம்-கிடைத்தது. எவன் கொங்கைக்கவர்ந்தானோ அவனே தமிழரிற் பெருவேந்தன்.), மணிகள் (தென்கொங்கிற் கிடைத்தன. கொங்குவஞ்சி இதனாலேயே சிறப்புற்றது.), முத்து (நித்தில்>நிதி என்றசொல் முத்திலெழுந்தது. பாண்டிநாடு முத்திற்குப் பெயர்போனது), பவளம் (சோழநாட்டிற் கிடைத்தது.) இன்ன பிற செல்வங்கள் (குறிப்பாய்ச் செலாவணிச் சரக்குகள்-exchange goods) கிடைக்கவேண்டுமெனில், 2000 ஆண்டுகளுக்கு முன் தமிழகம் வராது முடியாது. எந்த நாடு செலாவணிச் சரக்குகளை அதிகம் கொண்டதோ, அதுவே அக்கால வணிகத்தில் வென்றது. மகதத்தைவிடச் சிறுபரப்பே கொள்ளினும், செலாவணிச் சரக்குகளால் தமிழர் அக்காலத்தில் தனிப்பெரும்நிலை கொண்டார். இவ்வணிகத்திற்குக் கொங்குவஞ்சியும், தகடூரும் முகன்மையாயிருந்தது உண்மைதான். அதையாரும் மறுக்கவில்லை. தொல்லியல் வெளிப்பாடுகள் அதைத்தான்

காட்டின. மணிகளுக்கும், மாழைகளுக்கும் கொங்குமண்டலம் பெயர்பெற்றது. அதைவைத்துச் "சேரர்தலைநகரே இங்குதான் இருந்தது" என்பது சற்று அதிகம். வானத்திற்கும் புவிக்குமாய் கோட்டைகட்ட முயல்வதாகும். கொங்குவஞ்சி என்றுமே குடவஞ்சிக்குக் கீழ்ப்பட்டிருந்தது. வேண்டுமென்றே கொங்குவஞ்சியைத் தூக்கிப்பிடிப்பவர் ஆய்வின்றிப் பேசுகிறார். (எவ்வளவு தான் பாண்டியர் மதுரையைப் பேசினாலும், கொற்கை தான் பாண்டியரின் தோற்றுவாய். கொற்கையை என்றும் விட்டுக்கொடுக்க மாட்டார்.)

(ஒவ்வொருவரும் தம் வாழிடங்களைத் தூக்கிப்பிடிப்பதற்காய் ஏரணத்தைத் தூக்கிக் கடாசுவது பொருளற்றது. "திருச்சியிலிருந்து மதுரைக்கு காரைக்குடி வழியேதான் எல்லோரும் போனார்" என்று நான் சொன்னால் பலருஞ் சிரிப்பார். விராலிமலை வழிதான் குறைத்தொலைவுப் பாதை என்பது உள்ளமை நடைமுறை. மக்கள் மதிப்பார்.) கொங்குவஞ்சி வாணிகத்தில் தகடூரோடு தொடர்புற்றது இயற்கையே. ஆனால் சிலம்பை ஆழப்படித்தால் குடவஞ்சியின் சிறப்புப் புரியும். (கொஞ்சம் பொறுக்கவேண்டும். இப்பொழுதுதானே 4,5 ஆண்டுகள் முன்னே தொல்லியலார் முசிறிப்பட்டணத்தைக் கண்டுபிடித்தார். அங்கிருந்து சிறுதொலைவிற் குடவஞ்சி கிடைத்துவிடும்.)

இனி மகதத்தின் பல்வேறு அரசர் காலங்களுக்கு வருவோம்.

அலெக்சாண்டர் இந்தியாவின்மேற் படையெடுத்தது பொ.உ.மு.327/326 என்பர். (இது ஒரு வரலாற்று முற்றைப் புள்ளி. இதைவைத்தே இந்தியவரலாற்றைக் கணிக்கிறார்.)

சந்திரகுத்த மோரியன் காலம் பொ.உ.மு.321 - 297 (இவனுக்கு முந்தைய நந்தர் காலத்தைக் குறிக்கும் சங்கப்பாடல்களும் உண்டு. குறிப்பாய் மாமூலனார் பாடல்கள். சங்க இலக்கியத்தை ஒழுங்காகப் பொருத்தாத காரணத்தால் சங்ககாலத் தமிழர் வரலாற்றை, இன்றுங்கூடத் தப்பும் தவறுமாய்ப் புரிந்துகொள்கிறோம். கமில் சுவலபில் கணிப்பிலிருந்து வெளியே வந்தாலொழிய இது புரியாது.)

பிந்துசார மோரியன் காலம் பொ.உ.மு. 297 - 273 (இவன்தான் தென்னகத்தின் மேல் படையெடுத்தவன். இவன் படையெடுப்பைப் பற்றிச் சுற்றிவளைத்துச் சங்கப்பாடல்கள் உண்டு. தமிழ் மூவேந்தரைத் தோற்கடிக்க முடியாமல் இவன் படைகள் திரும்பிப் போயின.)

தேவானாம்பியதசி அசோகன் காலம் பொ.உ.மு. 268 - 232 (இவன் ஆட்சிக்கு வருவதற்கு முன் 4 ஆண்டுகள் ஒரே குழப்பம் மகதநாடு வேந்தனில்லாது இருந்தது. கணக்கின்றித் தன் சோதரரைக் கொன்றே அசோகன் பட்டத்திற்குவந்தான். இந்தியவரலாற்றில் முகன்மையான மன்னன். தமிழ்மூவேந்தரின் இருப்பையும் அதியமான்களின் இருப்பையும் தன் கல்வெட்டுக்களிற் பதிவுசெய்தவன். இவன் செய்த கோத்தொழில் தமிழ்மூவேந்தரால் பாராட்டப்பட்டது போலும். ஏனெனில் தேவானாம்பிய தசி என்ற பட்டம் அப்படியே தமிழாக்கப் பட்டுச் சேரருக்கு முன்னொட்டாக்கப் பட்டதென்பார். மயிலை சீனி வேங்கடசாமியார். இமையவர அன்பனென்பது திரிந்து இமையவரம்பனாகிப் பின் ”இமையத்தை வரம்பாய்க் கொண்டவன்” என்று தவறாய்ப் புரிந்துகொள்ளப்பட்டது. அதேபோல; வானவரன்பனும் வானவரம்பனாகி ”வானத்தை வரம்பாய்க் கொண்டவன்” என்று தவறாய்ப் புரிந்துகொள்ளப்பட்டது.. இமையவரம்பனும், வானவரம்பனும் மாறிமாறிச் சேரருக்கு முன்னொட்டாயின. தேவானாம்பிய என்ற பாகதமுன்னொட்டை இலங்கையரசன் தீசனும் அப்படியே வைத்துக்கொண்டான். சேரரோ அதைத் தமிழ்ப்படுத்திச் சூடிக்கொண்டார். There must have been a mutual admiration society. வேத, சிவ, விண்ணவ நெறிகளும், வேதமறுப்புச் சமயங்களும், பல்வேறு மெய்யியல்களும் விரவிக் குடவஞ்சியில் சமயப்பொறை இருந்தது சிலம்பாலும் மேகலையாலும் தெரிகிறது. வேதமறுப்புச் சமயங்களை ஆய்ந்தாலொழிய தமிழர்வரலாறு புரிபடாது.)

தசரதன் காலம் பொ.உ.மு. 231 -224 (இவன் அசோகனின் முதல் மகனல்லன். அடுத்த மகன். அசோகனின் இரண்டாவது அரசி முதல் மகனைச் சதிதீட்டிக் கொன்றுவிடுவாள். எப்படி இராசேந்திர சோழனுக்கு அப்புறம் ஒவ்வொருமகனும் ஏதோ வகையில் கொல்லப்பட்டு சோழர் குடிவழியழிந்து தெலுங்குச் சோழராட்சி ஏற்பட்டதோ, அதே போல ஆழமான சூழ்ச்சி அசோகனின் மகன்களுக்கும் நடந்திருக்கிறது. இவ்வளவு புத்தம், செயினம்,

அற்றுவிகங்களுக்கு நடுவே இந்தவிதக் கொலைகளும் அசோகனுக்குப் பின் நடந்தன. வரலாறு மருமமானது.)

சம்பாதி காலம் பொ.உ.மு. 224 - 216 (இவனும் அசோகனின் மகன். தசரதன் இருக்கும்போதே இவன் ஒருபக்கம் ஆளுநனாய் இருந்து பின்னால் அரசப்பொறுப்பை ஏற்றுக்கொள்வான்.)

சலிசுகா காலம் பொ.உ.மு. 215 - 202 (இவன் சம்பாதியின் மகன்)
தேவ வர்மன் காலம் பொ.உ.மு.202-195
சடாதன்வன் காலம் பொ.உ.மு.195-187

பெருகதத்தன் காலம் பொ.உ.மு.187-185 (இவனைத்தான் சேனையதிபதி சுங்கமித்திரன் கொலைசெய்து தன்குடியை மகத அரசிலேற்றினான். இந்தப் பிரகதத்தனுக்குத் தான் பெரும்பாலும் கபிலர் குறிஞ்சிப்பாட்டைச் சொல்லியிருக்கலாமென ஊகிக்கிறோம். கபிலர் போன்றவர் ஒரு குறுநில மன்னனுக்காகக் குறிஞ்சிப்பாட்டை பாடினாரென்பது ஐயமாக உள்ளது. சேர, சோழ, பாண்டியருக்கு இணையான வேந்தர் அக்காலத்திற் சிலரே இருந்தார். மகதமே எல்லாவற்றிற்கும் தலைமையானது. அந்தப் பெருகதத்தனுக்குக் குறிஞ்சிப்பாட்டு சொல்லுவது கபிலருக்கு நன்மை பயக்குமல்லவா?)

இனிச் சுங்கருக்கு வருவோம்.

## 2

புஷ்யமித்ர சுங்கன் காலம் பொ.உ.மு. 185-149 (பெருகதத்த மோரியன் ஒரு படையணி வகுப்பைப் பார்த்துக்கொண்டிருந்தபோது, சூழ்ச்சியால் அவனைக் கொன்று, அவனிடம் சேனைத்தலைவனாயிருந்த புஷ்ய மித்திரன் ஆட்சிக்கு வந்தான். அவந்தியின் பெருமானர் குலத்தைச் சேர்ந்த இவன் தான் இந்தியாவில் வேதமறுப்புச் சமயங்களின் ஆளுமையைத் தடுத்து நிறுத்தி, வேதநெறிக்கு முன்னுரிமை கொடுத்து, மீண்டும் தழைக்க வைத்தவன். இவனையும், இவன் மகனையும் வேதநெறியார் சிறப்பாகவே

கருதியிருக்கவேண்டும். ஏனெனில் குப்தர் காலத்திய அரசவை இவரைப் போற்றியிருக்கிறது. புஷ்ய மித்ரன் காலத்தில் புத்தமதம் ”மத்தியதேசத்தில்” இல்லாது போய், வடமேற்கே இற்றை ஆப்கனித்தானுக்குத் துரத்தப்பட்டதென ஆய்வாளர் சொல்கிறார். ஆனால் அதேபொழுது வேதமறுப்புச் சமயங்களுக்கான ஆதரவை இவன் முற்றிலும் நிறுத்திவிடவில்லை. இந்த அரசனின் ஆளுமை நருமதையாறு வரைக்கும் இருந்தது.)

அக்னி மித்ரன் காலம் பொ.உ.மு. 149-141 (இவன் புஷ்ய மித்ரனின் மகன். வேதநெறியைத் தூக்கிப்பிடித்த பிற்காலக் குப்தர்களின் அவைசேர்ந்த காளிதாசர் எழுதிய ”மாளவிகாக்னிமித்ரம்” நாடகத்தின் நாயகன் இவனே. புஷ்ய மித்ரனின் நடவடிக்கைகளுக்கு இவனும் பொறுப்பானவன். வேதநெறிக்கு மறுமலர்ச்சி கொடுத்தவனென்பதால் இவன் காளிதாசனின் நாயகன் ஆனானோ, என்னவோ? )

வசுஜ்யேஷ்டன் காலம் பொ.உ.மு. 141-131
வசுமித்ரன் காலம் பொ.உ.மு. 131-124
பத்ரகன் காலம் பொ.உ.மு. 124-122
புலிந்தகன் காலம் பொ.உ.மு. 122-119

வஜ்ரமித்ர பாகபத்ரன் (இவன்காலத்தில் மகதம் ஆட்டங்கொள்ளத் தொடங்கியது. பாடலிபுத்தத்திற்கு மாறாய் விதிசாவுக்கு (Beznagar. இற்றை ம.பி. மாநிலத்தில் உள்ளது. இங்கே அசோக மோரியன் முதற்கொண்டு மகத இளவரசர் ஆட்சி புரிவார்.) தலைநகர் மாற்றப்பட்டது. மகதம் கொஞ்சங் கொஞ்சமாய்ச் சுருங்கியது. மகதப்பகுதிகளைக் கவர்ந்துகொள்ள கலிங்கர், நூற்றுவர்கன்னர், இந்தோ-சித்திய “சக” அரசரென்று பலரோடு சண்டைகள் தொடங்கிவிட்டன. இக்காலத்தில் பாணினியின் ”அட்ட அத்தியாயி” இலக்கணத்திற்கு பதஞ்சலி மாபாடிய (மகாபாஷ்ய) விரிவுரை எழுதினார். பிங்களர் செய்த சங்கத யாப்பிலக்கணமான சந்த சாற்றம் (சந்த சூத்ரம்) சுங்கர் கால முடிவில் பொ.உ.மு. முதல் நூற்றாண்டில் எழுந்திருக்கலாம். பாகபத்ரன் ஆட்சிமுடிவில் நூற்றுவர்கன்னர் மகதத்தைத் தாமே பிடித்துக் கொள்ள முயலத்தொடங்கிவிட்டார். மகதம் வலியிழந்தது இந்தியாவெங்கணும் அன்று தெரிந்திருக்கும். இந்நேரத்தில் சேரனும் வடக்கே படையெடுத்துப் போகத்

துறுதுறுத்தது இயற்கையே. இக்காலத்தில் தான் தன் தந்தையின் சார்பாக முதல்முறை வடக்கே சேரன் வந்துள்ளான். அவன் தாய் கங்கையில் முழுக்காட வந்ததாய்ச் சிலம்பின் காட்சிக்காதை 160-161 வரிகள் தெரிவிக்கும். சிலம்பில் 2 படையெடுப்புகளும் குறித்துக் காட்டப்படுகின்றன.

**கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்**
**எங்கோ மகளை யாட்டிய அந்நாள்"**

இங்கே கோமகள் என்றது இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகள் நற்சோணையை. அவள் கங்கையிலாடியது பெரும்பாலும் வாரணாசியாய் இருக்கும். இன்றும் தெற்கிலிருந்து அலகாபாத், கயை, வாரணாசி போயாடுவதில் தமிழர் பலரும் அளவற்ற ஆர்வங் கொள்கிறோமே? அது அன்றும் நடந்திருக்கலாம். சேரன் சிவநெறியாளன். விண்ணவப் பெருஞ்சோற்றை (ப்ரசாதம் என்று சங்கதப்படுத்துவர். அதையே சொல்லி நம் தமிழ்ப்பெயரை மறந்துவிட்டோம்.) தலையில் வாங்க மறுத்தவன். தோளிலேற்க ஒருப்பட்டவன். மகதக் குழப்பத்திற் தான்புகுந்து விளையாட முடியும் என்று சேரனுக்குத் தெரிந்த காரணத்தால் கண்ணகி கதையை தன் அரச முயற்சிக்குப் பயன்படுத்தினான். (வடக்கிலிருந்து intelligence information வந்ததும் வஞ்சிக்காண்டத்திற் சொல்லப்படும்.) There must have been an empire building politics with these expeditions. We should not be very naive to these aspects. Cheran was as intelligent as our modern leaders are.

தேவபூதி காலம் பொ.உ.மு. 83-73 (இவனே கடைசிச் சுங்க அரசன். அளவுக்கு மீறிய காமத்திலும், கேளிக்கையிலும் ஈடுபட்ட இந்த அரசனை இவனுடைய முதலமைச்சனான வாசுதேவக் கனகனே பின்னாற் கொன்றுவிடுவான். அதற்கப்புறம் கனகரே ஆட்சிசெய்வார். தேவபூதிக்குத் தனுத்ர பூதி என்ற பெயரும் இருந்திருக்கலாம். பாகதச் சான்றுகளைக் கொண்டு அதை உறுதி செய்யவேண்டும். "உத்தரன் விசித்திரன் உருத்திரன் பைரவன் சித்திரன் சிங்கன் தனுத்ரன் சிவேதன்" என ஆரியவரசர் பெயர்களைச் சிலப்பதிகாரஞ் சொல்லும். "இவற்றில் எவை இனக்குழுப்பெயர், எவை இயற்பெயர்?" என்று சொல்லமுடியவில்லை. ஆனால் "சிங்கன்

தனுத்ரன்" என்பது "சுங்கன் தனுத்ரனாய் இருக்குமோ?" என்ற ஐயம் கட்டாயமாய் எழுகிறது.

செங்குட்டுவன் பொ.உ.மு.80 இல் படையெடுத்து வரும்போது பெரும்பாலும் இவ்வரசனுடன் போர்புரிந்திருக்கலாம். மகதம் தமிழர்க்குப் பகைநாடு என்பதை இந்திரவிழவு ஊரெடுத்த காதையில் "மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன் பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண்டபமும்" என்ற வரிகள் தெளிவாக வெளிப்படுத்தும். அதற்கப்புறமே "யாரைநோக்கிச் செங்குட்டுவன் படை எடுத்திருப்பான்?" என்பது எனக்கு விளங்கியது. மகதம் பற்றிப் படிக்கத் தொடங்கினேன். ஒவ்வொரு கட்டமாய்ச் செருகி உராய்ந்துபார்க்க உள்ளிருக்கும் படம் விளங்கிற்று. செங்குட்டுவனின் படைபலம் தெரிந்து அவனைத் தம் கைக்குள் வைத்து அவன்மூலம் மகத அரசிற்கு ஊறுவிளைவித்துப் பின் தாம் கைப்பற்றிக்கொள்ள முற்பட்டே நூற்றுவர்கன்னர் செங்குட்டுவனுக்கு உதவியிருக்கிறார். "இமயத்திலிருந்து பத்தினிக்குக் கல்லெடுக்க நீங்கள் போகவேண்டுமா? நாங்கள் செய்யமாட்டோமோ?" என்பதெல்லாம் சரியான அரசதந்திரம் (tactics). தடந்தகை (strategy). தவிர நூற்றுவர்கன்னருக்கும் சேரருக்கும் நெடுநாள் உறவு இருந்திருக்கலாம். புறம் 2 இல் சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகனார் பாடியது, "ஈரைப்பதின்மரும் பொருதுகளத்தொழிய" என்பது பாரதப் போர்க்களத்தைக் குறிக்காது நூற்றுவர் கன்னர் போர்க்களத்தைக் குறித்திருக்கலாமோ? - என்ற ஐயப்பாடும் எனக்கு உண்டு.

தவிர, செங்குட்டுவன் படையெடுப்பின்போது பெயருக்கு தேவபூதி மகத அரசனாயிருந்து கட்டுப்பாடெலாம் முதலமைச்சனிடமே இருந்திருக்கலாம். சேரன் போரிறுதியில் பிடித்துப்போனது வசுதேவக் கனகனா, அன்றி அவன் தந்தையா என்பது தெரியவில்லை. ஆரியஅரசர் என்போர் மகதங் காக்க இவனுக்குப் பின்னிருந்தோராவர். அவர் ஆயிரம்பேர் என்பது ஒருவிதப் பேச்சுவழக்கு. ("இவனுக்குப் பின்னால் ஆயிரம்பேர் நின்றார் தெரியுமா?" என்று இன்றும் உரையாடலிற் சொல்கிறோமில்லையா? அதைப்போல் இதைக் கொள்ளவேண்டும். உறுதியான எண்ணிக்கையென்று கொள்ளக்கூடாது.)

(கனக அரச குடியினர், இவரைக் கனவர் என்றுஞ் சொல்லலாம். பொதுவாக வடவரின் பெயர் அப்படியேவா நமக்கு மட்டுப்படுகிறது? கன்வன் என்று பிராமியில் எழுதுவது கனவன் என்றே தமிழியிற் படிக்கப்படும். வகரமும் ககரமும் தமிழிற் போலிகள் நாவற்பழம் நாகற்பழம் ஆகிறதே? எனவே கனவன் கனகனாவது இயற்கையே.)

வசுதேவன் காலம் பொ.உ.மு.75-66 (விசயன், வசுதேவனென்று பெயர்வைப்பது மகாபாரதத் தாக்கத்தால் இயல்பாயிருந்தது. கனக அரசர் விண்ணவப் பெயரையே கொண்டிருந்தார். சிங்கள அரசன் விசயனின் மகன் வசுதேவன் என்பதையும் இங்கு எண்ணிப்பார்க்கவேண்டும். சிலம்பில் கனகன் விசயன் என்பது பாண்டியன் நெடுஞ்செழியன், சோழன் கரிகாலன், சேரன் செங்குட்டுவன் என்பதுபோல், இனக்குழுப்பெயர் முதலிலும், இயற்பெயர் முடிவிலும் வந்திருப்பதாய்க் கொள்ளவேண்டும். பல தமிழாசிரியர் இது புரியாது கனகன், விசயன் என்று இரண்டு பெயராகவே சொல்லித் தருவர். இதுவென்ன குப்பன், சுப்பன் போலவா? சேரன் ஒருவன், செங்குட்டுவன் இன்னொருவனா? சிறைப்பிடித்துவந்த ஆரிய அரசர் எல்லோரையும் கண்ணகி கோயில் குடமுழுக்கின் போது சேரன் விட்டுவிடுவான். எனவே அதற்கப்புறம் வசுதேவக் கனகனோ, அன்றி அவன் தந்தையோ வடக்கே விதிசா/பாடலிபுத்தம் போய் தேவபூதியைக் கொன்று கனக அரசை நிறுவ முயற்சி செய்திருக்கலாம்.

பாகதச் சான்றில்லாமல் சிலம்பாற் கொண்ட கருதுகோள்களை நிறுவிக்க இயலாது. சுங்க, கனக அரசரின் வரலாற்றைத் தேடிக்கொண்டிருக்கிறேன். இன்னுங் கிடைக்கவில்லை. பாகத நூல்கள் குறைந்தே ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படுகின்றன. சங்கத நூல்களே எங்குப் பார்த்தாலும் இழைகின்றன. மோரியர் வரலாறு எழுதினால், அதற்கப்புறம் குப்தர் வரலாற்றிற்கு, பொதுவான வரலாற்றாசிரியர் ஓடி விடுகிறார். இடையில் பெருத்த இடைவெளி யாருக்கும் தோன்றவில்லை. சங்ககால வரலாறு எழுதவேண்டுமானால் இந்த இடைவெளி பாகத வாயிலாய் நிரப்பப்படவேண்டும். அன்றேல் வேறு ஏதாவது சான்றுகள் கிடைக்கவேண்டும்.

பூமிமித்ரன் காலம் பொ.உ.மு.66-52
நாராயணன் காலம் பொ.உ.மு.52-40
சுசர்மன் காலம் பொ.உ.மு.40-30

[பஞ்சதந்திரம் எழுந்த காலம் இவன் காலமே. “சிலப்பதிகாரமும் பஞ்சதந்திரமும்” என்ற கட்டுரைத்தொடரை என் வலைப்பதிவிற் படியுங்கள். பஞ்சதந்திரத்தை வைத்தும் சிலம்பின் காலத்தைக் கீழிழுத்தால் தமிழர் வரலாறு “காலி” என்றெண்ணி திரு நாகசாமியும் அவர் சீடர்களும் முயல்கிறார் போலும். ”சிலம்பு 6 ஆம் நூற்றாண்டு நூல்” என்ற தன் கருத்தை வலியுறுத்தி, அவர்சொன்னார், இவர்சொன்னாரென வழக்கம்போல் இலக்கியக் காணிப்பை மட்டுமே தொகுத்துத் தற்குறிப்பேற்றஞ் செய்யாது ஏரண வரிதியோடு (with logical flow) ”இவ்விவற்றால் இப்படி, இதுபோல் அமைகிறதென்று” தானே அலசிச் சான்றுகள் கொடுத்து ஒரு கட்டுரையாக அது அமைய வேண்டும்.

இனி சேரர் குடிக்கும் காட்சிக்காதை 156-164 வரிகளுக்கும் வருவோம்.

## 3

முதலில் சேரர் குடியின் ஆதன் கிளையைப் பார்ப்போம் (செங்குட்டுவனைப் பின்னர் விரிவாய்ப் பார்ப்போம்).

சங்ககாலச் சேரரில் சுள்ளியம் பேரியாற்றங்கரையில் குட வஞ்சியில் (கொடுங்களூர்) ஆதன் குடியும், அமராவதி (ஆன்பொருநை) ஆற்றங்கரையில் கொங்கு வஞ்சியில் (கரூர்) இரும்பொறைக் குடியும் ஆட்சி புரிந்தார். குட வஞ்சி, கொங்கு வஞ்சியினுங் காலத்தால் முந்தையது. இக்கிளைகள் எப்பொழுது பிரிந்தன? தெரியாது. அதே பொழுது இப்பிரிவுகள் தமக்குள் இறுக்கங் கொண்டனவென்றுஞ் சொல்லமுடியாது. (இரும்பொறைப் பிரிவின் செல்வக் கடுங்கோவிற்கு வாழியாதன் என்ற பெயர்முடிவும் உண்டு.) நமக்குக் கிடைத்த பாடல்களின் படி ஆதன்களில் மூத்தவன் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன். (மாவலியாதன்/ மகாபலி, பெருகலாதன்/ ப்ரஹ்லாதன் என்ற

தொன்மக் கதையாரும் இவர் குடியினரே என்றுசிலர் சொல்வர்.) 2 கிளையினரின் ஆட்சிக் காலங்கள் பதிற்றுப்பத்துப் பதிகங்களால் அறியப்படும். ஒரு சேரன் காலத்தை ஏரணத்தோடு நிறுவினால், மற்றவர் நிலைப்புகளைப் பதிகச்செய்தியால் ஓரளவு சீர்ப்படுத்தலாம்.

பொ.உ.மு.80 இல் செங்குட்டுவன் வடபடையெடுப்பு நடந்ததென்று கொண்டு மற்ற சேரரின் காலத்தைச் சிலம்புக் கால ஆய்வின் மூலம் குறித்தேன்.

மணிகள், மாழைகள் (metals), மண்ணூறல்கள் (minerals) கிடைத்த கொங்குநாடு மூவேந்தரும் தொடர்ந்து பந்தாடிய மேட்டு நிலமாகும். கொங்கு நாட்டை வேளிராண்டு, மூவேந்தருக்கும் பொதுவாக இருந்த வரை ”த்ராமிரசங்காத்தம்” நீண்டகாலந் தொடர்ந்தது. என்றைக்குக் கொங்கு வேளிரிற் பெண்ணெடுத்து, மணவுறவு கொண்டாடிச் சேரர் தம்பக்கம் வளைத்தாரோ, அதன்பின் தமிழருள் உட்பகை பெரிதாகிப் போய் தமிழர் முன்னணி குலைந்தது. கலிங்கத்துக் காரவேலன் அந்நேரத்தில் ”பித்துண்டா” எனுங் கொங்குக் கருவூரைக் கைப்பற்றினான். அந்துவஞ்சேரல் இரும்பொறை காலத்தில் இது நடந்திருக்கலாம். கொங்குக்கருவூரை மீண்டும் சேரர் பிடித்திருக்கிறார். காரவேலனின் பாகதக் கல்வெட்டும், மாமூலனாரின் அகநானூறு 31 உம் ஆழ்ந்து பொருத்திப் பார்க்கவேண்டிய செய்திகளாகும். சங்கப்பாடல்களின் ஆய்வு ஆழப்படுகையில், சமகால ஆளுமைகளைப் பொருத்தி, உள்ளார்ந்த ஒத்திசைவை (internal consistensy) நாடுவதால் நான் செய்த காலமதிப்பீடு கடந்த 7,8 ஆண்டுகளாய்ச் சிறிது சிறிதாய் மாறிக் கொண்டேயுள்ளது. பதிற்றுப்பத்திலில்லாத சேரர் காலத்தை இன்னும் நான் பொருத்தவில்லை. கீழ்வரும் காலப் பிரிவுகளை ஒருவித முன்னீடுகளென்றே சொல்லலாம். எதிர்காலத்திற் சான்றுகள் வலுப்படும்போது மேலும் திருத்தங்கள் நடக்கலாம் (It has still not reached a definitive stage).

வானவரம்பன் பெருஞ்சோற்று உதியன் சேரலாதனின் காலம் பெரும்பாலும் பொ.உ.மு. 190 - 143 ஆகும். இவனை முரஞ்சியூர் முடிநாகராயர் புறம் 2 இல் பாடுவார். இவன் காலத்திலேயே அசோக மோரியனின் தாக்கம் சேரர்மேல் தொடங்கிவிட்டது. கூடவே சுங்கர்மேல் சேரருக்குக் கடுப்பிருந்தது

நாட்பட்ட கதையாகும். (ஐவரான) சுங்கருக்கும் நூற்றுவர்கன்னருக்கும் இடைநடந்த வஞ்சி/தும்பைப் போரிற் கன்னரின் பக்கம் சேரரிருந்தார். உதியன்சேரல் காலத்திருந்தே 2,3 தலைமுறைகள் இவ்வுறவு தொடர்ந்திருக்கலாம். சேரருக்கும் நூற்றுவர்கன்னருக்கும் இடையிருந்த நல்லுறவு சிலம்பாற் புரியும். என் ”புறநானூறு - 2 ஆம் பாட்டு” என்ற கட்டுரைத்தொடரையும் படியுங்கள்.

இப்பாட்டில் வரும் ஈரைம்பதின்மர், நூற்றுவர்கன்னர் தான். பலருஞ் சொல்வதுபோல் பாரதப்போரின் கௌரவரல்ல. புறம் 2 இல் வருஞ்செய்தியை கௌரவ - பாண்டவப் போராய்ச் சித்தரிப்பதை நான் ஒப்புபவனில்லை. அப்படிச்சொல்வது தேவையற்ற ”பௌராணிகப்” பார்வை. காலப் பொருத்தமின்றிக் கௌரவருக்குச் சேரர் பெருஞ்சோற்று மிகுபதங் கொடுத்தாரென்பது விழுமியங்கள் வழியாகவும் பொருந்தவில்லை. ”தம்நண்பருக்கானது தமக்கானது” போல் கன்னரின் தும்பைப்போர்த் தோல்விகளைச் சேரர்நினைத்து, போரிலிறந்தவருக்காகச் பெருஞ்சோற்றுமிகுபதம் வரையாது கொடுத்திருக்கலாம். கன்னரின் முன்னோருக்குப் படையலெடுத்து, ”சேரரும் அவரும் ஒரே குலம் போலத்தான்” என ஊருக்கேயுணர்த்திச் சேரன் நட்பும் சொந்தமுங் கொண்டாடுகிறான். “சேரனே! கன்னருக்காக நீ பரிந்து முன்வந்து பெருஞ்சோற்று மிகுபதம் கொடுத்தாயே? அவன் குலமும், உன்குலமும் ஒன்றெனப் பறைந்தாயே? உன் சிறப்பை என்னவென்று சொல்வோம்?” என்று முரஞ்சியூர் முடிநாகர் வியக்கிறார்.

உதியன்சேரலாதன் பொதினி ஆவியர்குலத்து வேண்மாள் நல்லினியை மணஞ்செய்தான். (இற்றைப்பழனியே பழம்பொதினி. அதனடிவாரத்தில் ஆவினன் குடியுள்ளது.) ஆவியர்குடியோடு சேரர்குடியினர் கொடிவழிதோறும் மணத்தொடர்பு கொண்டார். உதியனின் மகன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவான். இவனைக் குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்றுஞ்சொல்வர். (குடக்கோ என்று பெயர்வைத்துக் கொண்டு கொங்குவஞ்சியில் இவன் ஆண்டான் என்பது நம்பக்கூடியதாய் இல்லை.) இவன் காலம் பெரும்பாலும் பொ.உ.மு. 166 - 109. இவனுக்கு 2 மனைவியர். தன்தாய் நல்லினியின் சோதரனான வேளாவிக் கோமானின் (இவன்

மன்னனில்லை; வெறுங் கோமான்; கூட்டத் தலைவன்.) மூத்த மகள் பதுமன்தேவியை முதல் மனைவியாகப் பெற்றான். களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென 2 மக்கள் பிறந்தார். அடுத்தவள் ஞாயிற்றுச்சோழன் மகள் நற்சோணை. (=சோணாட்டுக்காரி; பொன்போன்றவள். சோணையெனும் பொன்னாறு மகதத்திலும், பொன்னி சோழநாட்டிலும் ஓடின. பொன்னிறத்திற்கும் சோழருக்குமான இனக்குழுத்தொடர்பை நாம் இன்னும் உணர்ந்தோமில்லை. அகம் 6-இன் 3,4 ஆம் அடிகளைப் பார்த்தால் ஐயை என்பது விதுப்பெயராயும், நற்சோணை பொதுப்பெயராயும் ஆகலாம்.) இவளுக்குப் பிறந்த செங்குட்டுவன் முந்தை இருவருக்கும் இடைப்பட்ட புதல்வன். இளங்கோவின் இருப்பு சிலம்பின் வரந்தருகாதை 171-183 வரிகளிலன்றி வேறெங்கும் தென்படவில்லை. அக்காதை இடைச்செருகலென நான் ஐயுறுவதால் இளங்கோ செங்குட்டுவனின் தம்பியென நம்பமுடியவில்லை. (நான் அப்படிக் கொள்ளவில்லை.)

**"வடவர் உட்கும் வான்தோய் வெல்கொடிக்**
**குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்**
**சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்"**

என்று பதிற்றுப்பத்தில் 5 ஆம் பத்தின் பதிகம் செங்குட்டுவனைக் குறிக்கும். மணக்கிள்ளி யார்? மருவல்= தழுவல், சேர்தல். ("மருவுகை" இந்தையிரோப்பிய மொழிகளுக்கும் -ஆங்கிலத்தில் marriage - போயிருக்கிறது.) மருமகன்/மகள் தழுவிச் சேர்த்துக்கொண்ட மகனும் மகளுமாவர். மருவற் பொருளில் இன்னொரு சொல் மணத்தலாகும். ஒருகுடும்பம் இன்னொன்றைத் தழுவி உறவுகொளும் நிகழ்வே மணமாகும். (அகம் 86-இன்படி மண்ணுதலெனும் மஞ்சள்நீராடலும். பூ,நெல் சொரிவதும், வாழ்த்தலுமே மணமாகும்.) மணமகனும் மணமகளும் பந்தங்கொண்ட மகனும் மகளுமாவர். மணமகன்/மணமகள் வீடு, மணவீடு/மருவீடு ஆகும். (சிவகங்கைப் பக்கம் மருவீடு என்ற சொல் உண்டு.) மணக்கிள்ளியின் பொருள் "சம்பந்தங் கொண்ட கிள்ளி" என்பது தான். மணக்கிள்ளியெனும் உறவுப்பெயரைப் பதிகம் பாடியோர் காரணம் புரியாது இயற்பெயராக்கி விட்டார். பதிகத்திற்கு புத்துரை

எழுதியோரும் இதை உணரவில்லை. சோழன் மணக்கிள்ளி(யின் வழி) நெடுஞ்சேரலாதற்கு ஈன்ற மகன்" என்றே மேலே யுள்ள அடியைப் புரிந்துகொள்ளவேண்டும்.

சேரரின் மணவீட்டைச் சேர்ந்தவன், ஐயை/நற்சோணையின் தந்தை, உறையூர்ச் சோழன் தித்தனாவான். யா, இருளைக்குறிக்கும் இற்றல்=போக்குதல்; யாயிற்றன் = இருளை இற்றுகிறவன்/போக்குகிறவன். யா>ஞா>நா திரிவில் யாயிற்றன் ஞாயிற்றனாவான். யாயிற்றன்>ஆயிற்றன்>ஆதிற்றன்> ஆதித்தன்> ஆதித்த என்பது வடபுலமொழிகளில் சூரியனைக்குறித்தது. தமிழில் ஆதித்தனின் முதற்குறை தித்தன் ஆகும். முதற்குறைப் பெயர்கள் சங்ககாலத் தமிழிற் பரவலாயுண்டு. தித்தனே பட்டமேறும் போது முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளியெனும் பெயர் பெறுவான். புறம் 13 இல் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், கொங்குக் கருவூரில் இவன் யானை மதங்கொண்டு தடுமாறியதை அந்தவஞ்சேரல் இரும்பொறைக்கு அடையாளங் காட்டுவார். செங்குட்டுவன் பாட்டனைத் திகழொளி ஞாயிற்றுச் சோழனென்று சிலம்பு புகலும். சமகால அரசரைப் பார்த்தாற் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி எனும் தித்தனே, செங்குட்டுவனின் தாத்தனான ஞாயிற்றுச் சோழனாவான்.

அதேபொழுது தித்தனின் மகன் பட்டஞ் சூடுமுன் வெளியன் எனப்படுவான் ஏதோகாரணத்தால் தித்தனுக்கும் வெளியனுக்கும் மனம்வேறாகி உறையூரை விட்டு விலகித் தந்தையின் வளநாட்டுத்துறையான கோடிக்கரையில் வீரவிளையாட்டு, இசை, நடனக் கூத்துகளென வெளியன் சிலகாலங்கழிப்பான். தித்தனுக்குப்பின், வேற்பல் தடக்கை பெருவிறற்கிள்ளி (பல்வேறு தடங்களில்/வழிகளில் வேல்வீசுந் திறன் கொண்ட கிள்ளி) என்றபெயரில், வெளியன் உறையூராண்டான். நெடுஞ்சேரலாதன் மைத்துனனும் செங்குட்டுவனின் தாய்மாமனும் தித்தன்வெளியனெனும் வேற்பல்தடக்கை பெருவிறற்கிள்ளியே ஆவான். சேரலாதனும் வெளியனும் ஒருவருக்கொருவர் முரணிச் சண்டையிட்டு போர்க்களத்தில் இறந்ததைக் கழாத்தலையார் பாடினார் (புறம் 62, 368). புறம் 62 இல் சொல்லப்படும் போர் மச்சான்-மைத்துனன் இடையெற்பட்டதாகும். பெருவிறற்கிள்ளிக்குப் பின் வளநாடு தடுமாறிப் பங்காளிச் சண்டைகூடி

செங்குட்டுவனே அதைத்தீர்த்து 9 அரசருடன் போரிட்டு மாமன்மகனைப் (குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் ஆகலாம்) பட்டமேற்றுவான். வஞ்சிக் காண்ட வழி இவ்வளவு பொருத்தங்களை உணர்ந்தபிறகாவது, சிலம்பைச் சங்கம்மருவிய காலமென்றும், 6 ஆம் நூற்றாண்டென்றுங் குழம்பாது ஒழியலாம்.

பல்யானைச் செல்கெழு குட்டுவன் காலம் பெரும்பாலும் பொ.உ.மு. 156 - 132. இவன் நெடுஞ்சேரலாதனின் தம்பி. வேந்தனாகாததால், வானவரம்பனெனும் பட்டமுங்கொள்ளாதவன். நெடுஞ்சேரலாதனே நெடுங்காலம் ஆண்டான். அண்ணன் தம்பிக்கிடையே மிகுந்த அகவை வேறுபாட்டிற்குக் காரணமில்லை. 25 ஆண்டுக் காலம் தம்பி இருந்ததால் அண்ணன் ஆட்சி நடந்தபோதே தம்பி இறந்திருக்கலாம். பதிற்றுப்பத்தைத்தவிர வேறெங்கினும் இவன்செய்திகள் குறைவு. பல்யானைச் செல்கெழுகுட்டுவனுக்கு அப்புறம் இளையரே ஆட்சியைக் கவனித்துக் கொண்டிருக்கலாம். (பொதுவாக வேந்தப்பொறுப்புக் கொண்டவரே நீண்டகாலம் ஆட்சிசெய்தார். அம்முறையில் நெடுஞ்சேரலாதனும், செங்குட்டுவனும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுமே இயல்பான முறையில் வேந்தனாகிறார். பல்யானைச் செல்கெழு குட்டுவனும், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலும் நீட்சிமுறையில் ஒன்றாகி, நார்முடிச்சேரல் மீக்குறைந்த காலம் வேந்தனாகியிருக்கிறான்.

அடுத்தது களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல். இவன்காலம் பொ.உ.மு. 131-107. இவன் இயற்பெயர் தெரியவில்லை. “களங்காய்க்கண்ணி நார்முடி” ஒருவகை முடியைக் குறிக்கும். நெடுஞ்சேரலாதனின் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் இறந்தபின்னால், மூத்தாள்மகனுக்கும், இளையாள் மகனுக்கும் சமகாலத்தில் நெடுஞ்சேரலாதன் இளவரசுப்பட்டஞ் சூட்டியிருக்கவேண்டும். இந்த நாட்பட்ட பட்டஞ் சூடலால், நெடுஞ்சேரலாதனுக்கு அப்புறம் நார்முடிச்சேரல் வானவரம்பனென்ற பட்டஞ் சூடி அரசுகட்டிலேறியிருக்கலாம். இவனுக்கு இன்னொருபெயரும் இருந்திருக்கலாமென்று ஊகிக்கிறோம்.

புறம் 62 ஆம் பாட்டில் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் வளநாட்டு வேற்பல் தடக்கைப் பெருவிறற் கிள்ளியும், பொருதுகையில் இருவரும் இறந்து பட்டதாய்க் கழாத்தலையார் சொல்வார். அதேபொழுது புறம் 65 ஆம் பாட்டில் நாகநாட்டுக் கரிகால்வளவன் [பெரும்பாலும் இரண்டாம் கரிகாலன். முதற்கரிகாலன் கி.மு.462 இல் மகதத்தின்மேற் படையெடுத்ததைச் சிலம்பாலறிவோம். முதற்கரிகாலனையும், அடுத்தவனையும் குழப்பித் தமிழாசிரியர் தடுமாறுகிறார்.] வெற்றி பெற்றதையும், பெருஞ்சேரலாதன் வடக்கிருந்ததையும் சொல்வார். எனவே நெடுஞ்சேரலாதன் வேறு, பெருஞ்சேரலாதன் வேறு. ஆழ ஆய்ந்தால் 62 ஆம் பாட்டில் இறந்ததாய் விவரிக்கப்படுபவன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனென விளங்கும். அப்படியெனில் 65 ஆம் பாட்டில் வரும் பெருஞ்சேரலாதன் யார்? .

நார்முடிச்சேரல் வாகைப்பெருந்துறையில் நன்னனை வெற்றிகொண்டது பதிற்றுப்பத்தில் பெருஞ்செயலாய்ச் சொல்லப்பெறும். "வாகைப் பெருந்துறைச் சேரலாதன்" என்ற கூற்றே, "பெருஞ்சேரலாதன்" பெயருக்கு விளிகொடுத்ததாகலாம். அதைவைத்துப் பார்த்தால், கி.மு.131-107 என்ற இடைப்பகுதியில் அண்ணனைப் பெருஞ்சேரலாதனென்றும் நடுத்தம்பியைக் குட்டுவச் (=சிறிய) சேரலாதனென்றும், கடைத்தம்பியை ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்றும் அழைத்திருக்கலாம். பெரும்பாலும் நார்முடிச்சேரலே பெருஞ்சேரலாதனாக வாய்ப்புண்டு. இவ்விளக்கத்தோடு புறநானூற்றில் சோழன் கரிகாற் பெருவளத்தானை வெண்ணிக்குயத்தியார் பாடிய 66ஆம் பாட்டைப் பார்க்கலாம். இப்பாட்டில் கரிகால் வளவன் பெயர் வெளிப்பட வரும். பெருஞ்சேரலாதனைப் பெயர் சொல்லாமற் குறிப்பு வரும்.

செங்குட்டுவனுக்குமுன் அவன்தம்பி வானவரம்பன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பார்ப்போம். ஆடுகோட்பாடு என்பதற்குப் பதிற்றுப்பத்தின் பதிகம் "நெடுந்தொலைவுள்ள தொண்டகக் காட்டினுள் பகைவர் கொண்டுபோன வருடைக் (ஆடு) கூட்டத்தைப் பெருமுயற்சியால் தொண்டித்துறைக்குத் திரும்பக் கொண்டுவந்தவனெ"னப் பொருள்சொல்லும். பழங்காலப்போர்களில் ஆக்களைக் கவர்வதை வெட்சித்திணையென்றும், அவற்றை மீட்டுவருவதைக் கரந்தைத்திணையென்றும் சொல்வர். இப்போரை ஆகோட் பூசலென்றுஞ் சொல்வதுண்டு. அதேபோல் ஆடுகோட் பூசலுமுண்டு.

தொல்காப்பியர் கரந்தையை வெட்சிக்குள் ஒரு பகுதியாகவே சொல்வார். அதுபோல் ஆடுகோள் மீட்பும் ஆடுகோட்பாட்டின் பகுதியாய்க் கொண்டால் இச்சேரலாதனின் சிறப்புப் புரியும்.

பெரும்பாலும் இவன்காலம் பொ.உ.மு. 106 - 75 ஆகும். செங்குட்டுவன் கங்கைக்கரை போகிய செயல் பதிற்றுப்பத்தின் 4 ஆம் பத்தில் வாராது பதிகத்தில் மட்டுமே வரும். எனவே கண்ணகிக்குக் கல்லெடுத்தது குட்டுவன் கடைசிக்காலத்தில் நடந்திருக்கலாம். செங்குட்டுவனுக்கப்புறம் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பட்டத்திற்கு வந்திருக்கிறான். அதுவுமல்லாது வானவரம்பனென்ற பட்டமும் சூடுவான் அவன் வேந்தனானதற்கு அதுவே அடையாளம். அண்ணனுக்கப்புறம் பட்டத்திற்கு வந்ததால் பெரும்பாலும் சிலப்பதிகாரம் இவனுடைய அரசவையில் தான் அரங்கேறியிருக்க வாய்ப்புண்டு. செங்குட்டுவனின் மகன் குட்டுவன் சேரல் (இயற்பெயர் தெரியாது) பற்றிய விவரம் தெரியவில்லை.

சேரர்குடியின் இரும்பொறைக் கிளைக்குப் போவதற்குமுன் விட்டுப்போன வேறொரு செய்தியைச் சொல்லவேண்டும். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு இருந்த ஆட்டனத்தியெனும் இன்னொரு பாகம். ஆடுவதில் பெருந்திறன் பெற்றவன் ஆட்டனத்தி. செந்நிறத்தால், அத்தியெனும் விளிப்பெயரும் பெற்றான். (அத்து= சிவப்பு.. ஒன்றுவிட்ட இவன் செங்குட்டுவன் என்றாரோ?) ஆதன்குடியைச் சேர்ந்த நெடுஞ்சேரலாதன் வளநாட்டிற் பெண்ணெடுத்தான். அவன் மகன் நாகநாட்டில் பெண்ணெடுத்தான். பெரும்பாலும் இவனே 2 ஆம் கரிகாலன் மகள் ஆதிமந்தியை மணந்தவனாவான். ஆட்டனத்தி ஆதிமந்தி காதலைச் சங்க இலக்கியம் பரவலாய்ச் சொல்லும். பரணரும் பாடுவார். நம்மைக் குடையும் ஒரே செய்தி. தம்பியின் மாமனோடா (நார்முடிச் சேரல் எனும்) பெருஞ்சேரலாதன் சண்டையிட்டு உண்ணா நோன்பிருந்தான்? பெரிதும் வியப்பளிக்கிறது. என் செய்வது? சேரரும் சோழரும் பலமுறை தமக்குள் பெண்கொடுத்துப் பெண்வாங்கியிருக்கிறார். அதேபொழுது ஒருவருக்கு ஒருவர் முரணிப் பொருதியுமிருக்கிறார். உறவுக்குள் மணஞ்செய்வதும் பின் மாமன், மச்சான், மைத்துனன் என்று சண்டையிடுவதும் தமிழர் மரபில் நெடுங்காலம் தொடர்ந்து நடைபெறுவதாயிற்றே?

# 4

இனி இரும்பொறைக்கிளைக்கு வருவோம். கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறைதான் இக்கிளையின் மூத்தவன். இவனை நரிவெரூஉத்தலையார் புறம் 5 இல் பாடுவார். இவன் எந்தக் காலமெனத் தெரியவில்லை. "கருவூரேறிய" என்பதால் இவனுக்கு முன் சேரர் கருவூரில் இல்லாதது தெரியும் (சங்ககாலமென்றாலே கொங்குவஞ்சியை வலிந்திழுப்போருக்குத்தான் புரியமாட்டேனென்கிறது.) அடுத்து அந்துவன் சேரல் இரும்பொறை. இவன் காலம் பெரும்பாலும் பொ.உ.மு. 190-147. உதியஞ்சேரலுக்கு இவன் பங்காளி. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் அந்துவஞ் சேரலின் மாடத்திலிருந்த போது கருவூர் அரசவீதியில் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளியின் யானை மதம்பிடித்துத் தடுமாறியதை அடையாளங் காட்டி விவரிப்பார். அந்துவன்மனைவி பெரும்பாலும் வல்வில் ஓரியின் சோதரி ஆவாள். ஏழாம்பத்துப் பதிகத்தில் "ஒருதந்தை ஈன்றமகள் பொறையன் பெருந்தேவி" எனவரும். பலரும் ஒருதந்தையை அடையாளங்காண்பதிற் சரவற்படுவர். பெருமுயற்சிக்கப்புறம் அது விளங்கியது.

தமிழில் உல்>உரு>உரம் என்பது வலிமையைக் குறிக்கும். உரு>ஒரு>ஒருதல், வலியுறுதலைக்குறிக்கும். புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம், யானை, பன்றி, எருமை (தொல்.பொருள் 590, 591, 592) போன்ற வலியுள்ள ஆண்விலங்குகளின் பொதுப்பெயரை ஒருத்தல்/ஓரி என்று குறிப்பார். வலியுள்ள ஆண்மகனுக்கும் ஒருத்து, ஓரிப் பெயர்களை இட்டிருக்கிறார். அப்படியிடும் போது ஒருத்தின் அந்தை ஒருத்தந்தை, ஒரியின் அந்தை ஓரியந்தை என்று அமைவர். இரு சொற்களும் பிணைந்து ஒருதந்தை எனவுமாகலாம். சாத்து அந்தை = சாத்தந்தை, கொற்று அந்தை = கொற்றந்தை, பூது அந்தை = பூதந்தை என்ற பெயர்கள் அமைவதுபோல் இதைக் கொள்ளலாம். ஆக ஒருதந்தையின் மகளை அந்துவனுக்குக் கட்டிவைத்தால் கொல்லிமலை தம் உரிமைக்குள் வருமென்று சேரர்

நினைத்தார். அது நடக்கவில்லை. பின்னால் மலையமான் திருமுடிக்காரியோடு கூட்டுச்சேர்ந்து ஓரியைத் தோற்கடித்துக் கொல்லியை இணைப்பார்.

"வேளிரைத் தொலைத்து நிலஞ்சேர்க்கும் அரசியலை" மூவேந்தர் தொடர்ந்து செய்தார். மணவுறவும், இல்லையேல் போர்ச்செயலும் தொடர்ந்து பயன் பட்டன. சங்ககால முடிவில் கொஞ்சங் கொஞ்சமாய் வேளிர் ஒழிக்கப்பட்டார் (Eventually the segmentary states were unified into 3 large states) . சங்க இலக்கியம் படிக்கையில் வரலாற்றுவரிதியாய் இதையுணரலாம். பொ.உ.மு. 250 - 75 கால அளவில் இவ்வாட்சி மாற்றங்கள் நடந்தன. இனக்குழுவரலாற்றில் சங்க இலக்கியத்தின் உச்சக்கட்ட வெளிப்பாடு இக்காலத்திற்றான் எழுந்தது. இதற்குமுன் பொ.உ.மு. 600-250 வரையும், இதற்குப்பின் பொ.உ.மு.75 - பொ.உ.150 வரையும் சங்க இலக்கியம் விரவினாலும், உச்சக்கட்டம் நடுவிலிருந்த காலந்தான்.

[. . . இப்புரிதலை அடையாமற் செய்வதற்கே பொ.உ. 5, 6 ஆம் நூற்றாண்டு என்று சிலர் குழப்பியடிக்கிறார். குறைத் தொன்மங் கொண்ட secular literature ஐ உணரவிடாது குழப்புவதுங் கூட ஒருவித நிகழ்ப்புத் (agenda) தான். இந்த நிகழ்ப்பிற்குள் பல தமிழாசிரியரும் சிக்கிக் கொண்டார். நிகழ்ப்புக் கொண்டோர், மோரியர் பங்களிப்பையும் குறைத்தே பேசினார். குப்தரையே தூக்கி வைத்தார். தொல்லியல் செய்திகள் இவற்றைக் குப்புறத் தள்ளி மோரியர் பங்கை உணரவைத்தன. தமிழர்ப் பங்கும் வெளிப்படும். கீழடி, பொருந்தல், கொடுமணம், பட்டணம் போன்றவை தொடர்ந்தால்...... இந்த ஆய்வுகள் நடைபெறாது தடுக்கவே நிகழ்ப்பாளர் முயல்கிறார்.]

அடுத்துச் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன் காலத்திற்கு வருவோம் இது பெரும்பாலும் பொ.உ.மு. 164-140 ஆகும். அந்துவனுக்கும், ஒருதந்தை மகளான பொறையன் பெருந் தேவிக்கும் பிறந்தவன். தவிர, நெடுஞ்சேரலாதன் மனைவியின் தங்கையான சிறிய பதுமன்தேவியை மணந்தவன். எனவே செல்வக்கடுங்கோ நெடுஞ்சேரலாதனுக்குத் தந்தைவழியில் ஒன்றுவிட்ட தம்பியும், மனைவிவழியில் சகலையும் ஆவான். குடவஞ்சியில் நெடுஞ்சேரலாதனுக்கு

இளையனாய் இவன் வளர்கையில், கொங்குக்கருவூரின் மேல் காரவேலன் படையெடுப்பு நடந்திருக்கலாம். அப்படையெடுப்பு ஒருவித வஞ்சிப்போர். உழிஞைப்போரல்ல. வயதானபின் சேரலப் பூழிநாட்டிற் சிலகாலமிருந்த வாழியாதன், அந்துவன்சேரலுக்குத் துணையாய் கொங்குக்கருவூருக்கு நகர்ந்தான். வேள்பாரி இறந்த பிறகு கபிலர் வாழியாதனிடம் பரிசில் பெற்றிருக்கிறார். தமிழரல்லா இரு அரசரோடு உழிஞைப் போர் நடத்தி ஏராளமான பொருள்களை இவன் கொள்ளையடித்ததை

**சிறியிலை உழிஞைத் தெரியல் சூடிக்**
**கொண்டி மிகைப்படத் தண்டமிழ் செறித்துக்**
**குன்றுநிலை தளர்க்கும் உருமிற் சீறி**
**ஒருமுற்று இருவர் ஓட்டிய ஒள்வாள்**
**செருமிகு தானை வெல்போ ரோயே**

என்று ஏழாம்பத்தின் 3-ஆம் பாட்டில் கபிலர் சொல்வார். இவ்விரு அரசர் யார்? தெரியவில்லை. ஒருவேளை வாழியாதன் தந்தைகாலத்தில் கரூரைக் காரவேலன் சூறையாடியதற்குப் பழிவாங்கும் ...முயற்சியை இது குறிக்குமோ? ஏதோ மருமம். மொத்தத்தில் வாழியாதன், அவன் மகன், பேரன் ஆகிய மூவரும் நெடுஞ்சேரலாதனையும், செங்குட்டுவனையும் பார்க்கக் குறைந்தகாலமே ஆண்டார். ஆனாற் சேரர்குடிக்கு பெரிய அடித்தளம் போட்டார். இம்மூவரைப் பற்றிய விவரம் இலக்கியத்திலன்றி வேறு முறையிலும் உறுதி செய்யப்பட்டது புகளூர்க் கல்வெட்டின் மூலமாகும்.

**முதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறைய**
**கோ ஆதன் சேல்லிரும்பொறை மகன்**
**பெருங்கடுங்கோன் மகன் [இ]ளங்**
**கடுங்கோ [இ]ளங்கோ ஆக அறுத்த கல்**

என்றுவரும் புகளூர்க்கல்வெட்டில் கோ ஆதன் சேல்லிரும்பொறை என்பது (செல்வக்கடுங்)கோ (வாழி)ஆதன் சே(ர)ல்லிரும்பொறை குறித்தது.

பெருங் கடுங்கோன் என்பது (தகடூர் எறிந்த) பெருஞ்சேரல் இரும்பொறையையும், இளங்கடுங்கோ என்பது (குடக்கோ) இளஞ்சேரல் இரும்பொறையையுங் குறிக்கும். ஆகச் சங்ககாலமென்பது கற்பனையில்லை. [. . . "சங்க இலக்கியமென்பது ரூம் போட்டு யோசித்து 7,8 பண்டிதர் 9 ஆம் நூற்றாண்டிற்செய்த பெரிய ஏமாற்று" என்பார் பேரா. ஹெர்மன் தீக்கன். (இதே வார்த்தைகள் இல்லெனினும் பொருள் அதே). அதேபோற்றான் "சிலம்பு கற்பனைப்புதினம். 6 ஆம் நூற்றாண்டில் ரூம் போட்டுயோசித்தார்" என்று திரு.நாகசாமியும், திரு. திரு.நா.கணேசனுஞ் சொல்கிறார்கள். மொத்தத்தில் தமிழர் ஏமாற்றுப் பேர்வழிகளென்று இவர்கள் சொல்கிறார்கள். தேமேயென்று நாமுங் கேட்டுக்கொண்டிருக்கிறோம்.]

"இளங்கடுங்கோ இளங்கோவாக அறுத்த கல்" என்பதால் கல்வெட்டுக்காலம் பொ.உ.மு. 122 க்கு அருகிலிருக்கும். ஆனால் திரு. ஐராவதம் மகாதேவனோ பொ.உ. 3 ஆம் நூற்றாண்டென்பார். பொதுவாகத் திரு.ஐராவதம் மகாதேவனுக்கும், மற்ற கல்வெட்டாய்வாளருக்கும் சங்ககாலக் கல்வெட்டுக்களில் 2.3 நூற்றாண்டுகள் வேறுபாடுண்டு. பொருந்தல் ஆய்விற்கு அப்புறம் தான் மகாதேவனிடம் சில மாற்றங்கள் தென்படுகிறது. ஆனால் நிகழ்ப்பாளர் மகாதேவனின் பழைய கூற்றையே பிடித்துக்கொண்டு தொங்குவர். அது அவர்களுக்கு ஏந்து இல்லையா?

அடுத்து வருவது வாழியாதன் மகன் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை. இவன் காலம் பெரும்பாலும் பொ.உ.மு. 139-123. இவனே சங்க இலக்கியத்தின் பாலைபாடிய பெருங்கடுங்கோ என்பர். இவனும் தன் தாத்தன், தந்தையின் வழியொட்டி வேளிரை ஒடுக்குவதில் கவனஞ் செலுத்தினான். குறிப்பாக தகடூர் அதியமான்களைச் சாய்த்ததில் இவனுக்குப் பெரும் பங்குண்டு. அசோகன் காலத்தில் சேர, சோழ, பாண்டிய மூவேந்தரோடு, தக்கணப் பாதையின் காணிப்பரான (Supervisor) அதியமான்களைத் "சத்தியபுதோ" என்று குறித்திருப்பார். இத்தனைக்கும் அதியர் சேரரின் ஒன்றுவிட்ட பங்காளி. ஆயினும் தனியிருப்பை உறுதிசெய்தவர். அதிகை ஊரிலிருந்து குடிபெயர்ந்ததால் அதியமான் எனப்பட்டார். சேரரின் கிளை என்பதால், சேரரின் கண்ணியும் தாரும் அதியருக்கு அடையாளம் ஆகின. இவரே கரும்பைத் தமிழகத்துள் கொண்டுவந்தாரென்ற தொன்மமுமுண்டு.

மலையமான் திருமுடிக்காரியோடு போரிட்டு திருக்கோவிலூரை நெடுமானஞ்சி கைப்பற்றியதாலும், வேறேதோ காரணத்தாலும், அதியமானுக்கும் சேரருக்கும் முரணேற்பட்டு களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் அதியமான் நெடுமிடலோடு போரிட்டு அவனைச் சாய்ப்பான். இச்செய்தி நாலாம்பத்து 2 ஆம் பாடலில் பதியப்பெறும். பின் நெடுமிடலின் மகன் அஞ்சியோடும் சேரர்பகை தொடரும் போர்த் தளவாடங்கள் குறைந்ததால் கோட்டைக்குள் நெடுமானஞ்சி அடைந்துகிடந்து, பின் உழிஞைப்போர் நீண்டதால் வேறுவழியின்றி வெளிவந்து, வஞ்சிப்போராய் மாறும். பெருஞ்சேரல் இரும்பொறையுடன் போருடற்றி நெடுமானஞ்சி உயிர்துறப்பான். இச்செய்திகள் ”தகடூர்யாத்திரை”யில் பதிவு செய்யப்பட்டதாம். ஆனால் உ.வே.சா.விற்கு இந்நூல் கிடைக்கவில்லை, அங்கும் இங்குமாய் 56 பாடல்களே கிடைத்தன. அவற்றில் ஒருபாடல் நமக்குச் செய்தி பகர்கிறது.

**கால வெகுளிப் பொறைய!கேள் நும்பியைச்**
**சாலுந் துணையுங் கழறிச் சிறியதோர்**
**கோல்கொண்டு மேற்சேரல் வேண்டா வதுகண்டாய்**
**நூல்கண்டார் கண்ட நெறிசு.**

என்ற பாட்டின் மூலம் பெருஞ்சேரல் இரும்பொறைக்கு ஒருதம்பி இருந்த செய்தி தெரியும். இதற்குச் சான்றாய், குட்டுவன் (=சிறியவன்) இரும்பொறை என்பவனையே இளஞ்சேரல் இரும்பொறையின் தந்தையாய் ஒன்பதாம் பத்தின் பதிகம் அடையாளங் காட்டும். மேலுள்ள கல்வெட்டு, தகடூர் யாத்திரைப் பாட்டு, ஒன்பதாம் பத்தின் பதிகம் ஆகிய மூன்றையும் பொருத்திப் பார்த்தால், இளஞ்சேரல் இரும்பொறை, பெருஞ்சேரல் இரும்பொறையின் தத்துப் புதல்வன் போலிருக்கிறது. அவனுடைய இயல்பான தந்தை குட்டுவன்சேரல் இரும்பொறையே.

இன்னொரு செய்தி சேரநாட்டின் தோல்வினைஞரான படுமரத்து மோசிகீரனார் பற்றியது. பெருஞ்சேரல் இரும்பொறையின் சிறப்பைக் கூறுவது. புறம் 50 இல் “மன்னா! அலங்காரஞ்செய்து உழிஞைப் போருக்குப்போய் வெற்றிபெற்று மண்ணுமங்கலஞ் செய்து வரும் முரசமெனில், நான் சேக்கையில் ஏறியிரேன். முரசம் பேணவந்தநான் மிகுந்த அசதியால்

கட்டிலிலேறி அமர்ந்துவிட்டேன். ஆயினும் உன்வீரர் குற்றமாய்க்கொண்டு உன்னிடம் உரைத்திருக்கிறார், நீயோ பெருந்தன்மையோடு அதைப் பொருட்படுத்தாது களைப்புத்தீரக் கவரிவீசிச் சிறப்புச்செய்தாய். முரசைப்பேணும் செருமார் வேலை மட்டுமல்ல, நற்றமிழும் எனக்குத் தெரியுமென நீ பாராட்டினாய்! உன்செயல் புகழவேண்டியதே? - என்று சொல்வார் (மோசிகீரனாரென்ற என் கட்டுரைத்தொடரையும் படியுங்கள்).

அடுத்தது குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை. இவன் காலம் பெரும்பாலும் பொ.உ.மு. 122-107 ஆகும். குறைந்த காலமே ஆட்சி செய்திருக்கிறான். இவனே மருதம்பாடிய இளங்கடுங்கோ என்பர். குட்டுவஞ்சேரல் இரும்பொறைக்கும், மையூர்கிழானின் (இற்றை மைசூரைச் சேர்ந்த பெருஞ்செல்வந்தன். அரசனல்லன்) வேண்மகள் (வேளிர் மகள்) அந்துவஞ் செள்ளைக்கும் (செள்ளை இயற்பெயர், அந்துவன் பெரும்பாலும் மையூர்கிழானின் பெயராகலாம்.) பிறந்தவன். (வேந்தரென்பார், "அரசர், மன்னர், வேந்தரில்" மட்டுமல்லாது கிழாரிலும் பெண்ணெடுப்பார் போலும்.) மையூர் கிழானான இவன் தாத்தனே இவன் அமைச்சனாய் இருந்துள்ளான். புரோகிதனை விடவும் உயர்வாய் இளஞ்சேரல் இரும்பொறை இவ்வமைச்சனைக் கருதினான்.

இந்த இரும்பொறை தம்மை எதிர்த்த இருவேந்தரையும், விச்சிக்கோவையும் வீழ்த்தினான். இவன் காலத்தில் செங்குட்டுவன் தாய்மாமனான வேற்பல் தடக்கைப் பெருவிறற்கிள்ளி நெடுஞ்சேரலாதனோடு பொருதி இறந்ததன்பின், சோழவளநாட்டில் பங்காளிச்சண்டை பெருகியது. உறையூர்மணிமுடிக்குப் பலரும் உரிமைகொண்டாடினார். அதிலொருவன் பொத்தியாண்ட பெருஞ்சோழன். (பெருஞ்சோழன் என்பது பொதுவான பெயர். விதப்பான பெயரன்று. பல உரையாசிரியரும், தமிழாசிரியரும் இவனைக் கோப்பெருஞ்சோழனோடு குழம்பித்தவிப்பதை என்னால் ஏற்கவியலாது. கோப்பெருஞ்சோழன் முற்றிலும் வேறுகாலத்தவன். இன்னொரிடத்தில் விளக்குவேன்.) இளஞ்சேரல் இரும்பொறை பொத்திச் சோழனையும், வித்தைகளில் வல்லவனான பழையன் மாறனையும் (இவன் பாண்டியருக்குக் கீழ் இருந்த குறுநில மன்னனாகலாம்.) தோற்கடித்து ஏராளம் பொருள்களைக் கவர்ந்து பலருக்கும் பிரித்துக் கொடுத்து உதவினான். (இளஞ்சேரல்

இரும்பொறைக்கப்புறம் சோழரிடையே நடந்த பங்காளிச் சண்டையை முற்றிலும் முடிவிற்குக் கொண்டுவந்தவன் சிலம்பின்படி செங்குட்டுவனேயாவான்.).

தவிரக் கொங்குவஞ்சியில் சதுக்கபூதத்தை நிறுவிச் சாந்திவேண்டி, இளஞ்சேரல் இரும்பொறை வழிபாடுகள் நடத்தினானாம் (சாந்திசெய்தலென்பது குறிப்பிட்ட படையல்கள்மூலம் வழிபாடு செய்தலாகும். சபரிமலை ஐயப்பன் கோயிலில் மேல்சாந்தி, கீழ்சாந்தி என்ற சொற்கள் இன்றுங் குருக்கள் மாரைக் குறிப்பதை ஓர்ந்து பார்த்தால் சாந்தியின் பொருள் விளங்கும். இந்தச்சொல் பழந்தமிழில் குறிப்பிட்ட பூதப்பூசகருக்கு இருந்தது புரியும். குருக்கள் என்பதெல்லாம் பின்னால் வந்த சொற்கள்.) சதுக்கபூதமே பின்னாளில் பிள்ளையாராய் மாறிப் புரிந்துகொள்ளப்பட்டதென்று பேரா. ந.சுப்பிரமணியன் ”Tamil polity" என்ற நூலிற் சொல்வார். இந்நாளில் ஊருக்கொரு (ஏன், வீதிக்கொரு) பிள்ளையார் இருப்பது போல் அந்நாளில் ஊருக்கொரு சதுக்கபூதம் இருந்தது. சதுக்கபூத விவரிப்பு அப்படியே பிள்ளையார் விவரிப்புப் போலவே இருக்கும். சதுக்கபூதம் கி.பி. 4,5 ஆம் நூற்றாண்டுகளில் சிவனின் பிள்ளையாய் மாறிவிட்டது போலும்.

இனி அடுத்த பகுதியில் கடல்பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவன் என்று முதலிலும் கங்கைப் பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன் என்று பிற்காலத்திலும் பெயர் பெற்றவனைப் பார்ப்போம்.

## 5

இனி கடல்பிறக்கோட்டிய வெல்கெழுகுட்டுவனென முதலிலும் கங்கைப்பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவனெனப் பின்னும் பெயர்பெற்றவனைப் பார்ப்போம். இவன் காலம் பொ.உ.மு.131-77 ஆகும். வெல்கெழுகுட்டுவன் வேறு, செங்குட்டுவன் வேறென்று பலகாலம் தமிழறிஞர் பிளவுபட்டார்.

[. . . வேடிக்கையென்ன தெரியுமோ? இவன் இயற்பெயர் என்னவென யாருக்குமே தெரியாது. இன்றுங் குட்டுவனைக் குட்டனென்றே மலையாளத்திற் சொல்வார். சிறியவனென்று பொருள். அகவை, அளவு, முறை இப்படி எத்தனையோ வகையில் ஒருவன் குட்டனாகலாம். ஈழப் பெருந்தலைவரான பிறகும் கூடப் பிரபாகரனைத் "தம்பி" என அழைத்தவர் மிகுதி. அவர் பெயர் உண்மையில் தம்பியா? இல்லையே? அவர் விளிப்பெயரே பரவலாய் ஈழமெங்கும் எல்லோருக்கும் பழகிப்போயிற்று. குட்டுவனும் அப்படித்தான். வெல்கெழு குட்டுவன்= வெல்லுங் குணங்கொண்ட குட்டுவன்; செங்குட்டுவன்= செந்நிறக் குட்டுவன். அவ்வளவுதான் தமிழரில் இப்படிப் பெயர்கள் அமைவது வியப்பேயில்லை சில பெயர்கள் மக்கள் வழக்காற்றில் சட்டென்று பொருந்திக்கொள்ளும். ஆனாலும் 'பெரியார்' என்றால் சிலருக்கு முட்டிக்கொள்ளும். 'ஈ.வே.இராமசாமி நாயக்கர்' என்பதே சரியாம். 'பாவாணர்' என்று சொல்லக்கூடாதாம். 'ஞா.தேவநேயன்' என்று சொல்லவேண்டுமாம். ஒருதமிழ் மடற்குழுவில் முன்பொருவர் இதுபற்றி அடம்பிடித்துச் சொன்னார். சிரித்துக்கொண்டேன். என்றாவது புத்தரைத் திரு.சித்தார்த்தன் என்றோ, மகாவீரரை திரு.வர்த்தமானன் என்றோ யாரேனுஞ் சொல்வாரோ? 'மகாத்மா'வெனில் யாருக்கேனும் விளங்காது போமோ?

சரி "மகாப் பெரியவா" என்றால்? நான்தான் சொன்னேனே? தமிழரிற் குறிப்புப்பெயர்கள் சரளம், ஏராளம்.]

சென்ற பகுதிகளில் மோரியர், சுங்கர், கனகர், நூற்றுவர்கன்னர், ஆதன்கள், இரும்பொறைகள் என ஆழமாய்க் காலக்கணிப்புக்குள் போனதற்குக் காரணமுண்டு. வரலாற்றில் பிருக்குமானம் (parsimony) முகன்மையானது. குறைவான ஊன்றுகோள்களில், நிறைவான தரவுகளோடு ஆழமான ஏரணம் இருந்தாற்றான் வரலாறு வழிக்குவரும். அதைவிடுத்து ஏரணமேயின்றி வரலாற்றுத் தரவுகளை வறட்டுத் தனமாய் அலசினால் ஒருபக்கமும் நகரமுடியாது.

சேரர் காலக்கணிப்பில் நடக்கும் இருவேறு குழப்பங்களைச் சொல்கிறேன். கேளுங்கள். குட்டுவன் 55 ஆண்டுகாலம் ஆட்சிசெய்தான். அவன்விறல் வெளிப்பட வெளிப்பட ஒவ்வொருவரும் விதம்விதமாய்

அழைத்திருப்பார். 25 வயதிற் குட்டுவன் இளங்கோ ஆகையில் புலவர் பரணருக்கு 50 வயதென வையுங்கள். கடல்பிறக்கோட்டிய செயல் அடுத்தசில ஆண்டுகளில் நடந்தால், பரணர் அதைச்சொல்வார். கங்கைக்கரை போகையில் செங்குட்டுவனுக்கு 80 ஆனால் பரணர் 105 வயதுவரை உயிரோடிருந்து சொல்வாரா? பரணர் சொல்லாததாலே, வெல்கெழு குட்டுவனும் செங்குட்டுவனும் வெவ்வேறென்போமா? அதுவென்ன ஏரணம்? இப்படியொரு வெட்டிவாதம் இங்கு நெடுநாள் நடந்தது. இல்லையெனில் பதிற்றுப்பத்தின் பதிகம் "பெருஞ்சோழர் ப்ரசத்தி" போன்றதென்று சொல்லி ஏற்றுக்கொள்ள மறுப்பார்.

என் கேள்வி: "பெருஞ்சோழர் ப்ரசத்திகளையும் பல்லவர் ப்ரசத்திகளையும்" பின் எப்படி நம்புகிறீர்கள்? அதையும் தூக்கி எறியலாமே? இந்த ப்ரசத்திகளை நம்புவீர்கள், பதிற்றுப்பத்தின் பதிகங்களை நம்பமாட்டீர்கள் என்றால் அது ஓர் ஓரவஞ்சனை தானே? "6 ஆம் நூற்றாண்டு ஆசாமிகள்" இப்படிச் சொல்லிச்சொல்லியே தமிழரைக் காயடித்தார். "When it comes to assigning importance to Tamils, always create doubts in people's perception". இது எந்த அளவிற்குப் போனதெனில், தமிழர் கருத்துச் சொன்னாலே, 'இந்தாலஜி' குழுமத்தில் கேலியும், சிரிப்பும், நக்கலும் எழுந்துவிடும். அவர்கள் ஐராவதம் மகாதேவனையே பொருட்படுத்தமாட்டார். இதெல்லாம் எப்படி நடந்தது? "6 ஆம் நூற்றாண்டு ஆசாமிகளின்" தாசானுதாசப் பணிவு தான் காரணம்.

இன்னொருபக்கம் விவரமிலா ஆர்வலர், 58+25+25+55 எனக்கூட்டிச் செங்குட்டுவன்வரை ஆதன்குடிக்கு 163 ஆண்டு இருப்புச்சொல்வர். சரஞ்சரமாய் ஆண்டுகளைக் கூட்டுவது சரியா? தந்தைக்கும், மகன்களுக்கும், அண்ணனுக்கும் தம்பிக்கும் இடையே மேல்மடி (overlap) இருக்காதா? அப்படியொரு கனத்த நூல் (பழந்தமிழ்ச் சமுதாயமும் வரலாறும்- கணியன்பாலன், எதிர் வெளியீடு) அண்மையில் வெளிவந்தது. அதைப் படிக்கையில் வருத்தமானது. விரிவாய் அலசவும் வேதனையாகிறது. இவ்வளவு பெரிய உழைப்பில் ஏரணங் குறைந்தால் எப்படி? 6 ஆம் ஆண்டு ஆசாமிகள் ஒருமுனையெனில் மேல்மடி கவனியாத இவர் போன்ற ஆர்வலர் இன்னொரு முனை. தமிழர் வரலாறு இந்த இருவரிடமுஞ் சிக்கி அலைபடுகிறது.

இனிக் காட்சிக்காதை 156-164 வரிகளைப் பார்ப்போம்.

**கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்**
**பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்**
**வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்**
**கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது**
**கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்**
**எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்**
**ஆரிய மன்னர் ஈரைஞ் ஞூற்றுவர்க்கு**
**ஒருநீ யாகிய செருவெங் கோலம்**
**கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்**

இது அமைச்சன் வில்லவன்கோதையின் கூற்று. பொதுவாய்ப் பலரும் ஒருமுறையே செங்குட்டுவன் வடக்கேபோனதாய் எண்ணிக்கொள்கிறார். கிடையாது. இருமுறை போயிருக்கிறான். கதைக்காலத்தில் (கி.மு.77க்குச் சற்றுமுன்) பாண்டியநாடு குழப்பம்/கலகத்திலே இருந்தது. வளநாட்டிற்கும் நாகநாட்டிற்கும் பங்காளிச்சண்டை. இளஞ்சேரலிரும்பொறை நடத்திய போருக்குப்பின், குட்டுவனே 2 வேந்தர், 7 குறுநிலமன்னரோடு பொருதித் தன் மாமன்மகனை சோழவளநாட்டின் தலைவனாக்குவான். புகார்ச்சோழன் (பெரும்பாலும் 2ஆம் கரிகாலன், அல்லது அவன் மகன்) அதை ஏற்றுக்கொள்ளாது முரண்டு பிடித்தான். இக்காலத்தில் சேரனே பேராற்றல் கொண்டவனாயிருந்தான். அதனாற்றான் தமிழ்நாட்டின் தனிப்பெருந்தலைவனாய்த் தன்னை எண்ணிக்கொண்டான்.

சேரருக்குத் தம்நாட்டின் வடக்கிருந்த கொங்கணரைக் (மங்களூர் தாண்டி மேலைக் கொங்கணம்/கோக(ர்)ணம்/கோவா கடற்கரையை ஒட்டியவர்) கட்டுக்குள் வைப்பது மிகத் தேவை. அப்பொழுது தான் கார்வார் (Karwar) வரை மேலைக் கடல்வணிகத்தைச் சேரர் தம் கட்டுக்குள் வைத்திருக்கலாம். அதற்குமேல் சோப்பாராத் (Sopara; nearer to modern mumbai) துறையிலிருந்து இவரின் நண்பர் நூற்றுவர் கன்னர் பார்த்துக்கொள்வார். சேரரையும், கன்னரையும் மீறி நாவலந்தீவின் மேற்குக்கடற்கரையில் அன்றைக்கு யாரும் எதுவுஞ் செய்யமுடியாத நிலையே இருந்தது. அந்தக் காலத்தில்

கடல்வணிகம் தமிழர்க்கு முகன்மையானது. கொங்கணரை அடக்கியதற்கும் அதுவே காரணம். கடல் பிறக்கோட்டிய செயலென்பது கடற்கொள்ளையரைத் தொலைத்தது தான். மேலைக்கடல் வணிகம் சேரருக்குத் தேவையானது. மிளகை மேற்குநாடுகளுக்கு ஏற்றி அனுப்பவேண்டாமா?

அடுத்தது கலிங்கர் (கோதாவரிக்குமேல் இற்றை ஆந்திரமும் ஒடிசாவுஞ் சேர்ந்த பகுதியர்). இவரைக் கட்டுக்குள் கொண்டுவந்ததற்கு வரலாற்றுக் காரணமுண்டு. கதைக்காலத்திற்கு 100 ஆண்டுகள் முன் பொ.உ.மு. 172 இல் கலிங்கத்தைக் காரவேலன் உச்சநிலைக்குக் கொணர்ந்தான். அவனுடைய அத்திக்கும்பாக் கல்வெட்டுத் தமிழர்வரலாற்றை உறுதிசெய்யும். ஆனால் தமிழர்பார்வையில் அதைப்படித்த அறிஞர் மிகக்குறைவு. எதிர்காலத்தில் யாரேனுஞ் செய்தால் நல்லது. (Shashi Kant எழுதிய The Hathigumpha inscription of Kharavela and The Bhabru Edict of Asoka, D.K.Printworld (p) Lud, 2nd ed 2000 என்ற பொத்தகத்தையும் படியுங்கள்.) பொ.உ.மு. 424 இலிருந்து தொடர்ந்து வந்த ."த்ராம்ர சங்காத்தத்தை - தமிழர் முன்னணியை (இது 252 ஆண்டுகல் இல்லை 1300 ஆண்டுகள் இருந்தது என்பது இன்னொரு நோக்கு. அதையும் ஆராயவேண்டும்.)" பொ.உ.மு.175 இல் குலைத்து கொங்குக்கருவூர் வரை [கல்வெட்டிற் சொல்லும் பித்துண்டா இதுவென்பது என் கருத்து] உழிஞைப் போரில் காரவேலன் வந்து, கொங்குவஞ்சியைத் தொலைத்து அந்துவஞ்சேரல் இரும்பொறையைத் தடுமாற வைத்திருக்கிறான்.

அக்காலம் ஆதன்குடியினரும், இரும்பொறைக் குடியினரும் விரிவடையாக் காலம். அத்திக்கும்பா கல்வெட்டு எழுந்து 6/7 ஆண்டுகள் கழித்து நெடுஞ்சேரலாதன் ஆட்சிக்கு வந்தான். அந்துவஞ்சேரல் காரவேலன் தாக்குதலிலிருந்து தப்பி உதியன்சேரலாதனிடம் ஓடிவந்திருக்கலாம். கருவூரைச் சாய்த்ததோடு பாண்டியரையும் காரவேலன் பதம் பார்த்தான். (கரூரிலிருந்து மதுரை வருவது எளிது.) ஏராளம் முத்துக்கள், செல்வங்களையும் கவர்ந்து சென்றுள்ளான். காரவேலன் கல்வெட்டின் (பொ.உ.மு.172) 11,13ஆம் வரிகளை சேர்த்துப் பொருந்திப் படித்தால், தமிழகத்திற்குப் பெரும்படை வந்தது புலப்படும். இதற்குப் பழிவாங்கவே 60/62 ஆண்டுகள் கழித்து கி.மு..112 இல் செங்குட்டுவன் தன் முதற்படையெடுப்பின் மூலம் கலிங்கத்தைத் தாக்கியிருக்கவேண்டும்.

சசிகாந்த் போல ஒருசிலர் பித்துண்டாவைக் கலிங்கத்திற்குச் சற்றுவெளியே கோதாவரியின் தென்கரை நகரமென்றும் அதைப் பிடித்தவுடன் கன்னபெண்ணை (கிருஷ்ணா) வரையிலும் காரவேலன் அரசு விரிந்ததென்றுஞ் சொல்வர். என்னால் அவ்விளக்கத்தை ஏற்க முடியவில்லை. ஏனெனில் அங்கிருந்து பாண்டியரைத் தாக்க நேரே வரமுடியாது. இடையில் சங்ககாலத்துத் தொண்டைமானும், சோழரும் இருந்திருப்பர். என்னதான் முன்னணி உடைந்தாலும், தம்மை மீறிப் படையெடுத்துப் போவதை சோழர் ஒப்புக்கொள்ளார். தவிர, இவரையும் கடந்து வந்தால் கல்வெட்டில் சோழரைக் கடந்ததாய்ச் செய்தி வந்திருக்கும். ஆனால் அது வரவில்லை. எனவே அன்று நூற்றுவர்கன்னருக்குத் தெற்கே பேரரசாயிருந்த சேரரைக் கருநாடகம் வழியேதான் காரவேலன் நெருக்கியிருக்கவேண்டும். தவிரப் பாண்டியர் செல்வங் கவர்ந்தது "கொற்கைக் கடல்வழி" என்றுந் தோன்றவில்லை. இதுபோன்ற உழிஞைப்போர் அற்றை நிலையில் கடல்வழியே படகுகளைப் பயன்படுத்தி நடக்கமுடியுமா? மிகுந்த ஐயம் வருகிறது.

கொடுங்கருநாடர் ஒழுங்குமுறையிலா ஆட்சியாளர். இற்றை வட கருநாடகத்தில் இருந்தவர். தென் கருநாடகம் அப்போது தமிழ்பேசிய நாடு. பங்களர், கங்கர், கட்டியராகியோராற் ஆளப்பட்ட பகுதி. கட்டியர் இற்றை வேலூர், சேலம், கோலார்ப்பகுதிகளில் ஆட்சிசெய்தார். கங்கர் இற்றைப் பெங்களூரு, மைசூருப் பகுதிகளை ஆண்டார். அற்றை வடகொங்கே பின்னால் கங்கநாடாகியது. பங்களர் நாடென்பது இப்போதையச் சித்தூர், வட ஆர்க்காடு மாவட்டங்களைச் சேர்த்தது. இந்த அரசோடும் குட்டுவன் பொருதினான்.

கொங்கணர், கொடுங்கருநாடர், கலிங்கர் ஆகியோர் சிறிதே தமிழ்கலந்த பாகதம் பேசினார். (இரா. மதிவாணன் "கருநாட்டிற்குப்" பெருநாடென்றே பொருள்சொல்வார். மயிலை சீனி வேங்கடசாமியும் "கரு"விற்குப் "பெரு" எனும் பொருளே சொல்வார். பெருநாடு = மகாராஷ்ட்ரம். அடிப்படையில் வட கருநாடும் மாராட்டியமும் ஒரேபொருளென்று இருவருஞ் சொல்வார்.) இவர் பகுதிகளே (modern maharashtra, North Karnataka, Telingana, North Andhra, and Orissa) மாமூலனார் குறிக்கும் மொழிபெயர் தேயமாகும். பங்களர், கங்கரென்போர் அற்றைக்காலத்தில் தமிழ் பேசினார். பின் கொஞ்சங் கொஞ்சமாய் 1000 ஆண்டுகளில் இவர்தமிழ் கன்னடமாகியது. கட்டியர் கடைசிவரை (1950 வரை)

தமிழராகவே தங்கிப்போனார். இந்தியவிடுதலைக்கு அப்புறமே இவர் வலிந்து தெலுங்கராக்கப்பட்டார். இப்பகுதிகளுக்கு வடக்கே பொ.உ.மு.100 அளவில் நூற்றுவர்கன்னர் (சாதவா கன்னர்) ஓரோபொழுது தனியாகவும், மற்றபொழுதுகளில் மகதப்பேரரசிற்கு அடங்கியுமிருந்தார்.

கொங்கணர், கலிங்கர், கொடுங்கருநாடர், பங்களர், கங்கர், கட்டியராகிய அனைவரும் விந்தியமலைகளுக்குத் தெற்கேயிருந்தவர். வடவாரியர் அம்மலைகளுக்கு அப்பாலிருந்தவர். (தமிழிலக்கியத்தில் ஆரியர் என்றழைப்பதில் விந்தியமலைகளே விளிம்பை வரையறுத்தன.) இந்த எழுவரையும், செங்குட்டுவன் தன் முதற்படையெடுப்பில் தோற்கடித்தான். இதில் ஆரியர் பெரும்பாலும் விதிசாவில் ஆட்சி செய்த சுங்கராகலாம். அகண்ட மகதத்தை மோரியரிடம் கைப்பற்றிய சுங்கர் வெகுவிரைவிற் சுருங்கினார். பாடலிபுத்தத்தைச் சுற்றிய நிலம் காரவேலன் காலத்தில் சுங்கரிடமில்லை. விதிசா. மகிழ்மதி, உச்செயினி நகரங்களைச் சூழ்ந்தநிலமே அவரிடமெஞ்சியது. காரவேலன் தன் பாகதக்கல்வெட்டில் 'பகசத்தி மித்தா' என்றே பாடலிபுத்த அரசனைக்குறிப்பான். (சங்கதத்தில் 'ப்ரகசக்தி மித்ரா' என்றாகும். பஞ்சதந்திரத்து மகதகுமாரர் "வசுசக்தி, உக்ரசக்தி, அனந்தசக்திப்" பெயர்களை இது நினைவுபடுத்தும்) "மித்ராக்" கொடிவழியார் எத்தனையாண்டு பாடலிபுத்தம் ஆண்டாரெனத் தெரியாது.

"இந்த 7 பேரோடு நடந்த வண்டமிழ் மயக்கத்தில் (போரில்) யானைமேலிருந்து சேரன்செய்த வேட்டை என் கட்புலத்திற் பிரியவில்லை. இவ்வேட்டமுடிவில் கங்கைப்பேர்யாற்றுப் பெருவெள்ளத்தில் எம் "அரசமகளை" (நற்சோணையை) முழுக்காட்டிய அந்நாளில் ஆயிரம் ஆரியமன்னருக்கு எதிரே நீயொருவனேநின்ற போர்க்கோலம் என்விழியில் அப்படியேநிற்கிறது" என்று வில்லவன்கோதை புகழ்ந்து பேசுகிறான். "இன்னொரு முறை வடக்கே போவோம்; ஆரிய அரசருக்குப் பாடம் கற்பிப்போம்" என்று சொல்லாமற் சொல்லுகிறான். இங்கு ஆயிரம் ஆரியமன்னரென்பது அப்படியே எண்ணிக்கையிற் கொள்ளக்கூடாது. அதுவொரு சொலவடை. "ஆயிரம்பேருக்கு முன் செய்துகாட்டினான்" என்று சொல்வதில்லையா?

[. . . ஆயிரமென்பது தமிழ்வேர்கொண்ட சொல்லே. பேரனைத் தாத்தனாக்கும் வழக்கங் கொண்டவர் தலைகீழாய் ஸஹஸ்ரம்>ஸாஸிரம்>ஸாயிரம்>ஆயிரம் என்பார். இத்தகையோருக்கு மறுமொழி சொன்னால் நீளும். வேறொருமுறை பார்ப்போம்.]

இந்தக் கட்டுரைத் தொடரை எழுதத் தொடங்கிய காரணமே சிலப்பதிகாரத்தின் வஞ்சிக் காண்டமும், அதன் தொடர்ச்சியான செய்திகளும் தான்.

"சேரன் செங்குட்டுவனின் காலம் என்ன? சிலம்பில் விவரிக்கப்படும் வடக்கு நோக்கிய படையெடுப்பு உண்மையிலேயே நடந்ததா? அல்லது அது வெறும் கதையா? (அதைக் கதை என்று சொல்லிச் சிலம்பின் காலத்தை கி.பி. 500 க்குப் பின் தள்ளும் வையாபுரியாரிலிருந்து, இக்கால இடதுசாரியர் வரை பலருண்டு. பேரா. ரொமிலா தாப்பர் போன்றோரும் கூடச் சிலம்பின் காலத்தைப் பின் தள்ளுவார்கள்.) செங்குட்டுவன் வென்றதாகச் சொல்லப்படும் கனக விசயர் யார்? வடபுலத்து மன்னர் என்று வஞ்சிக் காண்டத்துள் ஏழெட்டுப் பெயர்கள் சொல்லப் படுகிறதே, அவரெல்லாம் யார்? சிலம்பைப் படிக்கும் போது, மகதத்தில் மோரியர் ஆட்சி இல்லை என்று புரிகிறது; பிறகு யார் மகதத்தை ஆண்டார்கள்? அக்காலத்தில் பெருநகரமான பாடலிப் பட்டணத்திற்கு அருகில் செங்குட்டுவனோ, வில்லவன் கோதையோ போனார்களா? இமயமலையில் இருந்து செங்குட்டுவன் கல்லெடுத்தாவெனில், கிட்டத்தட்ட அவ்விடம் எங்கிருக்கலாம்? வஞ்சிக் காண்டத்தில் வரும் நூற்றுவர்கன்னர் யார்? நூற்றுவர்கன்னரின் கொடிவழியில் செங்குட்டுவன் சம காலத்தில் இருந்த மன்னரின் பெயர் எது? செங்குட்டுவனுக்கு உதவி செய்யும் அளவுக்கு, ஆதிக்கம் பெற்றவராய், நூற்றுவர் கன்னர் எப்படி இருந்தார்கள்?"

இது போன்ற பல கேள்விகள் வஞ்சிக் காண்டம் படிக்கும் நமக்கு எழுகின்றன. ஒரு சில கேள்விகளுக்கு இந்தத் தொடரில் விடை காண முயன்றிருக்கிறேன் (எல்லாக் கேள்விகளுக்கும் அல்ல.) நாவலந்தீவின் தெற்கே இருக்கும் ஒரு சிறிய மன்னனான சேரலன் (நமக்கு நம் நாடு பெரிதென்றாலும், நாவலந்தீவில் சேர நாடு சின்னது தானே?) வடக்கே படையெடுத்துப் போக முற்படும் பொழுது தனக்கு வடக்கே இருக்கும்

மன்னர்களில் ஏதேனும் ஒரு சிலரையாவது நட்புடையவர்களாய் ஆக்கிக் கொள்வது ஓர் அரசதந்திரம் தான்; இருந்தாலும் "நூற்றுவர் கன்னரோடு ஏன் அப்படி ஒரு தொடர்பு கொண்டான்? அவர் தவிர்க்க முடியாதவரா?" என்ற கேள்வி எண்ணிப் பார்க்க வேண்டியது தான். [சிலம்பில் ஏற்பட்ட வரலாற்று வேட்கையும் எனக்கு நூற்றுவர் கன்னரில் தான் தொடங்கியது.]

மொத்தத்தில் சிலம்பை ஆழ்ந்து படித்தால், பெரும்பாலும் சிலம்புக் கதையின் காலம் கனகர் ஆட்சிக்குச் சற்று முன், கி.மு.75-80 யை ஒட்டியிருந்திருக்க வேண்டும் என்ற முடிவிற்கே வரவேண்டியிருக்கிறது. வெறுமே வரந்தரு காதையையும், மகாவம்சப் பட்டியலையும் வைத்துக் கொண்டு உள்ளிருக்கும் முரண்களைப் பார்க்காது முதலாம் கயவாகுவின் காலமாய் கி.பி.177-யை வைத்துக் கொண்டு அதையே சிலம்பிற்கும் காலமாய்ச் சொல்லுவது சற்றும் பொருத்தமில்லை.

**மேலும் தகவலுக்கு:**

சிலப்பதிகாரமும் பஞ்சதந்திரமும்:

http://valavu.blogspot.in/2013/02/1.html

http://valavu.blogspot.in/2013/02/2.html

http://valavu.blogspot.in/2013/02/3.html

புறநானூறு:

http://valavu.blogspot.in/2010/08/2-1.html

http://valavu.blogspot.in/2010/08/2-2.html

http://valavu.blogspot.in/2010/08/2-3.html

http://valavu.blogspot.in/2010/08/2-4.html

http://valavu.blogspot.in/2010/08/2-5.html

## 37. அடுத்து என்ன? -நெடுங்கட்டுரை

*—பழமைபேசி*

### 1. நாட்டுப்பற்றும், நாட்டாண்மையும்




அமெரிக்க ஊடகங்களில் அண்மைக்காலமாக இடையறாது பேசப்படுவது, சீனாவின் ஆதிக்க விரிவாக்கம். தென்சீனக் கடல், இந்தியப் பெருங்கடல் நாடுகள் ஒவ்வொன்றாகச் சீனாவுடன் அடக்கமாகி வருகின்றன. இராமேசுவரத்திலிருந்து மிகக் குறைந்த தொலைவாக, பத்து மைல் தொலைவிலிருந்தே துவங்கி விடுகிறது எல்லைக்கோடு, அதனின்று சில நூறு அடிகள் உள்ளே போய்விட்டாலும், 10 இலட்சம் முதல் 17.4 கோடி வரை தண்டம் கட்ட வேண்டி வரும். இப்படி, கிழக்காசியாவிலிருக்கும் தம் அணுக்க நாடுகளை வைத்து, சீனா தம் ஆதிக்கத்தை நிலைநாட்டி வருகிறது. தரைவழியிலும் அதேநிலைதான். மியான்மார் நாட்டினை முழுமையாக உள்வாங்கிக் கொண்ட சீனா, வடக்கு, கிழக்கு எல்லையில் நெருக்கிக் கொண்டு நிற்கிறது. சீனாவின் ஆதிக்க விரிவாக்கத்தைக் கண்டு அமெரிக்கா அலறி வருகிறது. ஜப்பான், இந்தியாவைக் கொண்டு சீனாவைக் கட்டுக்குள்

கொண்டு வரலாமென அமெரிக்கா நினைக்கிறது. இந்திராவும், அவர் தம் மகனும் இருந்தவரை, அணிசேரா நாடுகள் என்கிற அமைப்பைத் துடிப்போடு வைத்துக் கொண்டு, சீனா, அமெரிக்கா ஆகிய இரண்டு நாடுகளுக்குமே பிடி கொடுக்காமல் வந்தனர். அதற்குப் பின் எல்லாமுமே மாறி விட்டது. இங்கேதான் நாட்டுப்பற்றும்(patriotism), நாட்டாண்மை(nationalism)யும் பேசுபொருளாகின்றன.

நாட்டுப்பற்று(patriotism) என்பது என்னவென்றால், நாட்டின் பல்வேறு பண்பாட்டுக் கூறுகள், மொழிகள், விழுமியங்கள், வளங்கள், தொன்மம், நாகரிகம், பாதுகாப்பு, முன்னேற்றம் முதலான எல்லாவற்றின் மீதும் பற்றுக் கொண்டு பேணுதல் என எளிமையாகச் சொல்லிவிடலாம். நாட்டாண்மை(nationalism) என்பது மிகச்சிக்கலானதும் பின்னடைவுக்கு இட்டுச் செல்லக் கூடியதுமானவொன்றாகும். Nationalism makes one to think only of one's country's virtues and not its deficiencies. Patriotism, on the other hand, pertains to value responsibilities and enables people to understand both the shortcomings and improvements made.

நாட்டில் இருக்கிற சமூக, சமயம், மொழி, பண்பாடு என எல்லாவற்றையும் ஒருதன்மையாக்கி ஒரு தலைமையின் கீழ்க் கொணர்ந்து ஆட்சிக்குட்படுத்துவதே நாட்டாண்மை. எடுத்துக்காட்டாக, சோவியத்தில் இருந்து பிரிந்த கசககசுதான், கிரிகிசுதான், உசபெக்கிசுதான், துர்க்மினிசுதான் முதலான நாடுகளிலும் பாகிசுதானின் பெரும்பாலான மாகாணங்களிலும் இப்படியான நாட்டாண்மைதான் நடப்பில் இருந்து வருகிறது. ஒரு பொதுக்கட்டமைப்பின் மேலான ஒற்றைத்தலைமையின் ஆட்சி. மேற்குறிப்பிட்ட நாடுகளின் வரிசையில் சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகள் இடம் பெற்றாலும், மொழி, இனம், பண்பாடு போன்றவற்றில் உரிய இடத்தை அளித்தே வருகின்றனர்.

அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளில் அண்மையில் அமைந்த பெரும்பான்மை வாதத்துடன் கூடிய நாட்டாண்மையாட்சிக்கான வெற்றிகளை எடுத்துக்காட்டாகக் கொண்டு உலகின், குறிப்பாக, மூன்றாநிலை நாடுகளிலும் அதேபோன்ற போக்கு தலைதூக்கி வருகிறது. நாட்டின் கட்டமைப்பு,

பொருளாதாரம், அறிவியல், மருத்துவத்துறை குறித்தெல்லாம் ஆய்ந்து பேசாமல், சமயம், இனம் குறித்துப் பேசி, பெரும்பான்மைத் தொகுதியின் ஆதரவைப் பெற்று, ஒற்றைத்தலைமையின் கீழான நாட்டாண்மையை நிலைநிறுத்தும் போக்கு, தனித்துவமான இதர மொழிகள், பண்பாடு போன்றவற்றை அழித்தொழிக்கும். நாடுகளெல்லாம் இத்தகைய முன்னெடுப்பின் கவனமாய் இருக்க, அதை நன்கு பயன்படுத்திக் கொள்கிற சீனா தம் ஆதிக்கத்தை வெகுவாக விரிவாக்கிக் கொண்டே வருகிறது.

**How the US is losing the region to China?**

**China's expansionism poses 'threat' to India**

இனி நாம் நம் பணியைத் தொடரலாம்... ஆண்டாள், இறைவழிபாடு, பத்மாவதி, துர்கா, களவாணி, புறம்போக்கு, தமிழ், சமசுகிருதம், மன்னிப்பு, சீயர், what is next?? அடுத்து என்ன?

***************

## 2) வெளியுறவுப் பூசல்கள்

நாட்டுப்பற்றியத்துக்கும்(patriotism) நாட்டாண்மி(nationalism)யத்துக்குமான வேறுபாட்டினைப் பற்றி ஆய்வு செய்யும் போது, அண்டை நாடான சீனாவின் ஆதிக்க விரிவாக்கம் குறித்துப் பார்த்தோம்.

சீன வெளியுறவுத்துறை அமைச்சகத்தின் செய்தித் தொடர்பாளர் இன்று தெரிவித்த கருத்தின் போது, எந்தப் பிரச்சினையானாலும் பேசித் தீர்த்துக் கொள்ளலாம். ஆக்கிரமிப்பு காசுமீரம் பகுதியில் அமையவிருக்கிற, "சீனா பாகிசுதான் பொருளாதாரத் தாழ்வாரம்", சீனா அமைக்கவிருக்கிற கட்டமைப்புகள் குறித்த இந்தியாவின் கவலையைக் கருத்திற்கொள்கிறோம். இந்தியா விரும்பினால், அத்திட்டத்திற்கு வேறு பெயரை வைத்துக் கொள்ளவும் நாங்கள் தயாராக இருக்கிறோமென்பதோடு முடித்துக் கொண்டார்.




சீனா, பூட்டான், இந்தியா ஆகிய மூன்றுக்குமான எல்லைக்கோடு சந்திக்கும் இடத்திற்கருகில் பூட்டானுக்குள் ஊடுருவி, டோக்லாம் பகுதியில் சாலை நீட்டிப்புச் செய்திருந்தது சீனா. அப்போது, கிட்டத்தட்ட 77 நாட்களுக்கு இந்திய சீன படைகள் எதிரெதிராக நின்ற பதட்டமும் ஏற்பட்டிருந்தது. பிறகு, சீனா தம் பணிகளை நிறுத்திக் கொள்வதாக அறிவிக்க, இந்தியப் படைகள் தத்தம் பாசறைகளுக்குத் திரும்பி விட்டன. ஆனாலும், ஆக்கிரமித்த பகுதிகள் தமக்குச் சொந்தமானவை என்றே சீனா கூறிவருகிறது.

’சீனா பாகிசுதான் பொருளாதாரத் தாழ்வாரம்(CPEC)’ என்பதைப் போலவே, ’சீனா பங்களாதேசு பொருளாதாரத் தாழ்வாரம்(CBEC)’ என்பதும் சீனாவின் மற்றுமொரு திட்டமாகும். சீனாவைப் பங்களாதேசு நாட்டின் சிட்டகாங் துறைமுகத்தோடு இணைக்கும் சாலை(One Border One Road, OBOR), இந்த CBEC திட்டத்தின் முக்கிய நோக்கமாகும். அந்த சாலைக்கட்டுமானத்தின் ஒரு பகுதியாகத்தான் மேற்கூறிய டோக்லாம் ஆக்கிரமிப்பும் இடம் பெறுகிறது. அதுமட்டுமல்லாது, 1890இல் அப்போதைய பிரிட்டன் அரசுடன் இடம் பெற்ற ஏதோவொரு ஒப்பந்தத்தைக் காண்பித்து, சிக்கிம் மாநிலத்திலும் சீனாவுக்குப் பங்கிருக்கிறது எனச் சொல்லி வருகிறது சீனா.

உளவுத்துறை முன்னாள் அலுவலர் RSN சிங் கூறுகிறார், ”நேபாளம், பாகிசுதான், பங்களாதேசு ஆகிய நாடுகளை தமக்கு ஏதுவாக வளைத்துக் கொண்ட சீனா, கூர்கா தீவிரவாதிகளையும் அரசியற் புரட்சியாளர்களையும் வளர்த்து விட்டு, அப்பகுதியின் நிலைத்தன்மையைக் குலைப்பதன் வாயிலாக, சிக்கிம் நிலப்பகுதியின் வாயிலாக சாலையை அமைத்துவிடத் துடிக்கிறது சீனா”

ஆக்கிரமிப்புக் காசுமீர் வழியாக பலுசிசுதான் பகுதிக்குச் சாலை அமைப்பதன் வாயிலாக அரபிக்கடலையும், சிக்கிம் வழியாக பங்களாதேசின் சிட்டகாங் துறைமுகத்துக்குச் சாலை அமைப்பதன் வாயிலாக வங்காள விரிகுடாவையும் தொட்டுவிடத் துடிக்கும் சீனா, ஏற்கனவே சிட்டகாங் துறைமுகத்தை ஆழப்படுத்த 10 பில்லியன் டாலர்களும், பலுசிசுதானின் குவேடார் துறைமுகப்பணிகளுக்கு 6 பில்லியன் டாலர்களையும் ஒதுக்கிப் பணிகள் நடந்து வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

இதனை வெறும் எல்லைப் பிரச்சினையாக மட்டுமே பார்க்க முடியாது. இருப்பின் பிரச்சினையாகக் கருதி எவ்வகையிலேனும் இந்தியா முனைந்து செயற்பட வேண்டுமென்கிறார் RSN சிங்.

(இனி நாம் நம் நாய்ச் சண்டைகளுக்குத் திரும்புவோம், திராவிடம், ஆரியம், மன்னிப்பு, கழகம், ப்ளா ப்ளா....)

http://www.indiandefencereview.com/news/spare-no-weapon-if-doklam-poses-existential-crisis/

http://www.dnaindia.com/india/report-china-maintains-rigid-stance-on-doklam-but-willing-to-talk-to-india-to-sort-out-cpec-issue-2579459

***************

### 3) எல்லைப் பிணக்குகள்




அடுத்து என்ன? விரிவான ஒரு பார்வையைப் பார்த்து விட வேண்டியதுதான். சமூக அரசியலைக் காட்டிலும் முக்கியமானது பூகோள அரசியல். பூமியில் வாழும் ஒவ்வொரு உயிருக்கும் அடிப்படை நிலம். நிலமில்லாவிட்டால் ஏதுமில்லை. நிலத்தின் மீதுதான் கடல், மலை, வான்பரப்பு எல்லாமும் உள்ளன. ஆகவே, ஒவ்வொரு சதுர அடி நிலமும் முக்கியமானதும் அவசியமானதுமாகும். அப்போதைக்கு அது வெற்றுநிலமாகக் கூட இருக்கலாம். ஆனால் அதற்காக அதை யாரும்

புறந்தள்ளி விட முடியாது. எனவே பூகோள அரசியல் முக்கியமானது. நம்மில் எத்தனை பேர் பூகோள அரசியலைக் கவனிக்கிறோம்? சில்லறைப் பூசல்களினால் ஆளப்படுகிறோமென்பதுதானே உண்மை?! பெருகிவரும் மக்கட்தொகை, தொழில்நுட்பம் நிமித்தம், அத்தகைய நிலத்தின்பால் வல்லரசுகள் எப்போதும் தம் கழுகுக்கண்களைப் பாய்ச்சியபடியேதான் இருக்கின்றன. அப்படியான பாய்ச்சலில் நமக்குத் தெரிந்த இந்திய சீனா பூகோள அரசியல்தான் இது. இதில், இன்று, நாம் முதலாவதாகப் பார்க்கப் போவது எல்லைப் பிணக்குகள் பற்றியதாகும்.

இந்திய சீன எல்லையென்பது, காசுமீரம் முதல் மியான்மார் வரையிலாகக் கிட்டத்தட்ட 3488 கிலோ மீட்டர்கள் தொலைவைக் கொண்டதாகும். பாதுகாப்புக்கு இந்தியாவை நம்பியிருக்கும் பூட்டான் எல்லையையும் சேர்த்துக் கொண்டால், 4100 கிமீட்டர்கள் ஆகும். இத்தகைய எல்லையென்பது, பல இடங்களில் முறையாகக் குறிக்கப்பட்டிருக்கவில்லை; எல்லை வகுக்கப்பட வில்லை. கடுமையான மலைப்பகுதியென்பதால் உத்தேசமாகவே யூகிக்கப்பட்டு வருகிறது. எனவே, பல இடங்களில் சீனாவின் ஆக்கிரமிப்பு அவ்வப்போது இடம் பெற்றே வந்திருக்கிறது.

**1. தவாங்**

இன்னமும் அருணாச்சலப் பிரதேசத்தைத் தன் பகுதியென்றே சீனா கூறி வருகிறது. எனினும், முக்கியப் பிரச்சினையாகப் பார்க்கப்படுவது, அருணாச்சலத்தில் இருக்கும் தவாங் பகுதியாகும். ஏன் சீனா இப்பகுதியை மட்டும் குறிவைத்துக் கேட்கிறது என்பதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலாவது, கடும் மலைப்பாங்கான பகுதிகளுக்கிடையே தவாங் பகுதி கணிசமான சமதளப் பகுதியைக் கொண்டிருக்கிறது. அத்தகைய நிலம் தம் கைக்கு வந்துவிட்டால், இந்தியாவையும் பூட்டானையும் நெருக்கக் கூடிய வகையில் விமானப் படைதளத்தை அமைத்து விடலாமென்பதுதான் கணக்கு. மேலும், தவாங் பகுதியில் பெருவாரியாக வசிப்பது திபெத்தியர்கள். இவர்கள் எப்போது வேண்டுமானாலும் திபெத்துக்கு உரிமை கோரிப் பிரச்சினைகளை மேற்கொள்ளலாம். ஆகவே, அவர்களைக் கட்டுக்குள் வைத்திருக்க விரும்புகிறது சீனா. திபெத்தில் இருக்கும் திபெத்தியர், தம் ஆறாவது தலாய்லாமாவான தசான்யாங் கியாசுடோவின் பிறந்த இடமான தவாங்

பகுதியை புனிதத்தலமாக நினைப்பதும் அங்கு அடிக்கடி சென்று வருவதும் சீனாவுக்குக் கவலையளிக்கக் கூடியதாகப் பார்க்கப்படுகிறது. எனவே, தவாங் பகுதியை எங்களுக்குக் கொடுத்து விட்டால் இதர அருணாச்சலப்பகுதி, 1962 போரின் போது ஆக்கிரமித்துக் கொண்ட காசுமீரின் அக்சாய் சின் உள்ளிட்ட எல்லா எல்லைப்பிரச்சினைகளிலும் விட்டுக் கொடுப்பதாகச் சொல்கிறது சீனா. ஆனால் இந்தியா தரப்பில் கடுமையாக மறுக்கப்பட்டே வருகின்றது. விட்டுக் கொடுத்தால், அதனால் ஏற்படப் போகும் விளைவுகளை நன்கு அறிந்தே இருக்கிறது இந்தியா. தவாங் பகுதி சீனா வசம் போகுமானால், பூட்டானுக்குப் பாதுகாப்பளிப்பது மிகக் கடினமாகும். மேலும், இந்தியாவின் வடகிழக்குப் பகுதியை இணைக்கும் சிலிகுரி குறுநிலத்தை நோக்கி முன்னேறும் பணி சீனாவுக்கு எளிதாய்ப் போய்விடும்.

**2. அக்சாய் சின்**

1962ஆம் ஆண்டு நிகழ்ந்த போரின் போது லடாக் பகுதியில் ஆக்கிரமிப்புச் செய்து கொண்டது. இப்பகுதியைப் பொறுத்த வரை இருவிதமான எல்லைக் கோடுகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

1962ஆம் ஆண்டு வரையிலும் இந்தியாவின் வரைபடத்தில் இடம் பெற்றது ஜான்சன் எல்லைக்கோடு என்பதாகும். பிரிட்டனைச் சார்ந்த நில அளவியலாளர் வில்லியம் ஜான்சன் என்பாரால் வரையறுக்கப்பட்டு, அப்போதைய காசுமீர் அரசரிடம் கொடுக்கப்பட்டு, 1865ஆம் ஆண்டில் அந்நிலமானது அரசரின் ஆளுகைக்கு உட்படுத்தப்பட்டிருந்தது. அதற்குப் பிறகு வந்த ஆங்கிலேயே அரசிடம், அப்பகுதியைச் சார்ந்த குறுநில மன்னர் ஒருவரின் வற்புறுத்தலின் பேரில், 1893ஆம் ஆண்டு பிரிட்டன் தூதுவர் சர் மெக்டொனால்டு என்பாரிடம் புது வரைபடம் கையளிக்கப்பட்டது. இதன்படி அரசரின் ஆளுகைக்குட்பட்ட பகுதி சீனக் குறுநில மன்னர் ஆளுகைக்குட்பட்டதாகத் தெரிவிக்கப்பட்டிருந்தது. இருப்பினும் இரு வரைபடங்களுமே புழக்கத்தில் இருந்தன. ஆங்கிலேயர்களின் கட்டுக்குள் ஏனைய பகுதியும் இருந்ததால், அவ்விரு எல்லைக்கோடுகளுக்கும் அவ்வளவாக முக்கியத்துவம் இருந்திருக்கவில்லை. ஆனால், 1962இல்,

இவ்விரு கோடுகளையும் கடந்து உள்ளே வந்து அக்சாய் சின் பகுதியில் ஆக்கிரமிப்புச் செய்து கொண்டது சீனா.

நடப்பு காலத்தில் இடம் பெறும் பேச்சுகளில், தாம் ஆக்கிரமிப்புச் செய்த நிலத்தை விட்டுக் கொடுத்து மெக்டொனால்டு எல்லைக்கோட்டுக்குப் பின்வாங்கிக் கொள்வதாகச் சொல்கிறது சீனா. இந்தியாவோ, காசுமீர் அரசரின் புழக்கத்திலிருந்த ஜான்சன் எல்லைக்கோடே இந்தியாவின் எல்லைக்கோடெனச் சொல்லி, இன்னும் பின்வாங்கிப் போக வேண்டுமெனச் சொல்லி வருகிறது.

**3. மெக்மேகன் எல்லைக்கோடு**

திபெத் நாட்டுக்கும் அருணாச்சாலப் பகுதிக்குமிடையேயான எல்லையை 1914ஆம் ஆண்டு, திபெத்திய அரசுடன் ஒப்பந்தம் செய்து கொண்டவர் ஹென்ரி மெக்மேகன். இதுதான் இந்தியாவின் எல்லைக்கோடாகப் பாவிக்கப்பட்டு வருகிறது. நடப்பில், கட்டுப்பாட்டு எல்லைக்கோடு (அவ்வப்போது சென்று ஆளுகைக்குட்படுத்தப்படும் பகுதி, line of control, LoC), இயல்புக் கட்டுப்பாட்டு எல்லைக்கோடு( Line of actual control, LoAC, எப்போதும் ஆளுகைக்குட்பட்டது), மெக்மேகன் எல்லைக்கோடு ஆகிய மூன்றும் இடம் பெற்று வருகின்றன. இந்தியாவைப் பொறுத்த மட்டிலும் மெக்மேகன் எல்லைக்கோட்டையே பாவித்து வருகிறது. 1962ஆம் ஆண்டு போரின் போது, பெரும்பாலான அருணாச்சலப் பகுதியை சீனா ஆக்கிரமிப்புச் செய்து, போர் முடிந்ததும் மெக்மேகன் எல்லைக்கோட்டுக்குப் பின்வாங்கிக் கொண்டது. இருப்பினும் மிக அண்மையில், இருவாரங்களுக்கு முன்பு, இந்திய கட்டுப்பாட்டு எல்லைக்கோட்டில் இருக்கும் கிராமத்தில் சீனர்கள் ஊடுருவி, சாலையமைக்கும் பணியில் ஈடுபட்டதாகவும், இந்தியப் படைகள் அவர்களை விரட்டியடித்ததாகவும் செய்திகள் தெரிவிக்கின்றன.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

***************

### 4) திபெத், தலாய் லாமாவுடன் கொண்ட நட்புறவு




சீனாவின் நடப்பு நிலைமை குறித்த ஒரு தகவலையும் பார்த்து விட்டு, இந்திய சீனா உறவுக்குள் இருக்கும் சிக்கல்களில், எல்லைப் பிரச்சினைக்கு அடுத்தபடியாக இடம் பெற்றிருக்கும் திபெத், தலாய் லாமா குறித்துப் பார்ப்போம்.

உலக நாடுகள் அனைத்துமே பதட்டத்தோடு உற்று நோக்கிக் கொண்டிருப்பது சீனாவின் கடன் என்பதுதான். நாட்டின் மொத்தக்கடன் தோராயமாக ஆண்டுக்கு இருமடங்காகவும், உள்ளூர் அரசாங்கங்களின் கடன் கடந்த 15 ஆண்டுகளில் 36 மடங்காகவும் உயர்ந்து வந்திருக்கிறது. நாட்டில் எண்ணற்ற புது நகரங்கள், கட்டுமானப்பணிகள், துறைமுகங்கள் என கட்டமைப்புப் பணிகளுக்கு அரசு நிர்வாகமே கடனை வாங்கிச் செய்வதுதான் இதற்குக் காரணம்.

'ஓர் ஆண்டின் உற்பத்தித்திறனைக் காட்டிலும் 300 மடங்காக இருக்கப் போகிறது நாட்டின் கடனளவு' என உலக வர்த்தக நிறுவனம் எச்சரித்திருக்கிறது. இது எல்லாம் யார் பணம்? உலகில் இருப்பவர்கள் எல்லாரது பணமும்தான். எப்படி? நேரடி வங்கி என்பது, ஒருவர் கடன்

வாங்குவார். மற்றொருவர் வட்டியுடன் கடனைச் செலுத்துவார். நிழல்வங்கி என்பது, சில பல கடன்களை(bond)த் தொகுத்து ஒரு பொட்டலமாக்கி, ஏதோ ஒரு நிறுவனம் அதைக் கடன் பத்திரமாகச் சந்தையில் விற்கும். உங்களையும் என்னையும் போன்றவர்களும், நாம் பணத்தை முதலீடு செய்யும் நிறுவனங்களும் அவற்றின் மீது முதலீடு செய்வோம். வட்டி அல்லது உரிய இலாபத்துடன் குறித்த காலத்தில் அவை ஈடு செய்யப்பட்டால் இரு தரப்புக்குமே நல்லது. உற்பத்தித்திறனைக் காட்டிலும் செலவுதொகை அதிகமாக இருக்கும்நிலையில், அவை உகந்தபடிக்கு உரியத் தருணத்தில் நகர்வுகளை மேற்கொள்ளாவிடில், பொருளாதாரச் சுணக்கம், மந்தம், திவால் போன்றவை இடம் பெறும். எனவேதான் சீன நாட்டின் தலைவர், தம் கட்சியின் கூட்டத்தில், 'நாம் கடன் சுமையைக் குறைக்கப் பாடுபட வேண்டும். அல்லாவிடில், நாட்டின் பாதுகாப்புக்கே மோசம் வந்து விடும்' என அலறியிருக்கிறார். இதைப் பற்றி, விரிவாகப் பிறிதொரு பகுதியில் பார்க்கலாம்.

**திபெத், தலாய் லாமா**

திபெத் என்பது உலகிலேயே மிக உயரத்தில், இமயமலை உச்சியில் இருக்கும் ஒரு நிலப்பரப்பு, இனம், பண்பாடு ஆகும். குளிரான இப்பகுதியில், குறைவான மக்கட்தொகை, பெரும்பாலான பகுதி ஆளில்லா நிலம் என்பனவற்றால், ஏதோவொரு பேரரசுடன் நட்பு பாராட்டி, பெரும்பாலும் அதன் ஆளுகைக்குட்பட்டே வந்திருக்கிறது. 1912ஆம் ஆண்டு வரையிலும் சீனப்பேரரசோடு இணங்கி இருந்திருக்கிறது. அதற்குப் பிறகு சீனாவில் இடம் பெற்ற புரட்சியில், இந்நிலப்பரப்பு சீனர்களால் கண்டு கொள்ளப்படவில்லை. அதே காலகட்டத்தில், இந்தியப் பகுதியை ஆண்டு வந்த ஆங்கிலேயர்களோடு இணங்கி, சமயத்தலைவராகிய தலாய் லாமாவின் வழிகாட்டுதலில், குடியரசாக வாழ்ந்து வந்தனர் திபெத்தியர்கள்.

ஓரளவுக்குப் புரட்சியெல்லாம் ஓய்ந்து, நாட்டின் நிர்வாகத்தைக் கைப்பற்றி நிலைத்தன்மையடைந்த சீன அரசு, 1959ஆம் ஆண்டு வாக்கில், திபெத்தையும் தன் ஆளுகைக்குள் உட்படுத்தத் துவங்கியது. 1959ஆம் ஆண்டு சீனப்படைகள் திபெத் பகுதிக்குள் சென்று ஆக்கிரமிக்கத் துவங்கியது. அந்தக்

காலகட்டத்தில் மட்டும் 87 ஆயிரம் திபெத்தியர்கள் கொல்லப்பட்டனர். 14 வயதேயான தலாய் லாமா, மாறுவேடத்தில், அரண்மனையிலிருந்து வெளியேறி கால்நடையாகவே கிட்டத்தட்ட 31 நாட்கள் நடந்து வந்து இந்தியாவில் புகலிடம் பெற்றார். அதற்குப் பின், நாடு கடந்த திபெத்தியர் அரசாங்கம் தொடர்ந்து தமது விடுதலைக்கான முன்னெடுப்புகளை இன்று வரையிலும் செய்து கொண்டேதான் இருக்கிறது. இரண்டு இலட்சத்திலிருந்து பத்து இலட்சம் திபெத்தியர்கள் வரை கொல்லப்பட்டிருக்கலாமென கணக்கிடப்படுகிறது.

திபெத்தை முற்றாக வளைத்துக் கொண்ட சீனா, இந்திய எல்லையில் அவ்வப்போது சிற்சிறு அத்துமீறலைச் செய்து வந்தது. எந்த நேரத்திலும் எல்லை கடந்து வந்து ஆக்கிரமிப்புச் செய்வர் என எதிர்பார்த்த நேரு அரசாங்கம், காசுமீர் மெக்மேகன் எல்லைக்கோட்டில் முன்தடுப்புக்காவல் அரண்களை அமைத்து பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டது. இவர்கள் எல்லைக்கோட்டில் அத்துமீறி வருகிறார்கள் என்பதைச் சொல்லி, 1962 அக்டோபர் 20ஆம் நாள் தாக்குதலைத் துவங்கியது சீனா. ஆனால் உண்மையான காரணம் இதுவல்ல. இந்தியாவில் இருக்கும் தலாய் லாமாவையும் திபெத்தியர்களையும் உடனடியாகத் தம் வசம் ஒப்படைக்கக் கோரியதும், இந்தியா அதற்கு மறுத்து விட்டதுமே முக்கியக் காரணமாகும். இந்தியாவின் தவாங் பகுதியிலிருந்து கொண்டு, திபெத்தியர்கள் கொரில்லாப் போரில் ஈடுபட்டு வருகிறார்களென்பது சீனாவின் சீற்றமாகும்.

'வடகிழக்கு எல்லைப்புற மாகாணம்' என்று அக்காலகட்டத்தில் அழைக்கப்பட்ட இன்றைய அருணாச்சலப் பிரதேசத்தை நான்கே நாட்களில் கைப்பற்றிக் கொண்டது சீனா. ஆனால், காசுமீர்ப் பகுதியின் ரசாங்லா பகுதியில் இருந்த இந்தியத் தளபதி சேத்தான் சிங் பேட்டியின் தலைமையிலிருந்த 123 பேர் கொண்ட படையானது, கிட்டத்தட்ட 1400 பேருக்கும் மேலான சீனப்படையினரைக் கொன்று குவித்தது. சினம் கொண்ட சீனா பெருமளவில் படையை காசுமீர் நோக்கி நகர்த்தவே, இறுதியில் தளபதி சேத்தான் சிங் வீரமரணம் தழுவினார். அவரது மரணத்துக்குப் பின்னர் அக்சாய் சின் பகுதி முழுவதையும் சீனா ஆக்கிரமித்துக் கொண்டது.

உலக அரங்கில், இப்போரானது சீனாவின் மீது சினமும், இந்தியாவின் மீது அனுதாபத்தையும் உண்டாக்கியது. இந்தியப் பிரதமர் நேரு அமெரிக்க அதிபர் கென்னடிக்கு இரு கடிதங்கள் எழுதினார். அதே காலகட்டத்தில், சோவியத்துகள் கியூபாவில் இருந்து கொண்டு, அமெரிக்காவை நோக்கி அணு ஏவுகணை அமைத்துக் கொண்டிருக்க, அமெரிக்காவில் பெரும் பதற்றம் மேலோங்கியிருந்தது. இருப்பினும், தளவாடங்களும் உணவுப் பொருட்களும் அமெரிக்க விமானங்களில் வந்து சேர்ந்தன. கிட்டத்தட்ட 3 வாரங்கள் அமைதியாகக் கழிந்தன. மேற்குலக நாடுகள் சீனாவுக்கு எதிரான நடவடிக்கைகளை மேற்கொள்ளத் துவங்கியதை அறிந்த கொண்ட சீனா, தாமாகவே முன்வந்து போர்நிறுத்தத்தையும், எல்லைக்கப்பால் 20 மைல் தொலைவில் நிற்பதெனவும் முடிவு செய்து, 1962 நவம்பர் 21 அன்று பின்னகர்ந்து விட்டது. எனினும், காசுமீரின் அக்சாய் சின் பகுதியை விட்டு இன்று வரையிலும் வெளியேறவில்லை.

இக்காலகட்டத்தில், நேரு அமெரிக்காவிடமிருந்து பண உதவி கேட்டிருந்தார். இடையில் நேர்ந்த கியூபன் அணு ஏவுகணைப் பதற்றம் 13 நாட்களில் 1962 அக்டோபர் 28ஆம் நாளன்று முற்றாகத் தணிந்து விட்டபிறகு, அமெரிக்க அதிபர் கென்னடி இந்தியாவிற்குப் பல வழிகளிலும் உதவ முன் வந்தார். தைவான் வசமிருந்த வீட்டோ உரிமையை முந்தைய காலகட்டத்தில் இந்தியாவிற்கு அளிக்க முன் வந்ததையும், இந்தியா மறுக்கவே அது சீனாவசம் சென்று சேர்ந்து விட்டதை எண்ணியும் மிகவும் குறைபட்டுக் கொண்டார் கென்னடி. எனினும், திபெத்தியர்களுக்கும் தலாய் லாமாவுக்கும் உரிய உதவிகள் தொடர வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். முதல் தவணையாக 500 மில்லியன் டாலர்கள் தருவதென முடிவு செய்து இந்திய அமெரிக்க ஒப்பந்தம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்தியக்குழு அமெரிக்கா செல்லத் திட்டமிட்டுக் கொண்டிருந்த வேளையில், 1963, நவம்பர் 22 அன்று கென்னடி கொல்லப்பட்ட சம்பவம் இந்தியாவை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. கென்னடிக்குப் பின்னர் வந்த லிண்டன் ஜான்சனும் இந்தியாவின் உறவில் நாட்டம் செலுத்தி ஒப்பந்தம் செய்து உதவ விரும்பினார். அதன் தொடர்ச்சியாக, இந்தியக்குழு வாசிங்டன் சென்று சேர்ந்தது. ஆனால், அன்று மாலையே அக்குழு ஒப்பந்தம் எதுவுமில்லாமல்,

தம் தலைவனுக்கு இறுதி வணக்கம் செலுத்தத் தாயகம் திரும்ப நேரிட்டது பெரும் சோகம். நேரு அவர்கள் மே 27, 1964 அன்று, நாட்டின் போர் குறித்த மன அழுத்தம் பீடிக்க உடல்நலம் குன்றி மரணமடைந்து விட்டார். இந்த காலகட்டத்தில் பாகிசுதானின் தலைவர் அயூப்கான் அமெரிக்காவை ஒப்பந்தம் செய்யக் கூடாதென நிர்ப்பந்தம் செய்தார். அமெரிக்காவின் தயக்கத்தைப் புரிந்து கொண்ட லால்பகதூர் சாஸ்திரி, வேண்டிய உதவிகளை சோவியத்திடமிருந்து பெற்று இராணுவத்தை பலப்படுத்திக் கொண்டார். அன்றிலிருந்து, அமெரிக்காவின் நேச நாடாக பாகிசுதானும் சோவியத்தின் நேச நாடாக இந்தியாவுமென ஆகிப் போனது. 1990களுக்குப் பின்னர்தான் இந்த நிலைப்பாட்டில் மாற்றம் நிகழத் துவங்கியதெனலாம்.

அமெரிக்கா, இதர மேற்குல நாடுகள், சோவியத் என எல்லாருமே திபெத்தியர்களுக்கான பண உதவியைச் செய்து வந்தனர். இந்தியாவும் தலாய் லாமை இன்று வரை கைவிடவில்லை. உலகப் பொருளாதாரமயமாக்கலில் சீனா இந்தியாவை முந்திக் கொண்டு, முதலிடத்தைப் பெற்றது. இதன் காரணம், தலாய் லாமா, திபெத் குறித்த ஆதரவுக்குத் தொடர்ந்து முட்டுக்கட்டை போட்டு வருகிறது. எல்லா நாடுகளுக்கும் அழுத்தம் கொடுத்து, ஆதரவினை முற்றாகத் தடுத்து விட்டது சீனா. ஆண்டுதோறும் திபெத் உதவிக்காக ஒதுக்கப்படும் நிதியை இனி ஒதுக்கத் தேவையில்லை எனச் சொல்லிவிட்டார் டிரம்ப். எனினும் சில மேற்குலக நாடுகளும் இந்தியாவும் தம் உதவிகளைத் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. இப்படியாக, தம் மீது கொரில்லாப் போர் தொடுக்க உசிதமான இடமாகக் கருதப்படுவதும் திபெத்தியர் செறிவாக வாழ்ந்து வருவதுமான இந்தியாவின் தவாங் நிலப்பரப்பும், தலாய் லாமாவுக்கு புகலிடம் கொடுத்துப் போற்றி வரும் கொள்கைமுடிவும் இந்திய சீனச் சிக்கலில் முக்கியவொன்றாக இருக்கிறது.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

***************

## 5) சமயச்சச்சரவுகளும் பண்பாட்டுப் புரட்சியும்



இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இருக்கும் எல்லைப் பிரச்சினைகள், திபெத் ஆக்கிரமிப்பு ஆகியவற்றைப் பார்த்தோம். திபெத் ஆக்கிரமிப்பும் தலாய் லாமாவின் இந்தியப் புகலிடமும் இரண்டறக் கலந்தவை என்பதையும் பார்த்தோம். ஆனால், தலாய் லாமாவை ஓர் அரசியற்பிரச்சினையாக மட்டுமே கருதிவிட முடியாது. அவருக்கு மற்றொரு கோணமும் உண்டு. அது என்னவென்றால், சமயம் என்பதும்தான். சமயம் என்பது எப்படி இந்தியாவுக்கும் சீனாவுக்குமான நல்லுறவில் இடம் பிடிக்கிறது என்பதுவும் முக்கியமானவொன்றாகும்.

1950ஆம் ஆண்டு சீனாவில் இடம் பெற்ற கிளர்ச்சியும் புரட்சியும் புதிய அரசினை நிலைநாட்டி, அதன் தொடர்ச்சியாக, புதிதாக அமைந்த அரசுக்குளேயும் நாட்டுக்குள்ளேயும் மீண்டுமொரு கிளர்ச்சியும் புரட்சியும் வெடித்தது. அது, 'பண்பாட்டுப் புரட்சி' என்று அழைக்கப்பட்டது. அப்புரட்சியின் போது, நாட்டில் இருந்த சமயவழிபாட்டுத் தலங்கள் எல்லாம்

அழித்தொழிக்கப்பட்டன. சமயத்தலைவர்கள் சிறைபிடிக்கப்பட்டார்கள்; கொல்லப்பட்டார்கள். ஆளுங்கட்சிக்குள் இருந்த சமயவழிபாட்டாளர்கள் நீக்கப்பட்டார்கள். ஆதரவுக்குரல் எழுப்பியவர்கள் தண்டிக்கப்பட்டார்கள். நாட்டின் தலைவரான 'மாவோ' நாத்திகத்தை வலியுறுத்தினார். பழங்குடியினர் ஊர்ப்புறவாசிகள் மட்டும் நாட்டார் தெய்வங்கள், வழக்காறுகள், முன்னோர் வழிபாடு செய்ய அனுமதிக்கப்பட்டனர். 1975க்குப் பின்னர் உலகமெங்கும் பொருளாதாரமயமாக்கல் இடம் பெறத் தலைப்பட்டது. அதன் நீட்சியாகவும், மேற்குலக நாடுகளின் அழுத்தத்தின் காரணமாகவும், புரட்சித்தலைவன் மாவோ மறைந்து சீர்திருத்தக்காரர்களின் தலைமை இடம் பெற்றதாலும், 1978ஆம் ஆண்டு, கடுமையைத் தளர்த்தி, புத்தம், தாவோயிசம், இசுலாமியம், புரொட்டெசுடண்ட் கிறித்துவம், கத்தோலிக்க கிறித்துவம் ஆகிய ஐந்து மட்டும், கட்டுப்பாடுகளுடன் கடைப்பிடிக்க அனுமதிக்கப்பட்டது.

நடப்பு காலத்தில் நகரப்பகுதிகளில் எண்பது விழுக்காட்டினருக்கும் மேலாக எச்சமயமும் சாராதவர்களாகவே இருக்கின்றனர். ஊரகப்பகுதிகளில் பெரும்பாலும் நாட்டார் தெய்வப் பற்றுடையவர்களாகவும் கணிசமான அளவில் அனுமதிக்கப்பட்ட சமயங்களைத் தழுவியவர்களாகவும் இருக்கின்றனர். ஒட்டுமொத்த அளவில் பார்க்கின், 55-60% சமயம் சாராதவர், 35% நாட்டார்வழக்கு சார்ந்தவர், 10% மக்கள் இதர சமயங்களைச் சார்ந்தவர்களாயும் இருக்கின்றனர்.

Cultivation, வளர்த்தெடுத்தல் எனும் ஆங்கிலச்சொல்லின் வேர் cult என்பதாகும். அப்படியான cult, மூளைச்சலவையின் வாயிலாகத் தனிமனிதர்களையோ உருவகங்களையோ தொழுதுபின்பற்றப் போதித்துவளர்த்தல் என்பது சீனாவில் முற்றாகத் தடை செய்யப்பட்டவொன்றாகும். எடுத்துக்காட்டாக, ஃபலுன் காங்(Falun Gong) எனப்படுகிற யோகக்கலையும் ஆன்மிகச்சொற்பொழிவும் இயைந்த பழக்கவழக்கம் தடை செய்யப்பட்டவொன்றாகும். ஆனால், இந்திய யோகாவிற்குச் சீனாவில் பெருத்த வரவேற்பு உண்டு. கிட்டத்தட்ட 20,000க்கும் மேற்பட்ட யோகா பயிற்சிக்கூடங்கள், இந்திய பயிற்றுநர்களைக் கொண்டு சீனாவில் இயங்கி வருகின்றன. இவையாவும், வெறும் உடற்பயிற்சிக் கூடங்களைப் போல மட்டுமே இடம் பெற்றுப் பெருகி வருகின்றன. 1995க்கும்

2000க்கும் இடைப்பட்ட காலத்தில் யோகா அறிமுகப்படுத்தப்பட்ட போது இடம் பெற்ற யோகா செய்தியிதழ்கள், அவற்றில் இடம் பெற்றிருக்கும் கட்டுரைகளின் தன்மை கருதித் தடை செய்யப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பெருகிவரும் உலகமயமாக்கல், பன்னாட்டு வணிகம் நிமித்தம் இதர சமயத்தைச் சார்ந்த நிகழ்வுகள், விழாக்கள் நடத்த அனுமதிக்கப்பட்டே வருகின்றன. குறிப்பாக, இந்து சமயக் கோவில், யோகா விழா போன்றவற்றை அரசுத் துறையே, தம் கண்காணிப்பின் கீழ், வார்ப்புமுறை இடம்பெற்று விடாதபடிக்கு எடுத்து நடத்தி வருகிறது இப்படி சமயவழிபாட்டு முறைகளை, கடுமையான கட்டுப்பாடுகளுடன் தம் கண்காணிப்பில் வைத்திருக்கும் அரசு, திபெத் எல்லைக்கருகிலுள்ள தவாங் பகுதிக்கு வந்து சமயச்சொற்பொழிவாற்றுவதை சீனா விரும்பவில்லை. 2017 ஏப்ரல் மாதம், அருணாச்சலப் பகுதிக்குச் சென்று வழிபாட்டுக் கூட்டங்களைத் தலாய் லாமா முன்னின்று நடத்தியதைக் கண்டு சினமுற்ற சீனா, இந்தியத் தூதரான விஜய் கோகலேவை அழைத்துக் கண்டனத்தைத் தெரிவித்துக் கொண்டது. இந்தியாவில் இருந்து எவ்விதச் சமயமும் சீனாவுக்குள் நுழைந்து விடக் கூடாது என்பதில் சீனா மிக உறுதியாய் இருக்கிறது என்பதும் கருத்திற்கொள்ள வேண்டியதாகும்.

இந்தியாவில் சமயச்சச்சரவுகள் இடம் பெற்றும் இத்தருணத்தில் சீனாவின் சில கட்டுப்பாடுகளை நாம் பார்த்து விடுவது உசிதமாய் இருக்கும். வாட்சப், எல்லாச் சமூக வலைத்தளங்கள், வழிபாட்டுக் கூடங்கள், ஆரவாரமிக்க விழாக்கள், தொலைக்காட்சி கருத்தாடல்கள் போன்றவை தடை செய்யப்பட்டவை. அவரவர் வீட்டிற்குள் என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். அரசுப் பணிகள், கட்சியில் உறுப்பினராகச் சேர விரும்புவோர், தாம் சமயப் பற்றாளன் அல்லவென்று எழுதிக் கொடுக்க வேண்டும். உறுதிமொழி மீறுதல் சட்டப்படிக் குற்றமாகும். 2017ஆம் ஆண்டு பிற்பகுதியில், ஆட்சிக்கும் கட்சிக்கும் அடுத்த தலைமைக்குழு தெரிவு செய்யப்பட்டது. நடப்புத் தலைவருக்கு அடுத்த இடத்தை இவர்தான் பிடிப்பாரென்று எதிர்பார்க்கப்பட்ட சூழலில், சன் செங்க்காய் என்பவர் நீக்கப்பட்டார். அவர் மீது வைக்கப்பட்ட குற்றச்சாட்டுகளில் முக்கியமானது, முன்னோரைத் தொழும்

பழக்கம் இருந்ததாகவும் கிங்க் ஆஃப் குளோரி விளையாட்டினை விளையாடும் பழக்கம் கொண்டவராகவும் இருந்தது ஆட்சிக்கும் கட்சிக்கும் எதிரானது என்பதாகும்.

இப்படிப் பண்பாட்டு ரீதியாகத் தன்னுடன் முரண்பாடுடையதாய்க் கருதுகிற பாகிசுதான், இந்தியா உள்ளிட்ட தன் அண்டை நாடுகள் எதிலிருந்தும் இறைவழிபாட்டு முறைமைகள் இறக்குமதி ஆகிவிடக் கூடாதென்பதில் மிகக் கட்டுப்பாட்டுடன், எல்லைகளில் கண்கொத்திப் பாம்பாய் இருந்து வருகிறது சீனா.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

---

http://www.shenzhenstuff.com/profiles/blogs/burn-loot-and-pillage-destruction-of-antiques-during-china-s

https://youtu.be/r0c1XilUIM4

***************

### 6) ஆற்றுநீர்ப் பங்கீட்டுச் சிக்கல்

இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம் ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது ஆற்றுநீர்ப் பங்கீடு குறித்த சிக்கலாகும்.

1958இலிருந்து 1962ஆம் ஆண்டுக்கிடையேயான காலகட்டமானது, சீனப் பெரும்பஞ்ச காலமென வரலாற்றில் இடம் பெறுகிறது. இப்பஞ்சத்தின் போது சீனாவில் கிட்டத்தட்ட ஒன்றரைக் கோடி மக்கள் உயிரிழந்தனர். படிப்படியாக நிலைமை தேறினாலும், அடுத்தடுத்த ஆண்டுகளிலும் ஆங்காங்கே பசிபட்டினியினால் உயிரிழப்புத் தொடர்ந்து கொண்டேதான் இருந்தது. இருப்பினும் சீனாவின் மக்கட்தொகையும் படுவேகத்தில் பெருகிக் கொண்டே வந்தது. இதன்காரணமாக, ஒரு குழந்தைச் சட்டம் 1979ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது. ஒருவேளை இச்சட்டம் இடம்பெற்றிருக்காவிட்டால்,

1980ஆம் ஆண்டு 100 கோடியாக இருந்த மக்கள் தொகை தற்போது 200 கோடியளவுக்கு உயர்ந்திருக்கக்கூடும். ஆனால் தற்போது 138 கோடியளவில் மட்டுப்படுத்தப்பட்டு இருக்கிறது. எனவே 60 கோடி பிறப்புகளைக் கட்டுப்படுத்தியதாக சீன அரசாங்கம் கூறிக் கொண்டாலும், பிரச்சினை பிறிதொரு வடிவில் உருவெடுத்திருக்கிறது.




எதிர்வரும் 20 ஆண்டுகளில், தற்போதைய மக்கள் தொகையில் 60 விழுக்காட்டினர் ஓய்வு பெற்று, சமூகத்தில் போதுமான இளையோரின்றி கவனிப்பாரற்ற நிலைக்குத் தள்ளப்படுவாரென்றும், வேலை செய்வதற்கு போதிய ஆட்களின்றி பொருளாதாரம் படுத்துவிடக் கூடிய நிலைமைக்கு ஆளாக நேரிடுமென்ற இக்கட்டான சூழ்நிலை வரக்கூடுமெனவும் கணிக்கப்பட்டது. இதன் காரணமாக, கடந்த 2015ஆம் ஆண்டு 'ஒரு குழந்தைச் சட்டம்' கைவிடப்பட்டு இரு குழந்தைகள் பெற்றுக் கொள்ளும் வகையில் சட்டம் கொணரப்பட்டது. இருப்பினும் பிறப்பு விகிதம் உயரவில்லை. தற்போது குழந்தை பிறப்பை உயர்த்துவதற்கான நடவடிக்கைகள் அரசு தரப்பில் முடுக்கப்பட்டிருக்கின்றன. எனவே எப்படியும் அடுத்தடுத்த ஆண்டுகளில் மக்கள்தொகை உயர்வின் வேகம் உயருமென எதிர்பார்க்கலாம்.

இது ஒருபுறமிருக்க, தற்போதைய தேவையைச் சமாளிக்கவே போதிய தண்ணீர் இல்லாமல் பற்றாக்குறை நிலவி வருகிறது. மக்கள் செறிவாக வாழும் வடசீனாவெங்கும் ஆறுகள் கடுமையாக மாசுபட்டநிலையில் ஓடிக் கொண்டிருக்கின்றன. எண்ணற்ற தொழிற்சாலைக் கழிவுகளும் இதரக் கழிவுகளும் நிலத்தடி நீரையும் பாழ்படுத்திக் கொண்டிருக்கிறது. உலகின் மக்கட்தொகையில் இருபது விழுக்காட்டு மக்களைத் தன்னகத்தே கொண்டிருக்கும் சீனாவிடம், உலகத்தினுடைய குடிநீரில் வெறும் ஏழு விழுக்காடு அளவே தற்போதைக்கு இருக்கிறது. மேலும், நாட்டு மக்களின் பெருந்தொகை உணவான அரிசி விளைவிப்பதிலும் மாசுபட்ட நிலமும் தண்ணீர் பற்றாக்குறையும் சிக்கலை ஏற்படுத்தத் துவங்கியிருக்கிறது. விரவில் உணவுப் பற்றாக்குறையும் இதனால் தலைதூக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. இவற்றோடு, உற்பத்தித்திறன் வளர்ச்சிக்கேற்ற வகையில், மின்னுற்பத்தியிலும் வளர்ச்சியில்லாமல் இருக்கிறது. இவற்றையெல்லாம் சரிக்கட்ட, தென்பகுதியிலிருக்கும் இமயமலைச் சொத்தான திபெத் பீடபூமியைப் பயன்படுத்தியே ஆகவேண்டிய தேவையில் இருக்கிறது சீனா. இதன் விளைவு, பூகோளரீதியாக இந்தியாவுக்கும் சீனாவுக்குமிடையே ஆற்றுநீர்வளப் பங்கீட்டுப் பிரச்சினை முளைக்கிறது.

சீனா(திபெத்)வின் கட்டுப்பாட்டில் இருக்கும் இமயமலையின் வடப்புறத்தில் உற்பத்தியாகி, தென்புறத்திலிருக்கும் இந்தியாவுக்குள் பாய்ந்து வரும் ஆறுகளாக, சிந்து, சட்லெஜ், காக்ரா, கண்டக், கோசி, மானஸ், சுபான்சிறீ, பிரம்மபுத்திரா, திபாங், லோகித் ஆகியவை உள்ளன. இவற்றுள், சிந்துவும் பிரம்மபுத்திராவும்தான் பேராறுகளாகும்.

சிந்துநதியானது திபெத்தின் மேற்குப்பகுதியில் இமயமலையில் தலைமாட்டிலுள்ள கைலாயமலையின் மானசரோவர் ஏரிக்கருகில் உற்பத்தியாகி, இந்தியாவின் கட்டுப்பாட்டிலுள்ள காசுமீரத்தின் வழியே உட்புகுந்து பாகிசுதானின் தேசியநதியாகி அரபிக்கடலில் கலக்கிறது. நேரு - அயூப்கான் ஒப்பந்தப்படிக்கு, ஐந்து விழுக்காட்டு உரிமைதான் இந்தியாவுக்கு உள்ளது. அதற்கு ஈடாக, சிந்துநதியின் துணையாறுகளான திபெத்தில் உருவாகிக் கடக்கும் சட்லஜ், இந்தியப்பகுதியில் உருவாகும் இராவி, பியாசு உள்ளிட்டவற்றின் உரிமை இந்தியாவிடம் இருக்கின்றபடியாவில்

இந்தியாவுக்கு இப்பகுதியில் ஆற்றுநீர்ப் பங்கீட்டுப் பிரச்சினை பெரிதாக இல்லை.

கைலாயத்தின் உச்சியில் 'சாங்போ' எனும் பெயரில் எழுச்சியோடு புறப்பட்டு, இமயமலையின் வடபுறத்தில் சீனக்கட்டுப்பாட்டுப் பகுதியிலேயே வளைந்து நெளிந்து கிழக்கு நோக்கி ஏறத்தாழ 1800 கிலோமீட்டர் தூரம் பாய்ந்து வந்து, இந்தியாவின் கட்டுப்பாட்டிலிருக்கிற அருணாச்சலப் பிரதேசத்தில் எல்லைக்கோட்டருகே தென்மேற்காக வளைந்து 'சியாங்' எனும் பெயரில் ஆர்ப்பரித்து நுழைந்து இந்தியச் சமவெளிக்குள் 'திகாங்' என பெயர்மாற்றம் கொண்டு பாய்கிறது இப்பேராறு. கிட்டத்தட்ட 35 கிமீ சலனமின்றிச் சமவெளியில் பாய்ந்து, கிழக்கிலிருந்து சீறிவரும் திபாங், லோகித் ஆகிய துணையாறுகளை உள்வாங்கியதும் ஆரவாரத்துடன் மேற்குநோக்கிப் பாய்ந்து அசாம் மாநிலத்துக்குள் பிரம்மபுத்திராவாக நுழைகிறது. இடப்பக்கத்திலிருந்து சுபான்சிறீயும் வலப்பக்கத்திலிருந்து தனசிறீயும் வந்து சேர்ந்து கொள்ள பத்து கிமீ அகலம் பரப்பிப் பாய்கிறது இந்த பிரம்மபுத்திரா. படிப்படியாக கோப்பிலி, மானஸ், துப்ரி முதலான துணையாறுகளும் வந்து பிரம்மபுத்திராவில் சங்கமித்துக் கொள்கின்றன. இவை எல்லாமுமாய்க் கலந்து பங்களாதேசுக்குள் நுழைய, சிக்கிமிலிருந்து டீஸ்ட்டாவும் வந்து சேர்ந்து கொள்ள 'ஜமுனா' என்றாகி டாக்கா நோக்கிப் போகிறாள். கீழ்க்கங்கையிலிருந்து பிரிந்து வந்து இடப்பக்கமாய்ப் புணர்ந்து கொண்ட பத்மாவும் சற்றே தொலைவில் வலப்பக்கமாய் வந்து கலந்த சுர்மாவுமாய்ச் சேர்ந்து மேக்னாவாய்க் கீழ்நோக்கி வந்து, வங்காள விரிகுடாக் கழிமுகத்தில் தம்முடைய 2800 கிலோ மீட்டர் பயணத்தை முடித்து அமைதி கொள்கிறாள் இவள்.

இதனால் என்ன பிரச்சினை? தண்ணீர்ப் பற்றாக்குறையும் மின்சாரப் பற்றாக்குறையும் கழுத்தை நெரிக்க, கைவசமிருக்கும் கைலாயமலையை, அம்மலைதரு கொடையைச் சும்மா விட்டு வைக்குமா சீனா?? 1800 கிமீட்டர் தூரம் மலைகளுக்கிடையே ஓடிவரும் பாதையில் ஏற்கனவே மூன்று அணைகளைக் கட்டி மின்சாரம் எடுக்கத் துவங்கிவிட்டது சீனா. அடுத்த ஐந்தாண்டுகளில் இன்னும் சில பல திட்டங்களை நிறைவேற்றக் காத்திருக்கிறது. கூடவே, தண்ணீரையும் குழாய்கள் போட்டு திபெத் பீடபூமி

வழியாகக் கொண்டு செல்லவும் தயங்காது. இதன் விளைவு இந்தியாவுக்கு என்னவாக இருக்கும்?

நீர்வரத்துக் குறைவால், விவசாயிகளின் பாசனம் பாதிக்கும். இந்தியாவின் பாசனப் பாதிப்பை விட, பங்களாதேசின் பாசனம் பாதிக்கும். ஏற்கனவே பங்களாதேசு மக்களின் அத்துமீறிய குடியேற்றத்தால் வடகிழக்கு மாகாணங்களில் கொந்தளிப்பு. அம்மக்களிடையே இது நடந்தால் இன்னும் பதற்றத்தை அதிகரிக்கும். இத்தனைக்கும் மேற்பட்டு, கட்டப்படும் அணைக்கட்டுகளால் நிலநடுக்கம் ஏற்படும் போதெல்லாம் மலையுச்சிக்குக் கீழேயிருக்கிற இந்திய மக்கள்தாம் பாதிப்புக்குள்ளாவர். மழைக் காலங்களில் ஆற்றுப் பெருக்கு குறித்த தகவலைச் சரிவர மற்றவர்களுக்குத் தெரிவிக்கப்படுவதில்லை. ஆற்றுப் பாய்ச்சலின் கீழ்நிலையில் இருக்கும் இந்திய வடகிழக்கு மாநிலங்கள் அவ்வப்போது இத்தகைய இடரை எதிர் கொள்ள வேண்டியிருக்கிறது. இப்படியாக வடகிழக்குப் பிராந்தியத்தின் வாழ்வாதாரத்தின் நிலை கேள்விக்குள்ளாகும். அமைதிக்கும் பாதுகாப்புக்கும் கூடுதல் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. . சிந்துநதிப் பங்கீட்டு ஒப்பந்தம் போல, சீனா, இந்தியா, பங்களாதேசுக்குமிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட வேண்டும்.

சீனாவின் கை எல்லாவிதத்திலும் ஓங்கி இருக்கிற நிலையில், இந்தியாவும் பங்களாதேசும் எதை விட்டுக் கொடுத்து, எதை பெறப் போகின்றன? நீர்வளத்துக்குத்தான் உலகப் போர் மூளும் என்பர். இந்நாடுகளுக்கிடையே அப்படியெல்லாம் நடக்காத வகையில், பிரம்மபுத்திரா ஆற்றுநீர்ப் பங்கீட்டு ஒப்பந்தம் உருப்பெற வேண்டியதும், அதற்கு நாட்டுப்பற்றாளர்கள் பூகோள அரசியலுணர்வு தரித்துக் கொள்ள வேண்டியதும் காலத்தின் கட்டாயம்.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

---

http://chinawaterrisk.org/big-picture/china-water-crisis/

https://youtu.be/999ngrj_BHM

***************

### 7) சீலா/சேலா கணவாய்ச் சுரங்கம்



இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது சீனா நுழைவிசைவு(visa) குறித்த சிக்கலாகும்.

அருணாச்சலப் பிரதேசத்தைத் தம் மாகாணங்களுள் ஒன்றான திபெத்தின் தென்பகுதியென்றே சொல்லி வருகிறது சீனா. எல்லைத் தகராற்றுக்குட்பட்ட காசுமீர், இந்நிலையில் இந்தியக் கடவுச்சீட்டு வைத்திருப்பவர்கள் யாராவது சீனா செல்வதற்கான நுழைவிசைவுக்கு விண்ணப்பித்தால், விண்ணப்பிப்பவர் காசுமீர் அல்லது அருணாச்சலப் பகுதியைச் சார்ந்தவராக இருப்பின், நுழைவிசைவினை அவர்களுடைய கடவுச்சீட்டில் பதிக்காமல், நுழைவிசைவு பதிக்கப்பட்ட தனித்தாளைக் கடவுச்சீட்டுடன் கோர்த்துக் கொடுக்கும் பழக்கத்தைச் செயற்படுத்து வருகிறது சீனா.

பிரச்சினைக்குரிய பகுதிகளாகக் கருதும் இடங்களில் இருந்து விண்ணப்பிப்போருக்கு விசா கொடுப்பதை தவிர்த்தே வந்திருக்கிறது சீனா. கொடுப்பதும் கொடுக்காமல் விடுவதும் அந்தந்த நாட்டின் உரிமை என்கிற வகையில் அதுவொரு பிரச்சினையாகப் பார்க்கப்படவில்லை. ஆனால் 2000ஆம் ஆண்டுக்குப் பின்னர், காசுமீர், அருணாச்சலப் பகுதியைச் சார்ந்த விண்ணப்பதாரர்களுக்குத் தனித்தாள் நுழைவிசைவினைக் கொடுக்கத் துவங்கியதும், இந்திய வெளிவிவகாரத்துறை அச்செயலுக்குக் கடும் கண்டனத்தைத் தெரிவித்தது. எந்தவொரு நாடும் தம் குடிமக்களைப் பிரித்தாளும் தன்மைக்கு இட்டுச் செல்வதை ஏற்கமுடியாது என்கிற விதத்தில் இந்தியாவின் எதிர்வினைக்கு மற்ற நாடுகளும் ஆதரவளித்தே வருகின்றன. இதற்குப் பதிலடி கொடுக்குமுகமாக, தனித்தாள் நுழைவிசைவு வைத்திருப்போரை வெளியேற அனுமதிக்கக் கூடாதெனும் அறிவிப்புகள் எல்லா விமானநிலையக் குடிவரவு அலுவலர்களின் வேலையிடங்களிலும் ஒட்டப்பட்டு இருக்கின்றன.

இதுமட்டுமன்றி தான் வழங்கும் நுழைவிசைவுத் தாளில் இருக்கும் தன் நாட்டு வரைபடத்தில் காசுமீர், அருணாச்சலப் பகுதியையும் சேர்த்திருக்கிறது சீனா. இதற்கும் பதிலடி கொடுக்குமுகமாக, தாம் கொடுக்கும் நுழைவிசைவு மற்றும் இதர ஆவணங்களிலிருக்கும் இந்திய வரைபடத்தில், எல்லாப்பகுதியும் இருக்கும் வண்ணம் பார்த்துக் கொள்ளுமாறு சீனாவிலிருக்கும் தம் அலுவலகங்களைப் பணித்திருக்கிறது இந்தியா.

அருணாச்சலப் பகுதிக்கு விரைவில் இந்தியப் பிரதமர் வருகையளிக்க இருப்பதும், அசாம் மாநிலத்தில் முதலீட்டாளர் மாநாடு நடத்தி கட்டமைப்புப் பணிகள், இதர தொழிற்சாலைகள் அமைக்க எடுத்து வரும் முயற்சிகளும், 2018ஆம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் 'செலா கணவாய்' சுரங்கப்பாதை அமைக்க நிதி ஒதுக்கியிருப்பதும், எல்லைக்கருகே இருநாடுகளுமே போர்த் தளவாடங்களைக் குவித்து வருவதும், போர் மேகம் சூழ்ந்து விட்டதோவென நினைக்க வைப்பதாக மேற்குலக நாடுகள் தம் பதற்றத்தைத் தெரிவித்திருக்கின்றன.

செலா கணவாய்(Sela Pass) என்பது, எல்லைக் கோட்டருகேயுள்ள அருணாச்சலப் பிரதேசத்தின் தவாங் பகுதியையும் இந்தியாவின் பிறபகுதியையும் இணைக்கக் கூடிய ஒரே ஒரு கேந்திரம் முக்கியத்துவம் வாய்ந்ததும், கடல் மட்டத்திலிருந்து 13,700 அடிகள், 4.2கிமீ உயரத்திலிருக்கும் விபரீதமான ஓர் இடமாகும். நிலச்சரிவு, பனிப்பொழிவு, இருள்சூழ்தன்மை முதலானவற்றால் போக்குவரத்தென்பதே துணிகரச் செயலாக இருக்கும் பகுதியாகும். அப்படியான இடத்தில் சுரங்கப்பாதையென்பது, இராணுவம், அருணாச்சலப்பகுதி மக்கள் மட்டுமல்லாது பூகோளமுக்கியத்துவம் அறிந்த அனைவராலும் வெகுவாக வரவேற்கப்படுகிறது.




1962ஆம் ஆண்டு, நவம்பர் 17. மலையுச்சியை சீனப்படை நெருங்கி விடுகிறது. உடனிருந்தோரெல்லாம் வீழ்ந்து விடுகின்றனர். 21 வயதேயான ஜஸ்வந்த் சிங் ராவத், தனியாள், தடுப்புக்காவலுக்குப் பின்னர் இருந்து கொண்டு தாக்குதலைத் தொடுக்கிறான். சீனப்படைகள் சிதறுகின்றன.

தனியாளாய் இருப்பதைப் பார்த்த உள்ளூர்ப் பழங்குடிச் சிறுமிக், செலா, நுரா இருவரும் உதவிக்கு வந்து சேர்ந்து விடுகின்றனர். ஆங்காங்கே இருக்கும் துப்பாக்கிகள், தளபாடங்களைக் கொண்டு போய் அவன் சொல்லுமிடத்தில் வைப்பதுதான் இவர்களுடைய வேலை. இடம் மற்றி இடம் போய்ச் சுட்டு வீழ்த்துகிறான். செலாவும் நுராவும் உணவுக்கு வழிவகை செய்கின்றனர். நாட்கள் நகர்கின்றன. கிட்டத்தட்ட 300 சீனச்சிப்பாய்கள் மடிந்து விழுகின்றனர். அவர்களுக்கோ, இதைக் கடந்தால்தான் மேற்கொண்டு முன்னேற முடியும். மூன்று நாட்களை முறியடித்து விட்டான் ஜஸ்வந்த் சிங்.



நான்காம் நாள். உள்ளூர் வேலையாள் ஒருவனைச் சிறைபிடித்து விடுகிறது சீனப்படை. தடுப்புக்காவலில் இருப்பது ஒரே ஒருவன்தான். கூடத் துணைக்கு இந்த இரு இளம்பெண்களை வைத்துக் கொண்டு அவன்தான் சீனப்படைகளை சிதறடித்துக் கொண்டிருக்கிறான் எனும் தகவல் தெரியவர, சீனப்படைகள் சீறிப்பாய்கின்றன. அவனை நோக்கி வீசப்பட்ட எறிகுண்டுக்குப் பலியாகிப் போனாள் செலா. சீனப் படைகள் அண்மித்து விட்டதை உணர்ந்தவன் தன்னைத்தானே சுட்டுக் கொண்டான். சீனப்படைகள் நுராவை சுட்டு வீழ்த்தியது. அவனுக்கு ஊக்கமாயிருந்த செலாவின் நினைவாகிப் போனது இந்த 'செலாக் கணவாய்'. அவளுக்குத் துணையாக இருந்த நுராவின் நினைவாகிப் போன அந்த ஊர், இன்று நுரானங். அந்த நுரானங் எனும் ஊரில்தான் அவனுக்கான கோயில், 'ஜஸ்வந்த் கார்க்' எனும் பெயரில்.

ஜஸ்வந்த் கார்கில், அவன் இருந்த அறையில் இன்றும் அவன் பயன்படுத்திய பொருட்கள் காட்சிக்கு வைக்கப்படுகின்றன. ஐந்து வீரர்கள் வந்து அவன் அறையைத் துப்புரவாக்கி, அவன் பயன்படுத்திய துப்பாக்கி, தோட்டாக்கள், உடுப்புகள் போன்றவற்றை நாள்தோறும் துடைத்து வைக்கின்றனர். அவன் இன்னமும் அங்கிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொண்டிருப்பதாக தவாங் பகுதி மக்கள் நம்புகின்றனர்.

குளிர்காலம் நெருங்கியதை உணர்ந்துதான் 'தோக்லாம்' எதிர்ப்பாடு கைவிடப்பட்டதா? எல்லையின் இருமருங்கிலும் இருநாட்டுப் படைகளும் தத்தம் தளபாடங்களைக் குவித்து வருவது, குளிர்காலம் முடிந்தவுடன் சமர் கொள்ளவா?? முந்தைய போரினை நினைத்துப் பாருங்கள் எனச்சொல்ல, இன்றைய இந்தியாவின் நிலை வேறு எனச்சொன்னது அணு ஆயுதங்களை மனத்திற்கொண்டா?? பூகோள அரசியற்போர் தென்சீனக்கடலில் துவங்குமா? தவாங், தோக்லாமில் துவங்குமா?? வினாக்களுக்கு வரைமுறையில்லை. அமைதியும் இணக்கமும் கைகூடுவதாக. காலம் மட்டுமே விடையளிக்கும். அது எந்தக் காலமானாலும், அந்தக் காலத்திற்கும் தப்பாமல் செலா, நுரா, ஜஸ்வந்த்சிங் கிடைத்துக் கொண்டே இருப்பர் என்பது மட்டும் உறுதி.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

https://www.telegraphindia.com/1150604/jsp/nation/story_23835.jsp

https://prashantb.wordpress.com/2016/09/19/the-unsung-hero-of-1962-war-rifleman-jaswant-singh-rawat/

https://youtu.be/unuLqbyMtZM

https://youtu.be/-ACI9JmXgDM

***************

## 8) வணிகச் சமன்பாடின்மை




இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல் ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது வணிகச் சமன்பாடின்மை(trade deficit) குறித்த சிக்கலாகும்.

கிபி இரண்டாயிரத்தில் ஆண்டுகளுக்கிடையிலான இந்திய சீனா வணிகத்தில், இந்தியப் பொருட்கள் 1.35பில்லியன் அளவுக்கும், இந்தியாவுக்குள் சீனப்பொருட்கள் 1.56பில்லியன் அளவுக்குமாக இருந்து, இந்தியாவின் பற்றாக்குறை 0.21பில்லியன் டாலர்களாக இருந்தது. வணிகம்

படிப்படியாக உயர்ந்து, இன்றைக்கு இந்தியாவின் பற்றாக்குறை தோராயமாக 53பில்லியன் டாலராக இருக்கிறது. பற்றாக்குறை என்பதைக் காட்டிலும், சீனாவுக்கு இந்தியா கொடுக்க வேண்டிய பணத்தின் அளவு கூடிக்கொண்டே போவதால், அரசியல், புவிசார் உரிமை எனப் பல வகையிலும் சீனாவின் பிடி ஓங்கிக் கொண்டே இருக்கிறது.

ஏன் இந்திய சீன வணிகத்தில் இந்த ஏற்றத்தாழ்வு? இந்தியா சீனாவிடமிருந்து உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களை வாங்குகிறது. ஆனால் சீனாவின் இந்திய இறக்குமதியானது, சீனாவுக்குத் தேவையான மூலப்பொருட்களான கனிமத்தாது(இரும்பு, துத்தநாகம், செம்பு உள்ளிட்ட கனிமங்கள், மதிப்பு மிகுந்த கற்கள் எனப் பலவும்) போன்றவற்றையாக மட்டுமே உள்ளன. சுருங்கக் கூறினால், மூலப்பொருட்களை குறைந்த விலைக்குக் கொடுத்து, அக்கடையிலிருந்தே அதனின்று செய்யப்பட்ட பொருட்களை பன்மடங்கு அதிகப்படியான விலைகொடுத்து வாங்குவதற்கு ஒப்பானதாகும். 1.56பில்லியன் டாலர்கள் சமன்பாடின்மையாக இருந்த நிலையானது, 53பில்லியன் டாலர்கள் சமன்பாடின்மையாகக் கடந்த பதினைந்தே ஆண்டுகளில் உயர்ந்திருக்கிறது என்பதை, இந்தியர்களின் நுகர்வுக் கலாச்சாரம் நாட்டை எந்த அளவுக்கு இக்கட்டில் ஆழ்த்திக் கொண்டிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளக் கூடிய தகவலாகவும் நாம் எடுத்துக் கொள்ளலாம்.

இயற்கையின் விளையாட்டு எப்போதுமே விநோதமானதுதான். ஓரிடத்தில் ஏதோவொன்று மிகைப்படும்போதோ குறைபடும்போதோ, மறுகோடியின் எங்காவது ஓரிடத்தில் உரிய ஆப்பைச் சொருகி நிலையைச் சமன்படுத்திக் கொள்ளும். சீனாவின் பொருளாதார மேம்பாடு, அந்நாட்டு மக்களை இயற்கையினின்று வெகுதொலைவு கொண்டு போய் நிறுத்தியது. அதன் விளைவுகளில் ஒன்றாக, அந்நாட்டு மக்கள், இறைச்சி உண்பதை மேட்டிமையாக, பெருமையாக, நலம் பயப்பதாகக் கருதி இறைச்சிமிகுந்த உணவுகளை வெகுவாக உண்ணத் தலைப்பட்டனர். இறைச்சியின் தேவை பன்மடங்கு உயர்ந்து நாட்டையே உலுக்கி விட்டது.

அதிகமான அளவில் இறைச்சி தேவைப்பட, ஊரகப்பகுதியில் இருந்தவர்கள் எல்லாரும் தத்தம் விவசாயத்தைக் குறைத்துக் கொண்டு, ஒவ்வொரு வீடுகளிலும் ஐம்பது முதல் நூறு பன்றிகள் வரை வளர்க்கத் துவங்கினார்கள். நகரங்களில் இருப்போரெல்லாம் தொழிற்சாலைகளில் வேலை செய்து பொருட்களை ஏற்றுமதி செய்து கொண்டிருக்க, ஊரகங்களில் இருப்போரெல்லாம் பன்றி வளர்ப்பில் ஈடுபட்டார்கள். நாய் வளர்ப்பில் ஈடுபட்டார்கள். வசதியிருக்கிறவர்கள் 10 யுவான் கொடுத்து பன்றிக்கறி வாங்கி உண்டனர். வசதியற்றவர்கள் 5 யுவான் கொடுத்து அதே அளவு நாய்க்கறியை வாங்கி உண்டனர். விளைவு என்னவாக இருந்தது?

பன்றி வளர்ப்பில் இடம்பெற்ற சிறுநீர்க்கழிவு, பீக்கழிவு போன்றவை மொத்த வடசீனாவின் நிலத்தடியை நஞ்சாக்கி, நீர்நிலைகளையும் ஆறுகளையும் மாசுபடுத்தியது. பன்றி வளர்ப்புக்கும் இதர கால்நடை வளர்ப்புக்குமான தண்ணீர்த் தேவை பன்மடங்கு உயர்ந்து, இயற்கைச் சூழலின் இயக்கத்தை முற்றாகச் சீர்குலைத்தது. தற்போதைய இறைச்சித் தேவையை, சரிபாதி அளவுக்குக் குறைக்க அரசாங்கம் முடிவு செய்து கடுமையான கட்டுப்பாடுகளை மேற்கொண்டு வருகிறது. என்றாலும் இறைச்சித் தேவையை இன்று வரை அரசாங்கத்தால் குறைக்க முடியவில்லை. குடிசைத் தொழிலாக இருக்கும் பன்றி வளர்ப்பை ஒழித்து, பெரும்பண்ணைகள் மூலமாக பன்றிவளர்ப்பை மேற்கொண்ட முயற்சியில், பன்றிகள் வாயிலாக மக்களிடையே ஏற்பட்ட தீராத வியாதிகள் வெகுவாக ஒழிக்கப்பட்டன. ஆனாலும் தண்ணீர்த் தேவையும் சுற்றுச்சூழல் மாசும் கட்டுக்குள் வரவில்லையென்பதுதான் சீனாவின் பெருங்கவலை.

சுற்றுச்சூழல் துன்பம் ஒருபுறம் நெருக்கிக் கொண்டிருக்க, மறுபுறம் பண்பாட்டுத் துன்பமும் சீன மக்களைப் பதம் பார்த்தது. ஊரகப்பகுதியில் வாழும் பழங்குடிமக்களும் ஏழை மக்களும் அவர்களுடைய வசதிக்கேற்ற நாய்க்கறியை உண்டு வருகின்றனர். நாய்க்கறி விழா எடுத்தனர். நகரங்களில் வாழும் நாகரிகம் மிகுந்த சீனர்களை அது வருத்தம் கொள்ளச் செய்தது. பெருவாரியாகத் திரண்டு நாய்க்கறி உண்பதற்கு எதிராகக் குரல் கொடுத்தனர். அரசாங்கம், அது நாட்டுப்புற மக்களின் வழக்காறு, பண்பாடு என்றெல்லாம் சொல்லிச் சமாளித்து வருகிறது.

இந்தச் சூழ்நிலையைப் புரிந்து கொண்ட இந்திய அரசு கடந்த பத்தாண்டுகளாகவே, இறைச்சி ஏற்றுமதியின் வாயிலாகச் சீனாவுடனான வணிகச் சமன்பாடின்மையை களைந்து விட எண்ணியது. ஆனால், இந்திய இறைச்சியில் சுகாதாரக் குறைபாடுகள் உள்ளனவென்று சொல்லி, இறக்குமதிக்குத் தடை விதித்தது. இதன்பொருட்டு, இந்தியாவிலிருந்து வியட்நாம் வாயிலாக வியட்நாம் கறியாய்ச் சீனாவுக்குள் இறக்குமதி செய்யப்பட்டது. அம்முயற்சி ஓரளவு பயனைக் கொடுத்தாலும், கிடைக்கும் இலாபத்தை வியட்நாமுடன் பங்கு போட வேண்டிய நிலை. இத்தருணத்தில் புதிதாய் அமைந்த இந்திய அரசு சீனாவுடன் நெருக்கிப் பேசியதில், நேரிடையாக இறக்குமதி செய்வதாகச் சொல்லி, கடந்த 2017 முதல் அத்தகைய இறக்குமதிக்கு அனுமதி வழங்கியிருக்கிறது சீனா. இருப்பினும் சீனப்பொருட்களின் நுகர்வும் இந்தியாவில் பெருகிவருவதால், சமன்பாடின்மையானது உடனே கட்டுக்குள் வரவில்லை.

இந்தியாவின் பலம் என்பது, சேவை வழங்குதல், மருந்துப்பொருள் ஆராய்ச்சி, மென்பொருள் கட்டுமான ஆகியவையாகும். இத்தகைய பலத்தைத் தமக்கு உண்டாக்கிக் கொள்வதற்கான முயற்சிகளுக்கு இந்தியாவைத் துணைக்கு அழைக்கிறதேவொழிய, நேரிடையான வணிகத்துக்கு மறுப்புத் தெரிவித்தே வருகிறது சீனா. இந்த இழுபறியில் இந்தியா வளைந்து கொடுக்காமல் இருந்து வருகிறது. ஆராய்ச்சி செய்யும் நிறுவனங்களைப் பெரும்விலை கொடுத்து வாங்கியது சீனா. உடனே தலையிட்ட இந்திய அரசு, அந்த வணிகத்துக்கான ஒப்புதலைக் கொடுக்காமல் மறுப்புத் தெரிவித்தது.

சமன்பாடின்மையைக் குறைக்க இந்தியாவிற்கு இரு வழிகள்தாம் உள்ளன. முதலாவது, சீனச்சந்தையைப் புரிந்து கொண்டு சரியான பொருட்களை ஏற்றுமதியைப் பெருக்குவது. இறைச்சி உற்பத்தியைப் பெருக்கினால், இந்தியாவும் சீனாவாகும் ஆபத்து உள்ளது. இரண்டாவது, சீன இறக்குமதியை வெகுவாகக் குறைப்பது. முதலாவது வழிக்கு, அரசாங்கமும் தொழில்முனைவோரும் முயலவேண்டும். இரண்டாவது வழிக்கு, கடவுள், பக்தி, அவன், இவன், சாதி, சமயம் போன்ற உணர்வுக் கலாச்சாரத்தைக் கைவிட்டு, மிகையான நுகர்வுக் கலாச்சாரவொழிப்புக்கு வித்திட வேண்டியவர்கள் நாட்டு மக்கள்.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

---

http://www.agriculture.gov.au/SiteCollectionDocuments/agriculture-food/food/publications/food-consumption-trends-in-china/food-consumption-trends-in-china-v2.pdf

http://www.straitstimes.com/asia/east-asia/more-in-china-are-eating-dog-meat-but-its-set-to-change

http://indianexpress.com/article/business/business-others/china-finally-agrees-to-import-buffalo-meat-from-india-4476301/

http://money.cnn.com/2015/08/05/news/economy/india-beef-exports-buffalo/index.html

https://www.theguardian.com/environment/2010/feb/09/china-farms-pollution

https://www.theguardian.com/world/2016/jun/20/chinas-meat-consumption-climate-change

***************

## 9) புன்னகைக்கும் புத்தர்

இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல், வணிகச் சமன்பாடின்மை(trade deficit) ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது 'புன்னகைக்கும் புத்தர்' குறித்த சிக்கலாகும்.

கதிரியக்க மருத்துவம், அணுமின்சக்தி வழங்கல், அணுவுலை கட்டுமானம் போன்ற அணுசக்தி தொடர்பான பணிகளை எல்லா நாடுகளும் செய்து விட முடியாது. அணுசக்தி விநியோக நாடுகள் குழுமத்தில், Nuclear Suppliers Group (NSG) உறுப்பினர்களாக இருக்கும் நாடுகள் மட்டுமே செய்ய முடியும். அதைமீறி எந்த நாடாவது அவற்றைச் செய்யத் தலைப்பட்டால், அந்த நாடு உலகளாவிய பொருளாதாரத்தடைக்கு ஆட்பட நேரிடும். அந்தக் குழுமத்தில் இந்தியா இல்லை. எனவே அணுவுலை கட்டவோ, அணுசக்தி சார்ந்த இதரப்பணிகளை அடுத்த நாடுகளுக்கு வணிகரீதியில் பணியாற்றவோ அனுமதி கிடையாது. விண்வெளித் துறையில், பொருளாதாரத்தில் முக்கிய நாடாக விளங்கும் இந்தியா, இக்குழுமத்தில் உறுப்பினராய்ச் சேர

விரும்புகிறது. புதிதாக ஒரு நாட்டை உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமானால், தற்போது அக்குழுவில் இருக்கிற 48 நாடுகளும் ஒப்புதல் அளிக்க வேண்டும். அப்படியான ஒப்புதலை அளிக்க சீனா மறுக்கிறது. ஏன்? 'புன்னகைக்கும் புத்தர்' குறித்து அறிந்து கொண்டால்தான், சீனாவின் மறுப்புக்கான பின்னணி புரியவரும்.



1944ஆம் ஆண்டு ஹோமி பாபா அணுசக்தி குறித்த ஆய்வுகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். இந்திய விடுதலைக்குப் பின்னர், பிரதமர் நேருவுடன் நேரடித் தொடர்பில் இருண்டு கொண்டு படிப்படியாக துறைசார் பணிகளில் மேம்பாட்டினை அடைந்து வந்து கொண்டிருந்தார். அமெரிக்கா, கனடாவுடன் இணைந்து பணிகள் குறித்தான கருத்தாடலில் ஈடுபட்டிருந்தனர் நேருவும் பாபாவும். ஒருகட்டத்தில் இந்த நாடுகளில் இருந்து இறக்குமதி என்பதற்கு மாறாக, உள்ளூர்த் தயாரிப்பு என்பதில் உறுதியாக இருந்தனர் பாபாவும் நேருவும். 1960ஆம் ஆண்டு அணுமின் நிலையமொன்றை மராட்டியத்தின் தாராபூரில் நிறுவும் ஆலோசனையில் ஈடுபட்டார் பிரதமர் நேரு. அப்போதுதான் நாம் ஏன் அணுவாயுதம் உற்பத்தி செய்யக் கூடாதென வினவினார். 'இன்னும் ஓர் ஆண்டுக் கால அவகாசம் கொடுங்கள், முடித்துக் கொடுக்கிறேன்' என்றார் பாபா.

பணிகள் நடந்து கொண்டிருந்தன. மோப்பம் பிடித்து விட்டது சீனா. எல்லையில் பதற்றம் தரும் வகையில் நடந்து கொள்ள, நேரு தடுப்புக் காவலரண்களை முன்னகர்ந்து நிறுவ, போர் வெடித்தது. பல மாற்றங்கள். பணிகள் தொய்வடையத் துவங்கின. நேருவின் மரணம் பாபாவை ஏமாற்றத்துக்குள் ஆழ்த்தியது. ஆனாலும், அவர் சொல்லிவிட்டுச் சென்ற பணியை முடித்தே தீருவேன் எனச் சூளுரைத்தார். அக்டோபர் 16, 1964 அன்று தம் பரிசோதனையொன்றை மிக இரகசியமாய்ச் செய்து முடித்துவிட்டு, அகில இந்திய வானொலியில் நாட்டு மக்களுக்கு உரை நிகழ்த்தினார் பாபா. "அமெரிக்காவிடம் இருக்கும் அணு ஆயுதங்களைப் போல நாமும், அவர்களைக் காட்டிலும் குறைந்த செலவிலேயே செய்து விட முடியுமென அமெரிக்காவுக்கு ஆன பொருட்செலவு, நமக்குத் தேவையான பணத்தின் இலக்கு இவ்வளவு" என்று மீண்டும் 1966ஆம் ஆண்டு இடம்பெற்ற கூட்டமொன்றில் பேசினார். அடுத்த சில நாட்களில் விமான விபத்து ஒன்றில் அவர் மரணமடைந்ததாகக் கூறப்பட்டது. அவர் சென்ற விமானம் ஆல்ப்ஸ் மலைத்தொடரின் மான்ட் பிளாங்க் என்ற பகுதியில் மோதி விழுந்திருக்கலாம் என்று கூறப்பட்டது. ஆனால், அங்கு விமானத்தின் சிதறிய பாகங்கள் எதுவும் கண்டு பிடிக்கப்படவில்லை. இவருடைய மரணத்தில் மர்மம் இருப்பதாகக் கூறப்பட்டது. அநேகமாக இது அமெரிக்கா அல்லது சீனாவின் வேலையாக இருக்கலாம் என்று இன்றுவரை நம்பப்பட்டு வருகிறது.

பாபாவுக்குப் பின்னர் அந்த வேலையை விக்ரம் சாராபாய் அவர்களிடம் பணித்தார் லால்பகதூர் சாஸ்திரி. 'நான் காந்தியவாதி, என்னால் அழிவுக்கான ஆயுதங்கள் தயாரிக்கும் பணியில் ஈடுபட முடியாது' என மறுத்துவிட்டார் விக்ரம் சாராபாய். சீனாவும் மேற்குலக நாடுகளும் அணுவாயுதத்தைச் சொல்லிச் சொல்லியே மிரட்டினர். பாகிசுதானுக்கு ஆதரவாக அமெரிக்கப் போர்க்கப்பலை இந்தியாவின் எல்லைக்கு அனுப்பினார் நிக்சன். இந்திரா கொந்தளித்தார். அந்தக் கப்பலுக்குப் பின்னாலேயே அணு ஆயுத ஏவுகணைகளுடன் வந்து நின்றது சோவியத் நீர்மூழ்கிக்கப்பல். பங்களாதேசு பிறந்தது. நிக்சன் பேசிய பேச்சுகளும் சீனாவின் பேச்சுகளும் இந்திராவுக்குள் கனன்று கொண்டிருந்தது.

மே 18, 1974, புத்தர் பிறந்தநாள். திபெத்தியர்களின் புத்தர் பிறந்தநாள் திபெத்தில் இடம்பெறாமல் ஆட்சிபுரிந்து கொண்டிருந்தது சீனா. ஆனால் புத்தர் சிரித்தார். பாகிசுதான் எல்லையில், அணு ஆயுத வெடிப்புச் சோதனை வெற்றிகரமாய் நிகழ்ந்தது. உலகமே அதிர்ந்தது. 'புன்னகைக்கும் புத்தர்' என்று பெயரிட்டு, மிக இரகசியமாக அத்திட்டத்தைக் கையிலெடுத்திருந்தார் இந்திரா. அணு ஆயுதச் சோதனை முயற்சி குறித்து நாட்டின் இராணுவ அமைச்சர் ஜெகஜீவன்ராமுக்கே தெரிந்திருக்கவில்லை. வெளியுறவுத்துறை அமைச்சர் சுவரன்சிங்குக்கு மட்டும் சிலமணி நேரத்துக்கு முன்பாகத் தெரிவிக்கப்பட்டிருந்தது. இந்தியா ஆர்ப்பரித்தது. அமெரிக்காவும் சீனாவும் பிரிட்டனும் அதிர்ந்து போய் இலண்டனில் கூட்டமொன்றைக் கூட்டினார்கள். இலண்டன் கிளப் என்று பெயரிட்டுக் கொண்டார்கள். அக்கூட்டத்தில் உருவானதுதான் இந்த 'அணுசக்தி விநியோக நாடுகள் குழு, NSG' என்பதாகும்.

இந்தக் குழுமத்தில் இருந்த நாடுகளெல்லாம் இந்தியாவிடம் 'அணு ஆயுதப் பரவல் தடை' ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் சொன்னார்கள். அதாவது, ஏற்கனவே இருக்கும் அணு ஆயுத வல்லரசு நாடுகளைத் தவிர மற்றவர்கள், புதிதாக எந்த அணுகுண்டு, அணு ஆயுதத்தைத் தயாரிக்க மாட்டோமென்று ஒப்புக் கொள்ள வேண்டும். இன்றுவரை இந்தியா அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திடவில்லை. ஒருபோதும் ஒப்புக் கொள்ளக்கூடாதென இந்திரா பலமுறை இந்திய மக்களுக்கு அறிவுறுத்தியிருந்தார்.

உலகத்தின் பொருட்களை விற்கக்கூடிய சந்தையாக, பல்வேறு துறைகளில் முன்னணிக்கு வந்திருக்கும் நாடு, தாமும் இந்தக் குழுவில் உறுப்பினராக வேண்டுமென்கிறது. அதற்கு அமெரிக்கா உள்ளிட்ட மேற்குலக நாடுகளும் தம் நிபந்தனையற்ற ஆதரவினைப் பகிரங்கமாகவே அறிவித்து விட்டன. இந்தியாவும் குழுவில் இடம் பெற்றுவிட்டால், ஆசியாவில், ஏன் உலக அளவிலும் தமக்கு நிகரான சக்தியாக இந்தியா வலுப்பெறுமென்கிற கவலை சீனாவுக்கு.

பயங்கரவாதம், தீவிரவாதத்துடன் தொடர்புடைய பாகிசுதானை இக்குழுவில் சேர்க்க மேற்குலக நாடுகள் சேர்க்க விரும்பாது என்பதை

மனத்திற்கொண்டு, 'இந்தியாவை உறுப்பினராகச் சேர்க்க வேண்டுமானால் பாகிசுதானையும் சேர்க்க வேண்டும். அதற்கு நீங்கள் விரும்ப மாட்டீர்கள். எனவே இந்தியாவையும் உறுப்பினராக ஆக்கக் கூடாது' என்று சொல்லி வருகிறது சீனா.

சீனாவின் வணிகத்துக்குப் பெரும் சந்தையாக இருந்து வருகிறது இந்தியா. அதற்கு இடமளிக்காமல் கிடுக்கிப்பிடி போடுமா? எல்லையில் பதற்றத்தைக் கூட்டுவதன் மூலமும் தென்சீனக்கடலில் பதற்றத்தைக் கூட்டுவதன் மூலமும் சீனாவை வழிக்குக் கொண்டுவருமா?? மேற்குலக நாடுகளும் சில கிழக்காசிய நாடுகளும் இந்தியாவின் பின்னால் அணிவகுத்து வழங்கும் ஆதரவினை இந்தியா நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

---

http://www.nti.org/learn/treaties-and-regimes/nuclear-suppliers-group-nsg/

Spying on the Bomb: American Nuclear Intelligence from Nazi Germany to Iran, Jeffrey T. Richelson

***************

## 10) பயங்கரவாதம்

இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல், வணிகச் சமன்பாடின்மை(trade deficit), புன்னகைக்கும் புத்தர் ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது 'பயங்கரவாதம்' குறித்த சிக்கலாகும்.

பயங்கரவாதம் என்பது இந்தியா, சீனா, பாகிசுதான், ஆப்கானிசுதான் ஆகிய நாடுகளுக்குள் ஒன்றையொன்றை பாதிக்கக் கூடியவொன்றாக இருந்து வருகிறது. இந்தியாவுக்கு காசுமீர், வடகிழக்கு மாநிலங்கள் குறித்தவை பிரச்சினைக்குரியதாக இருக்கின்றன. சீனாவுக்கு, புத்தசமயம் மேலோங்கியிருக்கிறதும் தன்னாட்சியுடன் இருக்கிறதுமான திபெத்

மாநிலமும், இசுலாம்சமயம் மேலோங்கியிருக்கிற சின்சியாங் மாநிலமும் பிரச்சினைக்குரியவை ஆகும். பாகிசுதானுக்கு பலூச் இன மக்கள் வாழும் பலுச்சிசுதான், வடமேற்கு மாகாணம், ஆப்கானிசுதான் ஆட்சியைக் கைப்பற்றப் போராடும் தலிபான்கள் செறிவாக இருக்கும் எல்லைப்பகுதிகளும், ஆப்கானிசுதானுக்குத் தலிபான்களும் சின்சியாங் மாகாண விடுதலை கோரும் கிளர்ச்சியாளர்களும் பிரச்சினையாகப் பார்க்கப்படுகின்றன.




தலாய் லாமாவுக்குப் புகலிடம் கொடுத்தும் ஆதரவளித்தும், திபெத் பிரிவினையைத் தூண்டுகிறது இந்தியா எனச் சொல்கிறது சீனா. பலுசிசுதான் கேட்டுப் போராடும்  பிரிவினைவாதிகளுக்கு இந்தியா உதவியளிக்கிறது என்பது பாகிசுதானின் குற்றச்சாட்டாக இருந்து வருகிறது.

பயங்கரவாதிகளான தலிபான்களுக்கு வேண்டிய உதவிகள் செய்து ஆப்கானிசுதானுக்கு எதிராகப் பாகிசுதான் செயற்படுகிறது என்பது ஆப்கன் மற்றும் இதர நாடுகளின் குற்றச்சாட்டாகும்.

திபெத் போராளிகளுக்கும், சின்சியாங் மாநிலத்திலிருந்து கிழக்கு துர்க்மினிசுதான் கேட்டுப் போராடும் இசுலாம் போராளிகளுக்கு ஆப்கன் களமாக இருந்து செயற்படுகிறது என்பது சீனாவின் குற்றச்சாட்டு.

காசுமீர்ப் பயங்கரவாதிகளுக்குப் பாகிசுதானும், வடகிழக்குப் பகுதி கலகக்காரர்களுக்குச் சீனாவும் தூண்டுதலாய் இருக்கின்றன என்பது இந்தியாவின் குற்றச்சாட்டு.

இப்படியாக நான்கு நாடுகளுமே ஒன்றையொன்று குற்றஞ்சாட்டி வருகின்றன. இந்நிலையில், ஐநா சபையால் ஜெய்சு இ மொகம்மது எனும் அமைப்பு கடந்த 2002ஆம் ஆண்டு முதல் பயங்கரவாத அமைப்புப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால் அதன் தலைவரான மசூது என்பாரை இன்னமும் பயங்கரவாதிகள் பட்டியலில் சேர்க்கவில்லையெனச் சொல்லி, அமெரிக்காவும் பிரிட்டனும் இரு முறை விண்ணப்பித்தும் சீனா தன்னுடைய 'வீட்டோ' பாவித்து, பயங்கரவாதி என அறிவிக்கும் முடிவுக்குத் தடை போட்டுவிட்டது. இதனால் இந்தியாவுக்கும் சீனாவுக்கும் என்ன சிக்கல் என்பதையறிந்து கொள்ள, மசூது அசார் பற்றிய பின்னணியைத் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

இந்தியாவுக்கு எதிரான சதிகளில் ஈடுபட்டதாக, 1994ஆம் ஆண்டு கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார் அசார் மசூது. அதன் பின்பு, 1995ஆம் ஆண்டு மலையேறும் பயிற்சிக்காக இந்தியா வந்திருந்த வெளிநாட்டினரைக் கடத்தி வைத்துக் கொண்டு, சிறையிலிருந்த அசார் மசூதுவை விடுதலைச் செய்யக் கோரி, முயற்சி பயனளிக்காமல் போகவே 14 வெளிநாட்டினரும் பரிதாபமாகக் கொல்லப்பட்டனர். தொடர்ந்து, அசார் மசூதுவின் தம்பியின் தலைமையில் தலீபான்களின் கட்டுப்பாட்டிலிருந்த காந்தகார் விமான நிலையத்திற்கு இந்திய விமானமொன்று நேபாளத்திலிருந்து கடத்தப்பட்டது. அவ்விமானத்தையும் பயணிகளையும் மீட்கும் பொருட்டு, அசார் மசூதுவும் உடனிருந்த நால்வரும் இந்திய அரசால் காந்தகார் கொண்டு செல்லப்பட்டு விடுவிக்கப்பட்டனர். பின்னர் அவர் பாகிசுதான் சென்று, அங்கிருந்து கொண்டே அமெரிக்காவுக்கு எதிரான பயங்கரவாதச் செயலிலும், 2008 மும்பைத் தாக்குதல், 2016 பதான்கோட்டைத் தாக்குதல் போன்றவற்றில் மசூதும் அவரது தம்பியும் மூளையாகச் செயற்பட்டதற்காகவென சர்வதேச காவற்துறையால் தேடும் குற்றவாளியாக அறிவிக்கப்பட்டது. இப்படியாக இந்திய மண்ணில் நிகழ்ந்த குற்றங்களுக்குப் பொறுப்பானவரை பயங்கரவாதியாக அறிவிக்காமல் முட்டுக்கட்டை

போடுவது சீனாவின் பயங்கரவாதம் குறித்த இரட்டை நிலைப்பாட்டைக் காண்பிக்கிறது என்பது இந்தியாவின் வாதம்.

**சீனா ஏன் முட்டுக்கட்டை போடுகிறது?**

பாகிசுதானைத் தவிர, இருக்கும் எல்லையோர நாடுகள் எவற்றோடும் சுமூக உறவில்லை சீனாவுக்கு. பாகிசுதானிடமும் முழுமுற்றாகச் சுமூகம் எனச் சொல்லிவிட முடியாது. சீனாவிலிருந்து பாகிசுதானின் குவாடர் துறைமுகத்துக்குச் சாலையமைக்கும் பணிக்காகவும் இதர நிறுவனங்களில் பணிபுரிவதற்காகவும் கிட்டத்தட்ட முப்பதாயிரம் சீனர்களும், சுற்றுலாவுக்காக இருபதாயிரம் சீனர்களும் பாகிசுதானுக்குள் இருந்து வருகின்றனர். பாகிசுதானுக்குள் இருக்கும் பயங்கரவாதிகள் ஏற்கனவே சீனர்களைக், கொல்வது, பணம் கேட்டுக் கடத்துவது போன்ற செயல்களில் ஈடுபட்டு வருகின்றனர் என்பதும், இந்தியா மற்றும் மேற்குலக நாடுகளின் இம்முயற்சிக்குத் துணை போனால், தம் குடிமக்களுக்கும் சாலையமைக்கும் பணிக்கும் பின்னடைவு ஏற்படுமென அஞ்சுகிறது சீனா. சுமூக நாடாக இருக்கும் பாகிசுதானைப் பகைத்துக் கொண்டால் பல வழிகளிலும் தனக்குச் சிக்கல் வருமென்றும் அஞ்சுகிறது. குறிப்பாக, பாகிசுதான் தாலிபான்கள் வாயிலாகச் சீனாவின் சின்சியாங் பிரிவினையும் பயங்கரவாதச் செயல்களும் ஊக்கம் பெறக்கூடுமென நினைப்பதும் ஒரு காரணம். இதெல்லாவற்றுக்கும் மேலாக, இந்தியா பாகிசுதான் காசுமீர்ப் பிரச்சினையை உயிர்ப்போடு வைத்துக் கொண்டு, இந்தியாவுக்கான நெருக்கடியைத் தேவைப்படும் போதெல்லாம் கொடுத்துக் கொள்ளலாமென்பதும் ஒரு காரணமாகும். மேலும், நேரிடையாக நெருக்கமில்லாத வளைகுடா நாடுகளுடன் தன் வர்த்தகத்தைப் பேண, பாகிசுதானை நம்பியே இருக்கிறது சீனா.

அசார் மசூதுவைப் பயங்கரவாதி என அறிவிப்பதன் மூலம், உள்நாட்டுப் பிரச்சினைகள் தலைதூக்குமெனப் பாகிசுதானும் அஞ்சுகிறது. பலுசிசுதான் உளவாளியாக வந்து பாகிசுதான் சிறையிலிருக்கும் இந்தியாவைச் சார்ந்த ஜாதவை விடுவிக்கத்தான் இந்தியா இதை வலியுறுத்துகிறது என்பதும் பாகிசுதானின் வாதமாக இருந்து வருகிறது.

இப்பிரச்சினையில் அமெரிக்காவும் இதர நாடுகளும் சீனாவுக்குத் தொடர்ந்து நெருக்கடி கொடுக்கத்தான் போகின்றன. வேண்டப்பட்ட பயங்கரவாதி, வேண்டப்படாத பயங்கரவாதி எனும் இரட்டை நிலையை எடுத்திருக்கும் சீனாவின் நிலையை நாங்கள் உலகநாடுகளுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுவோம் என்கிறது பிரான்சு. அடுத்தடுத்து பாகிசுதானுக்குள் இருக்கும் வெவ்வேறு நபர்களின் மீது பயங்கரவாத அறிவிப்புக் கோரிக்கை வைக்கவும் இந்தியாவும் மேற்குலக நாடுகளும் திட்டமிட்டு வருகின்றன. எல்லாவற்றையும் சீனாவால் புறந்தள்ளி விட முடியுமா? ஆப்கானிசுதான், பாகிசுதான், சின்சியாங்(கிழக்கு துர்க்மினிசுதான்), திபெத் ஆகிய நிலப்பரப்பில் வேண்டிய பிரச்சினைகளை வேண்டிய அளவுக்கு வைத்திருக்கும் சீனா என்ன செய்யப் போகிறது?? விடை காலத்தின் கையில்.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

---

http://www.news18.com/news/india/china-scuttles-indias-effort-to-get-masood-azhar-listed-as-global-terrorist-again-1565465.html

https://www.dawn.com/news/1365503

https://www.voanews.com/a/china-warns-citizens-pakistan-possible-terror-attacks/4155820.html

***************

## 11) கொந்தளிக்கும் தென்சீனக் கடல்

இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல், வணிகச் சமன்பாடின்மை(trade deficit), புன்னகைக்கும் புத்தர், பயங்கரவாதம் ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது 'தென்சீனக் கடல் பங்கீடு' குறித்த சிக்கலாகும்.




இன்றைய தேதியில் மிகச்சிக்கலானதும் பதற்றமானதும் மோதலை விளைவிக்கக் கூடியதுமான பிரச்சினை எதுவென்றால், அது தென்சீனக்கடல் பங்கீட்டுப் பிணக்கு என்றே சொல்லலாம். தென்சீனக் கடற்பகுதியில், சீனா, அமெரிக்கா, பிரான்சு, பிரிட்டன், இந்தியா, புருணை, மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, பிலிப்பைன்சு, வியட்நாம், ஜப்பான், தைவான், கம்போடியா, கிழக்கு திமோர், லாவோசு, தாய்லாந்து ஆகிய நாடுகள் நேரிடையாகப் பங்கு பெறுவதோடு, இவற்றுள் பெரும்பாலான நாடுகளின் இராணுவம், கப்பல், போர்விமானங்களென யாவும் ஒன்றையொன்று உறுத்திக் கொண்டும் முறைத்துக் கொண்டும் அங்குமிங்குமெனத் திரிந்து கொண்டிருக்கின்றன. களத்தில் இருக்கும் தம் கப்பல் மற்றும் விமானங்களுள், கிட்டத்தட்ட 65 விழுக்காட்டுக்கும் மேலானவை தென்சீனக்கடல் ரோந்துப் பணிகளுக்காகவும் பாதுகாப்புப் பணிகளுக்காகவும்தான் பயன்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்கிறது அமெரிக்கா.

அப்படியென்ன இருக்கிறது தென்சீனக்கடலில்? உலகின் 40 விழுக்காட்டு வர்த்தகத்தைச் சுமந்து போகிற கப்பல்கள் கடந்து போகும் 1.5 நாட்டிகல்

மைல் அகலமே கொண்ட மலாக்கா நீரிடை இப்பகுதியின் தென்கோடியில் இருக்கிறது. இந்த நீரிடையை மறித்து விட்டால் போதும், சீனாவுக்கு எரிபொருள் எதுவும் போகாது. இந்தியாவின் வர்த்தகத்தில் பாதிக்கும் மேல் தடைப்பட்டுப் போகும். வளைகுடா நாடுகளிலிருந்து எரிபொருள் எதுவும் இந்தவழியாக ஜப்பான், கொரியா உள்ளிட்ட பல நாடுகளுக்குப் போகாது. கிட்டத்தட்ட நாளொன்றுக்கு 250 கப்பல்கள் இவ்வழியாகச் செல்கின்றன. இந்நீரிடையைக் கடந்து உள்ளேபோனால் கடலுக்கு இரு மருங்கிலும் பல நாடுகள் உள்ளன. இருகரைகளுக்குமிடையே ஆங்காங்கே சிறுசிறு தீவுகளும் உண்டு. கூடவே விலைமதிப்பு மிக்க இயற்கைவளம், மீன்வளம், கச்சா எண்ணெய், எரிவாயு போன்றவையும் இக்கடலுக்கடியில் பொதிந்து கிடக்கிறது.



கரைகளில் இருக்கும் நாடுகள், அவரவர் கரைகளை அண்மித்து இருக்கும் கடற்பரப்பும் தீவுகளும் அந்தந்த நாட்டுக்குச் சொந்தமானதென உரிமை கோருகின்றனர். சீனாவோ, ஆறு புள்ளி வரைகோடு எனவொன்றைச் சொல்லி கடலின் பெரும்பாலான பரப்பும் தனக்கே சொந்தமென உரிமை கோருகிறது. சிறுசிறு திட்டுகள் கண்ட இடமெல்லாம் மூன்று மைல் சுற்றளவுக்குச் செயற்கையாகத் தீவுகளை அமைத்து அதன்மேல் விமான ஓடுபாதைகளை நிறுவுகிறது. சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு, இப்பகுதியிலிருக்கிற ஒவ்வொரு நாட்டின் கரையிலிருந்து 200 நாட்டிக்கல்மைல் தொலைவுக்குட்பட்ட கடற்பரப்பு அந்தந்த நாட்டுக்குச் சொந்தமெனத் தீர்வளித்தது பன்னாட்டு நீதிமன்றம். துச்சமெனத் தூக்கிப் போட்டது சீனா.

முதன்முதலாக அமெரிக்காவின் நேசநாடான பிலிப்பைன்சு அதன் கட்டுப்பாட்டில் இருந்த தீவுகளில் 1970ஆம் ஆண்டு துவக்கம் ஆய்வுகளை நடத்தி, 1984ஆம் ஆண்டு பெட்ரோல், எரிவாயு இருப்பதைக் கண்டுபிடித்தது. அதுவரையிலும் கண்டுகொள்ளாமல் இருந்த சீனா, ஒரேயடியாகத் தென்கோடி வரையிலும் தன்னுடை எல்லைக்குட்பட்டதென அறிவித்தது. தீவுகளில் மீன்பிடிக்கச் சென்ற பிலிப்பைன்சு மீனவர்களை விரட்டியடித்தது சீனா. இது முதலில், பிலிப்பைன்சுக்கும் சீனாவுக்குமிடையேயான தகராறு என்கிற அளவிலாக மட்டுமேயிருந்தது. பிலிப்பைன்சுக்குத் துணையாக அமெரிக்க இராணுவம் அவ்வப்போது உதவிகளைச் செய்து வந்தது.

2011ஆம் ஆண்டு மேற்குக்கரையில் இருக்கும் வியட்நாம் இந்தியாவை அழைத்து, தனக்கு உரிமையுள்ளதாகக் கருதப்படும் கடற்பரப்பிலும் தீவுகளிலும் பெட்ரோல், இதர வளங்கள் இருக்கிறதாவென ஆராயச் சொன்னது. அப்பணிகளின் நிமித்தம் ஜூலை 22, 2011 அன்று இந்தியக் கப்பற்படைகள் தென்சீனக் கடலுக்குள் வந்தன. சீன இராணுவம் இந்தியக் கப்பல் அத்துமீறித் தன் பகுதிக்குள் வருவதாகவும் திரும்பிச் செல்லுமாறும் கட்டளையிட்டது. தாம் பன்னாட்டுக் கடல் வழியில் மட்டுமே வந்து கொண்டிருப்பதாகப் பதிலளித்தது இந்தியத் தரப்பு. தொடர்ந்து வியட்நாம் தரப்பு குறிப்பிட்ட எல்லைக்குள் சென்று, இந்திய ஆய்வாளர்கள் அவர்தம் பணியைத் தொடர்ந்தனர்."பிரச்சினைக்குரிய பகுதிக்குள் மற்ற நாடுகளுக்கு

இடமில்லை. தொடர்புடைய நாடுகள் பேசித் தீர்த்துக் கொள்ளும்” என்று சீன வெளியுறவுத்துறை எச்சரித்தது. ”எங்கள் நாட்டு எண்ணெய் எரிவாயுக்கழகத்துடன் பெட்ரோவியட்நாம் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படியே நாங்கள் செயலாற்றுகிறோம். மற்றவர் தகராறில் நாங்கள் ஈடுபடவில்லை” எனப் பதில் கொடுத்தது இந்தியா.

இதைக் கண்ட சீனா, போர்க் கப்பல்களை வரவழைத்து தீவுகளைக் கைப்பற்றும் பணியையும் தீவுகளை உருவாக்கும் பணியையும் செய்யத் துவங்கியது. பிலிப்பைன்சு, ஜப்பான், தென்கொரியா போன்ற நாடுகள் அமெரிக்காவை அழைத்தன. கடற்பரப்புக்கு மேல் செல்லும் விமானங்கள் தம்மிடம் அனுமதி பெற்றுத்தான் பறக்க வேண்டுமெனச் சீனா மிரட்டியது. சீனாவின் கப்பல்களைப் பின் தொடர்ந்து வரத்துவங்கின அமெரிக்கப் போர்க்கப்பல்களும். வானத்தில் அமெரிக்கப் போர் விமானங்கள் பறந்தன. ’தொடர்பில்லாத நாடுகள் தேவையில்லாமல் அத்துமீறுகின்றன; கடும் விளைவுகள் நேரும்’ என்று சொல்லி சீனா கொந்தளித்தது. ”அமைதியை நிலைநாட்டவும், பன்னாட்டுப் பொதுவெளியைப் பாதுகாக்கவும் அமெரிக்காவுக்கு உரிமையுள்ளது. ஐக்கிய நாடுகளின் சபை மூலமாகவே பிரச்சினையை அணுக வேண்டுமென அமெரிக்கக் காங்கிரசு தீர்மானம் நிறைவேற்றி, தென்சீனக் கடலைப் பாதுகாக்குப் பொறுப்புக்குக் கூடுதல் இராணுவத்தை அனுப்பியது.

இடையே பிலிப்பைன்சு தொடர்ந்த மற்றொரு வழக்கில், பன்னாட்டுக் கடற்பரப்பு நீதிமன்றம் பிரச்சினைக்குரிய தீவுகளிலிருந்து சீனா வெளியேற வேண்டுமெனவும் அவை பிலிப்பைன்சுக்கு உரியவையென்றும் தீர்ப்பளித்தது.

தென்கிழக்காசிய நாடுகள் சபையின் உறுப்பு நாடுகளான வியட்நாம், மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா உள்ளிட்ட பல நாடுகள் இந்தியாவின் நேரிடையான தலையீடு இதில் இருக்க வேண்டுமென வலியுறுத்தியது. இந்தியப் போர்க்கப்பல் இம்முறை தன்னிச்சையாக அப்பகுதிக்குச் சென்றது. தமது வர்த்தகத்தில் 50% விழுக்காட்டுக்கும் மேல் இந்தப்பகுதியின் வழியாகத்தான் நடக்கிறது. பன்னாட்டு வழித்தடப் பயனர் என்கிற முறையில், இப்பகுதியில் அமைதியை நிலைநாட்ட வேண்டிய கடமை தமக்கு உள்ளதாக

வெளியான அறிவிப்பு அமெரிக்கா உள்ளிட்ட நாடுகளின் வரவேற்பைப் பெற்றது.

சீனாவின் நெருக்கமான நாடாக இருந்த சிங்கப்பூர், எதுவானாலும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு சீனா நடந்து கொள்ள வேண்டுமென அறிவிப்புச் செய்ததோடு இந்தியாவின் போர்ப்படைக் கப்பலோடு இணைந்து தம் பகுதியில் பயிற்சிகளை மேற்கொண்டது. அதுமட்டுமின்றி, தம் பகுதியில் இந்தியப் போர்ப்படைக் கப்பல்கள் எரிபொருள் நிரப்பிக்கொள்ளவும் நிலைநிறுத்திக் கொள்ளவும் ஒப்பந்தம் போட்டுக் கொண்டது சிங்கப்பூர். விடுதலை பெற்றதிலிருந்தே இந்தியாவுடன் பாதுகாப்பு ஒப்பந்தங்களைப் பேணி உதவி பெற்ற வந்த மலேசியா, இதன்பொருட்டு, இந்தியாவின் பங்கினை மேலும் கூட்டிக் கொண்டது. தொடர்ந்து வியட்நாம், ஜப்பான் போன்ற நாடுகளும் இந்தியக் கப்பற்படைக் கப்பல்களுடன் இணைந்து தென்சீனக் கடலில் பயிற்சிகளை அவ்வப்போது நடத்தி வருகின்றன.

வரலாற்று ரீதியாக இந்தோனேசியா, மலேசியா, வியட்நாம் போன்ற நாடுகள் அமெரிக்காவுடன் நெருக்கமாக இருந்ததில்லை. அந்த நாடுகளெல்லாம் இந்தியாவை யே முன்னின்று நடத்தச் சொல்கின்றன. அவற்றுக்கு இணைப்புப் பாலமாக இந்தியா இருப்பதையே அமெரிக்காவும் விரும்புகிறது.அமெரிக்காவிடமிருந்து விலகிக் கொண்டிருக்கும் பிலிப்பைன்சும் இந்தியாவின் உதவியப் பெற முயன்று வருகிறது.

இந்தோனேசியா, தாய்லாந்து, பிலிப்பைன்சு, சிங்கப்பூர், மலேசியா, வியட்நாம் ஆகிய நாடுகளைக் கொண்ட ஆசியான் அமைப்பு, தம் உறுப்பு நாடுகளின் கடல் எல்லையைப் பாதுகாக்குப் பொறுப்புக்கு இந்தியா பொறுப்பேற்க வேண்டுமென, இந்தியக் குடியரசு நாள் விழாவில் கோரிக்கை விடுக்க, தென்சீனக்கடலை ஏகபோகமாக ஆக்கிரமிக்க சீனாவை அனுமதிக்க மாட்டோமெனச் சூளுரைத்திருக்கிறது இந்தியா.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

https://youtu.be/eeDhC8O5C-s

https://www.forbes.com/sites/panosmourdoukoutas/2017/07/07/vietnam-and-india-to-spoil-chinas-south-china-sea-ambitions/#71e81a6d1af7

http://www.dw.com/en/india-asean-agree-on-maritime-cooperation-as-china-asserts-power/a-42321422

***************

## 12) மாலத்தீவுகள்




இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல், வணிகச் சமன்பாடின்மை(trade deficit), புன்னகைக்கும் புத்தர், பயங்கரவாதம், தென்சீனக் கடல் பங்கீடு ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது 'மாலத்தீவுகள்' குறித்த சிக்கலாகும்.

மாலைத்தீவுகள் (Maldives) அல்லது மாலைத்தீவுகள் குடியரசு இந்தியப் பெருங்கடலில் உள்ள பல சிறிய தீவுகளாலான தீவு நாடாகும். இது இந்தியாவின் இலட்சத்தீவுகளுக்கு தெற்கேயும் இலங்கையிலிருந்து சுமார் 700 கிமீ தென்மேற்காகவும் அமைந்துள்ளது. 90,000 ச.கி.மீ. பரப்பளவுள்ள இத்தீவின் மக்கள் தொகை 3 இலட்சத்து 13 ஆயிரத்து 920 ஆகும். மொத்தம் 26 பவளத்தீவுகளில் 1,192 தீவுகள் காணப்படுவதோடு இவற்றில் சுமார் 200 இல் மட்டும் மனித குடியேற்றங்கள் காணப்படுகின்றன. தீவுகளால் அமைந்த மாலைபோல் காணப்படுவதால் தமிழில்மாலைத்தீவுகள் என்றும் சமஸ்கிருத மொழியில் "மாலத்வீப"(தீவுகளின் மாலை)என்றும் குறிப்பிடப்படுகிறது. வேறு சிலரின் கருத்துப்படி இது "மகால்" என்ற அரபு மொழிச் சொல்லின் மரூஉ ஆகும். சோழர்கள் காலம் வரை அவர்களது ஆட்சியில் இருந்த இந்தத் தீவுகள் பின்னர் சிங்களர்கள் ஆட்சிக்குட்பட்டது. 1153இல் இசுலாம் மதம் இங்குக் கொண்டுவரப்பட்டது. பின்னர் மாலைத்தீவுகள் 1558 இல் போர்த்துக்கேயரிடமும், 1654 டச்சுக் கிழக்கிந்தியக் கம்பனியிடமும் பின்பு 1887 முதல் பிரித்தானியரிடமும் அடிமைப்பட்டது. 1965ஆம் ஆண்டு மாலைத்தீவுகள் ஐக்கிய இராச்சியத்திடம் இருந்து விடுதலை பெற்றது. 1968 இல் சுல்தான் ஆட்சியிலிருந்து குடியரசாக மாறியது. குடியரசான மாலைத் தீவுகளின் முதல் குடியரசுத் தலைவர் சுல்தான் ஆட்சியில் பிரதமராக இருந்த இப்ராகிம் நசீர் ஆவார்.

1988இல் இடம் பெற்ற ஆட்சிக்கவிழ்ப்பு குறித்த கிளர்ச்சியின் போது இந்திய விமானப்படை களத்தில் இறங்கி, ஒரு மணி நேரத்துக்குள்ளாகக் கிளர்ச்சியை முறியடித்து ஆட்சியை நிலைநாட்டியது. 1978ஆம் ஆண்டிலிருந்து 2008ஆம் ஆண்டு வரையிலும் அப்துல் கயூம் நாட்டின் அதிபராக இருந்தார். அவரது ஆட்சியின் கடைசி காலகட்டத்தில் நாட்டினை மக்களாட்சியை நோக்கிக் கொண்டு சென்றார்.

2008ஆம் ஆண்டு நடந்த மக்களாட்சித் தேர்தலில் மொகம்மது நசீது வெற்றி பெற்று ஆட்சி அமைத்தார். 2004ஆம் ஆண்டு சுனாமியில் சிக்கிய மாலத்தீவினைப் புனரமைப்பதற்காக வாங்கப்பட்ட கடன்சுமை இவரது ஆட்சிக்குப் பல சிக்கல்களை ஏற்படுத்தியது. கயூம், நசீது இருவருமே இந்தியாவுடன் நட்பு பாராட்டுபவர்கள்.

2013ஆம் ஆண்டு சீன ஆதரவாளரும் துணை அதிபருமான அப்துல்லா யாமீன், அதிபர் வாகித் அசீனைப் பதவியிலிருந்து அப்புறப்படுத்திவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டதோடு, நசீதுவின் மீது பயங்கரவாதக் குற்றச்சாட்டினை முன்வைத்து 13 ஆண்டுகளுக்குச் சிறைத்தண்டனை சுமத்தினார். இவரது ஆட்சிக்குப் பிறகு எல்லாமும் தலைகீழாகிப் போனது. மாலத்தீவில் இந்தியத் தூதரகம் மட்டுமே இருந்து வந்தது. இவரது ஆதரவினால் சீனத் தூதரகம் அமைந்தது. துறைமுகப் பயன்பாட்டினைச் சீனாவுக்கு வழங்கினார். இந்திய நிறுவனம் மேற்கொண்டிருந்த விமானநிலையக் கட்டுமானத் திட்டத்தை நிறுத்தி விட்டு, ஒப்பந்தத்தைச் சீனாவுக்கு மாற்றிக் கொடுத்தார். பல ஒப்பந்தங்கள் சீனாவுடன் கையெழுத்தானது. எதுவுமே பாராளுமன்றத்தின் முன் வைக்கப்படவில்லை. ஒரு மணி நேரத்திற்குள்ளாக மிரட்டி கையெழுத்துகள் பெறப்பட்டன.

இந்நிலையில்தான் சிறையிலிருக்கும் முன்னாள் அதிபர் குறித்த வழக்கு விசாரணைக்கு வந்த போது, ”சிறையில் அடைக்கப்பட்டிருப்பவர்கள் விடுவிக்கப்பட வேண்டும். இந்தியா உடனே தலையிட்டு, குற்றமற்றவரும் மக்களும் தேர்ந்தெடுக்கப்பட்டவரும், தற்போது வெளிநாட்டில் இருப்பவருமான ஹசீன் நசீதுவின் ஆட்சியை அமைத்திட வேண்டும்” என்று கூறியிருக்கிறது. இந்நிலையில், நாட்டின் நீதிபதிகளும் கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்படலாம் என எதிர்பார்க்கப்படுகிறது.

சீனாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே நடக்கும் மறைமுகப் போர் இதுவென்றே உலகத்தின் பார்வையில் பார்க்கப்படுகிறது. முந்தைய காலத்தைப் போல தன் இராணுவத்தை இந்தியா அனுப்புமா? இருக்கும் கடனில், எழுபது விழுக்காட்டுக் கடனைத் தன்னிடம் வாங்கியிருக்கும் மாலத்தீவினை, தம் வசப்படுத்திக் கொள்வது சீனாவா?? இந்தியாவின் புறக்கொல்லையைத் தன் வசமாக்கிக் கொள்ளும் முயற்சியா?? உலக அரசியல் நோக்கர்கள் மனத்தில் எழும் கேள்விகள்தான் இவை.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

https://avas.mv/en/44019

http://www.firstpost.com/india/maldives-crisis-male-is-latest-theatre-for-india-china-proxy-war-new-delhi-must-play-a-more-proactive-role-4336617.html

http://www.aljazeera.com/news/2018/02/maldives-declares-state-emergency-crisis-deepens-180205153207323.html

***************

## 13) மணிக்கொடி




இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல், வணிகச் சமன்பாடின்மை(trade deficit), புன்னகைக்கும் புத்தர், பயங்கரவாதம், தென்சீனக்கடல் பங்கீடு, மாலத்தீவு அரசாட்சி ஆகியவற்றைப் பார்த்தோம். அடுத்ததாக இடம் பெறுவது 'இந்தியப் பெருங்கடல் மணிக்கொடி(String of Pearls (Indian Ocean))' குறித்த சிக்கலாகும்.

சீனாவின் பொருளாதாரம் உற்பத்தித்திறன்சார் பொருளாதாரமென்றும், இந்தியாவின் பொருளாதாரம் அறிவுத்திறன்சார் பொருளாதாரமென்றும் வர்த்தக உலகில் வரையறுக்கப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, மென்பொருட்துறை, மருந்துப்பொருள் ஆய்வு, வானவியல் தகவல் தொழில்நுட்ப உயர்பணி வழங்கல் போன்ற துறைகள் சார்ந்தவற்றை அயல்நாட்டிற்கு வழங்குதலைக் கொண்டு இந்தியப் பொருளாதாரம் இருக்கிறது. மாறாக, மனித வாழ்வியலுக்குத் தேவையான சகல பொருட்களையும் பெருமளவிலான எண்ணிக்கையில் மொத்தமாக உற்பத்தி செய்வதன் மூலம், குறைந்த விலைக்கு உலகெங்கும் விற்பனை செய்து உலகப்பொருளாதாரத்தில் முதலிடத்தைப் பிடித்திருக்கிறது சீனா.

அறிவுத்திறன்சார் வர்த்தகத்தை நம்பியிருக்கும் நாடுகளை விட, உற்பத்தித்திறன்சார் நாடுகளுக்கு, உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களைக் குறைவான போக்குவரத்துச் செலவில் சந்தைப்படுத்தப்பட வேண்டிய தேவையிருக்கிறது. அதன் பொருட்டு, கடல் மற்றும் தரைவழிப் போக்குவரத்தினைத் தனக்கு ஏதுவாக அமைத்துக் கொள்வதிலும், தன்னுடைய வல்லாண்மையை போக்குவரத்துத் துறையில் நிலைநாட்டிக் கொள்ளவும் கடந்த 15 ஆண்டுகளாகவே பெரும் பொருட்செலவில் பல்வேறு திட்டங்களைத் தீட்டி வெற்றிகரமாக்கியும் வருகிறது சீனா. தன்னுடைய பெருநிலப் பகுதியிலிருந்து உலகின் ஏனைய இடங்களுக்குச் செல்லும் தரைவழிப் பாதைகளை, 'ஒரு சாலை, ஓர் இணைப்பு One Road One Belt' எனும் திட்டத்தின்கீழ் உருவாக்கி, பல்வேறு நாடுகளுடனான போக்குவரத்தினைக் குறைந்த நேரத்தில் குறைந்த செலவில் அமைத்துக் கொண்டிருக்கிறது. இதைப் போலவே, கடல்வழிப் பாதைகளையும் தனக்கு ஏதுவாக அமைத்து வருகிறது. அப்பணிகள் குறித்த கருத்தாக்கத்தின் பெயர்தான், 'இந்தியப் பெருங்கடலின் மணிக்கொடி' என்பதாகும்.

அமெரிக்காவைச் சார்ந்த 'பூஸ் அலன் ஹாமில்ட்டன்' எனும் மேலாண்மை நிறுவனம், சீனா தன் கடல்வழிப் போக்குவரத்துக்காக இப்படியிப்படியான நகர்வுகளை மேற்கொள்ளக்கூடுமெனச் சொல்லி, ஒரு கருத்தாக்கத்தினை 'இந்தியப் பெருங்கடலின் மணிக்கொடி' எனும் பெயரில் முதன்முதலில், இரண்டாயிரமாவது ஆண்டுவாக்கில் வெளியிட்டது.

அன்றிலிருந்துதான் இச்சொல்லாடல் உலகெங்கும் பயன்பாட்டுக்கு வந்ததோடு, சீனாவும் அத்தகைய நடவடிக்கைகளையே மேற்கொண்டும் வருகிறது. இந்தியப் பெருங்கடற்பகுதியில் உள்ள சிறுசிறு நாடுகளைத் தன்வழிக்குக் கொணர்ந்து, தனக்கு ஏதுவான துறைமுகங்களை கட்டமைத்தும் மேம்படுத்தியும் வருவது வர்த்தகப் பயன்பாட்டுக்கெனக் கூறிக்கொண்டாலும், இந்தியாவை முற்றுகையிடக் கூடிய வகையில் இராணுவப் பயன்பாட்டுக்கும் சீனா பயன்படுத்திக் கொள்ளத் தயங்காது என்பதால், அதை எதிர்கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறது இந்தியா.

தற்போதைக்கு இந்தியப்பெருங்கடல் வழியாகத்தான் சீனாவுக்குத் தேவையான எரிபொருளில் 75 விழுக்காடு சென்று கொண்டிருக்கிறது. அக்கப்பல்கள் இந்தியப் பெருங்கடலில் இருந்து மலாக்கா கால்வாய் வழியாகத் தென்சீனக் கடலுக்குள் புகுந்து செல்ல வேண்டியிருப்பதால், தென்சீனக் கடலையொட்டிய சில அயல்நாடுகளிலும் பல துறைமுகங்களை உருவாக்கியும் மேம்படுத்தியும் வருகிறது சீனா.

இம்மணிக்கொடியில், சீனாவின் கட்டுப்பாட்டில் இருக்கும் ஆங்காங் துறைமுகம்(1) முதல்மணியாகவும், சீனாவின் சன்யா(2) துறைமுகம் இரண்டாவது மணியாகவும், பிரச்சினைக்குரிய தீவுகளில் சில மணிகளும் இடம் பெற்று, ஆறாவது மணியாக தாய்லாந்துத் துறைமுகமும் இடம் பெறுகின்றன. இது வரையிலுமான மணிகளால் இந்தியாவின் கவனயீர்ப்புத் தேவையில்லை. ஆனால் இதற்குப் பிறகு இடம் பெறும் மணிகள்தாம் இந்தியாவைச் சுற்றிவளைத்தாற் போல அமைந்திருக்கின்றன. ஏழாவது மணியாக, இந்தியாவின் போர்ட்பிளேயர் தீவுக்கு அருகிலேயே இருக்கும் மியான்மார் தீவில் சீனாவின் துறைமுகம் அமைந்திருக்கிறது. எட்டாவதாக மியான்மார்ப் பெருநிலத்தின் கியாக்பு துறைமுகமும் ஒன்பதாவதாக பங்களாதேசின் சிட்டகாங், பத்தாவதாக சிறீலங்காவில் இருக்கும் அம்பாந்தோட்டையும், பதினொன்றாவதாக மாலத்தீவின் மாரோவும், பன்னிரண்டாவதாக பாகிசுதானின் குவாடர் துறைமுகமும் இடம் பெற்றிருக்கின்றன. குவாடருக்குப் பிறகு, மாண்டெப் குறுக்கு நீரிடை வழியாக வளைகுடாப் பகுதியான சூடான் வரையிலும் நீண்டு, அதற்குப் பிறகு

ஆப்பிரிக்க நாடுகளிலும் மேலும் பல துறைமுகங்களைக் கைப்பற்றும் முயற்சியில் தொடர்ந்து ஈடுப்பட்டுக் கொண்டிருக்கிறது சீனா.

இந்தியாவின் அண்டை நாடுகளான மியான்மார், பங்களாதேசு, இலங்கை, மாலத்தீவு, பாகிசுதான் ஆகிய நாடுகளில் கட்டமைப்பு வசதிகள் ஏற்படுத்தித் தருவதாகச் சொல்லி, அதற்கான ஒப்பந்தங்களைப் போட்டு, அத்திட்டங்களுக்குச் செலவான தொகையை உங்களால் திருப்பிச் செலுத்த முடியவில்லையென்பதால், இந்தந்தத் துறைமுகங்கள், சாலைகளைச் சீனாவுக்கு 99 ஆண்டுகளுக்கு எழுதிக் கொடுத்து விடுங்கள் என்கிற முறையில் தன் வல்லாதிக்கத்தைச் செலுத்தி வருகிறது சீனா. அண்மையில், உகாண்டா நாட்டில் பெருவழிச் சாலையொன்றை அமைத்துத் தருகிறேனெனச் சொல்லி, உகாண்டாவையே இரண்டாகப் பிரித்ததோடு அதன் மீதான கடனையும் பெருமளவில் சுமத்தி விட்டிருக்கிறது சீனா. அந்நாடும் விரைவில் சீனாவிடம் எழுதிக் கொடுக்கப்படலாமென்பது நோக்கர்களின் கருத்தாக இருக்கிறது.

இராஜபக்சே ஆட்சியின் போது இலங்கையிலும் சீன நிறுவனங்கள் பல திட்டங்களில் பெருமளவு முதலீடு செய்தன. இராஜபக்சேவின் மகன் நேரிடையாக பல கொடுக்கல் வாங்கல்களில் ஈடுபட்டதன் வாயிலாக, இலங்கையின் சொத்துகள் பல கைமாறிப் போய்க் கொண்டிருக்கின்றன என்பது எதிர்க்கட்சிகளின் கருத்தாக இருக்கிறது. மேற்குலக நாடுகள் மனித உரிமை மீறல், போர்க்காலக் குற்றங்களுக்காக இராஜபக்சேவின் மீது குற்றப்பத்திரிகை கொண்டு வந்தபோது, சீனா செய்த உதவிக்குத்தான் அம்பாந்தோட்டை சீனாவுக்குத் தாரை வார்க்கப்பட்டதென்றும் கூறுகின்றனர். ”எங்களை நாங்களே விற்றுக் கொள்வதைத் தவிர வேறுவழி எங்களுக்கில்லை” என்கிறார் வெளியுறவுத் துறை அமைச்சர் இரவி கருணாநாயகே. பெரும்பொருட் செலவில் துறைமுகம், போக்குவரத்துச் சாலைகளெனப் பலதையும் சீனாவுக்காகச் சீனாவே கட்டமைத்து விட்டு, பணமும் கேட்க, திருப்பிச் செலுத்த முடியாத நிலையில் இருக்கிறது இலங்கை. இப்படித்தான் பல நாடுகளும் சீனாவுடன் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இந்தியா என்ன செய்யப் போகிறது? எங்கெல்லாம் சீனாவின் துறைமுகம் இருக்கிறதோ, அதற்கு மாற்றாக இந்தியாவும் துறைமுகங்களைக் கட்டமைத்து வருகின்றன. இந்தியப் பெருங்கடலின் தீபகற்பம் இந்தியா என்பதால் மூன்று பக்கங்களிலுமாக இந்தியாவுக்கு ஏதுவான வாய்ப்புகள் பல இருக்கின்றன. இருப்பினும் சீனாவுக்கு நெருக்கடி கொடுக்கும் வகையில் தென்சீனக்கடல் நாடுகள், ஈரான், குவைத், ஓமன், கத்தார், அமீரகம், துர்க்மினிசுதான், உசபெக்கிசுதான், கிர்கிசுதான், கசகசுதான், மங்கோலியா முதலிய நாடுகளில் இந்திய நிறுவனங்கள் முதலீடு செய்தும், இராணுவ ஒப்பந்தங்கள் போட்டும் இணையான அளவில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டிருக்கும் இந்தியாவின் முன் இருக்கும் சவால் ஒன்றே ஒன்றுதான். ஆசியான் நாடுகளுக்கும் சீனாவுக்குமிடையேயான வர்த்தகம் 571 பில்லியன். இந்தியாவின் வர்த்தகம் 71 பில்லியன். ஆசியான நாடுகளுக்கு வேண்டிய பாதுகாப்பு, இராணுவத் தளபாடங்களை வழங்க முற்பட்டிருப்பதன் வாயிலாக இந்த இடைவெளி குறையுமென எதிர்பார்க்கப்படுகிறது. எனினும், உற்பத்தித்திறன்சார் வர்த்தகம் மேம்பட்டு, சீனாவின் வர்த்தகத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்பதுதான் தென்சீனக் கடல் நாடுகளின் விருப்பமாக இருக்கின்றது.

(இந்திய சீன உறவில், இடம் பெற்று வருவன என்ன? தேடுதலைத் தொடர்வோம்....)

---


http://www.bbc.com/news/business-40044113

https://www.reuters.com/article/us-uganda-road/chinese-built-expressway-divides-uganda-as-debts-mount-idUSKBN1FK0V1

https://www.indiatimes.com/news/india/here-is-all-you-should-know-about-string-of-pearls-china-s-policy-to-encircle-india-324315.html


***************

## 14) இடவல இந்தோசீனம்



இந்திய சீன உறவில் இருக்கும் சிக்கல்களில், இதுவரையிலும் எல்லைப் பிரச்சினை, திபெத் ஆக்கிரமிப்பு, சமயக்கட்டுப்பாடு, திபெத்தியர் புகலிடம், ஆற்றுநீர்ப் பங்கீடு, நுழைவிசைவு(visa) வழங்கல், வணிகச் சமன்பாடின்மை(trade deficit), புன்னகைக்கும் புத்தர், பயங்கரவாதம், தென்சீனக்கடல் பங்கீடு, மாலத்தீவு அரசாட்சி, இந்தியப் பெருங்கடல் சுற்றிவளைப்பு(string of pearls) ஆகியவற்றைப் பார்த்தோம். இனி இருநாடுகளுக்கும் இருக்கும் இதர பிரச்சினைகள் குறித்துப் பார்க்கலாம்.

கடந்த காலத்தைத் திரும்பிப் பார்க்கின், 1960ஆம் ஆண்டு இந்தியாவின் உற்பத்தித்திறன் சீனாவைக் காட்டிலும் இருமடங்கு அதிகமாக இருந்தது. ஆனால், 1978ஆம் ஆண்டு உலகச்சந்தைப் பொருளாதாரத்துக்கு மாறியதும், அதே காலகட்டத்தில் மேற்கொண்ட அரசியற்சீர்திருத்தங்களும் கிடுகிடுவென

வளர்ச்சிப் பாதையில் இட்டுச்சென்று, இன்றைக்கு உலகின் மிகப்பெரிய பொருளாதார சக்தியாக உருவெடுத்திருக்கிறது. இந்தியப் பொருளாதாரத்தை விடச் சீனாவின் பொருளாதாரம் நான்கு மடங்கு பெரியதாக இருக்கிறது. பணவீக்கத்தில் இந்தியா சீனாவிடை ஆறுமடங்கு பின்னடைவுடையதாக இருக்கிறது. உற்பத்தித்திறனில் சீனா இந்தியாவை விடக் கிட்டத்தட்ட இரு மடங்கு உயர்ந்தநிலையில் உள்ளது. குடும்பநலத்தில் 'ஒரு குழந்தைத் திட்டம்' என்பது சீனாவின் குடிமக்களைக் கடுமையான இக்கட்டில் கொண்டு போய் நிறுத்தியிருக்கிறது. அரசியலைப் பொறுத்தமட்டில் சீனாவின் நிலை மிகவும் கேலிக்குரியதாக இருக்கிறது. பொதுவுடைமைக் கோட்பாடு எனும் பெயரில் ஒருகட்சி ஆட்சிமுறையில் இருக்கும் சீனாவில், ஏழைப் பணக்காரன் வித்தியாசம் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டேயிருக்கிறது.

நடப்புகாலத்தைப் பார்க்கும் போது சீனாவில் தனிமனித சராசரி ஆயுள் 73.5 ஆண்டுகளாகவும், இந்தியாவில் 64.4 ஆண்டுகளாகவும் இருக்கிறது. கல்விகற்றோர் சீனாவில் 94%ஆகவும் இந்தியாவில் 74% ஆகவும் இருக்கிறது. பெண்கள் கல்வி சீனாவில் 99%ஆகவும் இந்தியாவில் 70%க்குக் கீழாகவும் இருக்கிறது. சுகாதாரத்திலும் இந்தியாவை விடச் சீனா வலுவான நிலையில் இருந்து வருகிறது. எடுத்துக்காட்டாக, இந்தியாவில் 66% குழந்தைகளே குறைந்தபட்ச தடுப்பூசிகளையும் நோய்த்தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளனர். மாறாக, சீனாவில் 98% குழந்தைகள் முழுமையான நோய்த்தடுப்பு நடவடிக்கைகளுக்கு ஆட்பட்டிருக்கின்றனர். ஆக, இப்பின்னடைவை சமூகச் சீர்திருத்தங்கள் வாயிலாக மட்டுமே அகற்ற முடியுமென்கிறார் அமர்த்தியாசென். சீனாவில் இறக்குமதியாகும் பொருட்களில் 30% பங்களாதேசில் இருந்தே ஆகிறது. அந்த அளவுக்கு பங்களாதேசு சீனாவோடு அணுக்கம் காட்டி வருகிறது. அப்படியான பங்களாதேசில் கூட, சராசரி ஆயுள், குழந்தைபிறப்பு விகிதம், பெண்கள் கல்வி முதலானவை இந்தியாவைக் காட்டிலும் கூடுதல் வேகத்தில் மேம்பட்டு வருகிறது. எடுத்துக்காட்டாக, இந்தியாவின் 66%ஐக் காட்டிலும் பங்களாதேசில் 97% குழந்தைகள் நோய்த்தடுப்பு நடவடிக்கைகளுக்கு ஆட்படுத்தப்படுகின்றனர்.

இருநாடுகளையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது இந்தியாவின் பின்னடைவாகப் பார்க்கப்படுவதில் முதலிடத்தைப் பெறுவது கல்விதான். இந்திய நிறுவனங்கள் சரியான கல்வியும் திறனுமுடைய பணியாளர்களை வேலைக்கமர்த்துவதில் தடுமாறிக் கொண்டிருக்கின்றன. 122 நாடுகளில் இடம் பெற்ற மனிதவள ஆய்வில், 78ஆம் இடத்தையே இந்தியா பெற்றிருக்கிறது. சீனாவைப் போலவே இந்தியாவிலும் நகரமயமாக்கல் துரிதமாக இடம் பெற்று வருகிறது. உரிய கட்டமைப்புகளைக் கட்டமைப்பதில் சீனாவைக் காட்டிலும் பின்தங்கியே வந்திருக்கிறது இந்தியா. சீனாவை முன்மாதிரியாக எடுத்துக்கொண்டு, சீனாவில் இடம் பெற்றிருக்கும் காற்று, தண்ணீர் போன்றவை மாசடைதலைத் தடுத்து சரியான வழியில் முன்னெடுத்துச் செல்ல வேண்டிய கட்டாயமும் இந்தியாவுக்கு உண்டு. ஆண் பெண் விகிதாச்சாரத்தில் சீனாவைக் காட்டிலும் இந்தியா நல்ல நிலையில் இருந்து வருகிறது. இருப்பினும், பெண்களுக்கு உரிய உரிமைகள் பெற்றுத்தருவதிலும் கல்வியிலும் பின் தங்கியே இருக்கிறது இந்தியா. மற்றபடி, வளர்ச்சியைக் கூட்டுவதற்கான மனிதவளமும் இயற்கை வளமும் சீனாவைக் காட்டிலும் இந்தியாவிடமே இருக்கிறது எனக் கணிக்கிறது உலக வங்கி.

கடந்த 50 ஆண்டுகளாக வளர்ச்சிப்பாதையில் மேம்பட்டு உலகின் வல்லரசாக நிலைநிறுத்திக் கொண்டிருக்கும் சீனா, அதற்குக் கொடுத்தவிலை எண்ணிப்பார்க்க முடியாதபடிக்கு மலைக்க வைக்கக் கூடியதாகும். தனிமனித உரிமைகள் மறுக்கப்பட்டன. அரசியல் உரிமைகள் நசுக்கப்பட்டன. இன்றும், ஊடக உரிமைகள் மறுக்கப்படுகின்றன. வெளிப்படைத்தன்மை என்பதே கிடையாது. கலாச்சார பண்பாட்டு விழுமியங்கள் அற்ற சமூகமாக ஆக்கப்பட்டதின் விளைவுகள், அடுத்தடுத்த ஆண்டுகளில் வெளிப்படுமென எதிர்பார்க்கப்படுகிறது. பெருந்தொகையான மக்கள் மூப்பெய்தி ஓய்வுபெறும் தருணத்தில், வேலைபார்க்க ஆட்கள் இல்லாமலும் மூத்தோரின் உடல்நலம், மனநலம் பேணக்கூடிய கட்டமைப்பின்றியும் தவிக்கும் நிலை வரப்போகிறதெனக் கவலைப்படுகின்றனர் சீனர்கள்.

படிப்படியாகப் பொருளாதாரத்தின் வளர்ச்சி சீனாவில் குன்றி வருகிறது. சரியான புள்ளிவிவரங்களைக் கொடுக்காமல் ஏமாற்றுகிறதெனப் பொருளாதார நிபுணர்கள் குற்றஞ்சாட்டுகின்றனர். உள்ளூர்த் தேவைகளை நிரப்பாமல்

ஏற்றுமதியைச் செய்து வந்த சீனா இனியும் தம் நிலையை மாற்றிக் கொள்ளாவிட்டால் உள்நாட்டில் பெரும் கொந்தளிப்பைச் சந்திக்க வேண்டியிருக்குமென்றும் எச்சரிக்கின்றனர். இருக்கிற இயற்கை வளத்தையெல்லாம் சுரண்டி விட்ட சீனா, குடிதண்ணீர், விளைச்சலுக்குக்கந்த பண்பட்ட நிலம், மின்சக்தி, எரிசக்தி முதலானவற்றுக்கு அயல்நாடுகளை அண்டிப்பிழைக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டது. அரசியற் காரணங்களுக்காக இந்தியா, தென்சீனக்கடல் நாடுகள் உள்ளிட்ட நாடுகளிடம் பகைமையை வளர்த்துக் கொள்வது சிக்கலை உண்டாக்கக் கூடும். பொதுவுடைமைக் கோட்பாட்டு அரசியலெனச் சொல்லிக் கொள்ளும் நாட்டின் கட்சியையும் அரசாங்கத்தையும், தனியார் முதலாளிகள் கைவசப்படுத்தி வைத்திருக்கின்றனரென்றும், அதனால் இடம் பெற்று வரும் ஊழல் தேவைக்கான சீர்திருத்தங்களை மேற்கொள்ளத் தடையாய் இருக்கிறதென்றும் விமர்சனங்கள் வைக்கப்படுகின்றன. இதையெல்லாம் கருத்திற்கொண்ட சீனா, தம் எல்லையை விரிவுபடுத்தும் நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது.

சீனாவின் எல்லை விரிவாக்க நடவடிக்கைகளில் பிலிப்பைன்சு, இலங்கை, மியான்மார், பாகிசுதான், இந்தியாவின் வடகிழக்கு மாநிலங்கள், மாலத்தீவு, ஆப்பிரிக்க நாடுகள் முதலானவை நேரிடையாகவோ மறைமுகமாகவோ இடம் பெற்றிருக்கின்றன. ஆப்பிரிக்க நாடுகளில் பெருமளவு நிலத்தைக் கொள்முதல் செய்து, சீனாவின் பெருநிலத் தேவைக்கான விவசாயப் பொருட்களை உற்பத்தி செய்ய அந்நிலங்களுக்குப் பெருமளவில் தம் குடிமக்களைக் குடியேற்றம் செய்து வருகிறது சீனா. ”கைப்பற்றிய இடங்களை விடுவிக்கும் பழக்கம் சீனாவுக்கு என்றும் இருந்ததில்லை” எனும் சீன அமைச்சரின் அண்மைப் பேச்சொன்று நோக்கர்களின் கவனத்தை ஈர்த்தது குறிப்பிடத் தகுந்ததாகும். அரபிக்கடலைச் சீனாவுடன் இணைக்கும் பொருட்டுத் தாம் அமைத்து வரும் குவாடர் துறைமுகப்பணிகள், சாலைகளுக்காக பாகிசுதானுக்குள் முப்பதாயிரம் சீனர்களை இதுவரையிலும் குடியமர்த்தியிருக்கிறது சீனா. இலங்கை அம்பாந்தோட்டையைக் கைப்பற்றிக் கொண்டதைப் போல, பாகிசுதானின் இயற்கை வளங்களையும் கைப்பற்றிக் கொள்ளும் சீனமுன்னெடுப்புகளுக்குத் துணை போக மாட்டோமெனப் போராட்டத்தைக் கையிலெடுத்திருக்கின்றன

சில பாகிசுதான் தீவிரவாத அமைப்புகள். இவை எல்லாவற்றையும் அமெரிக்கா, பிரிட்டன் உள்ளிட்ட நேசநாடுகள் உற்று நோக்கி வருகின்றன. சீனாவின் நகர்வுகளுக்கு மையமாக இருக்கிற இந்தியாவோ, அணுவாயுதக் கப்பல்கள் உற்பத்தி, அணுவாயுத ஏவுகணைக்கான பிரித்வியெனத் தன் இராணுவசக்தியை விரிவாக்கும் பணியின் வேகத்தைக் கூட்டி வருகிறது. கூடவே, “குப்பைகொட்டுதற்காப்பு வரி” எனும் பெயரில் சீனாவின் பொருட்களின் இறக்குமதிகட்கு வேட்டு வைக்கும் வேலையையும் அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகள் கையிலெடுத்திருக்கின்றன.

சமூக இணக்கம் கொண்டதாக, பண்பாட்டில் விழுமியப் போட்டி கொண்டதாக, மனித உரிமைகள் போற்றத்தக்கதாக, உளவியலில் மேன்மை பொருந்தியதாக, திறத்தில் போட்டியுடையதாக இருக்கும் பொருட்டு, இயற்கையுடன் இயைந்த நாடாகச் சீனா தம்மை மாற்றிக்கொள்ள வேண்டுமென்கிறார் எழுத்தாளர் மனோரஞ்சன் மொகாந்தி. சீனாவின் வளர்ச்சிப் பாதையை முன்மாதிரியாகக் கொண்டு, மேற்குலக நாடுகளையொத்த மனிதத்துவத்துடன் கூடிய பாதையில் இந்தியாவின் இயக்கம் இருக்கிறதெனப் பெருமிதம் கொள்கிறார் உலகவங்கித் தலைவர் ஜிம் கிம்.

**(முற்றும்)**

**ஊக்கமும் ஆதரவும்:** Senthil Nathan Saravanakumar Manian வேந்தன் அரசு

---

**References:**

https://thediplomat.com/2017/10/chinas-communist-party-3-successes-and-3-challenges/

http://www.businessinsider.com/9-biggest-challenges-chinese-economy-2012-9

http://knowledge.wharton.upenn.edu/article/chinas-investments-in-africa-whats-the-real-story/

http://www.indiandefensenews.in/2018/02/india-successfully-test-fires-nuclear.html

---

தொடர்பு: பழமைபேசி (pazamaipesi@gmail.com)

## 38. நெருப்பிலே பூத்த நெகிழ் -கவிதை

*—இராம.கி.*



"நெருப்பிலே பூத்த நெகிழ்" என்ற ஈற்றடிக்கு ஒருகாலத்தில் (ஏப்ரல் 8, 2006) எழுதிய இன்னிசை வெண்பா. அப்பொழுதெலாம் ஈற்றடிக்கு வெண்பாப் புனையும் விளையாட்டு இணையத்தில் நடந்துகொண்டிருந்தது. இப்பொழுது இதுபோல் நடக்கிறதாவென்று தெரியவில்லை. இன்று வேறெதற்கோ இணையத்தில் தேடியபொழுது இலவசக்கொத்தனாரின் வலைப்பதிவில் என் பதிவிருந்தது தெரிந்தது. நானே இதுபற்றி மறந்துவிட்டேன். என் ஆக்கங்கள் இப்படித்தான் அங்குமிங்கும் சிதறிக் கிடக்கின்றன. பலவற்றை மறந்தும் விட்டேன். இது ஏதோ தன்னேர்ச்சியாய்த் திடிரென்று இன்று கிட்டியது. சரி, ஓரிடத்தில் சேர்த்துவைப்போமே? என்று என் முகநூல் பக்கத்திலும், வலைப்பதிவிலும், மடற்குழுக்களிலும் பதிகிறேன். இப்பாட்டில் அறுபடைவீட்டையும் ஊடே குறித்திருக்கிறேன்.

**முருக்கன்; குமரன்; முளைச்சேயோன்; கந்தன்;**
**கருப்பன் மருகன்; கடம்பிற் பரமன்;**
**செருத்தணியான்; செந்தில்; சிலம்பன்; இவனோ**
**நெருப்பிலே பூத்த நெகிழ்.**

இனிப் பாட்டின் விளக்கம்.



முருக்கென்பது பலாசமரம் அல்லது புரசைமரம் எனப்படும். சென்னைப் புரசைவாக்கத்தை நினைவுகொள்ளுங்கள். புரசைவாக்கம் சிவன் கோயிலில் தலமரம் முருக்கமரமே; இது முள்முருக்கென்றும் சொல்லப்படும். Butea monosperma. இம்மரமே flame of the forest ஆகும். தீம்பிழம்பு போல முருக்கமரக்காடு பூக்கள் மலர்ந்த நிலையில் காட்சியளிக்குமாம். சிலர் புரியாமல் மயிற்கொன்றையை / குல்மொஹரை flame of the forest என்று சொல்வார். அது தவறு. மயிற்கொன்றை மொரிசியசிலிருந்து இங்கு இறங்கியது. தமிழ்நாட்டைச் சார்ந்ததில்லை. முருக்கம்பூவே நம்முடையது. புரசைப்பூ = முருக்கம்பூ =செக்கச்செவேலென்று சிவந்த பூ. சிவந்த நிறத்தின் காரணமாகவே முருக்கன்>முருகன் என்ற பெயர் எழுந்தது; அழகு, இளமை எல்லாம் பின்வந்த வழிப்பொருள்கள். முதற் பொருட்கள் அல்ல. பலாசமரம் நிறையவிருந்த இடம் பலாசி; பலாசி யுத்தமென இந்தியவரலாற்றில் படித்திருப்போமே? இராபர்ட் கிளைவிற்கும், வங்காள நவாபிற்கும் நடந்த சண்டை; அது புரசைமரக் காடுகளில் தான் நடந்தது.

குமரன் = இளையோன்; தந்தைக்கு ஓமெனும் பொருளை உரைத்த கதை இக்காலத்தில் இதைச் சாமிமலையிற் புனைந்துசொல்வார்; ஆனால் ”இப்படைவீடு சரிதானா? திருவேரகமென்பது எது?” என்று திருமுருகாற்றுப் படையின் வழி உணரமுடியவில்லை.

முளைச்சேயோன்; முளை = தண்டாயுதம்; பழனி தண்டாயுதபாணியே இங்கே முளைச்சேயோன்

கந்து = மரத்தூண்; ஒவ்வொரு மரத்தூணிலும் முருகன் இருப்பதாக நம் முன்னோர் எண்ணினர்; அதனாற்றான் தூணிற்படரும் வள்ளிக்கொடியை அவன் மனையாளாய்க் கருதினர்.

கருப்பன் மருகன்: விளக்கம் சொல்லத் தேவையில்லை.

கடம்பிற் பரமன்: திருப்பரங்குன்றம் அக்காலத்தில் கடம்பவனம் என்ற பெயர்பெற்றது. மதுரைக்கும் ஒருகாலத்தில் கடம்பவனத் தொடர்பும், மருதவனத் தொடர்புமுண்டு. (பரிபாடலின் படி மருதையே மதுரையாயிற்று.) பரமன் = பரங்குன்றன்

செருத்தணியான் = திருத்தணிகையான்

செந்து + இல் = செந்தில் = சிவந்தவன் இருக்கும் வீடு. அந்தவூர் மண்ணும் செக்கச்செவந்து இருக்கும். திருச்செந்தூரிலிருந்து குமரிவரை போனால் சிவந்த மண் நெடுகக் கிடக்கும். எல்லாம் அருமண் மாழைப் பூண்டுகள் (rare earth metal compounds) செய்யும் வேலை

சிலம்பாறும், அருவியும் பாயும் இடம் பழமுதிர்சோலை; அங்கு குடியிருப்பவன் சிலம்பன்.

நெகிழ்: மலர்தலென்பது இதழ்கள் நெகிழ்ந்துவிரிதலே; அவ்வகையில் நெகிழென்பது மலரெனும் பெயராயும் ஓரோவழி அமையும்.

நெருப்பிலே பூத்த நெகிழ் = சிவனுடைய நெற்றிக்கண் நெருப்பில் தோன்றி சரவணப் பொய்கையில் பூத்த மலர்.

---

தொடர்பு: இராம.கி. (poo@giasmd01.vsnl.net.in)

http://valavu.blogspot.com

## 39. சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை... -கவிதை

*—ருத்ரா இ.பரமசிவன்*

*சிலம்பி வலந்த பொறிசினை ஓமைக்*
*கான்செறி முள்ளிய பரல்வெங்காட்டின்*
*சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை திரங்கிய*
*வரி வரி சுழிநீர் வந்து வந்து அலைப்ப*
*அகல்திரைப் பௌவம் ஆழத்திருந்து*
*வாட்சுறா போழ்ந்த கொடுவாய் அன்ன*
*உடலும் தின்னும் உள்ளும் தின்னும் அவ்*
*உடல் ஊறு நோயும் உள்சுடு நோயும்*
*நோன்றல் ஆற்றிய பின்னை எஞ்சும்*
*என்பு நெய்த கூடு உயிரிழை நைந்து!*
*தழல் உண்டவள் போலும் எரிந்தேன்*
*ஆயினும் அஃது வான் ஈர் தண்மழை.*
*தகரத்துச் சாந்தின் ஒள்ளிய ஞெகிழி*
*உன் கூடல் உள்ளிய களிப்பின் செத்து*
*இன் தீ காட்டும் இமிழ்தரும் நின்பெயர்.*
*புல்வேய் குரம்பை போர்த்த குடுமியில்*
*நறவுபெய் நடுநிலா பூக்கள் தடவி அவன்*
*உறவு காட்டும் அம்மவோ பெரிதே.*



ஓவியம்: ஷண்முகவேல் - 'வெண்முரசு'

### "சுள்ளியம் பேர் ஆறு" - பாடல் குறித்து

அகநானூறு "களிற்றியானை நிரை" தொகுதியில் 149 ஆம் பாடல் "எருக்காட்டூர் தாயங்கண்ணனார்" என்னும் ஆழ்ந்த புலமையுள்ள சங்கத்தமிழ் புலவரால் பாடப்பட்டது. அவர் அதில் சேரநாட்டு ஆறான "சுள்ளியம் பேர் ஆறு" அலையெழுப்பிக்கொண்டு வெள்ளிய நுரைப்பூக்களை அகலப்பரப்பிக்கொண்டு ஓடும் "அழகை "சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை

கலங்க" என்று சிறப்புற எழுதியிருக்கிறார். அந்தச் சொற்றொடர் ஏதோ நம்மை அந்த ஆற்றில் ஒரு படகில் ஏற்றி அது வெண்நுரைப்படலம் கிழிபடச் சென்று கொண்டிருப்பதைப்போலவே உணர்ந்தேன். அந்த சொற்றொடரைத் தலைப்பாக்கி எழுதிய ஒரு சங்கநடைச் செய்யுட்கவிதையே இந்த "சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை" ஆகும்.

இந்தப்பாடலில் தலைவனைப்பிரிந்து வாடும் தலைவியின் "பிரிவுத்துயரம்" தான் விவரிக்கப்படுகிறது.

**பொழிப்புரை:**

***சிலம்பி வலந்த பொரிசினை ஓமைக்***
***கான்செறி முள்ளிய பரல்வெங்காட்டின்***
***சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை திரங்கிய***
***வரி வரி சுழிநீர் வந்து வந்து அலைப்ப***

தலைவன் பொருள்தேடிச்செல்லும் காடும் ஆறும் தான் தலைவியின் கண்முன்னே வருகின்றன.ஓமை மரங்கள் அடர்ந்த அந்தக்காட்டில் சிலந்திகள் நூல்கள் பின்னும் சுள்ளிகளாய் இருக்கும் கிளைகளேஅதிகம் உள்ளன.அந்த முட்காட்டில் பருக்கைக்கற்கள் காலில் இடறுகின்றன. அந்தக்காட்டில் "சுள்ளியம் பேராறு" வெண் நுரை பூத்து ஆற்றுநீர்ப்பரப்பில் சுருக்கங்கள் போன்ற (திரங்கிய) சிற்றலைகளை உருவாக்குகின்றன.அவை சுழித்து சுழித்து வரி வரிகளாய் அவளைச்சுற்றியே வந்து அலைக்கழிப்பது போல் துயரம் கொள்கிறாள்.

***அகல்திரைப் பெளவம் ஆழத்திருந்து***
***வாட்சுறா போழ்ந்த கொடுவாய் அன்ன***
***உடலும் தின்னும் உள்ளும் தின்னும் அவ்***
***உடல் ஊறு நோயும் உள்சுடு நோயும்***
***நோன்றல் ஆற்றிய பின்னை எஞ்சும்***
***என்பு நெய்த கூடு உயிரிழை நைந்து!***

அகன்ற பேரலைகள் தளும்பும் கடலின் அடி ஆழத்திலிருந்து சுறா மீன்கள் வருகின்றன.கூரிய கொம்பு உடையச் சுறாமீன்கள் வாய்கள் பிளப்பது போல் அந்தக் காதல் நோய் அவளை விழுங்க முனைகிறது என்கிறாள் தலைவி.

அந்நோய் அவள் உடலில்ஊறி உள்ளத்துள் சூடு ஏற்றுகிறது.இப்படி இந்நோய் என்னைச் சிதைத்த பின் என் நைந்த உயிரிழைகொண்டு நெய்யப்பட்ட என் எலும்புக்கூடுதான் மிஞ்சும் என்கிறாள்.

***தழல் உண்டவள் போலும் எரிந்தேன்***
***ஆயினும் அஃது வான் ஈர் தண்மழை.***
***தகரத்துச் சாந்தின் ஒள்ளிய ஞெகிழி***
***உன் கூடல் உள்ளிய களிப்பின் செத்து***
***இன் தீ காட்டும் இமிழ்தரும் நின்பெயர்.***

அவள் சொல்கிறாள்: நெருப்பையே உண்டுவிட்டவள் போல் ஆனேன்.இருந்தாலும் எனக்குள் அவன் நினைவு வானத்தைப் பிளந்து கொட்டும் குளிர்மிக்க மழையாகத்தான் (வான் ஈர் தண்மழை) இருக்கிறது.மணம் பொருந்திய சந்தன மரத்தை வெட்டி எரித்த ஒளிமிக்க நெருப்பின் கொழுந்தாக சுடர் வீசுகிறது."உன்னோடு இன்புற்றுக் களிப்பாக இருந்தது போல் எண்ணி (களிப்பின் செத்து) இந்த இனிய தீயையும் உணர்கிறேன்.இது உன்னைத்தான் எனக்குக் காட்டுகிறது.உன் பெயரின் ஒலி கூட அதில் கேட்கிறது."

***புல்வேய் குரம்பை போர்த்த குடுமியில்***
***நறவுபெய் நடுநிலா பூக்கள் தடவி அவன்***
***உறவு காட்டும் அம்மவோ பெரிதே.***

புல்லில் வேயப்பட்ட சிறு வீடுகள் சூழ்ந்த அந்த மலை உச்சியில் நடு இரவின் நிலா ஒளி பொழிகிறது.அது ஒரு மயக்கம் தரும் இனிய தேன்மழையை தூவுகிறது.அது பூக்களை வருடி ஒளி பூசுகிறது. அதில் என் தலைவனின் காதல் உறவு எவ்வளவு பெருமை மிக்கதாய் மிளிர்கிறது!

படம் உதவி: http://www.jeyamohan.in/61436#.WroYpojwaUk

---

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 40. கண்ணீர்க் கனவு, கடல் மேல் பயணம்... -கவிதை

*—வித்யாசாகர்*



பாலையின் சுடுமணலில்
வாழ்வையும் சுட்டவர்கள் நாங்கள்;
குளிர்காற்றில் ஆசைகளைக் கொய்து
விடுமுறையில் மட்டுமே கொஞ்சம்
வாழ்ந்து கொண்டவர்கள்..

போர்வைக்குள் சுடும்
கண்ணீரை மறைத்தவர்கள் நாங்கள்;
ஒட்டகத்தோடு சந்தோசத்தையும் விரட்டி
கனவுகளுள்
வயதைத் தொலைத்தவர்கள்..

வரிசையில் நின்று நின்றே
வானத்திற்கு
ஏணியைப் போட்டவர்கள் நாங்கள்;
கைப்பேசிக்குத் தெரிந்த முத்தத்தில்
கருத்தரிக்காத முட்டைகளை உடைத்தவர்கள்..

பெண்ணெனும் மந்திரச் சொல்லுள்
புன்னகையை ஒளித்தவர்கள் நாங்கள்;
அத்தைப் பெண்ணோ.. மாமனின் மகளோ..
பக்கத்து வீடோ.. காதலியோ,
அழுகையை மட்டுமே
மரணம் வரை சுமப்பவர்கள்..

வலிக்குமொரு பாடல் வந்தால்கூட
துடி துடிக்கும் பித்தர்கள் நாங்கள்;
அழுக்குத் தலையணையோ
அன்றைய சினிமாவோ
கதைப் புத்தகமோ பழைய கடிதங்களோ
எதையோ படித்து எதற்கோ உயிரை நொந்தவர்கள்..

உறவிற்கும் உதவிக்கும் ஓடி ஓடியே
வழுக்கையானவர்கள் நாங்கள்;
வாட்சப்பில் காதலியையும்
மின்னஞ்சலில் அம்மா பெயரையும்
வங்கிக் கணக்கில் அப்பாவும்
கைப்பேசி முகப்பில் அக்காப் பிள்ளைகளையும் வைத்து
தனைமட்டும் முழுதாய் இழந்தவர்கள்..

பிரிவெனும் துயரில் நொந்து
பாதி இரவில் பலமுறை எழுந்தழுது
பேருக்கொருமுறை
மீண்டுமிறப்பவர்கள் நாங்கள்;
அம்மாவைத் தேடி மனைவியைத் தேடி
பிள்ளைகளைப் பிரிந்து
மௌனக் குழிக்குள் சோகமாய் சரிபவர்கள்..

கூலிக்கு வேலையின்றி
மேலே படிக்க வாய்ப்புமின்றி
திறமைதனை
அரபிகளுக்கு அடகுவைத்தவர்கள் நாங்கள்;
கூரைவீட்டிற்கு ஓலை முடையவும்
கிழிந்த காற்சட்டைக்கு சன்னலை மூடவும்
சாய்ந்த சவுக்குக் குளியலறைக்கு
ஒரு புதிய மூங்கில் கதவு போடவுமே
கடவுச்சீட்டோடு எங்களின் கனவுகளையும் விற்றவர்கள்..;

ஆம்.......
நாங்கள் பாலைமண்ணின் சுடுமணலில்
எங்களின் வாழ்வையும் சுட்டவர்கள்..

படம் உதவி: http://www.telanganaheadlines.in/

---

தொடர்பு: வித்யாசாகர் (vidhyasagar1976@gmail.com)

## 41. இந்தப்புயலின் பெயர் "இதயம்" -கவிதை

*—ருத்ரா இ.பரமசிவன்*



வானிலை அறிவிப்பாளர்கள்
ஏதாவது பெயர் சூட்டி
புயலை எதிர்கொள்வார்களே
அது போல்
இது ஒரு புயல் "இதயம்"
இதை உண்மையாக
மொழிபெயர்த்தால்
"ஹார்மோன்" என்று தான்
சொல்லவேண்டும்.
வயதுகள்
பதினாறு எனும்
அக்கினி ஆற்றுக்குள்
நடத்தும் நவீன "ஜலக்கிரீடை"
பட்டாம்பூச்சிகள்..
மின்னற்காடுகள்..
மயிற்பீலி வருடல்கள்..
ரோஜா இதழ்களில்
பதியம் ஆகும் பிருந்தாவனங்கள்.
கைபேசிக்காட்டுக்குள்
சிரித்துப்பேசும்
சந்திரோதயங்கள்.
பெரியவர்களின் நமைச்சல்களும்
பின்னோக்கி பார்த்து
"மெல்ல நகும்"
ரசாயனத்துடிப்புகள்.
ராணுவ மிடுக்கில்

சல்யூட் வைக்கத்தேவையில்லாத
"ஒரு தேசியக்கொடியேற்றம்"
இந்த "வேலன்டைன் டே"
இளம்பிஞ்சுகளே!
கவனம்...
சனாதனக் காண்டாமிருகங்கள்
சவட்டிப்போகக்
காத்திருக்கும்!
இளம்பூக்களே
சம்ப்ரதாய வெறியின்
கோரைப்பற்களும்
சாதி மத நச்சுப்பாம்புகளும்
உங்களைக் குறிவைப்பதையும்
குறித்து வைத்துக்கொள்ளுங்கள்
உங்கள் காதல் வரலாற்று ஏடுகளில்.
காளிதாசர்களையும்
வித விதமாய் காதல் லீலைகள்
நடத்திய
புராணங்களையும்
இவர்கள் பரண்களில் வீசி
ஒளித்து வைக்கும் நாள் இது!
காதல் வாழ்க!
காதல் வெல்க!




---

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 42. குறிப்பறிதல் -கவிதை

*—பழமைபேசி*

சிந்திலுப்பு பள்ளத்து மேவெள்ளத்துல
சிக்கிகிட்ட அல்லாரும்
ஊரு வந்து சேந்துட்டாங்க!
அல்லாரும்
ஊரு வந்து சேந்துட்டாங்க!!
கலைஞ்சமுடி கலைஞ்சபடி
சின்னக்கனகா திரும்பத்திரும்ப
மெட்டுப்பிறழாமல்
ஓயாமற் கொள்ளாமல்
வருவோர் போவோரிடம்
சொல்லிக் கொண்டிருக்க
தாயம்மாக் கெழவி அரற்றினாள்
புள்ளமனசு ஒத்தயாடு கணக்கா அலமோதுது?
பட்டீகவண்டர் மகன் ஊடு வந்து சேந்தானா?
ஆராவது ஒரு எட்டுப் போயி
பாத்துப்போட்டு வந்து சொன்னாத்தான் என்ன??



---

தொடர்பு: பழமைபேசி (pazamaipesi@gmail.com)

## 43. நச்சு வட்டம் -கவிதை

*—ருத்ரா இ.பரமசிவன்*



எனக்குத்தெரியாது என்று
தெரியாது.
எனக்குத் தெரியாது என்று
தெரியும்.
எனக்குத் தெரியும் என்று
தெரியாது.
எனக்குத் தெரியும் என்று
தெரியும்.
அறிவின் நான்கு நிலைகள் பற்றி
அறிஞர்களின் கருத்து.
நான்காவது நிலையே
ஆன்றோர் நிலை.
முதல் நிலையே
பிள்ளைநிலை.
மனிதனின்
குறுக்குவெட்டுத்தோற்றம்
மூளையைப் பற்றியது அல்ல.
உணர்வைப்பற்றியது.
கல்லும் புழுவும்
சமன்பாட்டுக்குள் வராது.
புல்லும் புழுவும்
சமன் செய்து சீர் தூக்கலாம்.
உயிர் தான் அங்கு இணைப்பிழை.
இன்னும்

மனிதர்கள்
மண்ணுக்குள்ளிருந்தும்
கல்லுக்குள்ளிருந்தும்
விழித்து எழுந்த பாடில்லை.
சதை கிழிக்கும் கோரைப்பல்லோடு தான்
அவன் தூக்கம் கலைத்தான்.
அவன் இமைகள் உயர்ந்த போது
"கல்லைக்"கொண்டு தான்
"கல்"வி கற்றான்.
வாயின் மாமிச நாற்றம் நின்றபோது
சொல்லைக்கற்றான்.
படிப்படியாய்
அவனுக்கே அவன் கடவுள் ஆனான்.
புரியாதவர்கள்
கல்லின் முன் நிற்கிறார்கள்.
புரிந்தவர்கள்
தந்திரம் செய்தார்கள்.
மனிதன் மனிதனைத் தின்ன ஆரம்பித்தான்.
நச்சு வட்டம் சுழல்கிறது.

---

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 44. சிட்டுக்குருவிகளுக்கு சாகாவரம் வேண்டும்... - கவிதை

*— வித்யாசாகர்*



மிக இனிமையான நாட்கள் அவை
காலையில் வரும் சூரியனைப்போல
அத்தனை ஒளியானது சிட்டுக்குருவியின் உடனான நாட்கள்..

ஓடிப்பிடித்து அகப்பட்டுக்கொண்ட மழைத்தும்பிக்குப்பின்
ஒருநாள் சிட்டுக்குருவியொன்று
கைகளில் சிக்கிக்கொண்டதையும் மறக்கவேமுடிவதில்லை.,

காற்றை கையிலள்ளிக்கொண்ட மகிழ்ச்சி
அன்றைய தினத்தின் பரிசாக
இன்றுவரை எனக்கு நினைவிலுண்டு..

விடியலில் ஐந்தாறு மணிகளுக்கிடையில்
நானும் எனது தங்கையும் வாசல் படிக்கட்டில் வந்தமர
நான்கைந்து சிட்டுக்குருவிகள் எதிரே அமர்ந்து
முகம் பார்த்து பார்த்து தலை சாய்த்துச் சாய்த்து
கத்துவதைக் கண்டதெல்லாம் அழகைக் கண்டதன் சாட்சி அடையாளங்கள்

அந்த கிரீச் கிரீச்சென கத்தும்
சிட்டுக்குருவிகளின் மொழிக்கான அர்த்தத்தை
மௌனமாக பின்னொரு நாள்தனில் அசைபோடுகையில்
தங்கையின் இல்லாயிடம் உயிருக்குள் அப்படி வலித்ததுண்டு.

தங்கையைப்போல் சிட்டுக்குருவிகளும்
எனக்கு மறப்பதேயில்லை..

எங்கள் வீட்டு ஜூலி
வாசலிலமரும் சிட்டுக்குருவிகளுக்கு
இன்னொரு தோழி,
ஜூலி சிட்டுக்குருவிகளை விடுவதேயில்லை
ஓடியோடி அவற்றை துரத்தும்
சிட்டுக்குருவிகள் மாறி மாறி அதன் தலையில் சென்றமரும்
வவ்..வவ் எனும் ஜூலியின் கோபத்தில்
விடிகாலை மணல்வாசத்தோடு சிட்டுக்குருவிகளால் சிலிர்த்துபோகும்..

தூக்கம் விழித்து சன்னலைக் காண்கையில்
பீறிட்டுவரும் சூரிய ஒளியோடு
ரக்கை படபடக்க வந்தமரும்
ஒரு சிட்டுக்குருவியின் முகத்தில்
ஒரு உலக மொழிபேசும் இயற்கையின் சத்தியத்தை
எத்தனைப் பேர் கண்டிருப்பீர்களோ தெரியாது

எனக்குச் சிட்டுக்குருவியின் சப்தம் குவைத்திலும் ஒன்றுதான்
என் வீட்டுக் கூரைமீதும் ஒன்றுதான்

யாருக்கு எப்படியோ;
எனக்கந்த என் காதலியின் வீட்டுச் சன்னலும்,
வீட்டுவாசலில் கருப்புசாமியாய் வளர்ந்திருந்த
வேப்ப மரத்தடியும்,
உடைந்தக் கண்ணாடிச் சில்லுகளில் தெரியும்
நினைவுகளாக
அந்நாட்களின் மொத்த வாழ்வுமே
அந்தச் சிட்டுக்குருவிகளின் நினைவோடே இன்றுமிருக்கிறது

சிட்டுக்குருவியோடான நாட்கள்
உண்மையிலேயே எனக்கு
மிக இனிமையானவை...

---

தொடர்பு: வித்யாசாகர் (vidhyasagar1976@gmail.com)

## 45. காமம்செப்பாது கண்டது மொழிமோ! -கவிதை

*— ருத்ரா இ.பரமசிவன்*

ஓங்கி உலகளந்த அழகனை
ஏங்கி உள்ளச் சிமிழுக்குள்
வாங்கினாள் ஆண்டாள் என்கின்ற
நம் மண்ணில் பூத்த மின்னற்பெண்!
தமிழ் நறும்பூவின் சொல்லினிலே
அமிழ்தின் மழைதனை பெய்வித்தாள்.
தமிழைக்குழைத்தாள் தன் உள்ளமதாய்!....(1)



மார்கழிப் பனியின் விழுதுகளில்
ஊஞ்சல் ஆடினாள் தமிழிசைத்து.
பிரம்மம் என்பது உடலா? இங்கு
பிரம்மம் என்பது கடலா? அலையா?
கவலை அந்த கன்னிக்கில்லை
பொறி வண்டுகள் பூவைத் துளைக்க
பொறி அங்கு வைத்தது பிரம்மம் தானே.....(2)

கூர்த்த மதியும் குவியும் உணர்வும்
தூர்த்து போமோ? அவள் செந்தமிழில்.
பாடல் தோறும் பாடல்தோறும்
பாற்சோற்றின் தீஞ்சுவை போல
ஊன்சோற்றுள் ஊடிப் பற்றி
ஞானத்தீயும் செஞ்சுவை ஊட்டும்.
விண்டத்தமிழில் அண்டம் விரிந்தது......(3)

இரண்டு ஆன்மக்கூடல் அங்கு
இருட்கடல் பிளந்து ஒளியாகி
கல்லும் மண்ணும் பூவும் புள்ளும்
கலந்த விண்வெளி யானதுவே! அவள்
பள்ளியெழுச்சி பாடலெல்லாம்
துள்ளிய ஞானச் சுடர்வரியே!
அள்ளிய நெஞ்சில் அமிழ்தொலியே!....(4)
சிறுபூ தொட்டும் பெரும்பூ அணைந்தும்
அளைந்தாள் அவனை அணைத்தாளே..தன்

உயிர் மகரந்தம் தூவிக்கொடுத்து
சூடிக்கொடுத்தாள் தன் உயிர்மாலை.
விண்ணவன் மேனி வருடியதெல்லாம்
அவள் உயிரின் உயிரின் பூக்களே தான்.
அவள் மனங்களின்அந்தம் மகரந்தம்......(5)

பக்தி என்றோர்   சிறு சொல் போதா.
பெருங்கடல் கூட சில் துளி  தான்..அவள்
அன்பின் விரிவே ஆயிரம் அண்டம்!
அவன் அவதாரம் பாடினாள்.
அவன் அரிதாரம் பாடினாள்.
உருவம் கொண்டு அவளுக்குள்
உருண்டு திரண்டது பிரம்ம மதாய்.....(6)



வீட்டுப்பூட்டுள் ஒலிக்கும் பூங்கிளி
"வீடு"பேறு தேடி கோயில்
இதயம் புகுந்து கொண்டதுவே
பிரம்மம் என்னும் பேரின்பம்
பெருங்கனிச் சுவைத்து உண்டதுவே
அத்தனை சுவையும் தமிழாகி
அருஞ்சுவைப் பாட்டாய் ஒலித்ததுவே...(7)

சின்ன இன்பம் பெரிய இன்பம்
வேறுபாடுகள் தெரிவதெங்ஙன்?
ஆண்டவனுக்கே சூடிக்கொடுக்க தன்
ஆத்மப்பூக்கள் தொடுத்தாளே.
அத்தனைப்பாட்டும் நரம்பை மீட்டும்
அத்தனைப்பாட்டும் தமிழை மீட்டும்.
சொற்றுளியெலாம்  சோதிப்பெருங்கடல்.....(8)

ஒருபுறம் பார்த்தால் அங்கு
தமிழை ஆண்டாள்  அவள் ஆனாள்
மறுபுறம் பார்த்தால் அங்கு
தமிழால் ஆண்டாள் அவள் ஆனாள்.
பாற்கடல் பள்ளிக்கூடலும் தமிழ்ப்
பாற்கடல் பள்ளிக்கூடமே..அவள்
படித்ததெலாம்    அங்குப் பரந்தாமன்.....(9)

உணர்வுத்தீயை பக்தி என்பீர்!
உணவுத்தீயும் அதுவே தான்.
ஞானமும் உண்ணலாம் அறிவீரோ?
ஞானப்பசியே உலகம்  ஆச்சு.
ஒவ்வொரு சோறும் வரலாறு ..மண்ணின்
ஒவ்வொரு துளியும் வரலாறு.
வரலாறு இன்றி வாழ்க்கை இல்லை.......(10)



மிருகமாய்த் தோன்றிய போதினிலே
இரைகள் தானே நம் இலக்கு...அந்த
இரையும்  காமமும் இறைவன் ஆகி
அவதாரம் வந்த கதைகளும் உண்டு.
அதையெலாம்  மறப்பது அறிவீனம்.
இறையாண்மை என்பதும் கூட
இரையாண்மையின் அடிப்படையே ....(11)

மனிதன் உருவில் இருந்தாலும்
இறைவன் உருவில் இருந்தாலும்
ரத்த சதையாய் இருந்தாலும்
ஆவிகளாய் திரிந்தாலும்  அது
பசியின் ஒளியே அறிந்து கொள்
அறிவின் பசியே உணவுகள் ஆகி
உலகு சுழற்றும் அறிவாய் நீ.............(12)

காமம் செப்பாது கண்டது மொழிமோ!
காமம் அங்கொரு அக்கினிக்குஞ்சாய்
காமம் அங்கொரு பொந்திடை இருந்து
காட்டிய வெளிச்சம் ஆயிரம் ஆயிரம் .
வெந்து தணிந்தது காடு காடு.
வேகாமல் நின்றது மனித சிந்தனை.
சாகாமல் நின்றது மனிதம் மனிதம்.......(13)

படம் உதவி: விக்கிப்பீடியா
https://commons.wikimedia.org/wiki/File:The_Saint_Andal_LACMA_M.86.94.2.jpg & web

---

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 46. என் தமிழ் -கவிதை

*—முனைவர் ச. கண்மணி கணேசன்*

என் தமிழை யாராலும் கட்டிப்போட இயலாது .
ஏனென்றால்
அது என் மொழி-அதன் நோக்கம் எளிமை

என் தமிழைச் சிறை வைக்க இனியும் யாரும் பிறக்கவும் முடியாது
ஏனென்றால்
அது என் மொழி -அதன் முகவரியே தெளிவு.

என் தமிழுக்குத் தடை சொல்ல யாருக்கும் அதிகாரம் கிடையாது.
ஏனென்றால்
அது என் மொழி -அதன் மறுபெயரே உரிமை

என் தமிழ் என்றும் துள்ளிக் குதித்து துறுதுறுவென ஓடும்.
ஏனென்றால்
அது என் மொழி -அதற்கு என்றும் வளரிளம் பருவம் தான்.

என் தமிழ் தாறுமாறாக ஓடாமல் தழுவிச் செல்வது என் கையில்
ஏனென்றால்
அது என் மொழி - அதன் ஊட்டம் அனுபவமும் தேவையும்

என் தமிழைக் கச்சாப் பொருளாக்கி விதிகளை உற்பத்தி செய்யட்டும்.
ஏனென்றால்
அது என் மொழி -அதன் உயிர்ப்பு விடுதலை

---

தொடர்பு: முனைவர்.ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)
முதல்வர் (ஓய்வு), ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

## 47. தமிழில் புழங்கும் வடமொழிச் சொற்கள் சில

நம்மை அறியாமலேயே தினமும் பேசும் சமஸ்க்ருத சொற்கள் சில...

**அ**

அகங்காரம் - செருக்கு
அக்கிரமம் - முறைகேடு
அசலம் - உறுப்பு
அசூயை - பொறாமை
அதிபர் - தலைவர்
அதிருப்தி - மனக்குறை
அதிருஷ்டம்- ஆகூழ், தற்போது
அத்தியாவசியம் --இன்றியமையாதது
அநாவசியம் -வேண்டாதது
அநேகம் - பல
அந்தரங்கம்- மறைபொருள்
அபகரி -பறி, கைப்பற்று
அபாயம் -இடர்
அபிப்ராயம் -கருத்து
அபிஷேகம் -திருமுழுக்கு
அபூர்வம் -புதுமை
அமிசம் -கூறுபாடு
அயோக்கியன் -நேர்மையற்றவன்
அர்த்தநாரி -உமைபாகன்
அர்த்த புஷ்டியுள்ள -பொருள் செறிந்த
அர்த்தம் -பொருள்
அர்த்த ஜாமம் - நள்ளிரவு
அர்ப்பணம் -படையல்
அலங்காரம் -ஒப்பனை
அலட்சியம் - புறக்கணிப்பு
அவசரமாக - உடனடியாக, விரைவாக
அவஸ்தை - நிலை, தொல்லை
அற்பமான - கீழான, சிறிய
அற்புதம் - புதுமை
அனுபவம் - பட்டறிவு
அனுமதி - இசைவு

**ஆ**

ஆச்சரியம் - வியப்பு
ஆக்ஞை - ஆணை, கட்டளை
ஆட்சேபணை - தடை, மறுப்பு
ஆதி - முதல்
ஆபத்து - இடர்
ஆமோதித்தல் - வழிமொழிதல்
ஆயுதம் - கருவி
ஆரம்பம் -தொடக்கம்
ஆராதனை -வழிபாடு
ஆரோக்கியம் - உடல்நலம்
ஆலோசனை - அறிவுரை
ஆனந்தம் - மகிழ்ச்சி

**இ**

இஷ்டம் - விருப்பம்
இங்கிதம் - இனிமை

**ஈ**

ஈன ஜன்மம் - இழிந்த பிறப்பு

ஈனஸ்வரம் - மெலிந்த ஓசை

உ

உக்கிரமான - கடுமையான
உபசாரம் - முகமன் கூறல்
உபயோகம் - பயன்
உதாசீனம் - பொருட்படுத்தாமை
உத்தரவாதம் - பிணை, பொறுப்பு
உத்தரவு - கட்டளை
உல்லாசம் - களிப்பு
உற்சாகம் - ஊக்கம்

ஐ

ஐதீகம் - சடங்கு, நம்பிக்கை

க

கர்ப்பக்கிருகம் - கருவறை
கர்மம் - செயல்
கலாச்சாரம் - பண்பாடு
கலாரசனை - கலைச்சுவை
கல்யாணம் - மணவினை, திருமணம்
கஷ்டம் - தொல்லை, துன்பம்
கீதம் - பாட்டு, இசை
கீர்த்தி - புகழ்
கீர்த்தனை- பாமாலை, பாடல்
கோஷம் - ஒலி

ச

சகலம் - எல்லாம், அனைத்தும்
சகஜம் - வழக்கம்
சகி - தோழி
சகோதரி - உடன் பிறந்தவள்
சங்கடம் - இக்கட்டு, தொல்லை
சங்கதி - செய்தி
சங்கோஜம் - கூச்சம்
சதம் - நூறு
சதா - எப்பொழுதும்
சதி- சூழ்ச்சி
சத்தம் - ஓசை, ஒலி
சந்தானம் - மகப்பேறு
சந்தேகம் - ஐயம்
சந்தோஷம் - மகிழ்ச்சி
சபதம் - சூளுரை
சம்சாரம் - குடும்பம், மனைவி
சம்பந்தம் - தொடர்பு
சம்பவம் - நிகழ்ச்சி
சம்பாதி - ஈட்டு, பொருளீட்டு
சம்பிரதாயம் - மரபு
சம்மதி - ஒப்புக்கொள்
சரணாகதி - அடைக்கலம்
சரித்திரம் - வரலாறு
சரீரம் - உடல்
சருமம் -தோல்
சர்வம் - எல்லாம்
சாதாரணம் - எளிமை, பொதுமை
சாதித்தல் - நிறைவேற்றுதல், விடாது பற்றுதல்
சாதம் - சோறு
சாந்தம் - அமைதி
சாகசம் - துணிவு, பாசாங்கு
சாராமிசம் - பொருட்சுருக்கம்

சாயந்திரம் - மாலை வேளை, அந்திப் பொழுது
சாவகாசம் - விரைவின்மை
சாஸ்திரம் - நூல்
சாசுவதம் - நிலை
சிகிச்சை - மருத்துவம்
சித்தாந்தம் - கொள்கை, முடிவு
சித்திரம் - ஓவியம்
சிநேகிதம் - நட்பு
சிம்மாசனம் - அரியணை
சிரத்தை - அக்கறை, கருத்துடைமை
சிரமம் - தொல்லை
சின்னம் - அடையாளம்
சீக்கிரமாக - விரைவாக
சுதந்திரம் - தன்னுரிமை, விடுதலை
சுத்தமான - தூய்மையான
சுபாவம் - இயல்பு
சுலபம் - எளிது
சுவாரஸ்யமான - சுவையான
சேவை - பணி
சேனாதிபதி - படைத்தலைவன்
சௌகர்யம் - வசதி, நுகர்நலம்
சௌக்கியம் - நலம்

**த**

தசம் - பத்து
தத்துவம் - உண்மை
தம்பதியர் - கணவன் மனைவி, இணையர்
தரிசனம் - காட்சி
தர்க்கம் - வழக்கு
தர்க்க வாதம் - வழக்காடல்
தாபம் - வேட்கை
திகில் - அதிர்ச்சி
திருப்தி - நிறைவு
தினசரி - நாள்தோறும்
தினம் - நாள்
தீர்க்கதரிசி _ ஆவதறிவார்
துரதிருஷ்டம் - பேறின்மை
துரிதம் - விரைவு
துரோகம் - வஞ்சனை
துவம்சம் - அழித்தொழித்தல், அழித்துத் தொலைத்தல்
தேகம் - உடல்
தேசம் - நாடு
தைரியம் - துணிவு

**ந**

நட்சத்திரம் - விண்மீன், நாள்மீன்
நமஸ்காரம் - வணக்கம்
நர்த்தனம் - ஆடல், நடனம்,கூத்து
நவீனம் - புதுமை
நவீன பாணி - புது முறை
நாசம் - அழிவு, வீண்
நாசூக்கு - நயம்
நாயகன் - தலைவன்
நாயகி - தலைவி
நிஜம் - உண்மை, உள்ளது
நிசபதமான - ஒலியற்ற, அமைதியான
நிச்சயம் - உறுதி
நிச்சயதார்த்தம் - மண உறுதி
நிதானம் - பதறாமை

நித்திய பூஜை - நாள் வழிபாடு
நிரூபி - மெய்ப்பி, நிறுவு
நிருவாகம் - மேலாண்மை
நிதி - பொருள்,செல்வம், பணம்
நீதி - அறம், நெறி, அறநெறி,
நடுவுநிலை, நேர், நேர்நிறை, நேர்பாடு,
முறை

### ப

பகிரங்கம் - வெளிப்படை
பஞ்சாட்சரன்- ஐந்தெழுத்து
பரவசம் - மெய்மறத்தல்
பராக்கிரமம் - வீரம்
பராமரி - காப்பாற்று , பேணு
பரிகாசம் - இகழ்ச்சிச் சிரிப்பு
பரிசோதனை - ஆய்வு
பரிட்சை - தேர்வு
பலவந்தமாக - வற்புறுத்தி
பலவீனம் - மெலிவு, வலிமையின்மை
பலாத்காரம் - வன்முறை
பாணம் - அம்பு
பாதம் - அடி
பாரம் - சுமை
பால்யம் - இளமை
பிம்பம் - நிழலுரு
பிரகாசம் - ஒளி, பேரொளி
பிரகாரம் - சுற்று
(அதன்)பிரகாரம் - (அதன்)படி
பிரசங்கம் - சொற்பொழிவு
பிரசுரம் - வெளியீடு
பிரச்சினை - சிக்கல்
பிரதிநிதி - சார்பாளர்
பிரதிபலித்தல் - எதிரியக்கம்
பிரதிபிம்பன் - எதிருரு
பிரத்தியோகம் - தனி
பிரபலம் - புகழ்
பிரமாதமான - பெரிய
பிரமிப்பு - திகைப்பு
பிரயோகி - கையாளு
பிரயோசனம் - பயன்
பிரவாகம் - பெருக்கு
பிரவேசம் - நுழைவு, புகுதல், வருதல்
பிரார்த்தனை - தொழுகை,
பிரியம் - விருப்பம்
பிரேமை - அன்பு
பீடிகை - முன்னுரை
புண்ணியம் - நல்வினை
புத்தி - அறிவு
புத்திரன் - புதல்வன்
புனிதமான - தூய
புஷ்பம் - மலர், பூ
புஜபலம் - தோள்வன்மை
பூஜை - வழிபாடு
பூர்த்தி - நிறைவு
பூஷணம் - அணிகலம்-
போதனை - கற்பித்தல்

### ம

மகான் - பெரியவர்
மகாயுத்தம் -பெரும்போர்
மத்தியஸ்தர் - உடன்படுத்துபவர்

மத்தியானம் - நண்பகல்
மந்திரி - அமைச்சர்
மனசு - உள்ளம்
மனிதாபிமானம் - மக்கட்பற்று
மானசீகம் - கற்பனை
மல்யுத்தம் - மற்போர்

**ய**

யந்திரம் - பொறி
யூகம் - உய்த்துணர்தல்
யூகி - உய்த்துணர்
யோக்யதை - தகுதி

**ர**

ரதம் - தேர்
ரத சாரதி- தேரோட்டி
ராணி - அரசி
ராத்திரி - இரவு
ராச்சியம் - நாடு,மாநிலம்
ராஜா - மன்னன்
ரசம் - சாறு, சுவை

**ல**

லட்சம் - நூறாயிரம்
லட்சணம் - அழகு
லட்சியம் - குறிக்கோள்

**வ**

வதம் - அழித்தல்
வதனம் - முகம்
வம்சம் - கால்வழி
வஸ்திரம் - துணி, ஆடை
வாஞ்சை - பற்று
வாயு - காற்று
விக்கிரகம் - வழிபாட்டுருவம்
விசாரம் - கவலை
விசாலமான - அகன்ற
விசித்திரம் - வேடிக்கை
விஷேசம் - சிறப்பு
விஞ்ஞானம் - அறிவியல்
விஷயம் - செய்தி
விதானம் - மேற்கட்டி
விநாடி - நொடி
வித்தியாசம் - வேறுபாடு
விபூதி - திருநீறு ,பெருமை
விமோசனம் - விடுபடுதல்
வியாதி - நோய்
விரதம் - நோன்பு
விவாகம் - திருமணம்
விவாதி -வழக்காடு
வேகம் - விரைவு
வேதம் - மறை
வேதவிற்பனன்ர் - மறைவல்லார்
வேதியர் - மறையவர்

**ஜ**

ஜனநாயகம் - குடியாட்சி
ஜனம் - மக்கள்
ஜனனம் - பிறப்பு
ஜாதகம்- பிறப்புக் குறிப்பு
ஜாலம் - வேடிக்கை
ஜூரம் - காய்ச்சல்

ஜோதி - ஒளி

ஜோடி - இணை

ஜோடித்தல் - அழகு செய்தல்

**ஸ**

ஸந்ததி - கால்வழி

ஸமத்துவம் - ஒரு நிகர்

ஸமரசம் - வேறுபாடின்மை

ஸமீபம் - அண்மை

ஸம்ஹாரம் - அழிவு

ஸோபை - பொலிவு

ஸௌந்தர்யம் - பேரழகு

ஸ்தாபனம் _நிறுவனம்

ஸ்தானம் - இடம்

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

## தமிழ் மரபு அறக்கட்டளையின் செய்திகள்

[http://thf-news.tamilheritage.org/]

### மரபுக் காணொளிகள்

21/01/2018 கருங்காலக்குடி தொல்பழங்காலக் குறியீடுகளும் சமணச் சின்னங்களும்

28/01/2018 குன்னத்தூர் அஸ்தகிரீசுவரர் குடைவரை கோயில்

25/01/2018 பிரான்சு தேசிய நூலக அரிய தமிழ் ஓலைச்சுவடி ஆவணங்கள்

4/2/2018 காணிக்காரர்கள் - மலைவாழ் பழங்குடி மக்கள் (Kani Tribe)

7/2/2018 கரூவூர் சேரர் தொல்லியல் அகழ்வைப்பகம்

11/2/2018 திருவதிகை - அப்பர் சுவாமிகள் பாடிய திருத்தலம்

14/02/2018 வரிச்சியூர் (குன்னூர்) தமிழி கல்வெட்டு, குடைவரை, சமணற்படுக்கைகள்

19/02/2018 பேச்சிப்பள்ளம் சமணற் சிற்பங்களும் வட்டெழுத்துக் கல்வெட்டுக்களும்

2/4/2018 மூலிகைகளை அறிவோம் (Medicinal Herbs)

### த.ம.க.-மின்னூல்கள்

29/01/2018 வல்வெட்டித்துறையிலிருந்து அமெரிக்கா வரை கப்பலோட்டிய தமிழர்கள்

5/3/2018 மத்தவிலாச அங்கதம்

8/3/2018 மீனாம்பாள் சிவராஜ் உரை - உலக மகளிர்தின சிறப்பு வெளியீடு

17/3/2018 மதுரை நகரத் தெருப் பெயர்கள் - ஆய்வேடு

24/3/2018 எழுபதுகளில் தமிழ்ப் புனைகதைகள் - ஆய்வேடு

31/3/2018 கட்டுரைப் பூங்கா

### த.ம.க.-ஓலைச்சுவடி ஆவணங்கள்

25/01/2018 பிரான்சு தேசிய நூலக அரிய தமிழ் ஓலைச்சுவடி ஆவணங்கள்



Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books
and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# மின்தமிழ் மேடை




## “தொடர்ந்திடும் வளர்ந்திடும் தமிழ் மரபு அறக்கட்டளையின் தமிழ்ப்பணிகள்”

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*
*வெளியிடும் காலாண்டு மின்னிதழ்*
*மின்தமிழ்மேடை - காட்சி: 13*
*ஏப்ரல் — 2018*

